ஹகீகத் நூலக வெளியீடு இல. 17

# இஸ்லாமிய வாழ்க்கை நெறி

எழுதியது

அலி பின் அம்ருல்லாஹ் முஹம்மத் ஹாதிமி

ஹுசைன் ஹில்மி இஸிக்

12 ஆவது பதிப்பு

**Hakikat Kitâbevi**
Darüşşefeka Cad. 53/A P.K.: 35
**34083** Fatih-IS TAN BUL/TURKEY
Tel: 90.212.523 4556–532 5843 Fax: 90.212.523 3693
http://www.hakikatkitabevi.com
e-mail: info@hakikatkitabevi.com
NOVEMBER-2016

## வெளியீட்டாளரின் குறிப்பு

இந்நூலினை அதன் அசல் வடிவத்திலோ அல்லது வேறு எந்த மொழியிலோ மொழிபெயர்த்து அச்சிட விரும்பும் எவருக்கும் எங்கள் அனுமதி முன்கூட்டியே தரப்படுகின்றது. மற்றும் இந்த நன்மைபயக்கும் முயற்சியை மேற்கொள்ளும் அன்பர்களுக்காக அல்லாஹுவின் ஆசியை பிரார்த்திப்பதோடு எங்களது நன்றியையும் தெரிவிக்கின்றோம். எனினும் எங்கள் அனுமதி பின்வரும் நிபந்தனைகளுக்குட்பட்டது.

அச்சிடுவதற்குப் பயன்படுத்தப்படும் காகிதம் நல்ல தரத்துடன் இருக்க வேண்டும், மொழிபெயர்ப்பு, எழுத்துக்கள், வடிவமைப்பு, அச்சு பதிப்பு என்பன அழகாகவும் தவறுகள் அற்றவையாகவும் இருக்க வேண்டும்.

## உங்கள் கவனத்திற்கு

மிஷனரிகள் கிறிஸ்தவத்தை விளம்பரப்படுத்துவதற்கு மிகவும் முயற்சி செய்கிறார்கள். யூதர்கள் யூத ரப்பிகளின் ஆசைநிரம்பிய வார்த்தைகளை பரப்புவதற்கும் முயற்சி செய்கிறார்கள். இஸ்தான்புளில் உள்ள எங்கள் (ஹக்கீக்கத் பதிப்பகம்) தூய இஸ்லாத்தை பிரபல்ய படுத்துவதற்காக கஷ்டப்படுகின்றது. இன்னும் சில மதமற்றவர்கள் எல்லா மதங்களையும் அழிக்க முயற்சிக்கின்றனர்.

அறிவு ஞானமும் மனசாட்சியுமுள்ள ஒருவர் நிச்சயமாக இதில் நல்லதைத் தெரிவு செய்து பின்பற்றுவதுடன் மானிட இரட்சிப்புக்கும் மேம்பாட்டுக்குமாக இதை பரப்பவும் உதவி செய்வர்.

மனித குலத்திற்கு சேவை செய்வதற்கு இதை விட வேறு பெறுமதி வாய்ந்த தெரிவு ஒன்று இருக்க முடியாது.

## எழுத்து வடிவமைப்பும் அச்சிடலும்

TYPESET AND PRINTED IN TURKEY BY:
Ihlâs Gazetecilik A.Ş.
Merkez Mah. 29 Ekim Cad. İhlâs Plaza No: 11 A/41
34197 Yenibosna-İSTANBUL Tel: 90.212.454 3000

# இஸ்லாமிய வாழ்க்கை நெறி

## முகவுரை

**பிஸ்மில்லாஹ்வுடன் ஆரம்பிக்கின்றோம்.**
**அல்லாஹ்வின் நாமம் அதி உயர்ந்த அடைக்கலம் .**
**அவனின் அருட்கொடைகள் அளவில்லாதது கணக்கில்லாதது.**
**அவன்தான் படைப்பவன் மன்னிற்பதற்கு மிகவும் விருப்பமானவன்**
**மிகவும் இரக்கமானவன்**

அல்லாஹுத்தஆலா இவ்வுலகில் எல்லா மனிதர்கள் மீதும் இரக்கப்படுகிறான். அவர்களுக்கு தேவையான எல்லா அருட்கொடைகளையும் படைத்து அவர்களின் தேவைகளை நிவர்த்திக்கின்றான். அத்துடன் இம்மை மறுமை நலனுக்காக அவனால் அளிக்கப்பட்ட அருட்கொடைகளை எப்படி பயன்படுத்த வேண்டும் என்றும் அவன் கற்றுக் கொடுக்கின்றான். இமாம் அர்-ரப்பானி (ரஹீமஹுுல்லாஹு தஆலா) அவர்கள் தங்கள் 259 வது கடிதத்தில் இஸ்லாத்தை பற்றி இவ்வுலகில் கேள்விப்படாத நிராகரிப்பாளர்கள் நரகில் தண்டிக்கப் படமாட்டார்கள் என்றும், அவர்கள் இறுதித் தீர்ப்பு நாளின் பிறகு மிருகஜாதி களுடன் சேர்த்து அழிக்கப்படுவார்கள் என்றும் கூறுகிறார்கள். இஸ்லாத்தைப் பற்றி கேள்விப்பட்டு அதை விரும்பி ஏற்றுக் கொண்ட மனிதர்கள் சுவர்க்கத்தில் நுழைவிக்கப்படுவார்கள். அவர்களின் மனமாறுதல் மற்றும் நற்சிந்தனைக்கு நீண்ட கால அவகாசம் கொடுத்தான். சுய ஏமாற்றத்தின் விளைவாகவும் தீய நண்பர்களும், வழிகெடுக்கும் பிரசுரங்கள், வானொலி, தொலைக்காட்சி என்பவற்றின் காரணத்தினாலும் குபிரிலும் வழி கேட்டிலும் இருந்தவர்கள் அவற்றிலிருந்து மீண்டு இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்களை அல்லாஹ் மன்னிக்கின்றான். அல்லாஹ் அவர்களை நீண்ட வழிகேட்டிலிருந்து காப்பாற்று கின்றான். அவன் வன்னெஞ்சர்களுக்கும், மூர்க்கமாணவர் களுக்கும், தீய குணமுடையோர்க்கும் மீழ்ச்சிக்கான வழியை காட்டுவதில்லை. அவர்களை அவர்களின் போக்கிலேயே விட்டுவிடுகிறான். நன்னம்பிக்கை கொண்ட பின்னர் பாவங்கள் செய்து மறுமையில் நரகத்துக்கு தீர்ப்பளிக்கப்படுவர்களை அவன் விரும்பினால் மன்னித்தும், செய்த பாவத்திற்கான தண்டனையின் பின் நரகிலிருந்து விடுவித்து சுவர்க்கத்துக்கும் அனுப்புகிறான். அவன்தான் எல்லா வற்றையும் படைத்து ஒவ்வொரு கணமும் பரிபாலிப்பவன், எல்லாவித பயங்கரம் மற்றும் அழிவுகளில் இருந்து பாதுகாப்பவன்.

யாராவது எவருக்காவது நன்றி தெரிவித்தால் அல்லது புகழ்ந்தால் அந்த புகழ்ச்சிக்கும் நன்றிக்கும் உண்மையில் சொந்தக்காரன் அல்லாஹ்தான். ஏனெனில், அவன்மட்டுமே எல்லாவிதமான நன்மையையும் நிஃமத்துகளையும் படைக்கின்றான். அவனுடைய ஏவுதல் இல்லாமலோ, அவன் கொடுக்கும் சக்தி இல்லாமலோ எவருக்கும் எந்த நன்மையோ, தீமையோ செய்ய முடியாது. அவன் நாட்டத்தில் உள்ளது மட்டுமே வெளியாகின்றது, அவனின் விருப்பமே நடக்கின்றது. அவனுடைய நாட்டத்துக்கு மாறாக எதுவும் செய்துவிட முடியாது.

எமது சலவாத்தும் சலாமும் எமது பேரன்புக்குப் பாத்திரமான' அல்லாஹ்வின் தூதர் பெருமானார் முஹம்மது 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' அவர்கள் மீது உண்டாகட்டும். அவர்கள்தான் படைப்புகளில் மிக அழகானவர்களும்

மேன்மையானவவர்களும். அத்துடன் அவர்களின் வழித்தோன்றல்கள், ஸஹாபாக்கள் 'ரில்வானுல்லாஹி தஆலா அலைஹிம் அஜ்ம'ஈன்' மீதும் உண்டாகட்டும். இவர்களிடமிருந்துதான் நற்குணமும் உயரிய ஞானமும் வெளியாகிக் கொண்டிருக்கிறது.

முஸ்லிம்களுக்கு இஸ்லாமிய கல்வியை தேடிப்படிப்பது கட்டாயமாக்க பட்டிருக்கிறது. இக்கல்வியானது இரண்டு கிளைகளைக் கொண்டது. முதலாவது மார்க்கக்கல்வி, இரண்டாவது விஞ்ஞானக்கல்வி (நுட்பக்கல்வி). விஞ்ஞான கல்வியானது மெய்யறிவு (**ஹிக்மத்**). எம்பெருமானார் இக்கல்வி யைதான் **"மெய்யறிவு முஸ்லிம்களின் தொலைந்துபோன சொத்து இதை எங்கு காண்கின்றோமோ அங்கேயே அதை பெற்றுக்கொள்ளவேண்டும்"** என்று கூறினார்கள். இந்த ஹதீதானது எங்களை விஞ்ஞானக்கல்வியை பெற்றுக் கொள்ளுமாறு கட்டளை பிறப்பிக்கின்றது. சமயக்கல்வி இருபது உப கிளைகளைக் கொண்டது. இதில் எட்டு பிரிவுகள் உயர்ந்த நிலை கல்வியும் மற்ற பன்னிரண்டு பிரிவுகள் சாதாரண நிலைக் கல்விகளுமாகும். உயர் நிலைக் கல்விகளில் ஒன்று ஒழுக்கக்கோட்பாடைப் பற்றியது.

[நற்பண்பிலும் காலத்திற்கேற்ற நுட்பக்கல்வி (விஞ்ஞானக்கல்வி) யிலும் தேர்ச்சிபெற்ற முஸ்லிம் ஒருவர் முற்போக்கான முஸ்லீம் என அழைக்கப் படுவார். மாறாக, விஞ்ஞானக்கல்வியில் தேர்ச்சி பெற்றிருந்தும், பல தொழிச்சாலைகள் அமைத்து இருந்தும் நற்பண்பு இல்லாதவர் கெட்டவன், மூர்கத்தனமானவன், பிற்போக்கானவன் அல்லது சர்வாதிகாரி என்றே அழைக்கப்படுவான். நுட்பஅறிவு மற்றும் நற்பண்பு இரண்டும் குறைந்த வர்கள் மூர்க்கன், வன்முறையாளன் என்று அழைக்கப்படுகிறார். நாகரீகம் என்பது நகரங்களை அமைப்பதும் மக்களுக்கு சேவை செய்வதுமாகும். இது விஞ்ஞான கலை ஆற்றல்களுடன் அழகிய நற்பண்புகளையும் கொண்டு பெறப்படுகின்றது.

சுருக்கமாக, நுட்ப அறிவு, மற்றும் கலை ஆற்றல்களுடன் அழகிய நற்பண்புகள் சேரும்பொழுது நாகரீகம் என அழைக்கப்படுகிறது. ஒரு நாகரீகமான மனிதன் நுட்பஅறிவு மற்றும் கலை ஆற்றல்களைக் கொண்டு மக்களுக்கு சேவை செய்வான். ஆனால் கொடூரமானவன் அவன் இந்த நுட்பங்களைக் கொண்டு மக்களை சித்திரவதை செய்வான். உண்மையான முஸ்லீம் முற்போக்கானவன் என்பதை நாங்கள் கண்கூடாகக் காண்கின்றோம். ஆனால், நிராகரிப்பாளன் அழிவுப்பாதைக்கு வழி வகுப்பவன். நகரங்களை அமைப்பதுவும் கட்டடங்கள் கட்டுவதும்தான் நாகரீம் என்பது மேல்வாரியான சிந்தனையாகும். விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் இதைத்தான் செய்கின்றது. தொழிநுட்ப முன்னேற்றமென்பது முன்னோர்களின் சிந்தனைகளுடன் புதிய சிந்தனை களையும் சேர்ப்பது. ஆனால் மக்களின் அமைதியான, வசதியான வாழ்வு என்பது இஸ்லாமிய கோட்பாடுகளைப் பின்பற்றுவதன் மூலம் மட்டுமே கிடைக்கும்.]

இஸ்லாமிய மார்க்கக் கல்வியை கற்றுக்கொள்வது ஒவ்வொரு முஸ்லிமுக்கும் கட்டாய கடமையாகும் (பர்ளு). இஸ்லாமிய மார்க்க அறிஞர்கள் இதைப்பற்றி அநேக கிதாபுகளை எழுதியுள்ளார்கள். பின்வரும் கிதாபுகள் இஸ்லாமிய ஒழுக்க கோட்பாடுகளை பற்றி எழுதியவைகளில் பிரபல்யமானவைகளாகும். நஸிருத்தீன் முகம்மத் தூசி அவர்கள் எழுதிய **அஹ்லாக் அந் நாசிறி**,

ஜலாலுத்தீன் முஹம்மத் தவானி அவர்கள் எழுதிய **அஹ்லாக் அல் ஜலாலி,** மற்றும் ஹிரத்தை சேர்ந்த ஹுசைன் வாயிஜி காஷிஃபி அவர்கள் எழுதிய **அஹ்லாக் அல் முஹ்ஸினி** என்பவை. இவற்றில் கடைசியாகவுள்ள கிதாபில் முதலாவது அத்தியாயத்தை அபு செய்யிது முஹம்மது ஹாதிமி 'ரஹீமஹுல்லாஹு த'ஆலா' அவர்கள் எழுதிய **"பரீகா"** என்ற நூலிலிருந்து மொழி பெயர்த்துள்ளோம். இந்த நூலின் முதலாவது அத்தியாயத்தில் இஸ்லாத்தில் ஏற்றுக் கொள்ளப்படாத, கீழான நடத்தைகளையும் அதற்கு பரிந்துரைக்கும் நிவாரணத்தையும் விளக்குவோம். கீழான நடத்தை ஆன்மீக இதயத்தின் குறைபாடுகளிலிருந்து உண்டாகின்றது. கெட்ட ஒழுக்கநெறிகள் **கல்பை**யும் **ஆத்மா**வையும் நாசப்படுத்துவதுடன் அதற்கு எல்லையற்ற அழிவையும் ஏற்படுத்துகின்றது. இதன் இரண்டாவது அத்தியாயத்தில் **அஹ்லாக்** என்பதன் கருத்தையும் அதன் வகைகளையும் துருக்கியில் அலி பின் அம்ருல்லாஹ் 'ரஹுமஹுல்லாஹு த'ஆலா' அவர்களினால் எழுதப்பட்ட **அஹ்லாக்-இ-அலாயி** எனும் நூலின் ஆரம்ப அத்தியாயத்தில் இருந்து விளக்குவோம். இவர்கள் ஹிஜ்ரி 979/1572 AD ல் துருக்கியில் எதிரினில் மறைந்தார்கள். உள்ளம் கெட்டுவிடாத இளைஞர்கள் இந்த நூலை வாசிக்கும்போது எங்கள் மூதாதையர்கள் நட்பண்புள்ள பலசாலிகள் என்பதை உணர்வார்கள். அவர்கள் உற்சாகமானவர்கள், நாகரீகமானவர்கள், முற்போக் கானவர்கள். அவர்களைப் பற்றி இந்த உண்மைகளை அறியும்போது எமது இளைஞர்கள் எதிரிகளின் பொய் பிதற்றல்களினாலும், தூற்றல் களினாலும் வழி தவறிவிட மாட்டார்கள்.

**அஹ்லாக் அந் நாசிறி** யின் ஆசிரியர் நஸீருத்தீன் முஹம்மத் தூசி என்பவர் ஹிஜ்ரி 597 ல் தூஸ்(மஷ்ஹத்) எனும் நகரில் பிறந்து ஹிஜ்ரி 672 ல் பக்தாதில் மறைந்தார். இவர் ஒரு ஷீஆ பிரிவை சேந்தவர். இவர் ஆயிரக்கணக்கான மக்கள் கொல்லப்படுவதற்கும் பக்தாதில் ஹுலாக் எனும் பிரதேசத்தின் அழிவுக்கும் காரணமாயிருந்தவர். பின்னர் இவர் ஹுலாக்கின் பிரதமர் ஆனார். இவர் வானவியல் மண்டபத்தையும், அதற்கான கல்வி நிறுவனத்தையும் 400,000 நூல்களை கொண்ட ஒரு வாசிகசாலையும் நிறுவினார். அவர் பல நூற்களை யும் எழுதியுள்ளார். ஜலாலுத்தீன் முஹம்மத் தவானி 'ரஹிமஹுல்லாஹு த'ஆலா' அவர்கள் ஹிஜ்ரி 829 ல் பிறந்து ஹிஜ்ரி 908ல் (1503AD) ஷிராஸ் எனும் இடத்தில் மறைந்தார்கள். இவர்கள் இஸ்லாமிய பேரறிஞர்களில் பிரபல்ய மானவர்கள். இவர் பல கிதாபுகளை எழுதியுள்ளார்கள். அதில் **அஹ்லாக் அல் ஜலாலி** எனும் நூல் பெர்சிய மொழியில் அமைந்தது. இதன் 8 ஆவது பதிப்பு ஹிஜ்ரி 1304/1882AD ல் இந்தியாவில் வெளிவந்தது. இது ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

ஹுசைன் வாயிஜி காஷிஃபி 'ரஹிமஹுல்லாஹு த'ஆலா' அவர்கள் ஹிராத் எனும் நகரில் ஒரு கற்பிப்பவராக இருந்தார்கள். இவர் ஹிஜ்ரி 910/1505.AD ல் ஹிராத் இல் காலமானார்.

ஓ! நேர்மையான இளைஞர்களே! தம் வாழ்நாளை இஸ்லாத்தின் நேரிய அறிவை கற்று அதிலிருந்து அழகான ஒழுக்கக் கோட்பாடுகளைக் கற்பித்தும் உலகெங்கும் அதை பரப்புவதற்கும் தம் வாழ்நாளையும் வாழ்வையும் அர்ப்பணித்த மரியாதைக்குரியவர்களின் வழித்தோன்றல்களே! உங்கள் முன்னோர்கள் இஸ்லாத்தின் அதன் தூய்மை மாறாமல் முழுமை பெற்றதும்

மிக நேர்த்தியானதுமான வடிவில் உங்கள் ஈமான் இஸ்லாத்தினைப் பாதுகாப்பதற்காகத் தந்துள்ளார்கள். இஸ்லாத்தையும் அதன் அழகிய நெறி முறைகளையும் கற்றுக்கொள்ளுங்கள். இந்த **அமானித**த்தை இஸ்லாத்தின் எதிரிகளின் தீங்கிலிருந்து பாதுகாப்பதற்காக உங்களின் முழு பலத்தையும் பிரயோகிக்க வேண்டும். எங்கள் உயிரை, எங்கள் சொத்துக்களை, எங்கள் மார்க்கத்தை, எங்கள் வாழ்க்கை நெறிமுறைகளை எதிர்ப்பவர்களி டமிருந்து அல்லது எங்கள் தேசத்தை பிடிப்பதற்கு முயற்சிப்ப வர்களிடமிருந்து பாதுகாப்பதுடன் எங்கள் நேரிய மார்க்கத்தைப் பரப்புவதற்கு முழு முயற்சியுடன் ஈடுபடுவதன் மூலம் எங்கள் சமூகத்தை பேரழிவிலிருந்து பாதுகாப்பதற்கு முன்வாருங்கள். எங்கள் மார்க்கமானது அழகிய பண்பு களையும், கோட்பாடுகளையும் அழகிய சகோதரத்துவ ஒற்றுமையையும், முதியவர்களை மதிக்கும் நல்லொழுக்கத்தையும் இளைய வர்களுக்கிடையே இரக்கத்தையும் மற்றவர்களின் சமயங்களுக்கு மதிப்பு அளிப்பதையும் எடுத்துக்காட்டுங்கள். நாட்டின் சட்டங்களுக்கு அடிபணியுங்கள் நாட்டிற்கு செலுத்தக்கூடிய வரிகளை உரியநேரத்தில் செலுத்துங்கள். நேர்மையாளர் களுக்கு அல்லாஹ் உதவியளிப்பவன் என்பதை மறந்துவிடாதீர்கள். ஒருவருக்கொருவர் அன்புடனும் ஒற்றுமையாய் இருந்தால் அல்லாஹ்வின் உதவி உங்களுக்கு கிடைக்கும்.

இஸ்லாமிய அறிஞர்கள் கூறுகிறார்கள் அல்லாஹு தஆலா புத்தி (**அக்ல்**) ஆண்மீக இதயம் (**கல்ப்**) மற்றும் **நப்ஸ்[1]** ஆகிய மூன்று விடயங்களை படைத்தான். இவற்றில் ஒன்றையும் எங்களால் பார்க்கமுடியாது. ஆனால் அவை இருப்பதை அவைகளால் ஏற்படும் விளைவுகளைக் கொண்டும், செய்யும் செயல்களைக் கொண்டும், எங்களால் உணர முடியும். எமது மார்க்கம் எங்களுக்கு கற்பித்த வகையிருந்தும் விளங்கமுடியும். நல்லறிவு (ஞானம், அக்ல்), நப்சும் எங்கள் சடத்துவ மூளையில் அமைந்துள்ளன, ஆண்மீக இதயமானது எமது சடத்துவ இதயத்தின் மேல் அமைந்துள்ளது. அவை சடத்துவப்பொருள் அல்ல, அவை இடத்தை பிடிப்பதும் அல்ல. இவை மின் குமிழில் மின்னோட்டத்தையும் காந்த சத்தியானது மின்சுருள்களில் இருப்பது போன்றது. ஞானமானது இஸ்லாமிய அறிவுகளை விளங்குவதற்கு முயற்சி செய்கின்றது. இது இஸ்லாமிய அறிவையும் அவற்றின் நன்மைகள், பிரயோசனங்களையும், அதேநேரம் தீயவைவைகள் அவற்றின் தீங்கு களையும் விளங்கிக்கொள்கிறது. நல்லவையும், கெட்டவையும் தெய்வீக சட்டத்தின்படி (**ஷரியத்**) பிரித்தறியப்படும். ஷரியத் சட்டத்தை உணர்ந்து அதற்கு வழிப்படும் புத்தியானது நல்லறிவு (**அக்ல்-அல்-சலீம்**) என்று அழைக்கப்படும். குறைபுத்தி உள்ளவர்களையும் அதிக தவறு செய்பவர் களையும் மூடர்கள் என்றழைக்கப்படும். புத்தியற்றவர்களை பைத்தியம் என்றழைக்கப்படுவர். சரியாக சிந்திக்கும் நல்லறிவானது ஷரியத்தில் போதிக்கப்பட்ட நல்லவற்றை ஆத்மீக உள்ளத்திற்கு தூண்டும். இவ்வாத்மீக உள்ளம் மூளையிலிருந்து வரும் நரம்புகளைக்கொண்டு உறுப்புகளுக்கு நல்லவற்றை செய்வதற்கு ஏவும்.

---

[1] மனித இயல்பில் நப்ஸ் சக்தி மிக்கது. அதன் ஆசைகள் அனைத்தும் அல்லாஹு த'ஆலாவின் கட்டளைகளுக்கு எதிராக ஓடுகின்றன. அதன் ஆசைகள் மற்றும் அதன் செயல்பாடுகள் தனக்கும் அதன் உரிமையாளருக்கும் தீங்கு விளைவிக்கும் ஒரே சொத்து

இந்த ஏற்பாட்டிற்கேற்ப நல்ல, கெட்ட செயல்களை ஆத்மீக உள்ளத்தில் ஏற்படுத்துவதற்கு நெறிமுறை அல்லது ஒழுக்கம் (**அஹ்லாக்**) என்று அழைக்க படும். நப்ஸானது இவ்வுலக இச்சை மீது பேராவல் கொண்டது. அது நல்லதா, கெட்டதா அல்லது நன்மையானதா ஆபத்தானதா என்பதை பற்றி உற்று நோக்காது. இதன் ஆசைகள் ஷரியத்துக்கு ஒத்துப்போகாது. ஷரியத்துக்கு மாறான செயல்கள் நப்சை பலப்படுத்துகின்றன. நப்ஸ் ஆத்மீக உள்ளத்தை சம்மதப்படுத்துவதன் மூலம் இவ்வாறான கெட்ட செயல்களை செய்யும்படி தூண்டுகிறது. அது கெட்ட செயல்களை ஆத்மீக உள்ளத்துக்கு நல்லதாகக் காட்டுகின்றது. ஆத்மீக உள்ளத்தை நப்ஸின் தீய ஆசைகளில் திருப்தியடைய செய்வதன் மூலம் நப்ஸ் மகிழ்ச்சியடைகின்றது. ஆகவே, ஆத்மீக உள்ளத்தை நப்ஸின் ஏமாற்று வழிகளிலிருந்து கெட்டுவிடாமல் பாதுகாக்க எமது ஆண்மீக உள்ளத்தைப் பலப்படுத்துவதும், நப்சை பலமிழக்கச் செய்வதும் அத்தியாவசியமாகும்.

எமது புத்தி நல்ல நூற்களை வாசிப்பதனாலும் இஸ்லாமிய அறிவை பெற்றுக் கொள்வதனாலும், பலப்படுவதுபோல் ஷரியத்தை பின்பற்றுவதாலும், அல்லாஹ்வுக்கு அடிபணிவதாலும் எமது உள்ளம் பலமடைகிறது அல்லது சீர்படுகின்றது. எமது உள்ளத்தில் அல்லாஹ்வின் திருநாமங்களைக்கொண்டு தொடர்ந்து கல்பில் திக்ர் செய்வதன் மூலமே இஹ்லாஷை ஏற்படுத்தி கொள்ளமுடியும். இந்த "திக்ர் கல்பை" ஒரு முழுமையான சூபி ஷைகிடம் (முர்ஷித்-அல்-காமிலான ஷெய்க் என்பவர்தான் முழுமையான வழிகாட்டி யாகும்) கற்றுக்கொள்வதன் மூலமே பெறமுடியும். இதற்கு எமது ஆத்மீக உள்ளத்தை உலக ஆசா பாசங்களிலிருந்து வெறுமையாக்கிக் கொள்வதற்கு எமது உறுப்புகளின் உணர்ச்சிகளால் மூளையில் படிந்துள்ள தகவல்களை நீக்கி கொள்ளவேண்டும். எமது உள்ளம் உலக சிந்தனைகளிலிருந்து விடுபடும்போது உள்ளம் தானாகவே அல்லாஹ்வுடைய திக்ரை செய்யத் தொடங்கிவிடும்.

இது போத்தலில் உள்ள நீரை வெளியேற்றுவது போன்றது. நீர் வெளியேறும் போது காற்று உட்செல்லும். ஆத்மீக உள்ளத்தை பாதுகாப்பது என்பது ஒரு காமிலான ஷெய்கின் ஆத்மீக உள்ளத்தில் இருந்து அதன் ஒளியை நமது உள்ளம் பெற்றுக்கொள்வதன் மூலம் இலகுவாக அடைந்து கொள்கிறது. ஆத்மீக ஒளி ஒரு காமிலான ஷெய்கின் ஆத்மீக உள்ளத்திலிருந்து மற்ற உள்ளங்களுக்கு ஷெய்கின் மேலுள்ள அன்பினைக் கொண்டே பாய்கின்றது. அந்த ஷெய்கின் மறைவோ அவர் மிக தூரத்தில் இருப்பதுவோ ஆத்மீக ஒளி பாய்வதை தடுக்காது. காமிலான முர்ஷித் என்பவர் அஹ்லுஸ்ஸுன்னத் **ஆலிம்** ஆகவும், மிக ஆழமான இஸ்லாமிய மார்க்க அறிவை பெற்றவராகவும் அதன் படி இஹ்லாசுடன் அமல் செய்பவராகவும் இருப்பார். ஷரி'அத்துக்கு கீழ்படிவதும் காமிலான முர்ஷித் இடமிருந்து ஆத்மீக ஒளியை(ஃபாயித்) பெறுவதுவும் ஆத்மீக உள்ளத்தை பலப்படுத்துவதுடன் கீழான நப்சை பலவீனமாக்கிவிடும். இதனால் தான் நப்ஸானது ஆத்மீக உள்ளத்துக்கு அடிபணிவதையோ, ஷரீயத்தை பின்பற்றுவதையோ, காமிலான முர்ஷித்தை அன்பு வைப்ப தையோ அவர்களின் கிதாபுகளை வாசிப்பதையோ விரும்புவதில்லை. அது ஆத்மீக உள்ளம் மார்க்கப்பற்று அற்றதாகவும் நம்பிக்கை அற்றதாகவும் இருப்பதைத்தான் விரும்புகிறது. ஆகவே, தனது அறிவு சொல்வதை விரும்பாது தனது நப்சுக்கு வழிபடுபவர்கள் மார்க்கப்பற்று அற்றுவிடுகின்றனர்.

நப்ஸானது மரித்துவிடுவதில்லை ஆனால் அது வலிமையற்றதாகி விடும்போது நமது ஆத்மீக உள்ளத்தை வழிகெடுக்க முடியாது.

| மீலாதி | ஹிஜ்ரி ஷம்சீ | ஹிஜ்ரி கமரீ |
| --- | --- | --- |
| 2001 | 1380 | 1422 |

**உமது உள்ளத்தை தவ்ஹீத்[1] எனும் ஊற்றைக் கொண்டு சுவர்க்கத்தின் சோலையாக்குங்கள்.**

**அந்த தோட்டத்தில் தவ்ஹீதின் மொட்டுக்களை மணிகளாக பரப்பிவிடுங்கள்**

**இடமும் காலமுமற்ற இதயமானது தவ்ஹீதின் துணைகொண்டு முடிவற்றதூரம் பயணிக்கும்**

**உனது பாவங்களை நினைத்து வெட்கப்படு, அதன் முடிவு நிச்சயமாக தவ்ஹீதின் பரவசமாகும்.**

**ஓ!, சீடனே, ஆரிப்f பில்லாவானவர்[2] தனது தவ்ஹீதின் ஒரு கீற்றால் உனது இதயத்தில் உள்ள எழுபதினாயிரம் திரைகளை கணத்திலே நீக்கிவிடுவார்**

## ஹுசைன் ஹில்மி இஸிக்

ரஹ்மத்துல்லாஹி அலைஹி

ஹுசைன் ஹில்மி இஸிக் ரஹ்மத்துல்லாஹ் அலைஹி, , ஹகீக்கத் புத்தக நிலையத்தின் வெளியீட்டாளர். அவர்கள் இஸ்தான்புலில் உள்ள அய்யூப் சுல்தான் என்ற இடத்தில 1329 (AD 1911) ல் பிறந்தார்கள். அவர்கள் வெளியிட்ட 144 புத்தக வெளியீடுகளில் 60 அரபியிலும் 25 பாரசீக மொழியிலும் 14 துருக்கிய மொழியிலும், மீதி பிரெஞ்சு ஜேர்மன், ஆங்கில, ரஷியா மொழியிலும் உள்ளன. இவர்கள் செய்யித் அப்துல் ஹக்கீம் அர்வாசி 'ரஹ்மத்துல்லாஹ்' அவர்களினால் நன்கு வழிநடத்தப்பட்டவர்கள். இவர்கள் பிரபல்யமான மார்க்க அறிஞரும் தஸவ்வுப் கலையில் மிக தேர்ச்சி பெற்றதுடன் இறையருள் ஞானத்தை நிரம்பப்பெற்று முரீதுகளை முற்றாக வழிநடத்தி 25-26 அக்டோபர் 2001/1422 ஷஹ்பான் மாதம் 8-9 இடைப்பட்ட இரவில் காலமாகி அயூப் சுல்தான் என்ற இடத்தில அடங்கப்பெற்றார்கள்.

[1] ஒருவன், தனித்தவன், அல்லாஹு தஆலா ஒருவன் என்பதை குறிக்கும் சொல்

[2] ஒரு பாக்கியம் பெற்ற மனிதர் அவர் அல்லாஹ்வை பற்றி அறிந்தவர். Page-8

# இஸ்லாமிய வாழ்க்கை நெறி

## அத்தியாயம் -1

முதல் அத்தியாயம் முக்கியமான நாற்பது தீய செயல்களையும் அதற்கான தீர்வுகளையும் விளக்குகிறது. பின்வரும் விளக்கங்கள் பிரபல்யமான அபுசயீத் முஹம்மத் ஹாதிமி 'ரஹீமஹுல்லாஹுத'ஆலா' அவர்களால் எழுதப்பட்ட "**பெரீகா**" என்ற கித்தாபின் முதல் அத்தியாயத்திலிருந்து மொழி பெயர்க்கப் பட்டவையாகும். இந்த கிதாப் இரண்டு பாகங்களாக ஹிஜ்ரி 1284 ல் (1868AD) அரபியில் முதன்முதலாக இஸ்தான்பூலில் வெளியிடப்பட்டது. இதன் மறு பதிப்பு ஹிஜ்ரி 1411 (1991AD) ல் ஹகீகத் புத்தக நிலையத்தினால் வெளியிடப்பட்டது. முஹம்மத் ஹாதிமி 'ரஹீமஹுல்லாஹு' அவர்கள் ஹிஜ்ரி 1176/1762 AD ல் அவர்களின் பிறந்த இடமான துருக்கியில் கொன்யா எனும் நகரின் ஹாதிம் எனும் ஊரில் அடங்கப்பட்டுள்ளார்கள்.

## தீமைகளும் அவைகளை விட்டும் நீங்கும் முறைகளும்

மனிதர்களுக்கு இம்மை மறுமைக்கு வாழ்வுக்கு தீங்கு செய்யும் செயல்கள் தீயசெயல்களாகும். மனிதனின் ஆன்மீக குறைபாட்டுக்கு காரணமா யிருப்பதும் தீய செயல்களாகும். இந்தத் தீய செயல்களை தடுப்பது **தக்வா** வாகும். இதனால் தக்வா என்பது எல்லா வணக்கங்களுக்கும் அதி உயர்ந்த இடத்தை பெறுகிறது. ஒரு பொருளை அலங்கரிப்பதற்கு முன் அதை அசுத்தங்களிலிருந்து சுத்தப்படுத்துவது முதன்மையானதாகும். இதே போல், ஒருவர் செய்யும் வணக்கங்களுக்குரிய நன்மையோ பிரதிபலனோ (**தவாப்**) அவர் இவ்வாறான பாவங்களிலிருந்து நீங்காதவரை கொடுக்கப்பட மாட்டாது. பாவங்களில் மிகப்பெரியது இணைவைப்பதாகும் (**குப்ராகும்**). இறை நம்பிக்கை அற்ற ஒருவன் செய்யும் நன்மையான செயல் எதுவும் அவனுக்கு மறுமையில் பிரயோசனம் கொடுக்காது (அநியாயமாக கொல்லப்பட்ட ஒரு காபிர் ஒரு ஷஹீத் என்று கருதப்பட்டு சுவர்க்கம் கொடுபட மாட்டாது). ஒவ்வொரு நற்செயலுக்கும் தக்வா என்பது அடிப்படையானது. ஒருவர் தக்வாவை பெறுவதற்கு ஒருவர் கடுமையான முயற்சி செய்ய வேண்டும் அதை மற்றவர்களுக்கும் உபதேசம் செய்ய வேண்டும். இவ்வுலகில் மற்றவர்களுடன் ஒற்றுமையாகவும் அமைதியாகவும் வாழ்வதற்கும் இறை அருட்கொடைகளை பெற்றுக்கொள்ள வேண்டுமாயின் தக்வா என்பது மிக அவசியமானது.

பாவங்கள் இதயத்திலும், ஆத்மாவுக்கும் நோயை உண்டாக்குகின்றது. இந்த பாவங்களின் அதிகரிப்பு ஆத்மாவின் செயலிழப்புக்கு காரணமாயிக்கும். அது குப்றையும், ஷிர்கையும் உண்டாக்கும். இது தீமைகளில் மிகவும் மோசமானது ஆன்மாவுக்கு நஞ்சைப்போன்றது. ஆன்மாவின் அழிவுக்கு காரணமாகிவிடும். நம்பிக்கையற்ற சிலர் தனது ஆத்மா சுத்தமானது என வாதிக்கின்றனர். எனது உள்ளம் சுத்தமானது, எங்கள் உள்ளத்தை பாருங்கள், எனக் கூறுகின்றனர். அவர்களின் வார்த்தை வெறுமையானதே தவிர வேறில்லை. பாவத்தால் மரித்து போன இதயம் சுத்தமாக ஆகிவிடாது.

நிராகரிப்பில் பல வகைகள் உண்டு. அவற்றில் மிக மோசமானது பல கடவுள் கொள்கை. எந்த வகையான பாவமும் அதன் முக்கிய தன்மையை கொண்டு

விவரிக்கப்படும். அதுபற்றி குர்ஆனுடைய வசனங்களும் திருநபியின் ஹதீதுகளும் எல்லாவித நிராகரிப்பையும்(குப்ர்) ஷிர்க் என விவரிக்கின்றன. அல்லாஹு தஆலா தனது குர்ஆனில் சூரா நிசாவில் 48 ஆவது, 116 ஆவது ஆயத்துகளில் அவன் நிராகரிக்கும் முஷ்ரிக்குகளை மன்னிக்க மாட்டேன் என கூறுகின்றான். இது நிராகரிப்பவர்கள் நரக நெருப்பிலே நிரந்தரமாக தண்டிக்கப்படுவர் என்பதை சுட்டிக்காட்டுகின்றது.

[ஷிர்க் என்பது அல்லாஹ்வுடன் இன்னொன்றை துணையாக சேர்ப்பதாகும். இந்த துணை சேர்ப்பவர் இணைவைப்பவர் **முஷ்ரிக்** எனவும் இணையாக்கிய பொருள் **ஷாரிக்** எனவும் கூறப்படும். எவருக்காவது அல்லாஹ்வுக்குரிய ஒரு பண்பு, ஸிபத்து உண்டு என நம்புவது அவரை அல்லாஹ்வுடன் இணை வைப்பதாகும். அல்லாஹ்வுக்கே உரிய சிபத்துக்கள் "**உலூஹிய்யத்தான சிபத்துக்கள்**" (தெய்வீக பண்புகள்**)** என்று அழைக்கப்படும். சில தெய்வீக பண்புகள் நித்தியமாக இருப்பவன், படைப்பவன், எல்லாம் அறிந்தவன், நோய்களை சுகப்படுத்துபவன். ஒரு மனிதன், அல்லது சூரியன் அல்லது மாடு அல்லது ஏதாவது படைப்புக்கு அல்லாஹ்வின் பண்புகள் உண்டு என நம்புவதுடன் அவைகளுக்கு மரியாதை செய்வது, வணங்குவது அவைகளை வணங்குவதாக பொருள்படும். அவை சிலைகளை போன்றாகிவிடும். அத்தகைய மனிதர்களை தெய்வமாக்க நினைப்பதும் மரியாதை செய்வது, அவர்களின் படங்கள், சிலைகள், காபிர்களின் மண்ணறைக்கு தெய்வீக பண்புகள் உள்ளன என்று மரியாதை செய்வதுவும் அவர்களை வணங்குவதற்கு ஒப்பாவதாகும். இவை அனைத்தும் ஷிர்க்காகும். ஒருவருக்கு அல்லாஹ்வின் பண்புகள் இல்லை என்ற நம்பிக்கையில் அவர் அல்லாஹ்வுடைய அன்புக்குரியவர், அல்லது மாறாக அவர் தேசத்துக்கும் மக்களுக்கும் சேவை செய்தவர் என்ற நிலையில் மரியாதைக்காக அவருக்கோ அவரின் படத்திற்கோ அவரின் சிலைக்கோ மரியாதையை செய்வது சிலைவணக்கமில்ல. இருந்தபோதிலும், எவராவது ஒருவரின் படத்திற்கு மரியாதை செய்வது ஹராம். இதை செய்பவர் பாவியாகிறார்(பாசிக்). இதை பொருட்படுத்தாதவர் முர்தத் ஆகின்றார். ஹராமாக்கப்பட்டவைகளை கவனம் கொள்ளாதிருப்பது வும் இதைப் போன்றதே. முஷ்ரிக்கல்லாத யூதர்களும் கிறிஸ்தவர்களும் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் நபித்துவத்தை மறுப்பதினால் அவர்கள் காபிர்கள் ஆனார்கள். "அல்லாஹ்வின் வேதம் அவர்களை காபிர்கள் என்றழைக்கின்றது". ஆனால் தற்போது கிறிஸ்தவர் களில் அதிகமானோர் ஈசா அலைஹிஸலாத்துக்கு அல்லாஹ்வின் பண்புகளை சேர்ப்பதால் இணைவைப்பவர்களாகின்றனர். பனபாஸ் பிரிவை சேர்ந்த கிறிஸ்தவர்களும் எரியஸ் (எரியன்ஸ்) பிரிவை சேர்ந்தவர்களும் வேதத்தை உடையவர்கள். ஆனால் தற்காலத்தில் அவர்கள் இல்லை.

ஷிர்க்குக்கு அடுத்த ஆன்மாவின் பெரிய நோயானது மூடத்தனமான பழக்க வழக்கங்களாகும் (பித்'ஆ) இவை ஷைத்தானில் ஏவலுக்கு அடிமைப்பட்டு பாவங்களிலிருந்து மீளாமையால் உண்டாகின்றது. ஒரு மனிதன் (நிராகரிப்பற்ற) மன்னிக்கப்படக்கூடிய பாவங்களுக்கு தவ்பா[1] செய்யாமல் மரணித்தால் அல்லாஹ் அதை பிறரின் **ஷபாஅத்தைக்** கொண்டு அல்லது

---

[1] தவ்பா; தவ்பா செய்வது என்பது உங்கள் பாவத்திற்காக மனமனம் வருந்துதல், , மன்னிப்புக்காக அல்லாஹ்விடம் மன்றாடுதல், மற்றும் அந்த பாவங்களை இனிமேல் செய்வதில்லை என்று உறுதி கொள்வது |

அவனின் கருணையைக்கொண்டு மன்னிப்பான். ஆனால், மன்னிக்கப் படக்கூடிய பாவங்கள் மன்னிக்கப்படாவிட்டால் அதற்கான தண்டனையை நரகத்தில் பெற்றுக் கொள்வான். இந்த பாவங்கள் மற்ற மனிதனின் உரிமைகளை பாதிக்கும் வகையில் இருந்தால் அவை இலகுவில் மன்னிக்கப் படமாட்டாது. இதற்காக அவர்கள் கடுமையாக தண்டிக்கப்படலாம் உதாரணத்திற்கு, ஒருவன் மனைவிக்கு கொடுக்கப்பட வேண்டிய **மஹரை** கொடுக்காதிருந்தால் அல்லது, மக்களை அவர்களின் சரியான மார்க்கத்தை கற்பதற்கு அவர்களின் உரிமை இருந்தும் அதை கற்பதற்கு தடை விதித்தல் என்பன அவர்களின் மனித உரிமையை மீறும் கொடிய செயலாகும்.

ரசூலுள்ளாஹி 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' அவர்கள் கூறினார்கள்: "**ஒரு காலம் வரும் அதில் மக்கள் பணம் சம்பாதிப்பது அனுமதிக்கப்பட்ட (ஹலாலான) வழியிலா அல்லது இல்லையா என்று பார்க்க மாட்டார்கள்". "ஒரு காலம் வரும் இஸ்லாத்தை பின்பற்றி நடப்பது வெறும் கையில் நெருப்பு பந்தை வைத்திருப்பது போன்றாகிவிடும்."** ஆகவே, தடை செய்யப்பட்ட செயல்களிலிருந்தும் (ஹராம்), மக்ரூஹு தஹ்ரீமி (ஹராமுக்கு கிட்டியசெயல்களை) **தக்வாவை** கொண்டு செய்வதிலிருந்து தவிர்த்துக் கொள்ள வேண்டும். பர்ளான வாஜிபான செயல்களை விடுவது ஹராம் ஆகும். சில விரிவுரைகளின்படி **சுன்னத் முஅக்கதா**(ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கிரமமாக செய்த வணக்கங்களை காரணமின்றி விடுவது மிகவும் வெறுக்கப்பட்டது (**மக்ருஹ் தஹ்ரீமி**). இஸ்லாத்தின் கட்டளை களுக்கு கீழ்படிந்து ஈமானின் (**இ'திகாத்**)க்கு மதிப்பளித்து, நட்பண்புகளை பேணி (**அஹ்லாக்**) உடன் (**அமல்கள்**) வணக்கங்களை செய்யாதவர்கள் தண்டிக்கப்படுவார்கள். இதனால் தண்டனையை வரவழைக்கும் செயல்களை செய்யாமல் தவிர்க்க வேண்டும். உதாரணத்திற்கு, ஐந்து நேர தொழுகைகளை விடுதல், பெண்கள், பெண் சிறுவர்கள் மறைக்க வேண்டியதை மறைக்காமல் இருப்பது பெரும் பாவமாகும். பெரும் பாவங்களிலிருந்து தவிர்ந்து கொள்வதும், ஐந்துநேர தொழுகைகளை நியமமாக தொழுவதும் மிகவும் அத்தியாவசிய மானது. இந்த நூலில் தவிர்க்கப்பட கூடாத விடங்களை பற்றி கூறுவது நோக்கமல்ல ஆனால், செய்யக்கூடாதவைகள் பற்றி விபரிக்கப்படும். அதாவது; தடுக்கப்பட்டவைகளும், தீய செயல்களும்.

தடை செய்யப்பட்ட செயல்கள் செய்வதற்கு குறிப்பிட்ட உறுப்புகளாலோ அல்லது முழு உடம்பினாலோ செய்யப்படும். பின்வரும் எட்டு உறுப்புகள் பாவிக்கப்படும். ஆன்மீக இதயம், காது, கண், நாவு, கைகள், வயிறு, பாலியல் உறுப்புகள், கால் என்பன. ஆன்மீக இதயம்(**கல்ப்**) என்பது எமது சடத்துவ உள்ளத்தின் மீது ஊதப்பட்ட ஒன்று. அது தொட்டு உணர முடியாதது, உயிர் போன்று சடம் இல்லாதது. இவ்வுறுப்புகள் ஒன்றும் தனியே பாவங்கள் செய்ய முடியாதவை. இவ்வுறுப்புகளின் உணரும் திறமைதான் பாவங்கள் செய்ய தூண்டுகின்றது. எவராவது இவ்வுலகிலும் மறு உலகிலும் சுபிட்சத்தை வெற்றியை நாடினால் இவ்வுறுப்புகள் பாவம் செய்வதிலிருந்து தடுக்க வேண்டும்.

ஆன்மீக உள்ளமானது பாவங்கள் செய்யாத அதன் இயல்பு நிலையான (மலக்கா) நிலைக்கு வழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். இந்த நிலையை அடைந்தவர் அல்லாஹ்வுக்கு பயந்த (**முத்தகி**) அல்லது புனித (**சாலிஹ்**) எனும்

தரத்தை அடைந்தவர்கள். அவர் அல்லாஹ்வின் அன்புக்கு பாத்திரமாகி அல்லாஹ்வின் "வலி[1]யாகிவிடுகிறார். தக்வா என்பது உள்ளத்தை பாவம் செய்யாத வழக்க நிலைக்கு ஏற்றி வைக்கின்றது. இருந்தும், வலியானவர் பாவம் செய்யாத நிலைக்கு தொடர்ந்தும் வழமையாக்கிக் கொள்ளவேண்டும். இது உள்ளத்தை சுத்தப்படுத்துவதில்தான் தங்கியுள்ளது. உள்ளம் சுத்தமடைவதற்கு இஸ்லாத்தின் சட்டங்களுக்கு கீழ்ப்படிந்து நடப்பது அவசியமாகும். இஸ்லாம் மூன்று பிரிவுகளை கொண்டது: அறிவு (**இல்ம்**), செயல் (**அமல்**) , உள்ளச்சம் (**இக்லாஸ்**).

1. பர்ளு, வாஜிபு, சுன்னத் மற்றும் விலக்கப்பட்டவை (ஹராம், மக்ரூஹு) என்பவற்றை பற்றிய அறிவை கற்றுக்கொள்ள வேண்டும். 2. அந்த அறிவுடன் அமல் செய்வது 3. அந்த அமல்கள் அல்லாஹ்வுக்காக மட்டுமே செய்யப்பட வேண்டும். பரிசுத்த குர்ஆன் இம்மூன்று பகுதிகளையும் கட்டளை இடுவதுடன் அதன் பெருமை பற்றியும் எடுத்துரைக்கின்றது.

இந்நூலில் உள்ளத்தை சுத்திகரிப்புக்கு எவ்விதமான பாவங்களிலிருந்து தவிர்க்கப்பட வேண்டும் என்பதை மட்டும் விளக்குகின்றோம். அவைகள், தீய பாவமான செயல்கள், முறைகேடான நடத்தை மற்றும் நெறிமுறைகளுக்கு ஒவ்வாத செயல்கள் என்பன.

## முறையற்ற நடத்தையும் ஒழுக்கமின்மையும் அதற்கான தீர்வும்

முஸ்லிம் தனது ஆன்மீக உள்ளத்தை சுத்தப்படுத்துவது அவரது செயல்களின் முன்னுரிமையில் முதன்மையானது. ஏனெனில் உள்ளம்தான் உடலுறுப்புகளை இயக்குகின்றது. எங்கள் 'நபி முஹம்மது 'ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்' அவர்கள்: "**மனிதனுடைய உடலில் ஒரு தசைத்துண்டுள்ளது அது நன்றாய் இருந்தால் முழு உறுப்புகளும் நன்றாகயிருக்கும், அது கெட்டுப்போனால் எல்லா உறுப்புகளும் கெட்டு விடும்**" என்று கூறினார்கள். இந்த ஹதீதில் குறிப்பிடப்பட்டது சடத்துவ இதயத்தில் அமைந்துள்ள ஆண்மிக இதயம் (கல்பு). நன்றாக இருக்கும் தசைத்துண்டு என்று கூறப்பட்டது தீமைகளிளிருந்து சுத்திகரிக்கப்பட்டு நல்ல ஒழுக்கங்களுடன் இணைக்கப்பட்ட நன்மையை தூண்டும் இதயம். மனிதனின் சடத்துவ தோற்றம் **ஹல்க்** என்றழைக்கப்படும். இதயத்தின் அமைந்துள்ள அதன் சக்தி, வழக்கம்(**ஹுல்க்**) என்றழைக்கப்படும். இதயத்தின் தீமைகள் 'இதயத்தின் நோய்கள்' அல்லது அனுமதிக்கப்படாத குணங்கள்(**அஹ்லாக்-அல்-Zசமீமா**) என்று அழைக்கப்படும். அவற்றுக்கான குணப்படுத்தும் வைத்தியம் மிக கஷ்டமானது. இதயத்தில் உள்ள நோயை தீர்ப்பதற்கு அதைப்பற்றி மிக நுட்பமான அறிவும் சரியான அணுகுமுறையும் தேவை. இதயத்தின் வழமைகள் என்பது இதயத்தின் விருப்பமான நிலை (**மலகா**)ஆகும். இது ஆன்மிக உள்ளத்தின் மனிதனின் நம்பிக்கையை சொல் மற்றும் செயலை உருவாக்கும் சக்தியாகவும் உள்ளது. அவனது விருப்பமான நடைமுறைகளும் இந்த சக்தியின்(ஹுல்க்)இன் வேலையாகும்.

இதயத்தை அதன் விரும்பத்தகாத, ஏற்றுக்கொள்ள முடியாத பண்புகளின் நடவடிக்கைகளிலிருந்து விரும்பக்கூடிய, நட்பண்புள்ளதாக மாற்ற முடியும்.

---

[1] வலி; (பன்மை (அவ்லியா) என்பவர் அல்லாஹ்வுக்கு நெருங்கிய நேசர்

எங்கள் நபி நாயகம் 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' அவர்கள் ஒருமுறை **"உங்கள் பண்புகளை வளர்த்துக்கொள்ளுங்கள்"** என கூறினார்கள். (பழக்க வழக்கம், பண்புகள்) இஸ்லாம் செய்யமுடியாத எதையும் கட்டளை இடவில்லை. எங்கள் அனுபவத்திலும் இதைத்தான் காண்கிறோம். [அனுபவம் என்பது அறிவை பெற்றுக்கொள்ளும் சரியான மூன்று முறைகளில் ஒன்று. மற்றைய இரண்டு வழிகளும் கணிப்பீடுகள் மூலம் விளங்கிக்கொள்வதும், எங்கள் நபியவர்களிலிருந்து கிடைக்கப் பெற்ற தகவல்கள் (ஹதீது) மூலமும் ஆகும். மனிதன் எல்லோரும் இந்த விரும்பத்தகாத, குறைபாடுள்ள பண்புகளை நல்லதாக மாற்றும் திறமை பெற்றவர்களில்லை.

ஒழுக்கங்களின் மூலம் அல்லது அடிப்படை அல்லது தோற்றம் ஆனது, மூன்று வித ஆற்றல்களை மனித ஆன்மாவில் இயற்கையாக அமையப் பெற்றுள்ளன.

1. ஆன்மாவின் முதலாவது ஆற்றல் கிரகித்து அறிந்து கொள்ளும் ஆற்றல் ஆகும். இது **நுத்க்** என்றோ நல்லறிவு (**அக்ல்**) என்று அழைக்கப்படும். நுத்கின் இரண்டு வகை ஆற்றல்கள் உள்ளன: தத்துவார்த்த அறிவு (**ஹிக்மத் அல்-நசரீ**) இன்னும் நடை முறை பிரயோக அறிவு (**ஹிக்மத் அல்-அமலீ**) என்பன. தத்துவார்த்த அறிவானது சராசரி அளவில் அமைந்திருப்பது பொது அறிவு (**ஹிக்மத்**). பொது அறிவு(common sense) என்பது நல்லது கெட்டது, சரி, பிழை என்பதை பிரித்தறிய உதவும் ஆற்றலாகும். இந்த ஆற்றல் மேலோங்கும் போது **ஜர்பசா** (புத்திசாலி) நிலையை அடைகிறார். இந்த நிலையை அடைந்தவர் அளவுமீறி விவரிக்கமுடியாத விஷயங்களுக்கு விளக்கம் பெற முயற்சிக்கிறார். உதாரணத்திற்கு; இவர் குர்ஆனில் உள்ள மறைவான உருவக அர்த்தங்கள் உள்ள (**முதஷாஹிபிஹ்**) ஆன வசனங்களுக்கு விளக்கமளிக்க முற்படுகிறார். அல்லது விதி முடிவு ஆகியவற்றை பற்றி பேசுவது அல்லது பயனற்ற விடயங்களான வஞ்சகம், தந்திரம் மற்றும் சூனியம் போன்றவற்றில் ஈடுபடுகிறார். மாறாக, இந்த அறிவு குறைவாக இருப்பவர் மூடன்(**பலாதத்**). இதில் குறைபாடு இருப்பவர் நல்லது மற்றும் கெட்டதை பிரித்தறிய முடியாதவர். மெய்யறிவின் நடைமுறை ஆற்றல் ஓரளவு சராசரி அளவில் இருக்கும்போது இந்நிலை நீதமானது (**அதாலத்**)என அழைக்கப்படும். நீதமானத்தில் அங்கு பற்றாக்குறையோ மீதமானதோ இருக்கமுடியாது.

2. ஒழுக்கங்களின் இரண்டாவது ஆற்றலின் தோற்றமானது கோபமாகும் (**கதப்**). இது ஆன்மாவின் மிருகத்தன்மையான அம்சமாகும். இதற்கு விருப்பமில்லாத வெறுப்பான அம்சங்கள் இரத்தத்தை அசைக்கின்றது. அந்த விசையானது மனித ஆன்மாவினால் ஒரு போதியஅளவிற்கு கட்டுப்படுத்தப்பட்டால் அது துணிச்சலாக (**ஷஜா அத்** ) உருவெடுக்கும். இது மனிதனை உருப்படியான நடைமுறைக்கொத்த பிரயோசனமான வேலை செய்யத்தூண்டும். இதற்கு உதாரணம் முஸ்லிம்கள் தங்கள் எண்ணிக்கையை விட கூடிய நிராகரிப் பவர்களுடன் போரிட்டு தங்களை நசுக்குபவர்களிடமிருந்து காப்பாற்றிக் கொள்வதாகும். இவ்வலிமை கூடினால் (**தஹவ்வுர்**) ஆக்கிரமிப்பையும், மேலாதிக்கத்தை உண்டாக்கும். இம்மனோபாவத்தை பெற்றுக்கொண்ட ஒருவன் மிக விரைவில் கோபமடைகிறான். இவ்வலிமை தேவையான அளவை விட குறைவாக இருந்தால் கோழை (**ஜூபுன்**) என அழைக்கப்படுகிறான். இந்த இயல்பை உடையவன் அவசியமானவற்றை செய்வதற்கு முடியாதது போகும்.

3. மனித ஆத்மாவின் மூன்றாவது ஆற்றல் பசி(**ஷஹ்வத்**) மனித ஆத்மாவிலுள்ள மிருகத்தன்மையான அம்சம் தனக்கு விருப்பமானதை நாடும். ஆத்மாவின் மனித அம்சமானது  தனது விருப்பத்தை கற்பு **(இஃப்பத்**) உடைய தாகவும் கௌரவமானதாகவும் மாற்றும். ஒரு கற்புள்ள மனிதன் தனது தேவையை இஸ்லாம் கூறியதற்கு ஏற்பவும் மனிதவாழ்வுக்கு ஏற்ற மாதிரியும் மாற்றிக்கொள்வான்.  இதன் அளவு மீறினால்  பேராசை துஸ்பிரயோகம் (**ஷரஹ்**) என்று அழைக்கப்படும். இந்த இயல்புடையவன் நீதி மற்றும் மற்றவர்களின் உரிமைக்கு மதிப்பளிக்காமல் தனது தேவையை பெற்றுக் கொள்வான். ஒருவரின் பசியானது சராசரி அளவிலிருந்து குறையும்போது சோம்பலை (**ஹுமூத்**) உண்டாக்கும். இவ்வாறானவன்  வெட்கம், பயம் கௌரவம் எனும் மனரீதியான நோயின் காரணமாக காரணமாக அவனுக்கு தேவையானதையும் பெற்றுக்கொள்ள முயற்சிக்கமாட்டான்.

மேல் கூறப்பட்ட நான்கு விதமான சக்திகளும்; 1. **ஹிக்மத்** (ஞானம்,பொது அறிவு) ,**அதாலத்**(நீதி), **இfபத்**(கற்பு), **சஜாஅத்**(துணிச்சல்) என்பன அவசியமான நல்லொழுக்கங்கள்  ஆகும். ஒருவர் ஆன்மாவின் மூன்று சக்திகளில் ஒன்றான ஹிக்மத்தை கையாண்டால் அவர் ஆன்மாவின் மற்றைய இரண்டு மிருக சக்திகளை (கத்பு, ஷஹ்வத்) வெற்றி கொண்டு இவ்விரண்டு தேவையற்றதை மாற்றி  கற்பையும் துணிச்சலையும் வளர்த்துக் கொள்ளமுடியும். அறிவின் தத்துவார்த்த விசைகள் மிதமான ஹிக்மதுக்கு அடிபணியாதுவிடின் அவை தீய முனைகளான தீய  செயல்களை  உண்டாக்கும். ஆறு முனைகளும் எப்போதும் தீங்கானவையாகும்.. உண்மையில் மிதமான நான்கு சக்திகளையும்  தீய நோக்கத்திற்கு பயன்படுத்தினால் அவையும் மோசமாகும். ஹிக்மத் பொது அறிவை கெட்ட நோக்கத்திற்கு பிரயோகிப்பதற்கு  உதாரணமாவது; மார்க்க சம்பத்தப்பட்ட தொழில் முயற்சிகளுக்கு  போட்டி தன்மை குறைவு என்பதால் அல்லது உயர் பதவியும்  தொழுகை  ஐந்து நேரத் தொழுகைக்கு வாய்ப்பு அல்லது  (இஸ்லாத்தை பிரச்சாரம் செய்வதற்கு இது அல்லாஹ்வுக்காகவே செய்யப்பட வேண்டியது.) பார்வைக்காக ஜிஹாத் செய்தல் என்பன. இவைகள் அல்லாஹ்வின் பொருத்தத்தை நாடி மட்டும் செய்ய வேண்டியவை.  மாறாக, ஒருவரின் நன்றியை எதிர்பார்த்து இன்னொரு வகையான சந்தோசமான காரியத்தை தவிர்த்தல் (இfபத்) கற்புக்கு மாற்றமாகும்.

முக்கியமான நான்கு நல்லொழுக்கங்களும்  அதன் தன்மையை கொண்டு அனுமதிக்கப்படும்.  உதாரணத்திற்கு ஞானம் ஏழு வகை குணங்களைக் கொண்டது. துணிச்சலும், தூய்மையும் ஒவ்வொன்றும் தனியே பதினொரு குணங்களை கொண்டது.

## தீமைகளும் அதற்கான தீர்வுகளும்

ஒரு மருந்து எல்லா வித நோய்களுக்கும் மருந்தாக இருக்குமேயானால் நோய் உள்ளதையும், அதற்கு ஆபத்தானவைகளையும் அதன் காரணங்களையும் அதற்கு எதிரானவைகளையும் அந்த மருந்தின் தாக்கங்களையும் அறிந்து இருத்தல் வேண்டும். இதற்கு அடுத்தது நோயை அடையாளங்காண்பது இது தானே  செய்வது அல்லது ஒருவரின் மேற்பார்வையின் கீழ் செய்வது அதாவது ஒரு ஆழமான இஸ்லாமிய அறிவைப்பெற்ற ஆலிமின் கீழ். ஒரு முஃ'மின் இன்னொரு முஃ'மினின் கண்ணாடியாகும். தனது பிழையை தானே  கண்டு

பிடிப்பது கடினம். ஆகவே, ஒருவரின் பிழையை கண்டுபிடிப்பதற்கு தனக்கு நம்பிக்கையான ஒரு நண்பன் அவசியமாகும். நம்பிக்கையான தோழன் ஆபத்தான நேரங்களில் உதவுபவன். அப்படிப்பட்டவர்களை அடைவது கடினம். இதை பற்றி இமாம் ஷாபி 'ரஹ்மத்துள்ளாஹி அலைஹி' அவர்கள் கூறினார்கள்.

**உறுதியான நண்பனையும் உண்மையான மருந்தையும்**
**காண்பது அரிது, காலத்தை விரயமாக்காதே"**

ஹஸரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு கூறினார்கள்;
**"எனது நண்பன் எனது பிழையை பற்றி எச்சரித்தான்**
**இதுவே உண்மை சகோதரத்துவத்தின் சாரம்"**

உனது எதிரிகள் உன்னை விமர்சிப்பதற்கு வழிபாத்துக்கொண்டே இருப்பார்கள் உனது குறைகள் தெரிபட்டால் உன்மீது எறிந்துகொண்டே இருப்பார்கள். இப்படியான விரோதமான கருத்துக்கள் உன்னுடைய குறைபாடுகளை அறிவதற்கு பிரயோசனப் படுத்திக்கொள். ஆனால் உனது நல்ல நண்பன் உனது குறைகளை பார்க்கமாட்டான். ஒருவர் மிகப்பெரும் இறைநேசர் ஹஸ்ரத் இப்ராஹிம் இப்னு அத்ஹம் 'ரஹ்மத்துல்லாஹி அலைஹி' அவர்களிடம் வந்து தன்னிடமுள்ள பிழைகள், குறைகளை கூறுமாறு மிகவும் தாழ்மையுடன் வேண்டிக்கொண்டார். அதற்கு ஹஸரத் அவர்கள், நான் உன்னை நண்பனாக்கி கொண்டேன், ஆதலால் உனது செயல்கள், பழக்கம் எல்லாம் எனக்கு நன்றாகவுள்ளது , எனவே வேறு யாரையும் கேளும் என்று சொல்லிவிட்டார்கள்.

உங்கள் குறைபாடுகளை கவனிக்கும் மற்றொரு வழி மற்றவர்களின் தவறு களைக் கவனிப்பதாகும். நீங்கள் மற்றவர்களின் தவறுகளை கவனிக்கும்போது, உங்களிடம் அத்தவறு இருக்கிறதா என்று முயற்சித்துப் பார்க்க வேண்டும். அதே தவறுகள் நீங்கள் செய்வதைக் கண்டால், நீங்கள் அதிலிருந்து விடுபடுவதற்கு முயற்சிக்க வேண்டும். இந்த முறையானது தீமைகளை அடையாளம் காண்பதற்கும் குணப்படுத்துவதற்குமான மற்றொரு முறையாகும். இது பின்வரும் ஹதீதின் விளக்கமாகும் **"ஒரு விசுவாசி (மு'ஃமின்) மற்றொரு விசுவாசியின் கண்ணாடி"** வேறு வார்த்தைகளில் கூறுவதானால், "மற்றவர்களின் தவறுகளில் இருந்து உங்கள் சொந்த தவறுகளை அடையாளம் காணுங்கள்". நபி ஈசா 'அலைஹிஸ்ஸலாம்' அவர்கர்ளிடம் நற்பண்புகளை யாரிடமிருந்து கற்றுக்கொண்டீர்கள் என கேட்கப்பட்டபோது அவர்கள் கூறினார்கள் "நான் யாரிடமிருந்தும் அவற்றைக் கற்றுக்கொள்ளவில்லை. நான் விரும்பாத விஷயங்களை மற்றவர்கள் செய்வதை கவனித்தேன், அதை செய்வதை நான் தவிர்த்தேன், அதில் நான் விரும்பியவற்றை நகல் எடுத்து பின்பற்றினேன் என கூறினார்கள் ".பிரபல மருத்துவர் லோக்மனிடம் அவர் நல்ல பழக்க வழக்கங்களை யாரிடமிருந்து கற்றுக்கொண்டார் என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்" நன்னடத்தை இல்லாதவர்களிடமிருந்து!"என கூறினார். சலஃப்-அஸ்-சாலிஹீன், சஹாபா, அவ்லியாக்கள் மற்றும் இஸ்லாமிய பெரியார்கள், நல்லடியார்களின் வாழ்க்கை வரலாறுகளை படித்தல் நல்ல பழக்கங்கள்[1] கற்றுக்கொள்வதற்கு மற்றொரு வழியாகும். தீய பழக்க வழக்கமுள்ளவர் அந்த தீய பழக்கம்

---

[1] வலி, அவ்லியா, சஹாபா, சலஃப்அஸ்-சாலிஹான் என்ற சொற்களின் பொருளை அறிய எங்களுடைய இன்னொரு பிரசுரம் "புனித சஹாபாக்கள்" என்ற நூலை பார்க்கவும்.ஹகீகத் கிதபெவியில், fபதீஹ் இஸ்தான்புல், துருக்கியில் கிடைக்கும். கிடைக்கும்..

ஏற்பட்டதுக்கான காரணத்தைத் தேட வேண்டும். இந்த காரணத்தை அகற்ற அவர் முயற்சிக்க வேண்டும். அதற்கு எதிர்மாறாகச் செய்வதன் மூலம் அதை அகற்ற அவர் முயற்சி செய்ய வேண்டும். அதை அகற்றுவதற்கு நேர்மாறாக செய்வது மிகவும் கடினம். அதற்கு கஷ்டப்பட்டு செயல்பட வேண்டும். நஃப்ஸ் தீய செயல்கள் மற்றும் அசிங்கத்தை மிகவும் விரும்புவதால் அதை அகற்றுவது மிகவும் கடினம்.

மற்றுமொரு பயனுள்ள முறையானது ஒருவர் ஒரு தீய செயலைச் செய்துவிட்டால், உடனடியாக, தனது நப்ஸ் விரும்பாத சில செயல்களைச் செய்ய வேண்டும். இதை நிறைவேற்றுவதற்கான ஒரு சிறந்த வழி சத்தியம் செய்வது அல்லது சிலவற்றை செய்வதாக பிரமாணம் எடுப்பது. அதாவது, ஒருவர் ஒரு செயலைச் செய்தால், ஒருவர் தர்மம் கொடுப்பது, நோன்பு பிடித்தல் தொழுகை நிறைவேற்றுவது போன்ற கூடுதல் நன்மைகளைச் செய்வது என்று சத்தியம் செய்ய வேண்டும். ஒருவரின் நப்ஸ் ஒருபோதும் கூடுதல் வணக்கம், நன்மை பிரார்த்தனை செய்ய விரும்புவதில்லை என்பதால் தீமைகளைச் செய்வதை நிறுத்துவார்.

மற்றொரு பயனுள்ள மருந்து தீங்கு விளைவிக்கும் முடிவுகளைத் தரும் அந்த தீமைகளைப் பற்றி மற்றவர்களிடமிருந்து படிப்பது அல்லது கேட்பது. பல ஹதீஸ்கள் தீமைகளின் தீங்குகளைப் பற்றி எங்களுக்குத் தெரிவிக்கின்றன. அவற்றில் சில:

1– **"அல்லாஹு வின் பார்வையில், தீய செயல்களை தவிர பெரும்பாவம் இல்லை"** ஏன் என்றால் "தீய செயல்களைச் செய்பவர்கள் அது பாவமான செயல் என்பதை அறிந்திருக்க மாட்டார்கள். ஆகையால், அவர்கள் செய்த பாவங்களுக்காக அவர்கள் மனம் வருந்துவதில்லை, இதனால் அவர்கள் செய்த பாவங்கள் குவிந்து பல மடங்கு அதிகரிக்கும்.

**2**–"**எந்தவித தயக்கமின்றி பாவம்செய்யும் மனிதன் பெரும் பாவியாவான்**".

**3**– **"எல்லா வகையான பாவங்களுக்கும் மனம்வருந்தி தவ்பா செய்வதில் பாவமன்னிப்பு இருக்கிறது, ஆனால் பெரும்பாவத்திற்கு எதுவும் இல்லை**. ஏனெனில் **குறிப்பிட்ட பாவத்திற்கு மனம்வருந்துவதற்கு பதிலாக அதைவிட மோசமான ஒன்றைச் செய்கிறான்."**

**4– "சூடான நீரில் ஐஸ் கட்டி உருகுவதுபோல் நல்லொழுக்கம் தவறுகள் குற்றங்களை உருக்கும். வினிகர் தேனை நாசமாக்குவதுபோல் தீய செயல் நன்மைகளை (தாவாப்) அழிக்கின்றன."**

நீதி ('**அதலத்**), கற்பு (**இஃபத்)**, துணிச்சல் (**ஷஜாஅத்**) மற்றும் ஞானம் (**ஹிக்மத்**), அவை தீய நோக்கங்களுடன் பயன்படுத்தப்படாதபோது எல்லா நற்பண்பு களுக்கும் ஆதாரங்களாக இருக்கின்றன. ஒருவர் நற்குணமுள்ள நபராக மாறுவதற்கும் தனது ஒழுக்கத்தை பாதுகாப்பதற்கும் பக்தியுள்ள **(சாலிஹ்**) மற்றும் நல்ல இயல்புடையவர்களுடன் இணைந்திருக்க வேண்டும். ஒரு நபரின் அஹ்லாக் அவரது தோழரின் பழக்கங்களைப் போலவே இருக்கும். அஹ்லாக் ஒரு நோயைப் போல தொற்றும். மோசமான நகைச்சுவையானவர்களுடன் ஒருவர் நட்பு கொள்ளக்கூடாது. எனக் கூறப்பட்டுள்ளது.

ஒரு ஹதீத் ஷரீபில் பின்வருமாறு: **“ஒரு நபரின் நம்பிக்கை அவனின் நன்பனுடையது போலவே இருக்கும்”.**

ஒருவன் பயனற்ற பொழுதுபோக்கு மற்றும் விளையாட்டுகள் தீங்கு விளைவிக்கும் நகைச்சுவைகள் மற்றும் சண்டைகள் ஆகியவற்றிலிருந்து ஒருவர் விலகி இருக்க வேண்டும். ஒருவர் அறிவைக் கற்றுக் கொண்டு பயனுள்ள செயல்களைச் செய்ய வேண்டும். ஒருவரின் ஒழுக்கத்தை குறைமதிப்பிற்கு உட்படுத்தும் அல்லது பாலியலை ஊக்குவிக்கும் புத்தகங்களை ஒருவர் படிக்கக்கூடாது, தார்மீக விழுமியங்களை அழிக்கும் அல்லது பாலியல் ஆசைகளைத் தூண்டும் வானொலி தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்க்கக்கூடாது அல்லது நிகழ்ச்சிகளைக் கேட்கக்கூடாது.

ஒரு நபர் இஸ்லாத்தின் நல்லொழுக்கங்கள் பற்றியும் அவற்றினால் ஏற்படும் நன்மைகள் பற்றியும், மற்றும் இஸ்லாத்தின் தடை செய்யப்பட்டவைகளின் தீங்குகள் மற்றும் அவற்றுக்கான தண்டனைகள் பற்றியும் தொடர்ச்சியாக நினைவுபடுத்த வேண்டும்.

செல்வத்தையும் பதவியையும் பின்தொடர்பவர்கள் யாரும் அவர்களின் நோக்கங்களை அடைவதில்லை. இருப்பினும், சிலர் நல்ல செயல்களைச் செய்வதற்காக பதவி மற்றும் உலக உடைமைகளை விரும்பியவர்கள் வசதியாகவும் மகிழ்ச்சியாகவும் வாழ்ந்திருக்கிறார்கள். உலக பதவிகளும் செல்வங்களும் ஒருவரின் குறிக்கோள்களாக இருக்கக்கூடாது, மாறாக அவை மற்றவர்களுக்கு நன்மை செய்வதற்கான வாகனங்களாக இருக்க வேண்டும்.

உலக பதவிகளும் செல்வங்களும் ஒரு கடல் போன்றது பலர் அந்த கடலில் மூழ்கி விடுகிறார்கள். அல்லாஹுதலாவின் பயம் அந்தக் கடலில் ஒருவர் உயிர்வாழ வேண்டிய கப்பல். எங்கள் நபி ‘ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்’ **ஒருமுறை “ ஒருவர் உலகில் ஒரு நிரந்தர குடியிருப்பாளரைப் போலல்லாது ஒரு பயணியைபோல் வாழ வேண்டும். அவர் இறந்து விடுவார் என்பதை ஒருபோதும் மறந்துவிடக்கூடாது!"** என்று கூறினார்கள். மனிதர்கள் இந்த உலகில் என்றென்றும் வாழ மாட்டார்கள். ஒருவர் உலக இன்பங்களில் உள்வாங்கப்படும்போது, அவரின் தொல்லைகள், கவலைகள் மற்றும் துயரங்கள் அதிகரிக்கும். பின்வரும் ஹதீஸ்களை ஒருபோதும் மறக்கக்கூடாது:

1– **“அதிகம் அமல்களை செய்திராத, நல்லொழுக்கமும் பண்புமுள்ள அல்லாஹுதஆலாவின் அடிமைக்கு மறுமையில் நல்ல படித்தரங்கள் கொடுக்கப்படும்”.**

**2– “ஆக இலகுவானதும் மற்றும் மிகவும் பயனுள்ள வழிபாடு குறைவாக பேசுவதும் நல்ல குணமுள்ளவராகவும் இருப்பது.”**

**3– “அல்லாஹு தலாவின் அடிமை பல வணக்க வழிபாடுகளைக் கொண்டிருக்கலாம், ஆனால், அவருடையது தீய நகைச்சுவை அவரை நரகத்தின் ஆழத்திற்குள் தள்ளும். அது சில நேரங்களில் அவரை நிராகரிப்புக்கு இட்டுச் செல்லும்.”**

**4–** ஒரு முறை ஸஹாபாக்கள் ‘ரலியல்லாஹு அன்ஹும்’ அல்லாஹ்வின் தூதர் ‘ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்’ அவர்களிடம் மிகவும் பக்தியுள்ள வணக்கவாளரைப் பற்றி கூறினார். அந்த நபர் தனது நாட்களை நோன்பு மற்றும்

இரவுநேரங்களை வணங்கிக்கொண்டிருந்தார், ஆனாலும் அவர் மோசமாக கோபக்காரராக இருந்தார் என கூறினார்கள். ரசூலுல்லாஹ் 'ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்', **இது ஒரு நல்ல நிலை அல்ல**. **அவரது இலக்கு நரக நெருப்பாக இருக்கும்.**" என்று கூறினார்கள் .

**5–** ரசூலுல்லாஹ் 'ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் கூறினார்கள் **"நான் நல்லொழுக்கங்களை பூர்த்தி செய்வதற்கும், மக்களுக்கு இந்த நற்பண்பு களை அவர்களுடன் சேர்த்துவைப்பதில் அவர்களுக்கு உதவுவதற்குமே நான் அனுப்பப்பட்டேன்**." என கூறினார்கள். முன்னர் அனுப்பப்பட்ட ஏகத்துவ மதங்களிலும் நல்லொழுக்கங்கள் இருந்தன. அந்த நற்பண்புகளை பூர்த்தி செய்வதற்காக இஸ்லாம் அனுப்பப்பட்டது. எங்கள் இந்த மார்க்கம் எல்லா நல்ல கட்டளைகளிலும் நற்பழக்கங்களுடனும் இருப்பதால், நல்லொழுக்கங்களைப் பற்றி எங்களுக்குத் தெரிவிக்க மற்றொரு ஆதாரம் தேவையில்லை. எனவே, நபிகள் நாயகம் 'ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்''அவர்களுக்குப் பிறகு வேறு எந்த தீர்க்கதரிசியும் வரமாட்டார்கள்.

**6–** "**ஒரு நற்குணமுள்ள நபர் இவ்வுலக, மறுவுலக நற்பேறுகள் இரண்டையும் அடைவார்**" நல்லொழுக்கமுள்ள ஒருவர் அல்லாஹ்வுக்கும் அவனது படைப்புகளுக்குமுரிய தனது கடமைகளை நிறைவேற்றுவார்.

**7– "நல்ல குணமும் அழகிய உடல் தோற்றமும் கொண்ட ஒருவரை நரக நெருப்பு எரிக்காது."**

**8– "நல்ல குணமுள்ளவராக இருப்பது என்பது உங்களிடமிருந்து விலகி இருப்பவர்களுடன் நெருக்கமாகவும் இணங்கியும் இருப்பது, உங்களைத் துன்புறுத்தியவர்களை மன்னிப்பது, உங்களை நோக்கி மோசமாக நடந்து கொண்டவர்களுக்கு தாராளமாக இருப்பது**." ஒரு நல்ல குணமுள்ள நபர் தன்னுடன் முரண்பட்டவர்களுக்கு நன்மை செய்வார் அல்லது அவரது கௌரவத்திற்கு தீங்கு விளைவிப்பவர்களை அல்லது உடல் ரீதியாகவோ அல்லது பொருள் ரீதியாகவோ காயப்படுத்துபவர்களை அவர் மன்னிப்பார்.

**9– "ஒருவர் அவர் எவ்வளவு கோபமாயிருந்த நிலையிலும் அவர் மற்றவர்களுடன் மென்மையாக நடந்து கொண்டால் அல்லாஹு தஆலா' நபரின் இதயத்தை ஈமானைக்கொண்டும் நம்பகத்தன்மையை நிரப்புவான்**, அவருக்கு எந்த பயமும் கவலையும் இருக்காது. உங்களை முறையற்ற முறையில் நடத்துபவர்களுக்கு நன்மை செய்வதே எல்லா நற்பண்புகளிலும் சிறந்தது. இந்த நடத்தை முதிர்ச்சியின் அறிகுறியாகும், இது உங்கள் எதிரிகளை நண்பர்களாக மாற்றுகிறது. இமாம் கஸ்ஸாலி 'ரஹ்மத்துல்லாஹி'அலைஹி' கூறுகிறார்கள் நபி ஈசா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு அருளப்பட்ட இன்ஜீல் (பைபிள்) இல் பின்வரும் அறிக்கைகளைப் படித்ததாக கூறுகிறார். "ஆனால் நான் உங்களுக்குச் சொல்கிறேன், நீங்கள் வன்முறையால் எதிர்க்க வேண்டாம்: ஆனால் எவன் உன்னை வலது கன்னத்தில் அடித்தால், திரும்பு மறு கன்னத்தை காட்டு" ஒருவன் உனக்கு எதிராக சட்டத்தின் மீது வழக்குத் தொடுத்தால், உன்னுடைய கோட்டையும் கழற்றிவிடு, அவன் உன் உடுப்பையும் வைத்திருக்கட்டும்" (மத்: 5-39,40) [1]

---

[1] கிரிஸ்தவர்கள் இன்றும் பாவிக்கும் இடை செருகப்பட்ட பிழையான பைபிளில் பிழைகளின் விவரங்களுக்கு எங்கள் **could not Answer** என்ற எங்களின் நூலை பார்க்கவும்.

ஆனால் சரித்திர பதிவேடுகள் ஸ்பெயினில் கிறிஸ்தவர்களால் முஸ்லிம் களுக்கும், யூதர்களுக்கும் இழைக்கப்பட்ட கொடுமைகள், அடக்குமுறை சித்திரவதைகள், மற்றும் ஸ்பானிஷ் நீதிமன்ற விசாரணைகள், இந்தியாவில், போஸ்னியா-ஹெர்சகோவினா மற்றும் ஜெருசலேமில் ஒருவருக்கொருவர் எதிராக இழைக்கப்பட்ட. அவர்களின் ஒழுக்கமற்ற நடத்தை அவர்கள் இன்ஜிலின் உண்மையான போதனைகளை பின்பற்றவில்லை என்பதை நிரூபிக்கிறது.

ஒவ்வொரு முஸ்லிமும் தனது இதயத்தில் வசிக்கும் தீமைகளிலிருந்து விடுபட்டு நல்லொழுக்கங்களால் அவற்றை மாற்ற வேண்டும். ஒரு சில தீமைகளை ஒரு சில நல்லவற்றால் மாற்றுவதன் மூலம் ஒருவர் நல்ல குணமுள்ள நபராக இருக்க முடியாது சூஃபி வழி ஒருவரை நற்குணங்களால் முதிர்ச்சியடையச் செய்யும் பாதை, அதாவது எல்லாவற்றிலும் முழுமையான நல்லொழுக்கங்கள். [இந்த முதிர்ச்சியை வழங்க முடியாத ஒரு பாதையை சூஃபி வழி(தரீக்கத்) என அழைக்க முடியாது. வழமைபோல், ஒவ்வொரு துறைகளிலும், ஒவ்வொரு முயற்சிகளிலும் சிலபோலி பயிற்சியாளர்கள் உள்ளனர். அதேபோல், கல்வி ஞானத்திலும் ஸுபி வழியிலும் தங்களை ஷேக் (ஆன்மீக வழிகாட்டிகளாக பிரதிநிதித்துவப்படுத்தும் ஷேக் (ஆன்மீக வழிகாட்டிகள்) இருக்கிறார்கள். உண்மையில், அவர்களுக்கு உண்மையான இஸ்லாம் பற்றியோ அதன் அழகான நற்குண படிப்பினைகள் பற்றியோ எதுவும் தெரியாது. இந்த வகையானவர்களையும், அவர்களின் வலைகளில் வீழ்வதிலிருந்தும் தவிர்க்க வேண்டும். அறுபது பெரும்பாவங்கள் நன்கு அறியப்பட்டவை. அவற்றில் நாற்பது பாவங்கள் பற்றி மொழிபெயர்த்து நாற்பது துணை அத்தியாயங்களில் சேர்த்துள்ளோம். இந்த தீமைகளைத் தவிர்த்து, அதற்கு முரணாக நடப்பவர் நற்குணமுள்ள ஒழுக்கமுள்ளவராக மாறுவர்.

## 1– நிராகரிப்பு (குப்ர்)

எல்லா தீமைகளிலும் மோசமானது அல்லாஹ்வின்(இருப்பினை) மறுப்பது அது நாத்திகமாகும். முஹம்மது 'ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்' அவர்களின் நபித்துவத்தை மறுப்பது குஃப்ர் ஆகும். மலக்குகள், மனிதர்கள் ஜின்கள் ஆகியன இந்த நம்பிக்கை கோட்பாட்டுக்குள் சேர்க்கப்பட்டுள்ளார்கள்.ஈமான் என்றால் முஹம்மது நபி 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' அவர்களுக்கு அல்லாஹ்வினால் கொடுக்கப்பட்ட எல்லா கட்டளைகளையும் இதயத்தால் ஏற்றுக் கொள்வதுடன் நாவினால் மொழிவது. ஈமானுக்கான இடம் ஆன்மீக இதயம் (**கல்ப்**). ஆன்மீக இதயம் என்பது உயிரியல் இதயத்தில் இருக்கும் ஒரு சக்தி. ஒருவரின் கட்டுப்பாட்டிற்கு அப்பாற்பட்ட சூழ்நிலைகள் துயரம், நோய், ஊமை மற்றும் திடீர் மரணம், நேரம் இல்லாத நிலையில், தங்கள் நம்பிக்கையை தங்கள் நாவினால் கூற முடியாமல் போவது ஆகியவை மன்னிக்கப் படக்கூடியவை. இன்னொருவரை பின்பற்றும் சாயல் நம்பிக்கையில் புரிந்து கொள்ளாமல் வளர்ந்த ஒருவரது நம்பிக்கை ஏற்றுக் கொள்ளத்தக்கது. அல்லாஹுத்த ஆலாவின் இருப்பை விளங்கிக்கொள்ளாமல் இருப்பதுவும் அதை பற்றி சிந்திக்காமல் இருப்பதுவும் பாவமாகும். ஈமான் கொள்ளவேண்டிய எந்தவொரு விடயத்தையும் மறுப்பது அது எல்லா விடயத்தையும் மறுப்பது போலாகும். இருப்பினும், ஈமானின் பிரிவுகளில் அனைத்தையும் அறியாமல் அனைத்தையும் ஒன்றாக ஏற்றுக்கொண்டதாக

மொழிவது ஈமான் என ஏற்றுக்கொள்ளப்படும். ஈமானின் இன்றியமையாத கூறுகளில் ஒன்று குஃப்ரின் அறிகுறிகளாக இஸ்லாம் கூறும் விஷயங்களைத் தவிர்ப்பது. சில குஃப்ரின் அறிகுறிகள்: இஸ்லாத்தின் எந்தவொரு கோட்பாடையும் மீறுவது, அதாவது. கட்டளைகள் மற்றும் தடைகள் மற்றும் குர்ஆன் அல் கரீமை அல்லது எந்தவொரு மலக்கு அல்லது தீர்க்கதரிசி 'அலைஹிஸ்ஸலாம்' போன்றதை கேலி செய்வது அல்லது அவசியமான விஷயங்களைப் பற்றியும் சந்தேகத்துடன் நம்புவது குஃப்ர் ஆகும். குப்ரில் (அவநம்பிக்கை) மூன்று வகைகள் உள்ளன:

1) அறியாமையிலிருந்து அவநம்பிக்கை(**ஜஹ்லி**)
2) பிடிவாதத்திலிருந்து அவநம்பிக்கை (**ஜூஹூதி**), மற்றும்
3) அவநம்பிக்கை கொண்டதாக தீர்ப்பு (**ஹுக்குமீ**)

**1–** அறியாமையிலிருந்து அவநம்பிக்கை **(குஃப்ர்- ஜஹ்லி):** இது ஒரு குறிப்பிட்ட இஸ்லாமிய கொள்கையைப் பற்றி கேள்விப்படாதவர்களில் மற்றும் அதைப் பற்றி சிந்திக்காதவர்களின் அவநம்பிக்கை "ஜஹ்ல்" என்பது அறியாமை என்று பொருள். அறியாமை இரண்டு வகைகள் உள்ளன

**a) எளிய அறியாமை**.
இந்த அறியாமை உள்ளவர்களுக்கு அவர்கள் அறியாதவர்கள் என்பது தெரியும். அவர்களுக்கு தவறான நம்பிக்கை இல்லை. அவர்கள் விலங்குகளை போன்ற வர்கள். ஏனென்றால் விலங்குகளிடமிருந்து மனிதர்களை வேறுபடுத்துவது அறிவும் புரிதலும். இந்த மக்கள் அதைவிடக் குறைவானவர்கள் ஏனெனில் ஒவ்வொரு விலங்கும் சிறப்புத் துறையில் முன்னேறியுள்ளன. அவைகள் எதற்காக படைக்கப்பட்டவை, அவர்களின் உணர்வுகள் அவைக்கு எப்படி உபயோகமானது என்பது பற்றி அதற்கு தெரியும். இது தனக்குத் தீங்கு விளைவிப்பதை உணர்ந்திருக்கிறது. அதிலிருந்து விலகி செல்லவும் தெரியும். மறுபுறம், இந்த அறிவற்ற மக்களுக்கு அவர்களுக்குத் தெரியாது என்பது தெரியும். ஆனால் அவர்கள் அறியாமையிலிருந்து மீண்டு அறிவைத்தேடி எந்த அடியையும் அவர்கள் எடுக்கவில்லை.

இமாம் அர் ரப்பானி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் அவரது ம**க்துபாத்** கிதாபின் முதல் தொகுதியின் 259 வது கடிதத்தில் பின்வருமாறு கூறுகிறது: "நான் புரிந்து கொண்டுள்ள வகையில், மலைகளில் வாழ்ந்து எந்த மார்க்கத்தைபற்றியும் கேள்விப்படாத சிலை வணங்கிகளான மலைவாசிகள் நரகத்துக்கோ, சொர்க்கத்துக்கோ செல்லமாட்டார்கள். மரணத்தின் பின் எழுப்பப்பட்ட பிறகு அவர்களின் செயல்களைப் பற்றியும் விசாரிக்கப்படும். அவர்கள் செய்த தவறுகளுக்கு தண்டனை அளிக்கப்பட்ட பின் மற்ற விலங்குகளுடன் சேர்ந்து அழிக்கப்படுவார்கள். அவர்கள் எந்த இடத்திலும் நீடூழி தங்க மாட்டார்கள்.

அவர்களுக்கு சரியான மார்க்கத்தை பெற்றுக்கொள்ள அவர்களிடம் போதிய அறிவோ தகவலோ கிடைக்காத நிலையில் அல்லாஹுத ஆலா அவர்களை நீடூழி தண்டிப்பான் என்று சொல்வது எனக்கு மிகவும் கடினம் ஏனெனில். மக்கள் சாதாரணமான உலக வாழ்வில் தவறு செய்வதாய் நாங்கள் கண்கூடாக காண்கின்றோம். மேலும், நிராகரிப்பவர்களுக்கு பிறந்த பருவ வயதை

அடையாத சிறுவர்களும் மரணித்தால் அவர்களும் தண்டிக்கப்படாமல் விலங்குகளைப்போல் அழிக்கப்படுவார்கள்.

இதேபோல். நரகத்துக்கோ அல்லது சொர்க்கத்துக்கோ செல்லாத மற்றொரு கூட்டத்தினர் தெய்வீக வழிகாட்டி இல்லாத இடங்களிலும் காலங்களிலும் வாழ்ந்த மக்கள். நபிமார்களும் அவர்கள் கொண்டுவந்த வேதங்களும் மறைந்து, மறக்கடிக்கப்பட்டு நீண்ட காலத்தின் பின் வாழ்ந்த மக்களின் நிலையும் இதுவே. அவர்களுக்கு நபிமார்களையோ அல்லது அவர்களின் உண்மையான மார்க்கங்களையோ அறிய வாய்ப்பு கிடைக்கவில்லை. இதே போல் நிராகரிப்பவர்கள் வாழும் தேசத்தில் வாழும்போது அவர்களுக்கு இஸ்லாத்தின் செய்தி கிடைக்காத மக்கள் ஆகியவர்கள் நரகத்திற்கோ, சுவர்க்கத்திற்கோ போகமாட்டார்கள் அவர்கள் மறுமை நாளின் பின் முன்னையவர்கள்போல் அழிக்கப்படுவார்கள்.

ஈமானின் பிரிவுகள், கொள்கைகள், இஸ்லாத்தின் கட்டளைகள், மற்றும் ஹலால், ஹறாம் பற்றிய இஸ்லாமிய அறிவை கற்றுக்கொள்வது பர்ளாகும்[1]. அதை கற்காமல் இருப்பது ஹறாம். உண்மையில் இதை பற்றி கேள்விப்பட்டபின் அதை அற்பமாக நினைப்பது குப்ர் ஆகும். அறியாமைக்கு . மாற்று மருந்து கல்வியை தேடி படிப்பது.

**b) இரண்டாவது வகை அறியாமை கூட்டு அறியாமை** (ஜஹ்ல் அல் முராக்கப்) அதாவது தவறான மற்றும் ஊழல் நிறைந்த நம்பிக்கையைக் கொண்டிருத்தல். பண்டைய கிரேக்க தத்துவஞானிகள், மற்றும் ஈமானை இழக்கும் முஸ்லிம் களின் எழுபத்திரெண்டு கூட்டத்தினரிடம் உள்ள நம்பிக்கை இந்த வகை அறியாமைக்கு உதாரணம். இந்த வகை அறியாமை முதல் வகையை விட மோசமானது. இது தீர்வு இல்லாத நோய். இது ஈசா 'அலைஹிஸ்ஸலாம்' அவர்கள் கூறினார்கள், **"நான் காது கேளாத மற்றும் ஊமை மக்களை குணப்படுத்தி யுள்ளேன், இறந்த உடல்களை மீண்டும் உயிர்ப்பித்து இருக்கிறேன். ஆனால் கூட்டு அறியாமைக்கு இன்னும் நான் மருந்து கண்டுபிடிக்கவில்லை".** இந்த மக்கள் தங்களை அறியாதவர்கள் என்பதை கருத்தில் கொள்ளாது. மாறாக, மற்றவர்களைவிட அறிவு வாய்ந்தவர்கள் என நினைக்கின்றார்கள். அவர்களுக்குள்ள நோயை அவர்கள் அறிவதில்லை. எனவே அவர்கள் தீர்வு காண மாட்டார்கள். தெய்வீக உதவி வழங்கப்பட்டவர்கள் மட்டுமே அவர்களின் நோயைப் புரிந்து அதற்கான தீர்வைத் தேடுவார்கள்.

2– பிடிவாதத்தில் அவநம்பிக்கையில் இருப்பவர்கள் **(குஃப்ர்-இ-ஜூஹூதி):**
இந்த பிரிவினர் உலகாயுத பட்டம் பதவியில் ஆசை கொள்வதால் அல்லது கர்வத்தினால் அல்லது புதிய மதத்திற்கு மாறும்போது மக்களால் வெறுக்கப் படலாம் என்ற பயத்தினால் நம்பிக்கையற்ற தன்மையை தெரிந்தே தெரிவு செய்வார்கள். உதாரணத்திற்கு பிர்அவ்னும் அவனுடைய தோழர்களுக்கும் இந்த வகை குஃப்ரிலேயே இருந்தார்கள். அவர்கள் மூஸா 'அலைஹிஸ் ஸலாம்' அவர்களின் அற்புதங்களை கண்டபிறகும் அவர் அவர்களை போன்ற மனிதன் என்பதால் அவரை நம்பாமல் நிராகரிப்பிலேயே இருக்க விரும்பினர். அவர்களை போன்ற ஒரு மனிதன் தீர்க்கதரிசி என்பதை நம்ப மறுத்தார்கள்.

[1] ஃபர்ளு என்றால் கடமையாக்கப்பட்ட இஸ்லாத்தின் திறந்த கட்டளைகள் ஃபர்ளு என்று அழைக் க்கப்படும்.

தீர்க்கதரிசி என்பவர் மலக்குகளிருந்துதான் வர முடியும் என நம்பினர். முரண்பாடாக இருப்பினும், தங்களைப் போன்ற ஒரு மனிதராக இருந்த பிர்அவ்னை அவர்கள் வழிபட்டனர். மேலும், பைசண்டைன் பேரரசர் ஹெராக்கிள்ஸ் தெரிந்தே குபிரில் இருக்க விரும்பினார். ஏனென்றால் அவர் தனது சிம்மாசனத்தை மிகவும் நேசித்தார். அவர் தனது மதத்தை மாற்றினால், அவர் தனது சிம்மாசனத்தை இழப்பார் என நினைத்தார். பைசண்டைன் மன்னர் பேரரசர் அல்லது சீசர் என்றும், பாரசீக மன்னர்கள் கொஸ்ரோஸ் என்றும், எத்தியோப்பியன் மன்னர்கள் நெகஸ் என்றும், துருக்கிய மன்னர்கள் கான் என்றும், காப்டிக் அல்லது ஜிப்சி மன்னர்கள் பார்வோன் என்றும், எகிப்திய மன்னர்கள் “அஸீஸ்” என்றும், ஹிமாரிய மன்னர்கள் துப்பா என்றும் அழைக்கப்பட்டனர்.

எங்கள் நபி 'ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம்' அவர்களின் தோழர்களில் ஒருவரான திஹ்யா 'ரலியல்லாஹு அன்ஹு' நபி 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' எழுதிய கடிதத்தை பைசண்டைன் பேரரசர் ஹெராக்கிள்ஸ்க்கு டமாஸ்கஸில் வைத்து வழங்கினார். அந்த கடிதத்தில் அவர் இஸ்லாத்திற்கு அழைக்கப்பட்டார். மக்கா காபிர்களின் வணிகர் கூட்டம் டமஸ்கஸுக்கு அதற்கு முந்தைய மாலை வந்திருந்தனர். ஹெராக்கிள்ஸ் அவர்களின் தலைவரான அபு சுஃபியானை அவரது மாளிகைக்குச் அழைத்து அவரிடம் கேட்டார், யாரோ மதீனாவில் தன்னை ஒரு நபி என்று கூறுகிறார் என்பதை நான் கேள்விப்பட்டேன். அவர் பிரபுக்களில் ஒருவரா? அல்லது ஒரு கீழ் வர்க்கத்தில் ஒருவரா? அவருக்கு முன்னர் யாராவது ஒருவர் தன்னை நபி என்று கூறிக்கொண்டிருக்கிறாரா? அவரது மூதாதையர்களில் யாராவது அமீர் அல்லது மாலிக் இருந்தார்களா? {நாட்டை ஆள்பவர் அமீர் அல்லது மாலிக் என அழைக்கப்படுவர்}. அவரது அணிகளில் சேரும் நபர்கள் பணக்கார குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் அல்லது அவர்கள் ஏழைகள் மற்றும் திறமையற்றவர்களா? புதிய மதத்திற்கான அவரது அழைப்பு முன்னேறுகிறதா? அவருடைய மதத்தில் சேருபவர்களில் பின்னர் அதை கைவிடுகிறீர்களா? அவர் எப்போதாவது ஒரு பொய்யைக் கூறவோ அல்லது அவரது வாக்குறுதியை மீறவோ பார்த்தீர்களா? அவர் போர்களில் வென்றாரா அல்லது இழக்கிறாரா? இந்த கேள்விகளுக்கு அபுசுஃபியோன் பதிலளித்தபோது, ஹெராக்கிள்ஸ் கூறினார் இந்த பதில்கள் அனைத்தும் அவர் ஒரு உண்மையான நபி என்பதைக் காட்டுகிறது என்று கூறினார். பக்கச்சார்பான மற்றும் பொறாமை கொண்ட, அபுசுஃப்யான் முரண்பட்டார். அவர் சில பொய்கள் கூறத்தொடங்கினார்.

உதாரணமாக, “ஒரே இரவில் மக்காவிலிருந்து ஜெருசலத்தில் அல்-அக்ஷா வரை. அவர் பயணித்ததாக கூறுகிறார் என்று கூறினார்” இதைக் கேட்டதும், ஹெராக்கிள்ஸ் முன்னிலையில் இருந்தவர்களில் ஒருவர் அந்த உரையாடலில் அவர் ஜெருசலத்தில் அல்-அக்ஸாவில் இருந்ததாகவும் அன்றிரவு, அவர் அதைக் கண்ட எல்லாவற்றையும் அவர்களிடம் சொன்னார். அடுத்த நாள், ஹெராக்கிள்ஸ் ஸஹாபி திஹியா 'ரலியல்லாஹு அன்ஹு' விடமிருந்து அக்கடிதத்தை பெற்று அவருக்காக அந்தக் கடிதத்தைவாசிக்க கூறினார், கடிதத்தில் உள்ளதை மனமார ஏற்றுக்கொண்டு ஹெராக்கிள்ஸ் திஹ்யா ரலியல்லாஹு விடம் முஹம்மது 'அலைஹிஸ்-சலாம்' நபி என்று கூறினார். இருப்பினும், தான் இஸ்லாத்திற்கு மாறியதை பற்றி தனது மக்களுக்கு தெரியப்படுத்த அவர் பயந்தார். மேலும், அக்கடிதத்தை திஹியா

'ரலியல்லாஹு' விடம் கொடுத்து அதை ஒருபாதிரியிடம் கொடுப்பதற்கு ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு எடுத்துச் செல்லுமாறும். அவர் நன்கு அறிவுள்ளவர் என்றும் அவரும் தன்னை போல் அக்கடிதத்திலுள்ளதை நம்புவர் என்றும் கூறினார். பாதிரியார் கடிதத்தைப் படித்தவுடன் அவர் செய்தியை ஏற்றுக்கொண்டார், அவரைச் சுற்றியுள்ளவர்களையும் இந்த புதிய நம்பிக்கைக்கு அழைப்பு விடுத்தார். இன்னும் அங்கு இருந்த மக்கள் அவரைக் கொன்றனர்.திஹ்யா'ரலியல்லாஹுஅன்ஹு' திரும்பி சென்று என்ன நடந்தது என்று ஹெரக்கிள்ஸுக்கு அறிவித்தார். ஹெராக்கிள்ஸ் அது நடக்கும் என்று அவர் அறிந்திருந்ததாகவும், அதுதான் புதிய நம்பிக்கை பற்றி அவர் யாரிடமும் சொல்லவில்லை என்றும் பதிலளித்தார். அவர் ஒரு கடிதம் எழுதி ரசூலுல்லா 'ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்' அவர்களுக்கு அவரது விசுவாசத்தை தெரிவித்தார். பின்னர், அவர் தலைநகரம் ஹமுசுக்கு சென்றார். அங்கு அவரது ஊழியர்களில் ஒருவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது அதில் முஹம்மது 'ஸல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்' அவர்களின் தீர்க்கதரிசனத்தை ஏற்றுக்கொண்டதாக அறிவித்தார்.

ஹெராக்கிள்ஸ், அவரது சமூகத்தின் ஆளுமைகள் மற்றும் மக்களை அழைத்து அவர்களுக்காக அக்கடிதம் வாசிக்கப்பட்டது. பின்னர் தீர்க்கதரிசனத்தை அவர் தான் நம்புவதாக அவர்களிடம் கூறினார். அவரைச் சுற்றி கூடியிருந்த அனைத்து மக்களும் கடுமையாக எதிர்த்தனர். நிலைமையின் தீவிரத்தை பார்த்தவுடன் அவர்கள் நம்ப மாட்டார்கள் என்று ஹெராக்கிள்ஸ் புரிந்து கொண்டார், எனவே, அவர் மன்னிப்பு கேட்டார், அவர்களுடைய மதத்துடன் உள்ள இணைப்பின் பலத்தை அவர் சோதித்து அறிவதற்காக அவர்களிடம் சொன்னதாக தெரிவித்தார். அவரை எதிர்த்த மக்கள் அவரது பதில்களால் அமைதியடைந்து, மன்டியிட்டு அவர்கள் அவருடனான தொடர்பை வெளிப்படுத்தினார். இதனால் அவர் தனது சிம்மாசனத்தை இழக்கக்கூடாது என்பதை அவர் விரும்பினார். பின்னர், அவர் முஸ்லிம்களுடன் சண்டையிட ஒரு இராணுவத்தை முட்டா என்ற இடத்திற்கு அனுப்பினார். அந்த போரில் பல முஸ்லிம்கள் ஷஹீதானார்கள். உண்மையில், ஹெராக்கிள்ஸின் உறுதிமொழி கடிதம் வந்து, படிக்கப்பட்ட போது அல்லாஹ்வின் தூதர் 'ஸல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்' அவர்கள் "**அவர்பொய் சொல்கிறார். அவர் கிறிஸ்தவத்தின் மீதான நம்பிக்கையை மாற்றவில்லை.**" என கூறினார்கள். ஹெராக்கிள்ஸுக்கு ''ஸல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம் அவர்களால்' அனுப்பப்பட்ட தீர்க்கதரிசன கடிதம் **ஸஹீஹ் புஹாரி** என்ற ஹதீத் கிரந்தத்தில் உள்ளது., அதே போல் **மவாஹிப்** மற்றும் **பெரீக்கா** கிதாபிகளில் உள்ளன .

**3– தீர்ப்பின் மூலம் அவநம்பிக்கை (குஃப்ர்-இ-ஹுக்மி).**

ஒருவர் இஸ்லாத்தில் நம்பிக்கையில்லாமையின் அடையாளமாக குறிப்பிடும் ஒன்றைச் செய்வது அல்லது சொல்வது குஃப்ர் ஆகும். அவர் உண்மையிலேயே ஒரு முஸ்லீம் என்று நம்பினாலும், விசுவாசித்தாலும் சரியே. இஸ்லாத்தில் மதிப்புமிக்கது அல்லது விலைமதிப்பற்றது என்று கூறப்படும் எதையும் கேலி செய்வது, அவமதிப்பது குஃப்ர் ஆகும். அல்லாஹு தஆலாவுக்கு பொருத்தமற்ற ஒன்றை சொல்வது குஃப்ர் ஆகும். மேலும் குஃப்ருக்கு காரணமான செயல்களின் எடுத்துக்காட்டுகள்; அல்லாஹ் அர்ஷிலிருந்து அல்லது வானத்திலிருந்து எங்களை கவனிக்கின்றான் என்று கூறுவது, நீ எனக்கு பிழை செய்வது போல்

அல்லாஹ் உனக்கு பிழை செய்வான் என்று கூறுவது, ஒரு முஸ்லிமை பார்த்து அவன் எனக்கு ஒரு யூதனை போன்றவன் என்று கூறுவது, ஒரு பொய்யைச் சொல்லிவிட்டு," அது உண்மை என்று அல்லாஹ் அறிவான் என்று கூறுவது, குர்ஆன் அல் கரீமுக்கு அல்லது அதன் ஒரு எழுத்துக்கு கேவலமான ஒன்றைச் சொல்வது, மலக்குகளை பற்றி ஒரு மாறான கருத்து தெரிவிப்பது, குர்ஆன் அல்கரீமின் வசனங்களில் ஒன்றை கூட மறுத்தல், குர்ஆன் அல்கரீமை இசைக்கருவி வாத்தியங்களுடன் சேர்த்து ஓதுதல், கிறிஸ்தவ பைபிள் அல்லது தவ்றாத் வேதங்களின் அசல் பதிப்புகளை மறுத்தல். அல்லது ஷாஸ்[1] எனப்படும் எழுத்துக்களுடன் குர்ஆன்அல்-கரீமைப் ஓதி உண்மையான குர்ஆனைப் ஓதியதாக கூறுவது, தீர்க்கதரிசிகளை பற்றி அவமரியாதையாக கருத்துக்கள் கூறுவது, குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ள இருபத்தைந்து நபிமார் களில் "அலைஹிமுஸ்-சலாவத்து-தஸ்லிமத்" ஒருவரையாவது தரக்குறைவாக பேசுவது அல்லது மறுப்பது. பொதுவாக அறியப்பட்ட சுன்னத் ஒன்றை வெறுப்பது, அல்லது ஒரு நல்ல செயல்கள் பேணுதல் உள்ள நபரைக்குறித்து அவர் ஒரு நபியை விட சிறந்தவர், மேலானவர் என்று கூறுவது குப்ராகும். நபிமார்கள் தேவையுள்ளவர்கள் என்று கூறுவதும் குப்ராகும். ஏனெனில் அவர்கள் வறுமையை விரும்பி ஏற்றுக்கொண்டவர்கள். யாரவது ஒரு நபர் தான் ஒரு தீர்க்கதரிசி என்று கூறினால் அவரும் யார் அவரை நபி என்று நம்பிக்கை கொள்கிறார்களோ அவர்களும் காஃபிர்களாகும்., "எனது கல்லறைக்கும் எனது மின்பருக்கும் இடையில் சொர்க்கத்தின் தோட்டங்களில் ஒன்று என ஹதீத் ஷரிஃபில் கூறியிருக்க "நான் கல்லறை ஒரு பாய் மற்றும் ஒரு மின்பார் தவிர வேறு எதையும் பார்க்கவில்லை" என யாரும் கூறினால் அவர் ஒரு காஃபிராக மாறுவார். மறுமையில் நடக்க இருக்கும் நிகழ்வுகளை கேலி செய்வதும் கப்ரில் நடக்க இருக்கும் வேதனைகளை மறுப்பதும் [அல்லது அது நியாயமானதல்ல என்று சொல்வது], விசுவாசிகள் சொர்க்கத்தில் அல்லாஹு தஆலாவை பார்ப்பார்கள் என்பதை மறுப்பதும் குஃப்ராகும். உதாரணமாக, "எனக்கு சொர்க்கம் தேவையில்லை. நான் அல்லாஹ்வைப் பார்க்க விரும்புகிறேன் என்று சொல்வதும் குப்ராகும்.. பின்வரும் சொற்கள் இஸ்லாத்தை மறுப்பதற்கான அறிகுறிகளாகும்: உதாரணமாக, இஸ்லாமிய அறிவை விட விஞ்ஞான அறிவு சிறந்தது, அல்லது நான் தினசரி தொழுகிறேனா இல்லையா என்பதில் எந்த வித்தியாசமுமில்லை என்று கூறுவது, நான் சகாத்து கொடுக்கமாட்டேன் என்பது, நான் வட்டி ஹலால் ஆக விரும்புகிறேன் என்பது,", ஜூல்ம் (கொடுமை செய்வது) ஹலால் ஆக இருக்க வேண்டும்" என்று சொல்வது, இஸ்லாம் தடைசெய்யும் மற்றும் ஹராம் என்று அழைக்கும் சட்டவிரோத வழி வழிகளில் சம்பாதித்த சொத்திலிருந்து தர்மம் கொடுத்து அதிலிருந்து மறுமைக்கான பிதிபலனை(தவாஃபை) எதிர்பார்ப்பது இன்னும் தர்மம் பெற்ற நபர் அவருக்கு கொடுக்கப்பட்டது இஸ்லாத்தில் தடுக்கப்பட்ட சட்டவிரோத வழியிலிருந்து பெறப்பட்டது என்று தெரிந்தும் கொடுத்தவருக்காக துஆ கேட்பது, இமாமுல் அஃலம் அபு ஹனிபா ரஹிமஹுல்லாஹ் அன்ஹு அவர்களின் கியாஸ் செல்லுபடியாகாது என்று கூறுவது என்பன குப்ரை உண்டாக்கும். புனித குர்ஆனின் சூரா அஃராபில் 57ஆவது ஆயத்த்தில் அல்லாஹு தஆலா கூறுகிறான். **அவன்தான் (அல்லாஹுதஆலா) அவன் மழைக்கு முன்னர் நற்செய்தியை கூறும் குளிர்ந்த காற்றை அனுப்பி**

---

[1] இந்த சொல்லின் பொருளை அறிவதற்கு எங்களின் மற்ற நூல்களை பார்க்கவும்

**வைக்கிறான். அது அவன் கருணை கொண்டு முன்னால் செல்கிறது: அவை கனத்த மேகங்களை சுமந்த போது அவற்றை நாங்கள் ஒரு வரண்டு இறந்துபோன பூமியின் பக்கம் அனுப்புகிறோம், மழையை அங்கே இறக்கி அதில் இருந்து, எல்லா வகையான தானியங்களையும் பழவகைகளையும் விளைவிக்கிறோம். அதேபோல், நாம் மரித்தோரை எழுப்புவோம்;" இதை நீங்கள் அறிந்து நல்லுணர்வு பெறுவீர்களாக." (7-57**)
கியாஸ் செல்லுபடியாகும் (ஹக்) என்பதை இந்த ஆயத் கரீமா நிரூபிக்கிறது. இரு முரண்பாடான விஷயங்கள் ஒருமனதாக அறியப்பட்ட ஒரு பொருளுடன் ஒப்பிடப்படுகிறது. அல்லாஹுு தலா மழையை பெய்த வைத்து பூமியிலிருந்து புற்களை உருவாக்குகிறான் என்பதை எல்லோரும் அறிவர். இறந்த உடல்களின் உயிர்த்தெழுதல், வறண்ட நிலத்திலிருந்து பச்சைப்புல் வளர்வதை ஒத்து இருக்கிறது என்பதை ஒப்புவமை மூலம் நிரூபிக்கின்றது.

இஸ்லாத்தின் போதனைகளை, அல்லது இஸ்லாமிய அறிஞர்களை இகழ்வது மறுப்பது குஃப்ர்-இ- ஜுஹுூதி (பிடிவாதத்திலிருந்து அவநம்பிக்கை).

காஃபிராக மாற விரும்பும் எவரும் அவர் ஒரு காஃபிராக மாற நினைத்தவுடன் அவர் ஒரு காஃபிராக மாறிவிடுவார். மற்றவர்கள் காஃபிர்களாக மாற வேண்டும் என விரும்பும் நபரும் காஃபிராக மாறிவிடுவார் ஏனெனில் அவர் நிராகரிப்பை விரும்புகிறார். ஒருவர், அடக்குமுறையாளர்கள் கொடியவர்கள் அதன் காரணமாக அவர்கள் அவர்களின் அடக்குமுறை நடவடிக்கைக்காக நரகில் தண்டிக்கப்படவேண்டும் என்பதற்காக காஃபிர்களாக மாற வேண்டும் என விரும்பினால் அவர் காபிராக மாட்டார். ஒருவர் வேண்டுமென்றே நிராகரிப்பை ஏற்படுத்தும் வார்த்தைகளை தெரிந்து சொன்னால் அவர் ஒரு காஃபிராக மாறிவிடுவார். ஒருவர் தவறுதலாக நிராகரிப்பை ஏற்படுத்தும் வார்த்தைகளை அவருக்கு அது நிராகரிப்பை ஏற்படுத்தும் என்று தெரியாத நிலையில் கூறினாலும் அவர் ஒரு காஃபிராக மாறிவிடுவார். ஆனால், ஒருவர் தவறுதலாக நிராகரிப்பை ஏற்படுத்தும் வார்த்தைகளை அவர் அவ்வாறு செய்ய விரும்பாத, நிலையில் கூறினால் அவர் காஃபிராக மாட்டார்.

வேண்டும் என்றே குஃப்ரை ஏற்படுத்தும் செயலை நடைமுறைப்படுத்துவது குஃப்ரை விளைவிக்கும். குஃப்ரை ஏற்படுத்தும் செயலை அது குஃப்ரை விளைவிக்கும் என்று தெரியாத நிலையில் செய்தாலும் குஃப்ராகும் என்பது பல அறிஞர்களின் முடிவாகும். கயிறு போன்ற பெல்ட்(zunnâr)[1] இடுப்பை வளைத்து அணிவது இன்னும் குப்ரின்அடையாளமான பிற அறிகுறிகளைப் பயன்படுத்து வதும் எதையும் அணிவது குஃப்ரை விளைவிக்கும். இருந்தபோதிலும் , யுத்த காலங்களில் எதிரியை ஏமாற்றுவதற்காக இவற்றை அணிவதும் யுத்தத்தில் தந்திரமாகப்பயன்படுத்தவும், சமாதான காலங்களில் அடக்குமுறையாளரின் தீங்குகளிலிருந்து தங்களைப் பாதுகாத்து கொள்வதற்காகவும் செய்வது குஃப்ரை ஏற்படுத்தாது. ஆனால், ஒரு வியாபாரி தன்னை காஃபிர்களின் நாட்டில் ஏமாற்றுவதற்காக இவற்றைப் பயன்படுத்தினால் அவர் ஒரு காஃபிராக மாறுவார். ஒருவர் அவர் சரியான நம்பிக்கையில் இருந்த போதிலும் சரி, இந்த விஷயங்களை நகைச்சுவையாகவோ அல்லது மற்றவர்களை சிரிக்கவோ

---

[1] zசுன்னர் என்பது கிறிஸ்தவ பாதிரி மார்கள் அணியும் கயிறு போன்ற பட்டி

பயன்படுத்தினால்  அவர் சரியான நம்பிக்கையில் இருந்த போதும் காஃபிராக மாறுவார். காஃபிர்கள் தங்கள் புனித நாட்களைக் கொண்டாடும்போது,அந்த விசேஷத்திற்காக அவர்கள் கடைபிடிக்கும் மத விஷயங்களைச் செய்வது குஃப்ரை ஏற்படுத்தும். மேலும், அவர்களின் புனித நாட்களில் அவர்களுக்கு அவர்களுடைய விசேஷமான சிறப்பு,பொருட்களை அன்பளிப்பு செய்வதும் குஃப்ரை ஏற்படுத்தும்.  {உதாரணமாக, கிறிஸ்தவர்களின் ஈஸ்டர் புனித நாளில் முட்டைகளை ஓவியம் வரைவது மற்றும் கிறிஸ்தவ குழந்தைகளுக்கு பரிசாக வழங்குவது குஃப்ரை ஏற்படுத்தும்}.

ஒரு முஸ்லீம் ஆவதற்கு நப்ஸ் நம்ப வேண்டும் என்பது அவசியமில்லை.  ஒரு முஸ்லீம் தனது இதயத்தில் நம்பிக்கையின்மையை ஏற்படுத்தும் விஷயங்கள் போன்ற சில உணர்வுகளை அனுபவிக்கலாம். அவை அவருடைய நப்ஸிட மிருந்து  இதயத்திற்கு வருகின்றன. அவர் அவரது நாவின் மூலம் அப்படிச் சொல்லவில்லை என்றால் அது அவரது நம்பிக்கையின் வலிமையைக் காண்பிக்கும். நிராகரிப்பை ஏற்படுத்தும் விஷயங்களைப் பயன்படுத்துபவர் களை நாம் 'காஃபிர்' என அழைக்கக்கூடாது.  ஒரு குறிப்பிட்ட முஸ்லிமிடம் எதாவது குப்ருக்குரிய செயல்கள் அல்லது சொல் அறிகுறிகள் இருந்து அதில் 99 குப்ருக்குரியவும் ஒன்று ஈமானுக்குரியதாகவும் காணப்பட்டால் அவரை காபிர் என்று அழைக்க முடியாது. நாங்கள் மற்ற முஸ்லிம்களைப்பற்றி ஒரு நல்ல அபிப்பிராயத்தை கொண்டிருக்குமாறு கட்டளையிடப் பட்டுள்ளோம் (**ஹுஸ்ன்-இ-ஸான்**).

ஒரு மனிதர் இலக்கியத்தில், மற்றும் அறிவு ரீதியாக அல்லது புத்திசாலி என்பதைக் காண்பிப்பதற்காக அல்லது மற்றவர்களை ஆச்சரியப்படுத்த அல்லது சிரிக்க வைப்பதற்கு  அல்லது மகிழ்விப்பது போன்றவைக்காக சில வார்த்தைகளை கூறுவது  தீர்ப்பின் மூலம் அவநம்பிக்கை (**குஃப்ர் அல்-ஹுக்மீ**)ஏற்படுத்தக்கூடும். ஒருவர் கோபத்தில் இருக்கும்போது கூறும் வார்த்தைகள் நிராகரிப்பை ஏற்படுத்தக்கூடும். இதன் காரணமாக, ஒவ்வொரு முஸ்லிமும் வார்த்தைகளை பிரயோகிப்பதற்கு முன் அல்லது சில செயல்களை செய்வதற்குமுன் அதன் விளைவுகளைப்பற்றி சிந்திக்கவேண்டும்.  அவர் எதை செய்ய முன்னரும்  அவருடைய ஈமான் (நம்பிக்கை)க்கு மற்றவைகளை விட முன்னுரிமை கொடுக்க வேண்டும். அவர் ஒருபோதும் எந்த பாவத்தையும் இலேசாக எடுத்துக் கொள்ளக்கூடாது.  உதாரணத்திற்கு,ஒரு மன்னிக்கப்படக் கூடிய சிறிய பாவத்தை செய்தபின், அவர் மற்றவர்களால் நினைவூட்டப்பட்டால் அந்த சிறிய பாவத்திற்காக பாவமன்னிப்பு கேட்கவேண்டும். அவர் தான் பாவமன்னிப்பு கேட்கவேண்டிய எதையும் செய்யவில்லை என்று பதில் அளித்தால், அல்லது "நான் ஏன் பாவமன்னிப்பு கேட்க வேண்டும்?" போன்ற பதில்களை கூறினால் அது குபிரை உருவாக்கும். ஒரு சிறுமி அவளுடைய  சிறு வயதில் அவளுக்கு இஸ்லாமிய மார்க்க அறிவில்லாத, மார்க்க கேள்விகளுக்கு பதில் கூற  முடியாத நிலையில் ஒரு முஸ்லிமுக்கு அவளுடைய பெற்றோரால் மணமுடிக்க வைக்கப்பட்டு அவள் தனது பருவ வயதை அடைந்தபின் அக்கேள்விகளுக்கு  பதில்கூற முடியாது இருப்பின் அவளுடைய நிக்காஹ்[1] செல்லுபடியற்றதாகிவிடும். நிகாஹ் தொடர்ந்து நிலைப்பதற்கு

---

[1] தயவுசெய்து முடிவற்ற பேரின்பத்தின் ஐந்தாவது பாசிக்கலின் பன்னிரண்டாவது அத்தியாயத்தைப் பார்க்கவும்)ஈமான் [ஈமான்,இ'திகாத்].

இஸ்லாம், பரிந்துரைத்தபடி ஈமான் இருப்பது அவசியமாகின்றது அதாவது; இஸ்லாதின் கட்டளைகளை அறிந்திருப்பது அவசியமாகும். ஒரு முஸ்லீம் குழந்தை கோட்பாட்டளவில் ஒரு முஸ்லீம், ஏனெனில் அதன் நம்பிக்கை அதன் பெற்றோரின் நம்பிக்கையைப் பொறுத்தது. அது பருவ வயதை அடைந்ததும், அதன் நம்பகத்தன்மை நிலை இனி அதன் பெற்றோரைச் சார்ந்தது அல்ல. அதே விதி ஒரு ஆண் குழந்தைக்கும் பொருந்தும்.

ஒரு நபர் ஒரு முஸ்லிமை கொலை செய்யும் போது அல்லது ஒருவர் ஒரு முஸ்லிமை கொல்ல ஒருவர் கட்டளையிடுவது பார்த்து அதை ஆமோதிக்கும் வகையில் நல்ல செயல் என்று ஒருவர் கூறினால் அவர் நிராகரிப்பவராகிறார். இஸ்லாத்தின் தண்டனைச் சட்டத்தின்படி ஒரு நபர் கொல்லப்படக்கூடாது என்றிருக்கும்போது அவர் கொல்லப்படவேண்டும் என கூறுவது நிராகரிப்பு ஆகும். ஒருவர் இன்னொருவரை அநியாயமாக அடித்தால் அல்லது கொன்றால், அவரது கொடூரமான செயலை ஏற்றுக்கொள்வது குஃப்ராகும்."உதாரணமாக, அல்லாஹ்வுக்கு தெரியும் நான் என் சொந்த குழந்தைகளை விட உங்களை நேசிக்கின்றேன் என்று பொய் சொல்வது. உயர் பதவியிலுள்ள நபர் ஒருவர் தும்மும்போது பக்கத்திலுள்ளவர் **யர்ஹமுகல்லாஹ்** என்று கூற நீங்கள் அவ்வாறு பெரியவருக்கு கூற கூடாது என்று சொல்வது[1] குப்ராகும்.அது போன்றது இஸ்லாத்தின் கட்டளைகளை தீவிரமாக எடுக்காமல் இருப்பதுவும் குஃப்ர்தான். உதாரணமாக வணங்கக்கூடாது, சகாத்து கொடுக்க கூடாது என சொல்வது, இஸ்லாத்தின் கட்டளைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் இருப்பது என்பன குபைரை உண்டாக்கும். அல்லாஹ்வின் கருணைமீது நம்பிக்கை இழப்பதுவும் குபிரை உண்டாக்கும்.

செல்வம் சொத்து உடைமைகள் என்பன தடுக்கப்பட்டவை அல்ல. ஆனால், **ஹராம் லி கைரிஹி** என்று சொல்லக்கூடிய வழிகளில் பெறப்பட்டவையாக இருந்தால் உதாரணத்திற்கு; களவாடப்பட்ட பொருட்கள், தடுக்கப்பட்ட வழிகளில் பெறப்பட்டவை ஹராம் ஆகும். அவை ஆகும் என்று கூறுதல் குப்ரை உண்டாக்காது. செத்த விலங்குகளின் மாமிசம், பன்றி இறைச்சி மதுபானம் என்பன தடுக்கப்பட்ட **ஹராம் லி ஐனிஹி** இல் அடங்கும். அவற்றை ஹலால் என்று கூறுவது குப்ரை உண்டாக்கும். நன்கு அறியப்பட்ட பாவங்களை ஆகுமானது என்று கூறுவது குபிராகும். இஸ்லாத்தில் மதிக்க தக்க விஷயங் களை தரக்குறைவாக கருதுவது, உதாரணத்திற்கு அதான், பள்ளிவாசல்கள், பிக்ஹு சட்ட நூல்கள் என்பவற்றை குறைத்து மதிப்பிடுதல் குபிரை உண்டாக்கும். (ரேடியோ அல்லது ஸ்பீக்கர் மூலம் அழைக்கப்படும் அதான் என்பது உண்மையான அதானின் மாதிரி ஆகும்). பின்வரும் நிபந்தனைகளின் கீழ் வணங்குவது குப்ரை உண்டாக்கும். ஒருவர் தன்னிடம் **வுழு** இல்லை என்று தெரிந்தும் தொழுவது, தொழுகைக்கான நேரம் இன்னும் வரவில்லை என்று தெரிந்த பின்னும் தொழுவது, இன்னும் தொழும் திசை **கிப்லா**வில்லை என்று தெரிந்தபின்னும் தொழுவது என்பன. ஒரு முஸ்லிமை அவரின் கெட்ட நடத்தைக்காக காபிர் என்று கூறினால் குப்ரை உண்டாக்காது. ஆனால் ஒருவர் தனது விருப்பத்தினால் ஒரு முஸ்லிமை காபிர் என்று கூறுவது குப்ரை உண்டாக்கும். ஒரு பாவத்தை செய்வது குப்ரை உண்டாக்காது. இருந்தும், ஒரு

[1] ஒருவர் தும்மினால் அல்ஹம்துலில்லாஹ் என்று சொல்வது சுன்னத்தாகும். இன்னும் இதை கேட்பவர் யார்ஹமுகுமுல்லாஹ் என்று சொல்வது பர்லாகும்}

பாவத்தை சிறிதாக, அது பாவமா இல்லையா என கவனிக்காமல் இருப்பதுவும் குப்ரை உண்டாக்கும். வணக்கம் அத்தியாவசியமானது என்பதை அல்லது பாவம் செய்யாமல் இருப்பது அவசியம் என்பதை நம்பாமல் இருப்பது என்பன குப்ரை உண்டாக்கும். இன்னும், மக்களிடம் இருந்து அறவிடப்பட்ட வரி ஆட்சியாளருக்கு சொந்தம் என நம்புவதும் குப்றை உண்டாக்கும்.

"சத்ருல் இஸ்லாம்" இன் படி ஒரு வலியுல்லாஹ் என்பவர் ஒரே நேர்த்தில் பல இடங்களில் காணப்படலாம் என்பது (**ஜாயிஸ்**) அனுமதிக்கப்பட்டது. பிக்ஹு நூல்கள் விளக்குகின்றன ஒரு ஆணும் ஒரு பெண்ணும் தூர இடங்களில் வாழ்ந்தாலும் உதரணத்திற்கு, ஆண் ஸ்பெயினிலும் பெண் இந்தியாவிலும் வாழ்ந்தாலும் அவர்களுக்கு பிள்ளை கிடைக்கலாம். பிரசித்திபெற்ற அறிநர் உமர் நசபி 'ரஹீமஹுுள்ளாஹுுத்தஆலா' அவர்கள் அது நடக்க முடியும் அல்லாஹுு தஆலா அவனுடைய நேசர்களுக்கு காரணங்களை நிறுத்தி **கராமத்து**களை நிகழ்த்திவிடுகிறான் என்று கூறுகிறார்கள். இஸ்லாம் என்றால் என்ன, ஈமான் என்றால் என்ன என்று அறியாதவர்களிடம் கேள்வி கேட்கக் கூடாது. பதிலுக்கு, இதற்கான விடைகளை விளங்கப்படுத்திய பின் இக்கேள்வி களை கேட்கவேண்டும். புதிதாக நிகாஹ் செய்ய இருக்கும் மணமக்களிடம் அவர்களின் ஈமானின் நிலையை அறிவதற்காக இம்முறை தான் பின்பற்றப் படவேண்டும். அவர்களில் ஒருவர் ஈமானுக்கு நேர்மாறாக ஏதாவது கூறுவா ராயின் அவரை நிராகரிப்பவர் என்று கூறக்கூடாது. அவர் விருப்பத்துடன் அவநம்பிக்கையைத் தேர்வுசெய்கிறார். அதனால் அவர் ஷரியத்துக்கு மாறாக இருக்கிறார் என்று நிச்சயிக்கும்வரை அவரைப் பற்றி பிழையான அபிப்பிராயம் கொள்ளக்கூடாது.

ஒரு முஸ்லீம் விருப்பத்துடன் சில செயல்களைச் செய்தால் அல்லது அவநம்பிக்கையை ஏற்படுத்தும் செயல்களை செய்வதாக ஏகமனதாக தெரிவிக்கப் பட்டால் அவர் நிராகரிப்பவராகிறார் (முத்தத்). அவரது அனைத்து முந்திய வழிபாடுகள், நல்ல செயல்கள் மற்றும் சம்பாதித்த வெகுமதிகள் (தவாப்கள்) அழிந்துவிடுகின்றன. அவர் மீண்டும் ஒரு முஸ்லீமாக மாறினால், அவர் பணக்காரராக இருந்தால், அவர் அவருடைய ஹஜ்ஜை புதுப்பிக்க வேண்டும். ஆனால் அவர் தனது முந்திய தொழுகை, சக்காத்து நோன்பு போன்ற அமல்களை திரும்ப செய்ய வேண்டியதில்லை. ஆனால், அவருடைய நிராகரிப்புக்கு முன்பதாக விடுபட்ட தொழுகை, சக்காத்து நோன்பு போன்ற அமல்களை நிறைவேற்றவேண்டும். நிரகரிப்பு (முர்த்தத்) செய்வதற்கு முன்னர் அவர் செய்த பாவங்களிலிருந்து நபரின் மத மாற்றம் அவரை விடுவிக்காது. ஆயினும், அது அவரது நிகாவை ரத்து செய்யும். அவரது மத மாற்றத்திற்கும் அவர் புதுப்பித்தலுக்கும் இடையிலான நேரத்தில் அவருக்கு இருக்கும் குழந்தைகள் மற்றும் அவரது நிகா ஆகியன சட்ட விரோதமானவை. அக்காலத்திற்குள் கொன்ற விலங்கு வெறும் செத்தவிலங்குச் சடலம் ஆகிறது மற்றும் அதை உட்கொள்ள முடியாது. ஒரு முர்த்தத் கலிமா-ஷஹாதத்தை மொழிவதன் மூலமோ தொழுவதன் மூலமோ மீண்டும் முஸ்லீமாக மாற முடியாது அவர் மனந்திரும்பி,தவ்பா செய்து முர்த்தத் ஆவதற்கு காரணமான செயலை மறுத்து விட்டு திருந்தினால் தவிர.

அவர் மதம் மாறிவதற்கு காரணமாக இருந்த செயலை விட்டு மனம்வருந்தி பாவமீட்சி தவ்பா செய்யவேண்டும். அதற்கு முன்பு அவர் இறந்துவிட்டால் அவர்

என்றென்றும் நரக நெருப்பில் தண்டிக்கப்படுவார். இவை அனைத்திற்கும் காரணமான நிராகரிப்பை மிகவும் பயப்பட வேண்டும், எனவே பேசினால் மிகக் குறைவாகப் பேசுங்கள். ஒரு ஹதீத் ஷரீபில் கூறப்பட்டுள்ளது "**எப்போதும் பயனுள்ள விஷயங்கள் சொல்லுங்கள் அல்லது அமைதியாக இருங்கள்!**" ஒருவர் எப்பொழுதும் தீவிரமான இயல்புகளுடயவராக இருக்க வேண்டும் விளையாட்டும் கேலி செய்யும் நபராகவுமாக இருக்கக்கூடாது.

ஒருவர் மார்க்கத்துக்கும் மனித நேயத்துக்கும் பொருந்தாத வீணான விஷயங்களை ஒருவர் செய்யக்கூடாது. அதிக நேரம் வணக்கத்தில் ஈடுபடுவதுடன் நிராகரிப்பின் தீங்குகளிலிருந்து காப்பாற்றும்படி அல்லாஹு த ஆலாவிடம் தஞ்சம் அடைங்கள். ஒரு ஹதீது ஷரீபில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. **"கவனமாக இருங்கள் ஷிர்க்கை' தவிருங்கள், ஷிர்க் ஆனது எறும்பு ஊரும் ஒலியை விட அதிகம் மெல்லியதும் இரகசிய மானதும் ஆகும்".** இந்த ஹதீது-ஷரீபில் உள்ள "ஷிர்க்" என்றால் அவநம்பிக்கை. அத்தகைய ரகசிய அவநம்பிக்கையை எவ்வாறு தவிர்க்க முடியும் என்று அவர்கள் கேட்டபோது, ரசூலுல்லாஹ் 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் பின்வரும் துஆவை காலையிலும் மாலையிலும் ஒதிவருமாறு கூறினார்கள் **"அல்லாஹும்ம இன்னா ந ஊது பிக்க அன் நுஸ்ரிக பிக்க ஷைஅன் நஃ'லமுஹு வ நஸ்த'பிருக்க லிமாலா நஃ'லமுஹு**".

காஃபிர்கள் ஒருபோதும் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள் என்று ஒருமனதாக அறிவிக்கப்பட்டுள்ளது. அவர்கள் நரக நெருப்பில் என்றென்றும் தண்டிக்கப்படுவார்கள். ஒரு காஃபிர் உலகில் என்றென்றும் இருந்தால், அவர் ஒரு காஃபிராக வாழ விரும்புவார் எனவே, அவர் என்றென்றும் தண்டனைக்கு தகுதியானவர். அல்லாஹுத'ஆலா எல்லாவற்றையும் படைத்தவன் மற்றும் அனைத்துக்கும் உரிமையாளன். அவன் விரும்பும் எதையும் செய்ய அவனுக்கு உரிமை உண்டு. ஏன் என்று கேள்வி கேட்க யாருக்கும் உரிமை இல்லை. அல்லாஹுத'ஆலா குர்ஆன் அல் கரீமில் அவன் ஒரு அடக்குமுறையாளன் அல்ல, அவன் அவனுடைய படைப்புகள் எதையும் அடக்குவதில்லை என கூறுகிறான்.

[அல்லாஹுத'ஆலாவுக்கு அழகிய பெயர்கள் உள்ளன (அஸ்மா அல்-ஹுஸ்னா), அவை அவனை போன்று நித்தியமானவை. இந்த தொண்ணூற்றொன்பது பெயர்களில் ஒன்று "முண்தகிம்" மற்றொன்று "ஷதீதுல் இகாப்" இந்த இரண்டு பெயர்களால் நரகத்தின் ஏழு குழிகளை அவன் படைத்தான். அவனுக்கும் மேலும் "ரஹ்மான்", "ரஹீம்", "கஃபார்", "லதீஃப்" மற்றும் "ரஊஃப்" என்ற பெயர்கள் உள்ளன அவன் இந்த பெயர்கள் காரணமாக எட்டு சொர்க்கத்தின் தோட்டங்களை படைத்தான். அவன் சில விடயங்களை வேறுபடுத்தினான். அவ்விடயங்கள் அவை சொர்க்கத்திற்குச் செல்வதற்கான அல்லது நரகத்தில், நித்தியமாக கிடப்பதற்கான காரணங்களாகிவிட்டன. அவனது எல்லையற்ற கருணை காரணமாக, அவன் அவனுடைய அடியார்களுக்கு அவற்றை பற்றி அறிவுறித்தினான். அவன் பலமுறை எச்சரித்தான். அவன் "**உங்களை நரகத்திற்கு அழைத்துச் செல்லும் செயல்களைச் செய்யாதீர்கள்! அதன் நெருப்பு மிகவும் வலுவானது. அந்த நெருப்பை நீங்கள் தாங்க முடியாது**! என எச்சரித்தான்.

அவன் அவனுடைய அடியார்கள் இவ்வுலகிலும் மறுமையிலும் நிம்மதியாகவும் மகிழ்ச்சியாகவும் வாழ வழிவகுக்கும் நித்திய சுவர்கத்துக்கு இட்டுச்செல்லும்

செயல்களை செய்யுமாறு அழைத்தான். அவன் மனிதனுக்கு ஞானத்தையும், மதிநுட்பத்தையும் தெரிவு செய்யும் சுதந்திரத்தையும் வழங்கி அவற்றை பிரயோகித்து மனிதன் அவனுடைய அழைப்பை ஏற்றுகொள்ளவும் அல்லது நிராகரிக்கவும் இயலுமாக்கினான்.

அல்லாஹு த'ஆலா யாராவது நரகத்திற்குச் செல்ல வேண்டும் அல்லது நரகத்துக்கு இட்டுச்செல்லும் செயல்களை செய்ய வேண்டும் என நித்திய கடந்த காலத்தில் ஆணையிடவில்லை. ஆனால் இவ்வுலகில் யார் யார் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும் பாதையை தெரிவு செய்வார்கள் யார் யார் நரகத்திற்கு அழைத்துச் செல்லும் பாதையை தெரிவு செய்வார்கள் என அறிந்திருந்தான். அவனது விதி (**களா, கத்ர்)** ஆனது அவனுடைய (**இல்மை**) போல் நித்தியமானது. பரிசுத்த குர் ஆனில் அபு லஹப் நரகத்துக்கு செல்வான் எனஅறிவித்துள்ளான். அல்லாஹ்வின் இந்த அறிவிப்பு நித்திய கடந்த காலத்தில் அல்லாஹ்வின் ஆணையினால் ஏற்பட்டது அல்ல, ஆனால் அபுலஹப் நரகத்திற்கு அழைத்துச் செல்லும் பாதையை தெரிவு செய்வான் என அறிந்திருந்தான்.

நம்பிக்கை வைத்திருப்பது மிகவும் எளிதானது. ஆனால் படைப்புகளிடையே இருக்கும் ஒழுங்கு, சமநிலை நல்லிணக்கம் பற்றி சிந்திப்பதும் கவனிப்பதும் அத்தியாவசியமானது (வாஜிப்). அது ஒரு அணுவிலோ அல்லது சூரிய மண்டலத்திலோ அல்லது எல்லாவற்றிலோ இருக்கும் கட்டமைப்பு அவற்றிடை யே உள்ளதொடர்பு என்பன அவை தற்செயலாக உண்டானவை அல்ல என்பதை தெளிவாக உணர்த்துகின்றன. அவைகள் அதி உயர் சக்தி பெற்ற மிகவும் அறிவுஞானமுள்ள எல்லாம் அறிந்த ஒன்றால் உருவாக்கப்பட்டவை. வான சாத்திரம் விஞ்ஞானம் உயிரியல் மருத்துவம் போன்ற அறிவியலை பல்கலைக்கழகங்களில் படிக்கும் சிந்திப்பதற்கு நன்கு திறனும் இயலுமை யுமுள்ள ஒருவரால், படைப்புகளுக்கு ஒரு படைப்பாளன் உண்டு என்பது தெளிவாக விளங்கும். அந்த படிப்பாளனிடம் எவ்விதமான குறைபாடையும் காணமுடியாது. எங்கள் நாயகம் நபி 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் அவனுடைய தூதராகும். அவனது அறிவுப்புகள் எதுவாகினும் அவை அவனுடைய தூதருக்கு அவனால் அருளப்பட்டவை ஆகும். இவ்வித ஆய்வு கடைசியில் அவனது இருப்பில் நம்பிக்கையை (இறைநம்பிக்கையை) வலியுறுத்துகின்றது. போதிய அறிவாற்றல் பெற்றவர்களுக்கு, நிராகரிப் பவர்கள் மற்றும் நிராகரிப்பில் மரணிப்பவர்கள் நரகிலே நித்தியமாக தங்கி விடுவார்கள் என உணரமுடிகிறது. மேலும், விசுவாசிகள் அவனுடைய அருட்கொடைகளால் நிரம்பிய சுவர்க்கத்தில் நிரந்தரமாக தங்கிவிடுவார்கள் என அறிந்து கொள்கிறார்கள். அவர் விரும்பியும் ஆசையுடனும் இஸ்லாத்தில் நுழைந்து கொள்கிறார். [இப்ராஹீம் ஹக்கி, 'ரஹீமஹுள்ளாஹுதஆலா' அர்zசுரும், துருக்கியில் . மறைவு 1195 AD, 1781 ஹிஜ்ரி துருக்கி) அவர்கள் மஃரிபத் நாமா எனும் அவர்களின் நூலில் பின்வருமாறு கூறுகிறார்கள், "விஞ்ஞான, வானவியல், இயந்திரவியல் இன்னும் தொழிற்சாலைகள் என்பன பரிசோதனைகள் மற்றும் நுண்ணறிவு நடவடிக்கை சார்ந்தவை". காலப்போக்கில் புதிய தகவல்கள் பழைய தகவல்கள் பிழை என உறுதி செய்கின்றன. ஆனால் பழைய அல்லது புதிய, தவறான அல்லது சரியான விஞ்ஞான அறிவு அனைத்தும் பிரபஞ்சம் இல்லாமையிலிருந்து உருவாக்கப் பட்டது என்பதை சுட்டிக்காட்டுவதுடன் ஒரு சர்வ வல்லமையும், எல்லையற்ற

ஆற்றலும், அறிவும் உள்ள படைப்பாளனை நம்புவதன் அவசியத்தையும் உணர்த்துகின்றது. நபி முஹம்மது 'ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம்' அவர்களின் அழகிய நன்னடத்தை மற்றும் நற்குணங்களை வாசித்து அறிபவர் அவர்கள் அல்லாஹுவின் தூதர் என்பதை விளங்கிகொள்வார்.]

## 2– அறியாமை

இதயத்தின் இரண்டாவது நோய் அறியாமை. பல்வேறு வகையான அறியாமை மற்றும் அவற்றின் தீங்குகள் பற்றி ஏற்கனவே முதலாவது பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

## 3. செல்வம், அதிகாரம் பதவி என்பவற்றின் மீதுள்ள பேராசை

இதயத்தின் மூன்றாவது நோயானது செல்வம், சொத்து, சமூகத்தில் ஒரு முன்னணி உயர்நிலை பதவிகளின் மேலுள்ள பேராசை. பின்வரும் 'ஹதீத் ஷரீபுகள்' இந்த நோயைப் பற்றி நமக்கு அறிவூட்டுகிறது, இது "ஹுப்புர்ரியாசத்" என்று அழைக்கப்படுகிறது. அதன் அடையாளம் மற்றும் அதன் சிகிச்சை:

1– "**சொத்து ஏமாற்றும் அதிகார பேராசையால் ஒரு நபரின் ஆன்மீக நிலைக்கு ஏற்படும் தீங்கு, பசியிலுள்ள இரு ஓநாய்களால் ஒரு ஆட்டுக்குட்டி மந்தையைத் தாக்கும்போது ஏற்படும் தீங்கை விட மோசமானது**".

2– "**ஒரு நபர் தனது உலகாயுத சமயம் சார்ந்த புகழ் காரணமாக தனிமைப்படுதல் அவருக்கு ஏற்படும் தீங்கை போன்றது**." வேறு வார்த்தை களில் கூறுவதானால், உல விவகாரங்கள், சமயம் சார்ந்த அத்தகைய உயர் நிலையை அடைதல் அவருடைய இம்மை மறுமை வாழ்வுக்கு தீங்காக மாறலாம்.

3– **"புகழப்படுவதை விரும்புவது ஒரு நபரை குருடனாகவும் காது கேளாத வனாகவும் ஆக்குகின்றது" அவர் இனி தனது சொந்த தவறுகளையும் குறைபாடுகளையும் காணமாட்டார். நட்பான விமர்சனங்கள் மற்றும் எந்த ஆலோசனையையும் கேட்கவிரும்பாது.**" ஒருவர் சொத்துக்களை அடை வதற்கு அல்லது சமூக வாழ்க்கையில் முன்னணி நிலையை விரும்புவதற்கான மூன்று காரணங்கள் பின்வருமாறு;

முதலாவதுகாரணம் : தனது சொந்த நப்சின் ஆசைகளை பூர்த்தி செய்ய விரும்புதல். நப்ஸ் தனது ஆசைகளை '**ஹராமான'** வழிகளில் பூர்த்தி செய்வதை மிகவும் விரும்பும். இரண்டாவதுகாரணம்: ஒருவர் தன்னையும் மற்றவர்களை யும் அடக்கு முறையாளர்களின் கொடுங்கோண்மையிலிருந்து பாதுகாக்க விரும்புவது. அனுமதிக்கப்பட்ட (முஸ்தஹப்) செயல்களை செய்ய விரும்புவார். உதாரணத்திற்கு; ஒருவர் தர்மம் மற்றும் நற்செயல்களை செய்வது, அனுமதிக் கப்பட்ட (முபாஹ்) விஷயங்களை செய்யவிரும்புவது, அதாவது; நல்ல உணவு நல்ல உடை என்பன வாங்குவது, ஒருவர் தனக்கு குடும்பம் வீடு இன்னும் நல்ல அயலவர்களை விரும்புவது போன்றவை. சுருக்கமாக கூறினால், ஒருவர் வாழ்க்கையில் மகிழ்ச்சியைத்தொடர விரும்புகிறார், வழிபாடுகளைச் செய்வதற்கு அல்லது முஸ்லிம்களுக்கும் இஸ்லாத்திற்கும் சேவைசெய்வதற்கு தடையாக இருக்கும் விஷயங்களைத் தவிர்க்க விரும்புகிறார். மேற்கூறியவற்றை அடைவதற்கு பதவி நிலைகள்

பெறுவதை ஆசைகளின் இரண்டாவது பிரிவு அனுமதிக்கின்றது (ஜாயிஸ்). இன்னும் பின்வரும் இரண்டு நிபந்தனைகளுடன் 'முஸ்தஹப்' ஆக கூட ஆகின்றது.

முதலாவது நிபந்தனை: ஒருவர் இஸ்லாத்தால் தடை செய்யப்பட்ட விஷயங்களைச் செய்யக்கூடாது. உதரணத்திற்கு உண்மையை பொய்யுடன் அல்லது பாசாங்குத்தனத்துடன் கலப்பது. இரண்டாவது நிபந்தனை: மார்க்கத்தில் கட்டளையிடப்பட்ட '**வாஜிப்'** மற்றும் '**சுன்னத்'களை**க் கைவிடக் கூடாது. ஒரு நபர் மேலே குறிப்பிட்ட இரண்டு நிபந்தனைகளை பூர்த்தி செய்தால், அவர் ஒரு உயர் பதவியை வகிக்க அனுமதிக்கப்படும் (ஜாயிஸ்). இன்னும் முஸ்தஹப் (மிகவும் ஆசீர்வதிக்கப்பட்டவர்) ஆகும். இது அனுமதிக்கப் படுவது மட்டுமல்ல தேவையான வசதிகளையும் மற்றும் வாகனங்களையும் அடைய அதற்கு உதவும் வழிமுறைகளையும் கடைப்பிடிக்கவும் வேண்டியது அவசியம். அல்லாஹுதஆலா நல்ல மனிதர்களின் பண்புகளை குர்ஆன் அல் கரீமில், விவரிக்கும் போது அவர்கள் முஸ்லிம்களின் தலைவர்களாக விரும்புவார்கள் என்று கூறுகிறது. சுலைமான் 'அலைஹிஸ் ஸலாம்' அல்லாஹு தஆலாவிடம் "யாரப்பி(யாஅல்லாஹ்)! நீ வேறு எவருக்கும் கொடுக்காத சொத்தை எனக்குக் கொடு என்று வேண்டினார். அவர் ஒரே நேரத்தில் ஒரு தலைவராகவும் உரிமையாளராகவும் இருக்க வேண்டும் என விரும்பினார்'. முந்தைய மதங்களிலிருந்து எங்களுக்கு கிடைக்கப் பெற்றுள்ளதும் இஸ்லாமிய அறிஞர்களால் மறுக்கப்படாததுமான தகவல்கள் எங்கள் மார்க்கத்தில் உள்ள மதிப்புமிக்க தகவல்களாகும்.

ஒரு 'ஹதீது ஷரீபில்' எங்கள் நபி 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' கூறினார்கள்: "**நான் இஸ்லாத்திற்காக ஒரு வருடம் முழுவது புனித போர் புரிவதை விட, நீதியை அதன் சரியான வரம்புகளுக்குள் நீதி செலுத்தக் கூடிய நீதிபதியாக ஒரு நாள் இருக்க விரும்புகிறேன்"** என்று கூறினார்கள். மற்றொரு ஹதீதில் "**மனிதர்களுக்காக நீதி நிர்வாகத்தை நிர்வகித்தல் விசயத்தில் ஒரு மணித்தியாலம் செலவழிப்பது அறுபது வருடங்கள் செய்யும் நபிலான வணக்கங்களை விட மேலாகும்**' என கூறியுள்ளார்கள்.

சமுகத்தின் மேலான முன்னணி பதவியை சரியானதையும் பிளையானதை யும் சேர்த்து ஏமாற்று வழியில் பிடிக்க முடியாது. அது உண்மையில் நல்ல நோக்கத்துடன் செய்தாலும் அதில் தடைசெய்யப்பட்ட மற்றும் விரும்பப்படாத வழிகள்(**மக்ருஹ்**) பின்பற்றப்பட்டால் அது அனுமதிக்கப்படமாட்டது. உண்மை யில் நல்ல நோக்கங்களுக்காக 'ஹராமான' விடயங்களை செய்வது பாவமான காரியத்தை இன்னும் மோசமானதாக்கி விடுகின்றது. வணக்கங்கள் செய்வ தற்கு நல்ல நோக்கம் இருப்பது பிரயோசனமானது. நோக்கம் சரியில்லாதபோது வணக்கங்களும் சில அனுமதிக்கப்பட்ட செயல்களும் பாவ காரியமாகிவிடும். எனவே, "நீங்கள் என் இதயத்தைப் பார்க்க வேண்டும். இது தூய்மையானது. அல்லாஹ் இருதயத்தினால் தீர்ப்பளிப்பான்" என்று கூறுவது, இது பொதுவாக பாவிகளால் கூறப்படுவது . இது தவறு மற்றும் தீங்கு விளைவிக்கும்.

**மூன்றாவது காரணம்:** ஒருவர் சமுதாயத்தில் உயரிய பதவி நிலையை பெற விரும்புவது நப்சின் ஆசைகள் மற்றும் இன்பங்களை நிறைவேற்றுவதற்காக. நப்ஸ் ஆனது செல்வம், சொத்து சேர்ப்பது மற்றும் சமுதாயத்தில் தரவரிசையில் முன்னணி நிலை ஆகியவற்றிலிருந்து இன்பம் பெறுகிறது. இஸ்லாத்திற்கு

முரணான விஷயங்களை ஈடுபடுத்தாமல் நஃப்ஸின் ஆசைகளை திருப்தி செய்ய தடை இல்லை என்றாலும் அது குறைந்த அளவு பக்தி மற்றும் உறுதியை குறிக்கும். அங்கு அவர் நப்ஸின் ஆசைகளைப் பூர்த்திசெய்வதற்கு அவரது எமாற்று வேலைகள் செய்யவும், அவர் மார்க்கத்தில் சமரசம் செய்யவும் (முதாஹன),அல்லது மக்களின் இதயங்களை வெல்வதற்காக பாசாங்குத் தனமாக நடந்து கொள்ளுதல் போன்ற பல ஆபத்துகள் உள்ளன. இதற்கு மேல் தடைசெய்யப்பட்ட முனாபிக் தனம் மற்றும், உண்மையுடன் பொய்யை கலப்பது போன்ற மோசடிகள் ஏற்பட வாய்ப்பு உண்டு. ஒருவர் அனுமதிக்கப் பட்டதையும் தடுக்கப்பட்டதையும் கலக்கும் செயல்களைச் செய்யக்கூடாது. சமூகத்தில் முன்னணி நிலை அல்லது தரவரிசை என்பவற்றை பெறுவது தடுக்கப்படா விட்ட்லும் அது நன்மை பயக்ககூடியது அல்ல. ஆகவே அதன் தீர்வு என்ன என்பதை தெரிந்து அதை பிரயோகிக்க வேண்டும்.

முதலில், அந்த நிலை தற்காலிகமானது மற்றும் பல உள்ளமைந்துள்ள ஆபத்துகள் மற்றும் பாதிப்புகளைக் கொண்டுள்ளது என்று ஒருவர் நினைக்க வேண்டும். அவர் மக்களின் மரியாதையைப் பெறுவதால் புகழிலிருந்தும் பெருமை மற்றும் மமதையிலிருந்தும் தன்னை பாதுகாக்கும் பொருட்டு அவர் பொதுவாக மக்கள் அதிகம் நினைக்காத இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்ட நற்செயல்களைச் செய்ய வேண்டும் ('முபாஹ், ஜாயிஸ்').

சில காலத்திற்கு முன்னர் , ஒரு தலைவர் **(அமீர்**) உலக விவகாரங்களிலிருந்து விலகிய ஒருவரைப் பார்வையிடச் சென்றார். அந்த 'z**ஜாஹித்'** தலைவரின் (அமீர்) வருகை தருவதை உணர்ந்தார், இதை அறிந்த அவருடைய தோழர்கள் அவருடைய தயவைப் பெற விரும்பினர். 'ஜாஹித்' தலைவருக்கு ஒரு இரவு உணவை வழங்கினார். அந்த இரவு உணவின் போது அவர்களுக்கு அவர்மீது ஒரு தவறான எண்ணத்தை உருவாக்கும் பொருட்டு வேண்டுமென்றே அவர் உணவை வேகமாகவும் பேராசையாகவும் சாப்பிட்டார். வருகை தந்த தலைவருக்கு 'ஜாஹி'தின் நடத்தை பிடிக்கவில்லை, 'ஜாஹித்' ஆனவர் உண்மையானவர் இல்லை என்ற எண்ணத்தில் அவர் வெளியேறினார். தனது தந்திரோபாயம் வெற்றியளித்ததை பார்த்த "ஜாஹித் "அல்ஹம்துலில்லாஹ்! என்'ரப்' என்னைக் காப்பாற்றினான் என்று கூறினார். பதவி நிலைகளை பெற விரும்பும் விருப்பத்தை குணப்படுத்தும் சிறந்த மருந்து தனிமை (**உஸ்லத்**). ஒருவர் மக்களிடையே எந்தவொரு தேவையற்ற செயலிலும் ஈடுபடாது வழக்கமான மார்க்க கடமைகளிலும் உலகத்துக்கான கடமைகளில் மட்டும் ஈடுபட வேண்டும். இந்த மருந்து 'ஹதீது ஷரீபில்' பரிந்துரைக்கப் பட்டுள்ளது. இந்த தீர்வு ஒரு ஹதீதில் கட்டளையிடப்பட்டுள்ளது.

**4– குறைகள் இருப்பதாக குற்றம் சாட்டப்படும் பயம்:** இதயத்தின் குறைபாடுகளில் நான்காவது, பிறரின் தவறான விமர்சனம் அல்லது வதந்திகள் போன்ற பிழையான நடவடிக்கைகளால் ஏற்படும் கவலை மற்றும் பயம்.
"**குஃப்ர்அல்-ஜுஹூதி"** ஏற்படுவதற்கான மூன்றாவது காரணம்" மற்றவர் களைப்பற்றி வெட்கப்படுவது, மேலும் மற்றவர்கள் உங்கள் பிழைகளை பிடிப்பார்கள் அல்லது உங்களைப் பற்றி கிசுகிசுப்பார்கள் என்று நினைத்து பயப்படுதல். அபு தாலிப் நிராகரிப்பாளராக இருந்ததற்கான சரியான காரணம் இதுதான். அபு தாலிப் ஹத்ரத் அலி 'ரலியாள்ளாஹு அன்ஹு' அவர்களின் தந்தையும் 'ரசூலுல்லாவின் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களின்

சிறிய தந்தையும் ஆவார். அபுதாலிப், 'ரசூலுள்ளாஹ்' ஒரு நபி என்பதை அறிந்திருந்தார். ஆனால் அவர் முஸ்லிம்களின் வரிசையில் சேரவில்லை, ஏனெனில் அவர் மக்கள் அவரை குறை கூறுவார்கள், மற்றும் அவரைப் பற்றி மோசமாகப் பேசுவார்கள் என்று நினைத்தார். 'ரசூலுல்லாவின் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அபு தாலிப் மரண கட்டத்தில் இருக்கும்போது அவரைச் சந்தித்து அவரிடம், "**எனது சிறிய தந்தையே ! நான் உங்களுக்காக பரிந்து பேசுவதற்காக தயவுசெய்து லாஇலாஹ இல்லல்லாஹ் என்று சொல்லுங்கள்"**! என்று கூறினார்கள் அதற்கு அவர் "என்சகோதரனின் மகனே! நீங்கள் உண்மையைச் சொல்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். ஆனால் நான் மரண பயத்தின் காரணமாக ஒரு முஸ்லீம் ஆனேன் என்று மக்கள் சொல்வதை நான் விரும்பவில்லை என்றார். இது தப்சீர் பைதாவியில் கூறப்பட்டுள்ளது. 'சூரா கசஸ்ஸி'ன் 56ஆவது ஆயத்தில் "நீங்கள் நேசிக்கும் ஒவ்வொருவருக்கும் வழிகாட்ட இயலாது என்பது உண்மைதான்(28-56)". இந்த ஆயத்து இந்த சம்பவத்தின் பின் இறக்கப்பட்டதாக கூறப்படுகின்றது. ஒரு ரிவாயத்தின்படி பின்வரும் சம்பவம் நடந்ததாக கூறப்படுகிறது. குறைசிக்காபிர்களின் தலைவர்கள் அபுதாலிபிடம் வந்து சொன்னார்கள். "நீங்கள் எமது தலைவர், நாங்கள் உமது கட்டளைக்கு அடிபணிகின்றோம். ஆனால், உங்கள் மறைவுக்கு பின் எங்களுக்கிடையே உள்ள ஒற்றுமை தொடருமா என்பதை பயப்படுகிறோம். அவரிடம் எமது மார்க்கத்தை துண்டிக்க வேண்டாம் என்று சொல்லுங்கள் என கூறினார்கள். 'ரசூலுள்ளாஹ்'விடம் இதை சொல்வதற்காக அபூதாலிப் 'ரசூலுள்ளாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லமி'டம் அனுப்பப்பட்டார். அபூதாலிப் நடந்ததை எடுத்து கூறினார். 'ரசூலுள்ளாஹ்' அவர்களுடன் சமாதானத்திற்கு விரும்பவில்லை என்பதை அறிந்து அவர் இஸ்லாத்தை ஏற்றுக்கொள்வதற்கு ஆயத்தமாக இருப்பதாக சில வார்த்தை களை கூறியதாக விளக்கப்படுகிறது. அதனால் 'ரசூலுள்ளாஹ்' அவரின் நம்பிக்கையை வெளிப்படுத்துமாறு கூறினார்கள். இதற்கு அபுதாலிப் நான் எனது நம்பிக்கையை வெளிப்படுத்தி உங்களை மகிழ்ச்சியடையச் செய்யவே விரும்புகிறேன். நான் மக்களின் பழிச்சொல்லுக்கும் தூற்றலுக்கும் பயப்படு கிறேன் என்று கூறினார். அவர் அவரது கடைசி வேளையில் சில சொற்களை சொன்னதாகவும் அது சரியாக விளங்கவில்லை என்றும் கூறப்படுகிறது. அதை விளங்குவதற்காக அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் 'ரலியள்ளாஹு'வை அருகில் அழைக்கப்பட்டார். அப்பாஸ் 'ரலியள்ளாஹு அன்ஹு' அவர்கள் அவரின் நம்பிக்கையை வெளிபடுத்தியதாக கூறினார்.

'அஹ்லுஸ்சுன்னா' அறிஞர்கள் கூற்றின்படி அவர் நம்பிக்கை கொள்ளவில்லை எனவும் அது சந்தேகத்துக்குரியது என்றும் உள்ளது. இமாம் அபு ஹனிபா 'ரஹ்மஹுல்லாஹ்' அவர்களின் கூற்றின்படி அபுதாலிப் நிராகரிப்பவராக இறந்தார் என்று கூறுகிறார்கள். ஹஸ்ரத் அலி 'ரலியள்ளாஹு அன்ஹு' அவர்கள் பெருமானார் நபி 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களிடம்

வந்து உங்கள் சிறிய தந்தை பிழையான வழியில் இருந்து மறைந்துள்ளார் என்று கூறினார்கள். 'றசூலுள்ளாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் **அவரை குளிப்பாட்டி கபனிட்டு அடக்குங்கள் என்றும் நாம் அவருக்காக நாம் தடை செய்யப்படும்வரை அவருக்காக பிரார்த்திப்போம் என்று கட்டளை இட்டார்கள்**. றசூலுள்ளாஹ் 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் வீட்டிலிருந்து வெளியில் வராமல் அவருக்காக பிரார்த்தித்து

கொண்டிருந்தார்கள். சஹாபாக்களில் சிலர் இதை கேள்விப்பட்டு அவர்களின் காஃபிர்களாக இறந்த அவர்களது உறவினர்களுக்காகவும் பிரார்த்தனை செய்யத்தொடங்கினார்கள். இதன் காரணமாக 'சூரா தவ்பா'வின் நூற்று பதின்மூன்றாவது 'ஆயத்' இறங்கியது: **"நபி மற்றும் நம்பிக்கை கொண்ட விசுவாசிகள், காபிர்களுக்காக அவர்கள் அவர்களு டைய உறவினர்களாக இருந்தாலும் அவர்களுக்காக பிரார்த்திக்கவோ அல்லது மன்னிப்பு கேட்கவோ கூடாது."** 'ரசூலுல்லாஹ் 'சல்லல்லாஹு அலைஹி' வசல்லம் ஒரு ஹதீத் ஷரீபில் கூறுகிறார்கள்: **"நியாயத்தீர்ப்பு நாளில், அபுதாலிப் காபிராக இருப்பார், அவருடைய தண்டனை மிகவும் லேசானதாக இருக்கும். அவர் நெருப்பினால் செய்யப்பட்ட செருப்புகளை அணிவிக்கப்படுவார் அவற்றின் வெப்பத்தினால் அவரது மூளை கொதிக்கும்."**

குற்றம் சாட்டப்பட்டு கேலி செய்யப்படுவோம் என்ற அச்சத்திற்கு பரிகாரமாக பின்வரும் உத்தி ஒரு உபாயமாக பரிந்துரைக்கப்படுகிறது: அவர்கள் குற்றம் சாட்டுதல் என் உண்மையான குறைபாடுகளை பிரதிபலிக்குமானால் எனது குறைபாடுகளை எனக்குக் காட்டுகிறார்கள். நான் அந்த செயல்களைச் செய்யாமலிருக்க எனக்கு தீர்வு கிடைகிறது. இந்த உத்தியின் மூலம் உள்ளார்ந்த மன ஆறுதகிடைபதுடன் விமர்சகர்களுக்கு நன்றி தெரிவிக்க வேண்டும். ஹசன்அல்பஷரி 'ரஹீமஹுள்ளஹுதஆலா' அவர்களிடம் சிலர் அவர்களைப் பற்றி குறை கூறுவதாக சொன்னார்கள். அதற்கு அவர்கள் அந்த குறை கூறுபவற்கு ஒரு தட்டு நிறைய இனிப்புகளை பின்வரும் செய்தியுடன் சேர்த்து அனுப்பி வைத்தார்கள். "நீங்கள் உங்களுடைய நன்மைகளை எனக்கு கொடுக்கிறீர்கள் என்று நான் கேள்விப்படுகிறேன் அதற்கு நன்றி சொல்வதற்காக இனிப்புகள் நிறைந்த ஒரு தட்டை அனுப்புகிறேன்.

இமாமுல் அஃலம் அபூஹனீபா 'ரஹீமஹுள்ளஹுதஆலா' அவர்களிடம் ஒருவர் அவரை பற்றி குறை சொல்வதாக கூறினார்கள் அதற்கு அவர்கள் ஒரு முடிச்சு நிறைய தங்க நாணயங்களை அந்த குறை கூறியவருக்கு அனுப்பி சொன்னார்கள் அவர் தரும் அவருடைய நன்மைகளை மேலும் அதிகரிப்பா ரானால் அவருக்கு இன்னும் தங்க பரிசு அதிகரிக்கப்படும் என்று கூறினார்கள்." தவறான பேச்சு பொய்யும் அவதூறுமென்றால் அது அவதூறு செய்த நபருக்கு தீங்கு விளைவிக்கும். அவதூறு செய்யப்பட நபர் அவதூறு செய்தவருடைய நன்மைகள் எனக்கும் என் பாவங்கள் அவருக்கும் கொடுக்கப்படும் என்று தன்னை ஆறுதல் படுத்தி கொள்ள வேண்டும். முஸ்லிம்களுக்கிடையில் அவதுறு செய்தல் மற்றும் அதை மற்றவருக்கு கொண்டு சொல்லுதல் என்பன கோள்கூறுவதை விட மிக மோசமானதாகும். [தயவுசெய்து மக்துபாத் இல் ம'தூமிய்யா 2 வது தொகுதி123 வது வசனத்தைப் படியுங்கள்).

## 5– புகழப்படுவதை விரும்புவது

இதயத்தின் தீங்குகளில் ஐந்தாவது புகழப்படுவதையும் பாராட்டப்படு தலையும் விரும்புதலாகும். தான் பாராட்டப்படவேண்டும் என்ற விருப்பம் தன்னை விரும்புவதாகும், இன்னும் தான் உயர்ந்தவன் சிறந்தவன் என்ற உளவியல் காரணங்களில் தங்கியுள்ளது. இந்நபருக்கு அவரை புகழ்வது மிகவும் இனிப்பாக இருக்கும். இந்த நோயால் பாதிக்கப்பட்ட நபர் சிலர் அப்படி நினைத்தாலும் அது உண்மையானதல்ல என்றும் அது இடைநிலைதான் என்றும் நினைக்க வேண்டும். இந்த விசயத்தின் விரிவான விளக்கம் பின்னர்

தற்பெருமை (கிப்ர்) என்ற தலைப்பின் கீழ் கொடுக்கப்படும் (12ஆவது அத்தியாயத்தை பார்க்கவும்.)

## 6– தவறான நம்பிக்கைகள் (பித்’அத்)

இதயத்தின் குறைபாடுகளில் ஆறாவது வழி தவறிய நம்பிக்கை (பித்அத்)ஆகும். இது ஒரு பிழையான அல்லது வழி தவறிய நம்பிக்கையை கொண்டிருப்பது. பெரும்பாலான முஸ்லிம்கள் இந்த பாரதூரமான நோயால் பாதிக்கப்படு கின்றனர். இந்த நோய்க்கு இட்டுச் செல்வதற்கான காரணம் ஒருவர் உணர்வு உறுப்புகள் மூலம் உணர முடியாத மற்றும் விளங்கவும் விவரிக்கவும் முடியாத விசயங்களை பகுத்தறிவைக்கொண்டு முயற்சி செய்து புரிந்து கொள்வதில் ஏற்படும் தவறுகளால் உண்டாகின்றது.

ஒவ்வொரு முஸ்லிமும் விசுவாசத்தைப் பொறுத்தவரை இரண்டு மதஹப்களில் ஒன்றை, அதாவது, **மாத்துருதி** அல்லது **அஷ்அரி** போதனைகளைப் பின்பற்ற வேண்டும். இதில் ஒன்றை பின்பற்றுவது இவ்விதமான நோய்களிலிருந்தும் வழிகேட்டிலிருந்தும் நம்மை பாதுகாக்கும். ஏனென்றால், எமது சிந்தனைக்கு எட்ட முடியாத சில விடயங்களை (நடுநிலை மற்றும் சரியான பாதை) என்று அழைக்கப்படுகின்ற அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்கள் குர்ஆணையும் ஹதீதை யும் பின்பற்றி இந்த இரண்டு ஆதாரங்களுடன் அவர்களின் மனத்திறமை களையும் பயன்படுத்தி ஆராய்ந்து அவற்றின் அர்த்தங்களை புரிந்து கொண்டார்கள். அஷ்ஹாபுல்கிராம்கள் அல்லாஹ்வுடைய தூதரிடமிருந்து கற்றவைகளை இந்த அறிஞர்கள் அஷ்ஹாபுல் கிரமிடம் இருந்து கற்று கிதாபுகளாக எழுதினார்கள்.

ஒருவர் குர்ஆன் மற்றும் ஹதீப் ஷரீபில் தெளிவாக கூறப்பட்ட ஒன்றை சந்தேகம் கொண்டால் அல்லது மறுத்தால் அவர் காபிர் ஆவார். குர்ஆன் அல்-கரீமில் அல்லது ஹதீத் ஷரீபில் தெளிவாக கூறப்படாத மற்றும் சந்தேகமான ஒன்றைப் பற்றி தவறான அர்த்தங்களை வழங்குதல் “**பித்’அத்”** ஆகும். மேற்படி பிழையான கூற்றை அல்லது தவறான விளக்கத்தை நம்புபவர் ‘அஹ்லுல் பித்’அத்’ ஆகிறார். உதாரணமாக, “இது எப்படி முடியும், எப்படி நடக்கும்! இது இருக்கமுடியாது! என்மனம் அதை ஏற்கவில்லை” என்று கூறப்பட்ட கட்டளைகளை மறுத்தால் அவர் ஒரு காஃபிராக மாறுவார். ஒரு நபர் தடை செய்யப்பட்ட (ஹராமான) விஷயத்தை (ஹலால்) அனுமதிக்கப்படுகிறது என்று குர்ஆனின் ஒருஆயத் அல்லது ஒரு ஹதீதின் அடிப்படையாக வைத்து உறுதியாகக் கூறினால் அவர் நிராகரிப்பவர் ஆகமாட்டார். ஆனால் அவர் ஒரு “அஹ்லுல் பித்’அத்” ஆகுவார். ஹஸ்ரத் அபுபக்கர் மற்றும் உமர் ரலியள்ளஹு அன்ஹும் அவர்களின் கிலாபத்துக்கான தெரிவு சரியாக நடைபெறவில்லை என்று கூறுவது பித்’அத் ஆகும். ஆனால், கிலாபத் அவர்களுக்கு உரிமையில்லை என்று கூறுவது குப்ராகும்.

முஹம்மது ஷிஹ்ரிஸ்தானி ‘ரஹிமஹுள்ளாஹுதஆலா’ தனது **மிலால் வ நிஹல்** எனும் கிதாபில் ஹனபி மதுஹபின் அறிஞர்கள் இமாம் அபுமன்சூர் அல் மாதுரீதி ‘ரஹீமஹுள்ளாஹுத ஆலா அன்ஹு’ அவர்களின் (இஃதிகாத்) ஈமான், சம்பந்தப்பட்ட அகீதாஹ் போதனைகளை பின்பற்றினார்கள் என்று கூறியுள்ளார்கள். இமாம் அபு மன்சூர் அல் மாதுருதி ‘ரஹீமஹுள்ளாஹு

அன்ஹுு' அவர்கள் ஹனபி மதுஹபின் ஸ்தபாகர் இமாம் அபு ஹனிபா அவர்களின் ('உஸூல் மற்றும் புரூ') முறையைப் பயன்படுத்தினார்கள்.

'உஸூல்' என்பது இஃதிகாத் நம்பிக்கை. 'புறூ' என்பது 'அஹ்காமுஸ் ஷரீஆஹ்' அல்லது இஸ்லாமிய சட்டத்தில் உள்ள விதிகள் ஆகும். 'மாலிகி', 'ஷாபிஈ' மற்றும் 'ஹம்பலி' மத ஹபை சேர்ந்த அறிஞர்கள் அகீதாஹ் நம்பிக்கை (இஃதிகாத்) சம்பத்தப்பட்ட விடயங்களில் இமாம் அபுல்ஹசன் அல்அஷ்அரி 'ரஹீமஹுுள்ளாஹுு தஆலா'வை பின்பற்றினார்கள். இமாம் அபுல் ஹசன் அஷ்ஹரி அவர்கள் ஷாபிஈ மத்ஹபை பின்பற்றினார். பிரசித்தி பெற்ற ஷாபி மத்ஹப் அறிஞர் இமாம் அல் ஷுுபுகி 'ரஹீமஹுுள்ளாஹுு தஆலா' அவர்கள் கூறினார்கள் "ஹனபிமதுஹப் அறிஞர் அபு ஜஃபர் தஹாவி 'ரஹீமஹுுள்ளாஹுு தஆலா' அவர்களின் கிதாபை படித்துள்ளேன் அதில் உள்ள போதனைகள் அஷ்அரி மத்ஹபின் போதனைகளை ஒத்துள்ளதையும் அவற்றில் மூன்று விடயங்களில் மாத்திரம் வேறுபடுவதை அவதானித்தேன்" என்று கூறியுள்ளார்கள். 'இமாம் அபுல்ஹசன் அலி சுபுகி 'ரஹீமஹுுள்ளாஹுு' தஆலா அவர்களின் மகன் அப்துல் வஹ்ஹாப் தாஜுுத்தீன் அல்-சுபுகி அவர்கள்' கூறினார்கள் ஹனபி மதுஹபின் இ'திகாத்தில் பதின்மூன்று விடயங்களில் ஷாபி'ஈ மதுஹபுடன் வேறுபடுவதையும் அவதானித்ததாகவும் ஆனால் அவை மிக சிறிய விடயங்களில்தான், அவர்கள் முக்கியமான விடயங்களில் ஒத்துபோவதை அவதானித்தேன் அவர்கள் நேரிய பாதையில் இருந்து தவறவில்லை எனவும் அவர்கள் இருவரும் சரியான பாதையில் இருக்கிறார்கள் என்றும் கூறியுள்ளார்கள். முஹம்மத் ஹாதிமீ 'ரஹீமஹுுள்ளாஹுு த ஆலா' அவர்கள் தனது பெரிகா எனும் கிதாபின் 317 ஆவது பக்கத்தில் அவர் அஷ்அரி இன்னும் மாதுருதி மத்ஹபுகளின் போதனைகளை படித்துள்ளதாகவும் அவைகளுக்கிடையில் மிக சிறிய விடயங்கள் அடங்கலாக 73 விடயங்களில் வேறுபடுவதாகவும் கூறியுள்ளார்கள்.

## 7– நஃப்ஸின் ஆசைகளைப் பின்பற்றுவது

இதயத்தின் தீங்குகளில் ஏழாவது நப்ஸின் பசிக்கு (**ஷஹ்வத்**) அல்லது அதன் விருப்பத்துக்கு தூண்டப்படுதல் ஈடுபடுதல். இந்த வகையான நப்ஸின் அசிங்கமான செயல்களின் நடவடிக்கைகள் பற்றி குர்ஆனில் பல ஆயத்துக்களில் தெளிவாக கூறப்பட்டுள்ளன. மேலும் நப்ஸின் ஆசைகளுக்கு வழிப்படுவது அல்லாஹுுவின் பாதையை விட்டும் தூரப்படுத்தும் என்று குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. நப்சானது எப்பொழுதும் அல்லாஹுுவின் இருப்பை மறுப்பதுடன் அவனுக்கு முரண்பட்டுகொண்டிருக்கும். ஒவ்வொரு செயலிலும் நப்ஸின் ஆசைகளுக்கு வழிப்படுவது அதை வணங்குவதிலேயே முடிவுறும். நப்சுக்கு வழிப்படும் ஒருவர் நிராகரிப்புக்கு அல்லது வழிகேட்டுக்கு இட்டுசெல்லும் அல்லது இஸ்லாத்தில் தடுக்கப்பட்ட ஹராமான செயல்களில் மூழ்கிவிடுவதற்கு வழிவகுக்கும். அபூபகர் தமிஸ்தானி 'ரஹீமஹுுள்ளாஹுு' அவர்கள் கூறுகிறார்கள் "நப்ஸின் ஆசைகளுக்கு அடிபணியாமல் இருப்பது மிகப்பெரிய அதிர்ஷ்டமும் இவ்வுலகில் கிடைக்கும் பெரும் கொடையுமாகும்." ஏனெனில், அல்லாஹ்வுக்கும் அவனுடைய அடிமைகளுக்குமிடையில் இருக்கும் மிகப்பெரிய திரை நப்சாகும். சஹ்ல் பின் அப்துல்லாஹ் தஷ்தூரி 'ரஹீமஹுுள்ளாஹுுதஅலா'அவர்கள்(ஹிஜிரி 283இல் பசராவில் மறைந்தார்கள்) கூறுகிறார்கள். "வணக்கங்களில் மிகப்பெரியது நப்ஸின் ஆசைகளுக்கு

வழிப்படாமல் இருப்பது". இஸ்லாம் பின் யூசுப் பல்ஹி 'ரஹீமஹுல்லாஹு' அவர்கள் ஒரு முறை ஹதமுல் இசாம் 'ரஹீமஹுல்லாஹு' அவர்களுக்கு பரிசு ஒன்றை வழங்கினார்கள். அதை ஹாதம் 'ரஹீமஹுல்லாஹு' ஏற்றுக் கொண்டார்கள் இதைக்கண்ட அவரை சுற்றியிருந்த மக்கள் இது நப்சுக்கு வழிப்பட்டதாக மாட்டாதா என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் நான் பரிசை ஏற்றுக்கொண்டதால் நான் தாழ்ந்தவனாகவும் அவர் உயர்ந்தவராகவும் செய்தேன். பரிசை நான் ஏற்றுக்கொள்ளா விட்டிருந்தால் நான் உயர்ந்த வனாகவும் அவர் தாழ்ந்தவராகவும் ஆகியிருக்கும் அதை எனது நப்ஸ் விரும்பியிருக்கும் என்று கூறினார்கள். 'ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் ஒரு நீண்ட ஹதீதின் கடைசியில் கூறினார்கள், **"மூன்று விஷயங்கள் ஒருவனை அழிவுக்கு இட்டுச்செல்லும் ஒன்று உலோபித்தனம், இரண்டாவது நப்சின் விருப்பத்துக்கு வழிப்படுதல், மூன்றாவது தற்பெருமை பிடித்த மனிதன்**". இமாம் கஸ்ஸாலி 'ரஹீமஹுல்லாஹு த ஆலா' அவர்கள் கூறினார்கள் "உமக்கு அல்லாஹ்விடம் இருந்து உதவி கிடைப்பதை தடை செய்வது சுயநலம் "(**உஜ்ப்**)". அதாவது,ஒருவன் தனது குறைபாடுகளை கவனிக்காது தனது வணக்கங்களை மேலாக நினைப்பது. நபி ஈசா 'அலைஹிஸ்ஸலாம்' அவர்கள் அவர்களின் சீடர்களுக்கு கூறினார்கள் "ஒ எனது சீடர்களே; காற்றானது பல விளக்குகளை அணைத்து விட்டது. அதுபோல் சுய நலம் (உஜ்ப்) ஆனது பல வணக்கங்களை அழித்து அவற்றின் நன்மைகளை இல்லாமல் ஆக்கிவிட்டது என்று கூறினார்கள்".

'ரஸுலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் கூறினார்கள் **"என் உம்மத் (முஸ்லிம்கள்) இரண்டு தீமைகளை பற்றிக்கொள்வார்கள். என்று நான் மிகவும் பயப்படுகிறேன். அவை: நப்ஸ்களின் ஆசைகளைப் பின்பற்றுதல் மற்றது மரணத்தை மறந்து உலகத்திற்குப் பின் ஓடுவது.**" நப்ஸின் ஆசைகளை பின்பற்றுவது ஒருவர் இஸ்லாத்தின் கட்டளைகளுக்கு கீழ்ப்படி வதைத் தடுக்கின்றன. மரணத்தை மறப்பது என்பது நப்ஸ்களின் ஆசைகளைப் பின்பற்றுவதற்கு தூண்டுகின்றது.

'ரஸுலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் கூறியதாக இன்னுமொரு ஹதீது வந்துள்ளது, "**ஒருவரிடம் நல்லறிவு (ஞானம்) இருப்பதன் அடையாளம் அவரின் நப்ஸின் மீதான கட்டுப்பாடும் அவரின் மௌத்துக்குபின் மறுமைக்கு உதவக்கூடிய தயாரிப்புகளுமாகும். முட்டாள் தனத்தின் அடையாளம் ஒருவன் அவனின் நப்சுக்கு வழிப்படுவதுடன் அல்லாஹ்விடமிருந்து பாவ மன்னிப்பையும் கருணையையும் எதிர்பார்ப்பது".** இந்த ஹதீதின் படி நப்ஸின் விருப்பத்திற்கு வழிப்பட்டபின் அந்த செயலுக்கு அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கேட்டு மனந்திரும்புதல் இல்லாமல் அல்லாஹ்விடமிருந்து பாவமன்னிப்பையும் சுவர்க்கத்தையும் எதிர்பார்ப்பது மடைமையின் அடையாளமாகும். ஒரு எதிர்பார்புக்கு தேவையான ஆயத்தங்கள் எதுவும் செய்யாமல் ஒன்றை எதிர்பார்ப்பது கற்பனையான எண்ணமாகும்(**தமன்னி**). மறுபுறம், ஒரு விருப்பம் நிறைவேறுவதர்கு தேவையான எல்லா முன் ஆயத்தங்களையும் செய்த பின் முடிவை எதிர்பார்ப்பது **('ரஜா'**) எனப்படும். கற்பனையான எண்ணங்கள் சோம்பேறிதனத்தை உருவாக்கும். எதிர்பார்ப்பு என்பது வேலைகளுக்கான காரணங்களும் அதன் வெளிப்பாடுமாகும். நப்ஸின் ஆசைகள் ஆடம்பரமானவை '(**ஹவா**)' ஈன்று அழைக்கப்படும். நப்ஸ் ஆனது

எப்பொழுதும் அபாயகரமான விடயங்களை விரும்பும். இந்த தீய போக்கு அதன் உள்ளார்ந்த இயல்பாகும். பின்வரும் கவிதை இந்த உண்மையை மிகவும் தெளிவாக பிரதிபலிக்கிறது.

**உங்கள் நப்ஸுக்கு எதிராக எப்போதும் எச்சரிக்கையாக இருங்கள்.**
**நப்சை ஒருபோதும் நம்ப வேண்டாம். அது உங்களின் எதிரி,**
**எழுபது ஷைத்தான்களை விட அது மோசமானது!**

நப்ஸின் ஆசைகளை பின்பற்றுவதன் மூலம் தடைசெய்யப்பட்ட (**ஹராமான**) செயல்கள் மற்றும் விரும்பாத **(மக்ருஹான**) செயல்களைச் செய்யும் தீங்கு மிகவும் வெளிப்படையானது. நஃப்ஸின் விருப்பங்கள் அனைத்தும் மிருகத்தனமானவை இவ்வுலக தேவைகளுடன் தொடர்புடையவை. ஒருவர் இந்த தேவைகளை பூர்த்தி செய்ய முயற்சிக்கும்போது அது மறுமையின் தேவைகளைத் தயாரிக்க அவர் தாமதப்படுவார்.

எல்லோரும் கவனிக்க வேண்டிய ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால் நஃப்ஸ் இஸ்லாம் அனுமதித்த விடயங்களில் (**முபாஹ்**)வுடன் ஒருபோதும் திருப்தி அடையாது. இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்ட இன்பங்கள் மூலம் நப்சை திருப்தி அடைய அதன் கோரிக்கைகளை பூர்த்தி செய்வது அதிகரித்து வரும்போது நஃப்ஸ் மேலும் மேலும் கேட்டுகொண்டே இருக்கும். ஒருபோதும் திருப்தி அடையாது இறுதியாக மனிதனை தடை செய்யப்பட்ட விடயங்க ளுக்குள் இணைத்துவிடும். மேலும், அனுமதிக்கப்பட்ட விடயங்களை அதிகமாகப் பயன்படுத்தும்போது வருத்தத்தை ஏற்படுத்துவதுடன் துன்பம் மற்றும் நோய்கள் வர காரணமாகிறது. அனுமதிக்கப்பட்ட விஷயங்களைப் அதிகப்படியாக பயன்படுத்துவர் ஒரு சுயநலமுள்ள மிருகத்தனமான உணர்வுகள் மற்றும் இன்பங்களை போசிக்கும் அடிப்படை நபராக மாறுவார்.

இமாம் ரப்பானி 'ரஹீமஹுுள்ளாஹு தஆலா' மிகப்பெரிய வலி, அவர்கள் இந்த விஷயத்தில் பின்வருமாறு கருத்துக்களை கூறியுள்ளார்கள்: "உண்டான அனைத்துக்கும் ஆதாரம் 'அதம்'. அதம் என்றால் இல்லாதது என்று பொருள். அல்லாஹுவைத்தவிர ஒன்றுமே இல்லாத போது அவனுக்கு தெரியும் அவற்றின் இருப்பு இல்லாதது என்று. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், அவனுடைய அறிவில் அவை இருந்தன. அல்லாஹு தஆலா தனது பண்புகளை தனது அறிவிலுள்ள இந்த அதம் இல் பிரதி பலிக்கச்செய்து அவற்றின் தோற்றம் மூலம் (அஸ்ல்) அவற்றின் இருப்பை உண்மையாக்கினான். பின்னர் அவன் இந்த அவனுடைய அறிவில் உள்ள தோற்றங்களை (அஸ்ல்) வெளி மண்டலத்திற்குள் நகர்த்தினான். இவ்வாறு அவற்றுக்கு இருப்பு வந்தது. தற்போதைய இருப்பு இல்லாத நிலையில் இருந்து அவனது பண்புகளின் வெளிப்பாடுகள் மூலம் உருவானது.

இது அப்பிளின் விதை அப்பிளின் தோற்றத்திற்கு காரணமானது போன்று. மனிதர்களின் தன்மையைப் புரிந்து கொள்ளும்போருட்டு ஒரு கண்ணாடியில் தோன்றும் ஒரு பொருளின் படத்தை பற்றி சிந்திப்போம். கண்ணாடியில் தோன்றும் தோற்றம் என்பது ஒரு பொருளிலிருந்து வரும் ஒளியின் பிரதிபலிப்பாகும். கண்ணாடி என்பது அதம் அல்லது இல்லாதது போன்றது. மனிதனின் 'ஆன்மா' மற்றும் 'ஆன்மீக இதயம்' ஒளியைப் போன்றது. கண்ணாடி ஒரு மனிதனின் உடம்பை போன்று ஒத்திருக்கிறது. கண்ணாடியின் பிரகாசம்

நப்சை போன்றது. நஃப்ஸின் ஆரம்பம் இல்லாதது அல்லது அதம். அது ஆன்மாவுடனோ ஆன்மீக உள்ளத்துடனோ தொடர்பில்லாதது. நப்ஸின் ஆசைகளுடன் ஈடுபடும் நபர் எப்போதும் இஸ்லாத்தின் வரம்புகளில் இருந்து வெளியேறுகிறார். விலங்குகளுக்கு ஞானமும் இல்லை நஃப்ஸும் இல்லை என்பதால் அவை அவற்றுக்கு தேவையானதை காணும்போது அவற்றை பெற்றுக்கொள்கிறது. உடல் ரீதியாக அவைகளை காயப்படுத்தும் விஷயங்களிலிருந்து மட்டுமே அவைகள் விலகிவிடுகின்றன. இஸ்லாம் வசதியான மற்றும் அமைதியான வாழ்க்கையை வழங்கும் வாகனங்களைப் பயன்படுத்துவதையும் பயனுள்ள உலக இன்பங்கள் அனுபவிப்பதையும் தடுக்கவுமில்லை. இஸ்லாம் முஸ்லிம்களுக்கு அவற்றை அடைவதற்கு மார்க்கத்தின் வழிகாட்டலை பின்பற்றுமாறு கட்டளை இடுகின்றது. இஸ்லாத்தின் குறிக்கோள் மனிதர்கள் இந்த உலகத்திலும் மறுமையிலும் வசதியானது மற்றும் அமைதியான வாழ்க்கையை பெற்றுகொள்வதுதான். இந்த குறிக்கோளை அடைவதற்கு நல்லறிவை பயன்படுத்துவதோடு நப்ஸின் ஆசைகளிளிருந்து விலகியிருத்தலும் அவசியம். ஞானம் நல்லறிவு படைக்கப்படாது விட்டிருந்தால் மனிதன் நப்ஸின் ஆசைகளுக்கு அடிமைப் பட்டு பேரழிவில் விழுந்திருப்பான். நப்ஸ் இல்லாமல் இருந்தால் மனிதஇனம் பெருக்கமடையாமலும் நாகரிக வாழ்க்கையும் இல்லாமல் இருந்திருக்கும். அத்துடன், நப்சுக்கு எதிரான போராட்டத்துக்கான வெகுமதிகளும் கிடையாமல் போகியிருக்கும். மேலும், நப்ஸ் இல்லாவிட்டால் மனிதன் மலகுகளின் தரத்துக்கு மேலே உயர முடியாமலும் போகியிருக்கும். எங்கள் நபி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள்; **"மரணத்திற்குப் பிறகு வாழ்க்கையில் நடக்கவிருக்கும் விஷயங்களைப் பற்றி உங்களிடம் உள்ள அறிவை விலங்குகள் பெற்றிருந்தால் நீங்கள் உண்ணுவதற்கு எந்த இறைச்சியையும் கிடைக்காமல் போகியிருக்கும்**". என்று கூறினார்கள். ஏனெனில், விலங்குகள் மறுமையில் உள்ள தண்டனைகளுக்கு அவை பயப்படுவதால் சாப்பிடவோ குடிக்கவோ முடியாது எடை இழந்து அழிந்து போகியிருக்கும். மனிதர்களுக்கு விலங்குகளைப் போல நப்ஸ் இல்லாமலிருந்தால், அவர்கள் கூட தண்டனையின் பயம் காரணமாக சாப்பிடவோ குடிக்கவோ முடியாது வாழவும் முடியாது போயிருக்கும். மனிதர்களின் அன்றாட வாழ்க்கையின் தொடர்ச்சியானது அவர்களின் நப்ஸின் வெளிப்படையான தன்மையையும் (கஃப்லத்) அதன் உலக சுவைகளுக்கு அதன் விருப்பத்தையும் பொறுத்தது. நப்ஸ் என்பது இரு பக்கம் கூரான வாள் போன்றது அல்லது வலுவான விஷ பண்புகளைக் கொண்டுள்ள மருந்தை போன்றது. இம்மருந்தை மருத்துவர் வழங்கிய பரிந்துரகளுக்கமைய பயன்படுத்தும் எவரும் மருந்தின் பயனுள்ள பண்புகளிலிருந்து நன்மைகளை பெற்றுக்கொள்வார். நேர்மாறாக, இந்த மருந்தை தீவிர பாணியில் பயன்படுத்தும் எவரும் மருந்தின் விஷ பண்புகள் காரணமாக அழிந்து போவார்கள். இஸ்லாம் நப்ஸின் அழிவை பரிந்துரைக்கவில்லை. மாறாக, அது நப்ஸை கட்டுப்படுத்தி பயனுள்ள செயல்களைச் செய்வதற்கு பரிந்துரைக் கின்றது. நப்ஸ்ஆனது இஸ்லாத்தின் கட்டுப்பாடுகளை மீறுவதை தடுப்பதற்காக நப்சுக்கு எதிரான இரண்டு வகையான போராட்டங்களை (ஜிஹாத்) பயன்படுத்தப்படுகின்றன. இதில் முதலாவது "**ரியாசத்**" என்று அழைக்கப்படுகிறது. ரியாசத் என்பது ஒருவரின் நப்ஸின் ஆசையுணர்ச்சிக்கு

எதிராக எதிர்த்து நிற்கும் தன்மை. இது **வரா** மற்றும் **தக்வா** ஆகிய இரண்டு வழிகளைப் பயன்படுத்துவதன் மூலம் இது நிறைவேற்றப்படுகிறது.

'தக்வா' என்பது தடைசெய்யப்பட்ட செயல்களைச் செய்யக்கூடாது. அதாவது, இது அன்றாட வாழ்வில் ஒருவர் தடைசெய்யப்பட்ட விவகாரங்களில் ஈடுபடாத வாழ்க்கை முறை. 'வரா' என்பது ஹராமான செயல்களை மட்டுமின்றி இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டுள்ள மிதமிஞ்சிய தன்மையிலிருந்தும் (முபாஹ்) (இஸ்லாம் அனுமதிக்கும் செயல்கள், இன்பங்கள்) களிலிருந்தும் தவிர்ந்து கொள்வது. நப்சுக்கு எதிரான இரண்டாவது வகை போராட்டம் (**ஜிஹாத்**). இது நப்ஸ் விரும்பாத விஷயங்களைச் செய்வது. இது **முஜாஹதா** என்று அழைக்கப் படுகிறது. நப்ஸ் வணக்கத்தில் ஈடுபடுவதை விரும்பாததால் வணக்கத்தின் எல்லா செயல்களும் முஜாஹதாவாகும். இந்த இரண்டு வகை போராட்டங்களும் நப்சை கட்டுபடுத்தி மனித வாழ்வில் முதிர்ச்சி (தேர்ச்சி)யை ஏற்படுத்தி ஆன்மாவிற்கு பலம்சேர்த்து அவர்களை **சி**த்தீக்குகளின் (மிக உயர்ந்த பக்தியையும் பதவியையும் அடைந்தவர்கள்) வழியில், **ஷுஹதாக்கள்** (அல்லாஹ்வுக்காக உயிரிழந்த தியாகிகள்), **சாலிஹீன்**கள்(மிக உயர்ந்த பக்தியடைந்தவர்) வழியில் சேர்க்கும். அல்லாஹ்வுக்கு அவனுடைய படைப்பு களின் வணக்கம் தேவையற்றது. அல்லாஹ்வுக்கு அவனுடைய படைப்புகளின் மீறல் எந்த வகையிலும் அவனுக்கு தீங்கு விளைவிப்பதில்லை. மனிதர்கள் நப்ஸைக் கட்டுப்படுத்து வதற்காக அதற்கெதிராக ஒரு போராட்டத்தை செய்வதற்கு மேற்கூறிய விஷயங்களை செய்யுமாறு கட்டளையிட்டான்.

மனிதர்கள் நப்ஸைக் கொண்டிருக்கவில்லை என்றால், அவர்கள் மனிதர்களாக இருக்க மாட்டார்கள் அவர்கள் மலக்குகளின் தரத்தில் இருப்பார்கள். உண்மையில், மனித உடலுக்கு பல்வேறு தேவைகள் உள்ளன. உதரணத்திற்கு , சாப்பிட, குடிக்க, தூங்க, ஓய்வெடுக்க வேண்டியது அவசியம் உள்ளது. குதிரை இல்லாமல் குதிரைவீரன் வாழ முடியாது என்பதில் சந்தேகம் இல்லை. எனவே, அவர் தனது குதிரையை நன்கு கவனித்துக்கொள்கிறான். இதேபோல், ஒரு மனிதன் ஒரு உடல் இல்லாமல் செயல்பட முடியாது. எனவே, அவனும் அதை கவனித்துக் கொள்ள வேண்டும். அவனது வணக்க வழிபாடுகள் உடலுடன் செய்யப்படுகின்றன. ஒரு முறை, அவர்கள் 'ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களிடம் ஒருவரைப்பற்றி அவர் இரவு முழுவதும் தூங்காமல் தொடர்ந்து வணக்கம் செய்து கொண்டிருப்பதாக தெரிவித்தனர். அதற்கு அவர்கள் கூறினார்கள். **“அதிகம் பெறுமதியான வணக்கங்கள் தொடர்ச்சியாக செய்யப்படுபவை அவை அதிகளவில் இல்லா விட்டாலும் கூட”** என்று கூறினார்கள். தொடர்ச்சியான அடிப்படையில் செய்யப்படும் வழிபாடுகள் ஒருநபர் வழிபாட்டில் நிலையாக இருப்பதற்கு காரணமாகின்றது. வழிபாடுகளைச் செய்வது என்பது அல்லாஹ்வுக்கு அடிபணியும் நோக்கம் மற்றும் அல்லாஹு தஆலாவின் கட்டளைகளை பின்பற்றுவது. அல்லாஹு வினால் கட்டளையிடப்பட்ட கட்டளைகள் மற்றும் தடைகள் “ஷரீஅத்” அல்லது “**அஹ்காம்அல்-இலாஹியா**” அல்லது தெய்வீகவிதிகள் என்று அழைக்கப் படுகிறது. கட்டளைகள் பர்ளு என்றும், தடைகள் "ஹராம்" என்றும் அழைக்கப்படுகின்றன. எங்கள் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம், **“நீங்கள் தாங்கிக் கொள்ளும் அளவுக்கு வழிபாடுகளைச் செய்யுங்கள் மனமகிழ்வோடும் விருப்பத் தோடும் செய்யப்படும் வணக்கங்கள் மிகவும் மதிப்புமிக்கவை. ”** என்று கூறியதாக தெரிவிக்கப்படுகிறது. நன்கு

ஓய்வெடுத்த நபர் மகிழ்ச்சியோடும் விருப்பத்தோடும் வழிபாடுகளைச் செய்ய முடியும். மறுபுறம், நீங்கள் உடல் ரீதியாக சோர்வாக இருக்கும்போது செய்யப்படும் செயல்கள் உடல் ரீதியாகவும் ஆன்மீக ரீதியாகவும் சோர்வை ஏற்படுத்தும். சோர்விலிருந்து விடுபடுபடுவதற்கும் உற்சாகத்தை மீண்டும் ஏற்படுத்துவதற்கும் நேரத்துக்கு தக்கவாறு ஒருவர் அனுமதிக்கப்பட்ட விஷயங்களை அனுபவிக்க வேண்டும்.

இமாம் அல்-கஸ்ஸாலி 'ரஹிமாஹுல்லாஹு தஆலா' அவர்கள் கூறுகிறார்கள். ஒருவர் அதிகம் வழிபாட்டில் ஈடுபடும் பொழுது உடல் சோர்வடைகிறது, அதனால் நகர முடியாமலிருக்கும். அத்தகைய நேரங்களில் ஒன்று தூங்குவதன் மூலமோ அல்லது நல்லடியார்களின் வாழ்கை சரித்திரங்களை படிப்பதன் மூலமோ அல்லது அனுமதிக்கப்பட்ட பொழுது போக்குகளாலோ உடலுக்கு ஆறுதல் அளிக்க வேண்டும். உண்மையான விருப்பம் இல்லாமல் வணங்கு வதைவிட இந்த செயல்கள் சிறந்தது. வழிபாட்டின் நோக்கம் முஜாஹதா மூலம் நப்சை கட்டுப்படுத்துவதும், மறுபுறம், இதயத்தை அல்லாஹு தஆலாவுடன் இணைப்பதன் மூலம் உயர்ந்த பரவச நிலை அடைவதுமாகும். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' பின்வரும் ஹதீதில் கூறுகிறார்கள்; "தொழுகை கீழான அசிங்கமான செயல்களை செய்வதிலிருந்து பாதுகாக்கின்றது". இந்த பாதுகாப்பு வலுவான ஆசை மற்றும் மகிழ்ச்சியுடன் தொழுவதன் மூலம் மட்டுமே பெறமுடியும். இந்த வலுவான விருப்பத்தையும் மகிழ்ச்சியையும் பெறுவதற்கு தேவையான அனுமதிக்கப்பட்ட அளவுக்கு நப்ஸின் ஆசைகள் திருப்திபெறுதல் அவசியம். வணக்கங்களின் செயல் திறனை மேம்படுத்தும் அனுமதிக்கப்பட்ட விஷயங்கள் உண்மையில் வழிபாடுகளின் செயல்களாகும்."ஒரு அறிஞரின் தூக்கம் அறிவில்லாதவரின் வணக்கதை விட மேலாகும்". என்ற ஹதீது எமது வாதத்தை உறுதிப்படுத்து கின்றது. உதாரணமாக, தராவிஹ் தொழுகையை ஒருவர் தூக்க நிலையில் மயக்கமான முறையில் தொழுவது மக்ரூஹ் ஆகும். அதை மயக்கத்திலிருந்து விடுபட்ட பிறகு உற்சாகத்துடன் செய்ய வேண்டும். குறுகிய அளவுகளுக்கு இடையில் நிகழ்த்தப்பட்ட ஒரு தொழுகை மந்தநிலை மற்றும் மறதியை ஏற்படுத்தும். [மேற்கண்ட கருத்துக்களால் ஒருவர் சோர்வாக இருக்கும் நிலையில் வணக்க வழிபாடு செய்வதை நிறுத்தலாம் என்ற முடிவுக்கு ஒருவர் தவறாக வழிநடாத்தப் படக்கூடாது]. ஏனென்றால் ஒருவர் சோர்வாக இருக்கும் நிலையில் வணக்க நடவடிக்கைகள் ஒத்திவைக்கப்படுகின்றன;[1] அவை தவிர்க்கப்பட வில்லை. பர்ளான வணக்கங்களை காரணம் 'உதுர்' இன்றி (இஸ்லாம் வரையறுக்கும் தவிர்ப்பதர்க்கு ஏற்றுக்கொள்ள கூடிய காரணங்களை)தவிர தவிர்ப்பது மிகப்பெரிய பாவமாகும். இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்ட (உதுர்) காரணத்தினால் விடுபட்ட வணக்கங்களை 'களா' செய்வது கட்டாய பர்ளாகும். மேல் கூறப்பட்ட காரணத்துக்காக விடுபட்ட வாஜிபான வணக்கங்களை களா செய்வதும் வாஜிப்[2] ஆகும்.

---

[1] இந்த ஒத்திவைப்பு அதை களா செய்ய ஒதுக்கப்பட்ட நேரத்தை விட அதிகமாக இருக்கக்கூடாது

[2] வாஜிபான வணக்கம் என்பது குர் ஆனில் தெளிவாக கட்டளை இடப்படாவிட்டலும் அதை செய்வது மிக அவசியமானது.

ஒரு நபர் சுன்னத்தான வணக்கம் செய்யாது தவிர்த்து விட்டால் அதற்கான வெகுமதி (தவாப்) கிடைக்காது. ஒருவர் 'உத்ர்' இல்லாமல் வழமையாக சுன்னத்தான அமல்களை தவிர்த்தால் மறுமையில் ஷஃபாஅத்தை, (அதாவது ரசூலுல்லாவின் பரிந்துரையை) பெறாமல் தவிர்க்கப்படுவார். களைப்பாக அல்லது நிறைவேற்றுவதற்கு சக்தியில்லாமல் இருப்பது, அல்லது விருப்ப மில்லாமல் இருப்பதன காரணமாக பர்லான அமல்களை அதற்கான அனுமதிக்கப்பட்ட காலத்திற்கு மேல் ஒத்தி வைப்பது 'உத்ர்'(மன்னிப்புக்கான) காரணம் அல்ல. அவர் அதற்கான குற்றத்திலிருந்தும் பாவத்திலிருந்தும், தண்டனையிலிருந்தும் விடுபட்டவர் அல்ல.

இஸ்லாமிய நம்பிக்கை கோட்பாடுகளை கற்பிக்கும் நூல்களில் பர்ளு, ஹராம் (இஸ்லாமிய சட்டம்) என்பவற்றை அலட்சியம் செய்வது குப்ருக்குரிய நிலையை ஏற்படுத்தும் என்று எழுதப்பட்டுள்ளது. இஸ்லாத்தின் எதிரிகள் இந்த முக்கிய விஷயத்தில் இளைய தலைமுறையினரை தவறாக வழிநடத்த முயற்சிக்கின்றனர். இதன் மூலம் இஸ்லாத்தை அதன் உள்ளிருந்து தகர்க்க முயற்சிக்கின்றனர். அவர்களின் வழிகேட்டில் இருந்து நிரந்தரமான பாதுகாப்பு சக்தியை வளர்ப்பதற்கான ஒரேவழி அஹ்லுஸ்சுன்னாஹ் அறிஞர்களால் எழுதப்பட்ட ஃபிக் மற்றும் 'இல்ம் அல்-ஹால் புத்தகங்கள் படிக்க வேண்டும், அதன் மூலம் பர்ளுகள், மற்றும் ஹராம்கள் (ஃபராயிஸ்) பற்றிய பயனுள்ள தகவல்களைப் அறிந்துகொள்ளமுடியும்.

## 8– பிரதியான பின்பற்றும் நம்பிக்கை (தக்லீத்)

இதயத்தின் எட்டாவது நோய் உங்களுக்கு தெரியாதவர்களை பின்பற்று வதாகும். ஒருவரின் போதனைகளை அவரின் புகழ் மற்றும் பிரபலம், அவரது புத்தகங்கள் அல்லது உரைகளை ஊக்குவிக்கும் தீவிர பிரச்சாரம் போன்ற வற்றின் அடிப்படையில் மாத்திரம் வைத்து அவர் "அஹ்ல்-சுன்னத் அறிஞரா" என்பதை அறியாமல் பின்பற்றுவது அனுமதிக்கப்படவில்லை. ஒருவர் நம்பகமான "அஹ்ல்-சுன்னத் ஆதாரங்களில்" நம்பிக்கை மற்றும் வழிபாடு உள்ளவரா என்பதை விசாரிக்காமல் அவ்வாறு இல்லாத ஒருவரை பின்பற்றினால் ஆன்மீக பேரழிவுகளுக்கு ஆளாக நேரிடும். ஒருவர் முஸ்லீமாக இருப்பதற்கு, அல்லாஹ்வின் இருப்பை, அவன் ஒருவன் என்பதை, அவனுடைய சக்தியை, அவனுடைய பண்புகள் (சிபத்துக்களை) விளங்கிக்கொள்ள யாரையும் பின்பற்ற வேண்டிய அவசியமில்லை. அறிவியல் அறிவை எளிதில் புரிந்துகொள்ள தன்னை வளர்த்துக் கொண்ட எவரும் அல்லாஹுத்த ஆலாவுடைய இருப்பை சிந்தித்து எளிதில் புரிந்துகொள்ளமுடியும். ஒருவர் படைப்புகளை பார்க்கும்போது படைபாளன் இருப்பதை புரிந்து கொள்ளாதது முட்டாள்தனம். இஸ்லாம் இந்த பாணியில் சிந்திக்கவும், இதனால் நம்பிக்கையைப் பெறவும் அனைவருக்கும் கட்டளையிடுகிறது. எங்கள் நபிகள் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களின் காலத்தைத் தொடர்ந்து முதல் சில நூற்றாண்டுகளில் வாழ்ந்த தூய நல்லடியார்கள் (சலஃபுஸ் சாலிஹீன்கள்) சிந்திப்பதன் மூலம் நாம் ஈமான் கொள்ளவேண்டும் என ஏகமனதாக தெரிவித்தார்கள். இஸ்லாமிய நாட்காட்டியின் நான்காம் நூற்றாண்டின் பின்னர் தோன்றிய எழுபத்திரண்டு வழிதவறிய குழுக்களில் ஒன்றைச் சேர்ந்த சில தவறான மக்கள் அவனை (படைத்தவனை) பற்றியோ அல்லது அவனுடைய படைப்பை பற்றியோ அவதானிக்கவும் சிந்திக்கவும் தேவையில்லை என

கூறியுள்ளனர். அவர்களின் மாறுபட்ட கருத்துக்கள் எந்தவித தாக்கத்தையும் செலுத்தவில்லை. பின் வந்த சந்ததியினரால் முன் வைக்கப்பட்ட எதிரான கருத்துக்கள் முந்தைய நல்லடியார்களான அறிஞர்களின் ஏகோபித்த போதனைகளை செல்லுபடியற்றதாக்க முடியவில்லை.

பெற்றோர்கள் அல்லது ஆசிரியர்களைப் பின்பற்றுவதன் மூலம் ஏற்படும் சரியான நம்பிக்கை செல்லுபடியானதாகும். எனினும் இம்முறையில் நம்பிக்கையை ஒரு நபர் பெற்றுக்கொண்ட மேற்படி நம்பிக்கையை வளர்த்துக் கொள்ளவும் சிந்தித்து அல்லாஹ்வின் இருப்பை புரிந்து கொள்ளவும் தேவையான விஞ்ஞான அறிவைப் படிப்பது மற்றும் சிந்திப்பதற்கு கற்றுக்கொன்டு அவரது மனதை வளர்த்துக் கொள்ள தவறினால் பாவியாகுவார். இருப்பினும், மற்றும் சில அறிஞர்களின் கூற்றுப்படி, போதிய அறிவை பெறாத ஒருவர் அவர் தனது பெற்றோரிடமிருந்து நம்பிக்கையயை பெற்ற பின் புத்தகங்களைப் படிப்பது அல்லது சிந்திப்பதன் மூலம் நம்பிக்கையைப் பெற முடிந்தால் அவர் அறிவை பெறாதது ஒரு பாவமாகாது என்று கூறுகிறார்கள்.

மார்க்கத்தில் இஜ்திஹாத் செய்து மார்க்க விடங்களுக்கான சட்டங்களை பெறக்கூடிய போதிய அறிவைபெற்ற அறிஞரை ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவரை பின்பற்றுவதுடன் மற்றும் எல்லா விஷயங்களிலும் அவருடன் இணைந்திருப்பது எல்லோருக்கும் அவசியமாகும். இஜ்திஹாத் என்பது தெளிவாக வரையறுக்கப்படாத தகவலின் பொருளை அந்த சந்தப்பத்துகேற்ப 'குர்ஆன் அல்-கரீமில்' இல் மற்றும் 'ஹதீத் ஷரீபில்' தெளிவாக புரிந்து கொள்ளப்பட்ட கட்டளைகள் (**நாஸ்**) இல்லாத சூழ்நிலைகளில் புரிந்து கொள்வதும் மற்றும் முடிவுகளை எட்டுவதுமாகும். குர்ஆனின் ஆயத்துக்கள் மற்றும் ஹதீஸ்கள்" நாஸ்" என்று அழைக்கப்படுகின்றன. இஜ்திஹாத் செய்வதற்கான தகுதிகளைக் கொண்ட அறிஞர்கள் "முஜ்தஹித்" என்று அழைக்கப்படுகின்றனர்.

ரசூலுள்ளாஹி சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் ஹிஜ்ரத் செய்து நானூறு வருடங்களுக்கு பின்னர் மக்கா மற்றும் மதீனாவில் எந்த முஜ்தஹிதும் தோன்றவில்லை. அது அல்லாஹு த்'ஆலாவுக்கும் அவனது ரசூலுள்ளாஹி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களுக்கோ தேவையும் இல்லை ஏனெனில் உலக முடிவுவரை தேவைப்படும் அனைத்து வகையான வாழ்க்கை முறைகளுக்கும் அனைத்து வகையான அறிவியல் மற்றும் தொழில்நுட்ப மாற்றங்கள் மற்றும் சூழ்நிலைகளுக்கு பொருந்தும் அனைத்து விதமான சட்டங்களும் (அஹ்காம்)விரிவுரைகளும் கூறப்பட்டுவிட்டன. இந்த போதனைகளை முஜ்தஹிதுகள் புரிந்து கொண்டு அதை மற்றவர்களுக்கு விளக்கியுள்ளனர்.

பின்னர் வந்த அறிஞர்கள் இவற்றை புதிய சூழ்நிலைகளுக்கு எப்படி பிரயோகிக்கவேண்டும் என்பதை அறிந்து கொண்டு அவற்றி அவர்கள் எழுதிய திருக்குர்ஆனுக்குரிய விளக்கவுரையிலும் (தப்சீர்) பிக்ஹு கிரந்தங்களிலும் (இஸ்லாத்தின் கொள்கைகளை கற்பித்தல் நடைமுறைகள் சட்டவாக்கல் விளக்க பிரிவு நூல்கள்) எழுதியுள்ளார்கள். பின்வந்த இவ்வறிஞர்கள் **முஜத்திதுகள்** (மீட்டெடுப்பவர்கள்) என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் உலகின் இறுதிவரைக்கும் இருப்பார்கள். எனவே, புதிய விஷயங்களை "நாஸில்"

சேர்ப்பதன் மூலம் மதத்தை மாற்றியமைக்க முன்மொழிகின்றவர்கள் இஸ்லாத்தின் எதிரிகள். அவர்கள் முன்வைக்கும் "அறிவியல் ஊடகங்கள் மாறிவிட்டன. நாங்கள் புதிய நிகழ்வுகளை எதிர்கொள்கிறோம். மத அறிஞர்கள் புதிய விளக்கங்களை சேகரித்து எழுத வேண்டும். புதிய இஜ்திஹாத்கள் வேண்டும்" என்பவர்கள் இஸ்லாத்தின் எதிரிகள். அவர்கள் காஃபிர்கள் (**ஜின்தீகுகள்**). இஸ்லாத்தின் மிகவும் தீங்கு விளைவிக்கும் எதிரிகள் பிரிட்டிஷ் வம்சாவளியைச் சேர்ந்தவர்கள். தயவுசெய்து ஹகீகத் பிரசுரிப்பில் வெளியிடப்பட்ட "**ஒரு பிரிட்டிஷ் உளவாளியின் ஒப்புதல் வாக்குமூலம்"** என்ற புத்தகத்தைப் படியுங்கள்.

உண்மையான நான்கு மதுஹப்களில் ஒன்றை பின்பற்றும் ஒருவருக்கு மற்றொரு மத்ஹபை பின்பற்ற வேண்டிய அவசியம் இல்லை. அவர் ஏற்கனவே பின்பற்றும் மத்ஹபை தொடர்வது அவசியம். ஒரு குறிப்பிட்ட செயலை நிறைவேற்றுவதில் ஒருவரின் சொந்த சூழ்நிலைகளின் காரணமாக சிரமம் இருந்தால் அவர் மற்றொரு மத்ஹபைப் பின்பற்றி அக்குறிப்பிட்ட செயலை மாத்திரம் நிறைவேற்ற அனுமதியுண்டு. ஆனால் இதில் ஒரு எச்சரிக்கை உள்ளது. ஒரு குறிப்பிட்ட செயலை(அமலை) அல்லது வழிபாட்டைச் செய்வதற்காக நான்கு மத்ஹபில் மிக எளிதான இஜ்திஹாத்களை சேகரிக்க ஒருவர் அனுமதிக்கப்படவில்லை[1]. ஏதேனும் செயல் அல்லது வழிபாடு (அமல்) இந்த முறையில் செய்யப்பட்டால் அது ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

இஸ்லாமிய நாட்காட்டியின் நான்காம் நூற்றாண்டுக்குப் பிறகு முஜ்தஹித் முத்லக் [கியாஸ் (ஒப்புமை,ஒப்பீடு) மூலம் இஜ்திஹாது செய்யவல்ல அறிஞர்] எவரும் தோன்றவில்லை. எனவே, ஹிஜ்ரி நான்காம் நூற்றாண்டிற்குப் பிறகு வாழ்ந்த எந்த அறிஞரையும், அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்ட நான்கு மத்ஹப்களுக்கு"அப்பால் நிறுவப்பட்ட எந்த மத்ஹபையும் பின்பற்றுவது அனுமதிக்கப்படவில்லை. நன்கு அறியப்பட்ட நான்கு மதுஹபுகளில் ஒன்றுக்கு ஏற்ப இஸ்லாமிய அறிவை கற்றுக்கொள்ள அந்த மதுஹப் உடைய அறிஞர்களின் ஃபிக்ஹு நூல்களை படிக்க வேண்டும். உண்மையான "அஹ்லுஸ்-சுன்னத் அறிஞர்களால்" அங்கீகரிக்கப்படாதவர்களின் புத்தகங்கள் அல்லது பேச்சுகளிலிருந்து அறிவை பெற்றுக்கொள்ள முற்சிக்கக்கூடாது. ஒருவர் நினைத்தமாதிரி தான்தோன்றித்தனமாக் தேர்ந்தெடுக்கப்பட்ட மத புத்தகங்களிலிருந்து அல்லது அறிவுறுத்தல்களின்படி செய்யப்படும் வணக்க வழிபாட்டு நடவடிக்கைகளை இஸ்லாம் ஏற்கவில்லை. சுன்னத் வல் ஜமாஅத் அல்லாத சமயவாதிகளின் புத்தகங்கள் பேச்சுக்களை பின்பற்றக்கூடாது. பின்வரும்"ஹனஃபி மதுஹபு (ஃபத்வா) கிதாபுகள் பரவலாக ஏற்றுக்கொள்ளப் பட்டநம்பகமானவை.:**காதிஹான், ஹானிய்யா, ஹுலாசா, பெஸ்ஸாஸியா**, **சஹீரிய்யா** மற்றும் **[இப்னுல் அபிதீன்**]. **முஹ்தஸர் அல்-கலீல்** கிதாப்"மாலிகி மத்ஹப்" படி எழுதப்பட்டது. **அல் அன்வார் லி-அமலி அப்ரார்** கிதாப் மற்றும் **துஹ்பத்துல்-முஹ்தாஜ்** கிதாப் "ஷாஃபி மத்ஹபின்படி எழுதப்பட்டுள்ளது. **அல் ஃபிக்ஹு அலல்-மதாஹிபில்-அர்பா** என்ற கிதாப் நான்கு மத்ஹப்களின் படி எழுதப்பட்டுள்ளது இந்த கிதாபுகள் அனைத்தும் சரியானவை மற்றும் நம்பகமானவை.

---

[1] நான்கு மதுஹபுகளின் எளிதான அம்சங்களின் தொகுப்பு தல்பிக் (தேர்ந்தெடுக்கப்பட்ட தன்மை) என்று அழைக்கப்படுகிறது.

ஹதீத் கிதாபுகள் வழிபாட்டுச் செயல்கள் அல்லது 'அஹ்காம்'(ஹலால், மற்றும் ஹராம்களை) அடிப்படையாகக் கொண்ட போதனைகளை கற்றுக்கொள்ள எளிதான ஆதாரமல்ல. மிகவும் அதிகம் நம்பகமான ஹதீத் கிதாப் **சஹீஹுல் புகாரி**,**சஹீஹுல்முஸ்லீம்** மற்றும் **குதூப் அல்-சித்தா** என்று அழைக்கப்படும் ஹதீத்தின் மற்ற நான்கு கிதாபுகள்.

சூஃபித்துவத்தை (தரீக்கத்தை) விளக்கும் மிகச்சிறந்த கிரந்தம் சூஃபிஞானி ஜலாலுத்தீன் ரூமி ரஹீமஹுள்ளாஹு அவர்களின் மஸ்னவி எனும் கிரந்தமாகும். ஷரிஅத், தரீகத் இரண்டையும் விளக்கும் சிறந்த நூல் இமாம் ரப்பானி அவர்களின் **மக்தூபாத்** எனும் கிரந்தமாகும்.

எந்தவொரு நபர் அவர் ஒரு மார்க்க அறிஞராக அறிமுகப்படுத்தப்படுகிறார் என்பதற்காக அவரின் நூல்கள் அல்லது உரைகளை பார்த்து அதன்படி அமல் செய்ய அனுமதியில்லை. உண்மையில் அவர் அறிஞராக நடிக்கலாம். ஒருவர் மேற்கூறிய பெறுமது மிக்க கிதாபுகளிளிருந்து தொகுக்கப்பட்ட அல்லது மொழிபெயர்க்கப்பட்ட **'இல்ம் அல்-ஹால்'** நூல்களைபடிக்க வேண்டும். இந்த பரிந்துரைக்கப்பட்ட கிதாபுகளிளிருந்து மொழி பெயர்க்கப்பட்ட நூல்களுக்கு பதிலாக, பொய்யையும் பிழையையும் சேர்த்து கோர்க்கப்பட்ட அல்லது மொழிபெயர்க்கப்பட்ட நூல்களை படிப்பது ஒரு மனிதனை இம்மையிலும் மறுமையிலும் பேரழிவுக்கு இட்டுச்செல்லும்.

குப்ரிய்யதுக்கு அடுத்ததாக இரண்டாவது இடத்தில் உள்ள பெரும் பாவம் மூடத்தனமான நம்பிக்கையாகும். இதற்கு நேர்மாறானது சுன்னத் ஜமாஅத் நம்பிக்கை. அல்லாஹு தஆலாவின் மீது நம்பிக்கை(ஈமான்) கொள்வதற்கு அடுத்த மிகவும் உயர்ந்த வணக்க வழிபாடு அஹ்லுஸ் சுன்னத் நம்பிக்கை கொள்வதாகும். அஹ்லுஸ் சுன்னத்தின் சுருக்கம் பின்வருமாறு: உங்களை முகம்மது சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் சுன்னத்துக்கு ஏற்றவாறு மாற்றியமைத்துக் கொள்வதாகும். அதாவது, ரசூலுள்ளாஹ் சல்லல்லாஹு அலைஹி வசல்லம் மற்றும் அவர்களது தோழர்களுக்கு (சஹாபாக்கள்)அவர்கள் காட்டிய வழி. அதன் பின்னர் சஹாபாக்கள் தாபிஈன்களுக்கு கற்பிக்கப்பட்டு பின்னர் அது அது தாபிஈன்களால் மற்றும் இஜ்மாவினால் எங்களுக்கு அறிவிக்கப்பட்ட வழி. இஜ்மா என்பது தாபிஈன் களுக்கு பின்னர் வந்த அறிஞர்களின் நம்பிக்கை மற்றும் வழிபாட்டு விஷயங்களில், நீங்கள் செய்யும் எல்லாவற்றிலும்,உங்கள் அன்றாட வேலைகள் மற்றும் வணிக தொடர்புகள் தொடர்பாக கூறிய ஏகோபித்த கருத்து. அந்த புனித அறிஞர்களால் வழிநடத்தப்பட்ட வழி அவர்களின் கிதாபுகளை வாசிப்பதன் மூலம் கற்றுக்கொள்ளப்பட வேண்டும். பெரும்பாலான முஸ்லிம்கள் இந்த வழியில் இருந்து விலகி அவர்களின் செல்வத்தின் மீதுள்ள ஆசைகள், அவற்றின் சொந்த விருப்பத்தை பின்பற்றுதல் போன்ற உலக அறிவியல் வளர்ச்சி என்பவற்றால் தவறாக வழிநடத்தப்படல் காரணமாக **அஹ்லுல்-பித்'அத்**தாக ஆக மாறிவிட்டனர்.

## 9– ஆடம்பரம், நடிப்பு (ரியா)

ஆன்மீக இதயத்தின் முக்கியமான குறைபாடுகள் அறுபது உள்ளன என்று முன்பு கூறியுள்ளோம். இதில் ஒன்பதாவது நோய் நடிப்பு (ரியா"). "ரியா என்பது அதன் உண்மையான தன்மைக்கு நேர் எதிரான எதையாவது காட்டி ஏமாற்றுதல். இதன் பொருள் நடிப்பு, அதாவது, ஒரு நபர் ஒரு பக்தியுள்ள நபர்

என்று மற்றவர்களுக்கு காட்டுவதற்காக மறுஉலகுக்கான செயல்களைச் செய்வது. சுருக்கமாக சொன்னால் பாசாங்கு செய்தல் அதாவது; ஒருவர் மறுமையில் (**ஆகிரா)**ஆசை கொண்ட மிக பக்திமானாக மற்றவரகளின் மனதில் ஒரு மதிப்பை உண்டாக்குவதற்காக அமல்களை செய்வது, ஆனால் உண்மையில் அவர் இவ்வுலக ஆசைகளை நிறைவேற்றுவதிலும் இவ்வுலக செல்வத்திலும் ஆசை கொண்டிருப்பது. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், உலக செல்வங்களை பெறுவதற்காக மார்க்கத்தை ஒரு கருவியாக பயன் படுத்துவது அல்லது, தனது வணக்க வழிபாடுகளை காட்டி மற்றவர்களின் மனதை கவர்வது. [ஒரு நபரின் செயல்களும் சொற்களும் தன்னை மற்றவர்களுக்கு மார்க்க அறிவு உள்ளவர்போல் காட்டிக் கொள்வதர்க்காக இருந்தால் அவர் ஒரு நயவஞ்சகர் (**முனாஃபிக்**) என அழைக்கப்படுகிறார். அவர் மார்க்க அறிவை கொண்டிருக்கவில்லை என்றால் அவர் மத வெறியன் என்று அழைக்கப்படுகிறார்.

விஞ்ஞான அறிவைக் கொண்டிருக்காத ஆனால் தனது சொந்த கருத்துக்களை விஞ்ஞான அறிவு என பிரசாரம் செய்து முஸ்லிம்களை ஏமாற்றுவதற்கு அவர்களின் மார்க்கத்தையும் நம்பிக்கையையும் குறைமதிப்பிற்கு உட்படுத்து வதற்கும் தன்னை அறிமுகப்படுத்தும் இஸ்லாத்தின் எதிரியும் ஒரு போலி விஞ்ஞானி(சிந்தீக்) என்று அழைக்கப்படுவார். இந்த இரண்டு வகையான வர்களையும் மக்கள் நம்பிக்கை வைக்க கூடாது. நிர்ப்பந்தத்தின் கீழ் (இக்ராஹ்) (அது கட்டாயமான நிர்ப்பந்தம்) என்றால் பாசாங்கு செய்வது அனுமதிக்கப் பட்டுள்ளது. இக்ராஹ் என்பது ஒருவர் ஒரு செயலை செய்வதற்கு விருப்பம் இல்லாதபோது நிர்ப்பந்ததின் கீழ் செய்வது. கொள்ளப்படும் அல்லது உடம்பின் உறுப்புகள் வெட்டப்படும், அச்சுறுத்தல்களை ஒருவர் எதிர்கொண்டால் அது “இக்ராஹ் முல்ஜி’ என்று அழைக்கப்படுகிறது. [மோசடியாளர்களால் நிகழ்த்த ப்படும் வன்முறை மற்றும் அரசாங்கத்தால் விதிக்கப்படும் அடக்குமுறை வேதனை முதலியன இக்ராஹ் முல்ஜியின் நிகழ்வுகளுக்கு உதாரணம். அத்தகைய சந்தர்ப்பங்களில் அவசியமாகிறது]. இதில் சிறையில் அடைத்தல் அல்லது அடிப்பது போன்ற அச்சுறுத்தல்கள் லேசான வற்புறுத்தல் என்று அழைக்கப்படுகின்றன. லேசான வற்புறுத்தல் சந்தர்ப்பங்களில் பாசாங்கு செய்வதை அனுமதிக்கப்படவில்லை. இக்ஹ்லாஸ் என்பது பாசாங்குத் தனத்திற்கு எதிரானது, அதாவது எந்தவொரு உலகாயுத நிலைகளை கவனத்தில் எடுக்காமல் அல்லாஹு த ஆலாவை மகிழ்விக்கும் நோக்கத்தில் மட்டுமே வணக்க வழிபாட்டுச் செயல்களை செய்ய வேண்டும். இக்லாஸ் உள்ள ஒருவர் தன் வணக்கங்களை மற்றவர்களுக்கு காண்பிப்பதை ஒருபோதும் நினைப்பதில்லை. மற்றவர்கள் ஒருவர் செய்யும் செயல்களை பார்க்கிறார்கள் என்பதாற்காக அவர் இக்லாஸிலிருந்து விலகமட்டார். ‘ரசூலுள்ளாஹு ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்’ அவர்கள் கூறினார்கள்: **நீங்கள் அல்லாஹு தஆலாவை பார்ப்பதுபோல் வணங்குங்கள் நீங்கள் அவனை பார்க்கவில்லை என்றாலும் அவன் உங்களைப் பார்க்கின்றான்.”**

மற்றவர்களின் அன்பையும் புகழையும் பெறுவதற்காக அவர்களின் உலக விவகாரங்களில் உதவுதல் முனாபிக்தனமாகும். இதன் மூலம் செய்யப்படும் வணக்கங்கள் இதைவிட மோசமானது. அல்லாஹு தஆலாவின் பொருத்தத்தை நினைத்துப் பார்க்காமல் செய்யப்படும் பாசாங்குத்தனம் எல்லாவற்றிலும் மோசமானது. ஒருவர் உலக விவகாரங்களுக்காக அல்லாஹு தாலிடம் உதவி

கேட்பதற்காக வணக்க வழிபாடுகளைச் செய்வது முனாபிக்தனம் இல்லை. எடுத்துக்காட்டாக, மழை வேண்டி தொழுது பிரார்த்திப்பது, அல்லது அல்லாஹுு தாலிடமிருந்து வழிகாட்டுதலைத் தேடும் நோக்கத்திற்காக இஸ்திஹாரா தொழுவது பாசாங்குத்தனமான செயல் அல்ல.

சில அறிஞுர்கள் பின்வரும் செயல்கள் பாசாங்குத்தனத்தை உருவாக்காது என்று கூறியுள்ளனர். ஒரு இமாமாக, வழிகாட்டியாக, அல்லது ஆசிரியராக இருப்பதற்கு, அல்லது உலக கஷ்டங்கள், நோய்கள் ஏழ்மை என்பற்றிலிருந்து நிவாரணம் அடைவதற்காக குர்ஆனின் ஆயத்களை ஓதுவது போன்ற வற்றுக்காக சம்பளம் வாங்குவது என்பன. இந்த செயல்களின் வழிபாடுகள் மற்றும் உலக நன்மைகள் ஆகிய இரு நோக்கங்களும் உள்ளன. பொருளாதார அல்லது வணிக நோக்கங்களுக்காக **ஹஜ்** யாத்திரைக்கு செல்வது பாசாங்குத்தனம் இல்லை இந்த செயல்களில் வணக்கங்களுக்கான நோக்கம் இல்லை என்றால் பாசாங்குத் தனமாகும். வணக்கத்திற்கான நோக்கம் மற்ற நோக்கங்களை விட அதிகமாக இருக்கும் என்றால் அதற்கான வெகுமதி கொடுக்கப்படும். மற்றவர்களுக்கு வணக்க வழிபாட்டை ஊக்குவிக்கவும் அல்லது அவர்களுக்கும் கற்பிக்கவும் நோக்கில் ஒருவரது வணக்கத்தை காண்பித்தால் அது பாசாங்குத்தனம் அல்ல. மாறாக, இது மிகவும் நல்லது ஒருவர் அவ்வாறு செய்வதற்கு அதிக தவாப் சம்பாதிப்பார். "ரமலான்" மாதம் நோன்பு பிடிப்பது பாசாங்குத்தனம் அல்ல. ஒருவர் தினசரி கடமையாக்கப்பட்ட தொழுகைகளை அல்லாஹ்வுக்காக தொழுவதற்கு ஆரம்பித்து பின்னர் பாசாங்குத் தனத்தில் மூழ்கிவிடுகிறார் என்றால் அந்த பாசாங்குத்தனம் அந்த நபருக்கு தீங்கு விளைவிக்காது. கடமையாக்கப்பட்ட ஐவேளை தொழுகையை பராக்குடன் செய்யப்படும் தொழுகைகளாக இருப்பினும் அவை ஏற்றுக்கொள்ளப்படும்(ஸஹீஹ்). அவரின் கடமை நிறைவேறிடும் ஆனால் அதற்கான தவாப் கிடைக்காது. ஒருவரின் உண்மையான நோக்கம் அவருக்கு இறைச்சியை பெறுவதற்காக இருந்தபோது அல்லாஹுுவின் பொருட்டு ஒரு மிருகத்தை அறுக்க அனுமதிக்கப்படவில்லை (ஜாயிஸ்). மேலும், இரண்டு நோக்கத்தையும் கொண்டும் மிருகத்தை அறுக்கவும் அனுமதியில்லை. அதாவது; அல்லாஹ்வுக்காகவும் மனிதனுக்காகவும். அல்லாஹுு தஆலாவுக்கு அல்லாமல், ஆனால் புனிதப் போரிலிருந்தோ அல்லது (ஹஜ்) யாத்திரை யிலிருந்தோ திரும்பும் நபர்களுக்காக அல்லது அல்லது ஒரு தலைவருக்கு அன்பான வரவேற்பு அளிப்பதற்காகவோ அறுக்கப்பட்ட மிருக இறைச்சி செத்த மிருகத்தை போன்றது. இவ்வித நோக்கங்களுக்காக மிருகங்களை அறுப்பது ஹராம் அந்த இறைச்சியை உண்பதும் ஹராம் ஆகும். தன்னுடைய வணக்கம் ஒரு பாசாங்கு மாதிரி ஆகிவிடும் என்ற பயம் காரணமாக வணக்கங்களை விடுவதற்கு அனுமதியில்லை. ஒரு மனிதன் அல்லாஹ்வுக்காக தொழுவதற்கு ஆரம்பித்து பின்னர் தொழுகை முழுவதும் உலகவிவகாரங்களில் மூழ்கிவிடும் தொழுகைகூட ஏற்றுக்கொள்ளப்படும்(ஸஹீஹ்). மக்களுக்கு மத்தியில் பேசப்பட்டு பொருளாகும் விதத்தில் ஆடை அணிவது பாசாங்கு ஆகும். மார்க்கவாதிகள் சுத்தமான மதிப்புமிக்க உடைகள் அணிய வேண்டும் ஏனெனில் மக்கள் தங்கள் தோற்றங்களைப் பார்க்கிறார்கள். இந்த காரணத்திற்காக, மதத் தலைவர்கள் (**இமாம்கள்**) விரும்பதத்தக்க விலைமதிப்புள்ள ஆடைகள் வெள்ளிக்கிழமைகளிலும் மத பெருநாட்கள் சமயத்திலும் (**ஈத்**) அணிவது **சுன்னத்** ஆகும். பிரபலம் அடையவேண்டும்

என்பதற்காக புத்தகங்களை எழுதுதல், மார்க்கத்தை போதித்தல், அல்லது மற்றவர்களுக்கு அறிவுரை வழங்குதல் என்பனவும் வேசமாகும்.

மார்க்கத்தை போதித்தல் என்பது நல்ல செயல்களை ஊக்குவித்தல் **(அம்ருள் ம'ரூப்**) மற்றும் இஸ்லாம் தடைசெய்யும் செயல்களிலிருந்து விலக்குதல் (**நகியில் முன்கர்**). வாதங்களை வெல்லும் நோக்கத்திற்காக, மற்றவர்களை விட தான் உயர்ந்தவர் என்று காண்பிப்பதற்காக, பெருமை பேசுவதற்காக கற்றுக் கொள்வதும் அறிவைப்பெறுவதும் முனாபிக் தனமாகும். உலக உடைமைகள் அல்லது பதவிகளை பெறுவதற்காக அறிவைப் படிப்பதும் பாசாங்குத் தனத்தையும் உருவாக்குகிறது. முனாபிக் தனம் தடைசெய்யப் பட்டுள்ளது (**ஹராம்**). அல்லாஹுதஆலாவின் பொருட்டு பெறப்படும் அறிவு அல்லாஹு தஆலாவின் மீது பயத்தை அதிகரிக்கிறது. இது ஒருவர் தன்னிலுள்ள குறைபாடுகளை அறியவும், செய்த்தானின் தீங்குகளை விட்டும் மோசடிகளை விட்டும் பாதுகாக்கப்படவும், காரணியாகின்றது. உலக சொத்து செல்வங்களை அல்லது பதவிகளை பெறுவதற்காக தங்கள் அறிவை ஒரு வாகனமாகப் பயன்படுத்தும் மார்க்கவாதிகள் பொல்லாத மார்க்கவாதிகள்(உலமா-இ-ஸூ) என்று அழைக்கப் படுகிறார்கள். அவர்கள் ஒதுங்கும் தலம் நரகமாகும். முனாபிக் தனத்துக்கு மற்றொரு உதாரணம், சுற்றி மக்கள் இருக்கும்போது சுன்னாக்களில் விவரமாக கவனம் செலுத்தி வணக்கங்கள் புரிவார்கள், ஆனால் தனிமையில் வணக்கங்கள் செய்யும்போது சுன்னாக்களை பொருட்படுத்தாமல் அவற்றைச் செய்வார்கள்.

வணக்கங்கள் மூலம் பெற்ற தவாபை வேறொருவருக்கு அந்த நபர் உயிருடன் இருந்தாலும் அல்லது இல்லாவிட்டாலும் என்பதைப் பொருட்படுத்தாமல் வழங்க அனுமதிக்கப்படுகின்றது. ஹனபி மத்ஹபில் ஹஜ், தொழுகை, நோன்பு சதகா குர்ஆன் ஓதுதல், ரசூலுல்லாஹ் வின் மீது மௌலித் ஓதுதல், திகிர் போற அமல்களை கொண்டு பெற்ற தவாபை வேறு ஒரு நபருக்கு வழங்க முடியும். ஆனால், இவற்றை பணத்திற்காக, கூலியை எதிர்பார்த்து அதற்காக கட்டண பேரம் பேசுவது அனுமதிக்கப்படவில்லை. ஆயினும்கூட, ஒருவர் இந்த வழிபாடுகளை அல்லாஹு தஆலாவுக்காக செய்து அதற்காக கொடுக்கப்படும் பரிசை ஏற்றுக்கொள்ள முடியும்(அனுமதிக்கத்தக்கது). மாலிகீ மற்றும் ஷாஃபி மத்ஹப்களின்படி ஒருவரின் சொத்துகளின் மூலம் செய்யப்படும் வணக்க செயல்களின் உணவளித்தல், தருமம் செய்தல், சக்காத்[1] மற்றும் ஹஜ் காரணமாக சம்பாதிக்கப்பட்ட தவாப்களும் இன்னொருவருக்கு பரிசாக வழங்கப்படலாம். இருந்த போதிலும், உடலின் செயல்களின் மூலம் செய்த வணக்கங்களுக்குரிய தவாபை இன்னொருவருக்கு பரிசளிப்பதற்கு அனுமதி யில்லை. ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹுஅலைஹி வசல்லம்' அவர்கள் ஒரு ஹதீத் ஷரீபில் இவ்வாறு கூறுகிறார்கள்: **"ஒரு நபர் ஒரு மயானத்தின் பக்கம் நடந்து சென்றால் (அல்லது வாகனம் ஓட்டினால் அல்லது சவாரி செய்தால்) சூரா இக்ஹ்லாஸை பதினொரு முறை ஓதி அதன் தவாபை கபுரிகளில் இருக்கும் மக்களுக்கு (ஆத்மாக்களுக்கு) பரிசளிக்கவும். அந்த தவாப் ஆனது அம்மையானத்தில் அடங்கியுள்ள அத்தனை ஆத்மாக்களின் எண்ணிக்கை யால் பெருக்கப்பட்டு அதன் நன்மையை அல்லாஹ் கொடுப்பான்."**

---

[1] ஜகாத் என்றால் கட்டாய தர்மம் கொடுப்பது என்று பொருள். விரிவான தகவலுக்கு, தயவுசெய்துமுடிவற்ற பேரின்பத்தின்(Endless Bliss) ஐந்தாவது பாசிக்கலின் முதல் அத்தியாயத்தைக் பார்க்க

"ஹனஃபி மதுஹபில் உள்ள நபர் தவாபை பரிசளிக்கவேண்டும், மேலும் மாலிகீ அல்லது ஷாஃபியி மதுகபில் உள்ளவர் இறந்தவர்கள் மீது துஆ செய்து அவர்களுடைய பாவங்களை மன்னிக்கும்படி அல்லாஹ்விடம் மன்றாட வேண்டும்.

வனக்கங்கள் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் (ஸஹிஹ்) என்பதற்காக அவை அல்லாஹுு தஆலாவுக்காக என்ற நிய்யத்துடன் செய்யப்பட வேண்டும். நிய்யத் இதயத்தினால் செய்யப்படுகிறது. ஒரு வாயினால் உச்சரிப்புடன் மட்டுமே செய்யப்படும் நிய்யத் ஏற்றுக்கொள்ளத்தக்கது அல்ல. சில அறிஞர்களின் கூற்றுப்படி, வாயினாலும் இதயத்தினாலும் ஒரே நேரத்தில் செய்யப்படும் நிய்யத் அனுமதிக்கப்படுகிறது.

இதயத்தில் உள்ள நிய்யத்து வாயினால் சொல்லப்படுவதிலிருந்து வேறுபட்டால் இதயத்தில் உள்ள நிய்யத்து செல்லுபடியாகும். இந்த விதிக்கு ஒரே விதிவிலக்கு சத்தியப்பிரமாணம் செய்வதற்கான வழக்கம். வாய்வழி உச்சரிப்பு அல்லது வாயிலிருந்து வரும் சொல் சத்தியபிரமாணத்திற்கு செல்லுபடியாகும். மீண்டும் மீண்டும் வாயினால் சொல்வதன் மூலம் நிய்யத்து செய்ய முடியும் என்பதற்கு ஹதீதில் அல்லது எந்த எந்த தகவலும் இல்லை. நான்கு மதுஹப்களின் தலைவர்கள் (இமாம்) யாரும் அப்படி சொல்லவில்லை. ஒருவர் என்ன வழிபாட்டை செய்ய விரும்புகிறார் என்பதை இதயத்தின் மூலம் நினைவில் வைப்பது மட்டுமல்ல அதன் உண்மையான அர்த்தம் அந்த வழிபாட்டை அல்லாஹ்வுக்காக செய்ய வேண்டும் என்ற ஆசை, விருப்பம். ஒருவரின் நிய்யத்து அவர் அந்த வணக்கத்தை தொடங்கும்போது உருவாகிறது. உதாரணமாக, ஒருவர் உண்மையில் வணக்கம் செய்வதற்கு ஒரு நாளைக்கு முன் விரும்பினால் அத்தகைய நோக்கம் நிய்யத்தாக ஏற்கப்படமாட்டாது. அது ஒரு ஆசை அல்லது வாக்குறுதி என்று அழைக்கப்படும், அது ஒரு நிய்யத் அல்ல. ஹனஃபி மத்ஹபில், நோன்பின் நிய்யதுக்கான நேரம் முந்தைய நாளின் சூரிய அஸ்தமனத்துடன் தொடங்கி நோன்பின் (தஹ்வா இ குப்ரா) வரை நீடிக்கும். நோன்பு நாளின் ( "தஹ்வா-இ குப்ரா" நேரம் மதியத்திற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்).

சில நேரங்களில் பாவம் செய்யாமல் மற்றவர்களைக் காப்பாற்றுவதற்காக "முபாவுடைய செயலை செய்யாது இருப்பது "(ஷரீஅத்த்தில் கட்டளையிடப் படவோ தடைசெய்யப் படவோ இல்லாத செயல்) ஒரு சிறந்த செயல். இந்த விதி **சுன்னத்** மற்றும் **முஸ்தஹப்** ஆன செயல்களுக்கு பொருந்தாது. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், மற்றவர்களை பாவம் செய்வதிலிருந்து காப்பாற்றுவதன் பொருட்டு சுன்னத் அல்லது முஸ்தஹாப்களின் செயல்களை தவிர்ப்பது அனுமதிக்கப்படவில்லை. எடுத்துக்காட்டாக, மிஸ்வாக் பாவிப்பதை நிறுத்துவது, தலைப்பாகை அணிவதை நிறுத்துவது தலையை மறைக்காமல் வெளிய்யேறிச்செல்வது, மற்றவர்கள் புறம் பேசுவார்கள் (பாவமான காரியம்) என்றபோதிலும் கழுதை சவாரி செய்வது. "மிஸ்வாக்" என்பது ஒரு "மிஸ்வாக்", ஆலிவ் அல்லது மல்பெரி மரத்தின் வேர். இது வலது கையின் அளவு(ஆகக்கூடிய நீளம்) நீளமானதும் ஒரு விரலின் அளவு தடிப்பமானது. பெண்களுக்கு மிஸ்வாக்குக்கு பதிலாக மெல்லும்பசை அனுமதிக்கப்பட்டுள்ளது(**ஜாயிஸ்**). மிஸ்வாக்கு கிடைக்கப்பெறாத இடத்து தனது கட்டை விரலையும் முதல்

விரலையும் பற்களில் தேய்க்க வேண்டும். பிஷ்ருல்ஹாபி ரஹீமஹுுள்ளாஹுு தஆலா அவர்கள் தலைப்பாகை அணியாமல் நடமாடி உள்ளார்கள்.

ஒரு நபர் ஒரு பாவத்தைச் செய்ய கூடிய நிலையில் அதை செய்யாமல் இருப்பதற்கு ஒன்று அவர் அவரது இதயத்தில் அல்லாஹுு தலாவைப் பற்றிய பயம் காரணமாகவோ அல்லது அவர் மற்றவர்களை வெட்கப்படுவார் என்ற பயம் அல்லது அது கெட்டதற்கு முன்னுதாரனமாகி விடும் என்ற பயம் காரணமாக இருக்கும். எடுத்துக்காட்டாக, அவர் அதைச் செய்தால், மற்றவர்களும் அதைச் செய்யத் தொடங்கலாம். அல்லாஹுுவின் பயம் காரணமாக ஒருவர் பாவம் செய்யவில்லை என்பதன் அடையாளம் அவர் தனிமையில் இருக்கும்போது மற்றவர்கள் பார்க்காத நிலையில் அந்த பாவச்செயலை செய்யாமல் இருப்பதாகும். வெட்கம் (**ஹயா**) என்பதன் பொருள் ஒருவர் தன்னை பற்றி மக்கள் தவறாகப் பேசுவதைப் பற்றி பயப்படுவதாகும், உதாரணத்திற்கு, ஒருவர் அந்த பாவத்தை செய்தால் மக்கள் அவரைப் பற்றி வெறுக்கத்தக்க வகையில் பேசுவார்கள். இது மற்றவர்கள் அவருடைய பாவத்தைவிட மிகப்பெரிய பாவத்தை செய்ய காரணமாகிறது. மற்றவர்களின் செய்யும் அந்த பாவம் அந்த பாவத்தை செய்ய தூண்டியவர் பேரில் கியாம நாள் வரை இவருக்காக ஒதுக்கப்பட்ட புத்தகத்தில் பதிவு செய்யப்படும். ஒரு ஹதீத்தில் கூறப்பட்டுள்ளது, **“ஒரு நபர் தனது பாவத்தை இவ்வுலகில் மறைக்கிறார் என்றால் அல்லாஹுு த ஆலாவும் அவருடைய அந்த பாவத்தை ஒன்று சேர்க்கும் கியாம நாளில் மற்றவர்களுக்கு தெரியாமல் மறைப்பான்.** இந்த ஹதீதின் அர்த்தம் தான் பாவம் செய்யாத பேணுதல் உள்ளவன் (**வரா**) என்று மக்களுக்கு தன்னை அறிமுகப்படுத்து வதற்காக தனது பாவத்தை மறைக்கும், ஆனால், தனிமை யாக இருக்கும்போது அந்த பாவத்தை செய்யும் ஒரு நபரை உள்ளடக்கவில்லை. இது முனாபிக் தனத்தை குறிக்கும். நீங்கள் வணக்கம் புரியும்போது மற்றவர்கள் உங்களைப் பார்த்தால் வெட்கப்படுவதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை. வெட்கம் என்றால் ஒருவரின் பாவங்களையும் தவறு களையும் மற்றவர்களுக்கு காட்டக்கூடாது.

அந்த விஷயத்தில், இஸ்லாத்தைப் பிரசாரம் செய்யவும், நல்ல செயல்களைச் செய்ய மற்றவர்களை ஊக்குவிக்கவும், (அம்ரி-மஃருப்) மற்றும் தவறான செயல்களில் இருந்து அவர்களைத் தடுக்கவும், (நஹி-இல்-முன்கர்), [இஸ்லாத்தை கற்பிக்கும் புத்தகங்களை எழுத அல்லது விற்க,(இல்ம் அல்-ஹால் புத்தகங்கள்)], ஒரு இமாம் அல்லது ஒரு முஅஸ்ஸினாக சேவை செய்வதற்கு, புனித குர்ஆனை பராயணம் செய்வதற்கு அல்லது மௌலித் ஓதுவதற்கு வெட்கப்படுவதற்கு அனுமதிக்கப் படவில்லை. ஹதீதில் கூறப்பட்டுள்ள “ஹயா” என்பதன் பொருள் **“ஹயா என்பது ஈமானின் ஒரு பகுதி”** என்பது மற்றவர்கள் முன்னிலையில் பொல்லாத செயல்களையும் பாவங்களையும் செய்வதை யிட்டு வெட்கப்படவேண்டும். ஒரு விசுவாசி (**முஃமின்**) முதலில் அல்லாஹ்விடம் வெட்கப்பட வேண்டும். எனவே, அவர் தனது வணக்க வழிபாடுகளை தவறாமல் மற்றும் நேர்மையுடன் செய்ய வேண்டும்.

ஒருமுறை புகாரா நகரத்தின் [மத்திய ஆசியாவில் உள்ள ஒரு நகரம்] அறிஞர்களில் ஒருவர் புகாரா ஆட்சியாளரின் (சுல்தான்) குழந்தைகள் தெருவில் விரும்பத்தகாத விளையாட்டை விளையாடுவதை பார்த்தார். அவர் அவரது ஊழியர்களுடன் சேர்ந்து அச்சிறுவர்களை அடித்தார். குழந்தைகள் ஓடிவந்து

இதை தகப்பனிடம் கூறினர். அவர்களின் தந்தை ஆட்சியாளர் அறிஞரை தனது முன்னிலையில் அழைத்து கேட்டார் "ஆட்சியாளரை எதிர்க்கும் எவரும் சிறையில் அடைக்கப்படுவார் என்று அவருக்குத் தெரியாதா" என்று கேட்டார். அதற்கு அவ்வறிஞர் கேட்டார் ரஹ்மான் அல்லாஹ்வை எதிர்க்கும் எவரும் நரகம் புகுவார் என்று தெரியாதா என்று பதிலளித்தார். ஆட்சியாளர் அவரிடம் 'அம்ரிள் மஃ'ருப் செய்வதற்கான அதிகாரம் எவ்வாறு கிடைத்தது என்று கேட்டார். அதற்கு அறிஞர் ஆட்சியாளரை யார் நியமித்தவர் என்று கேட்டார். அதற்கு கலீஃபா தன்னை நியமித்ததாக ஆட்சியாளர் பதிலளித்தார். அதற்கு அறிஞர் கலீஃபாவின் இறைவன் அவருக்கு 'அம்ரிள் மஃ'ருப் இன் கடமையை செய்ய தன்னை நியமித்ததாக பதிலளித்தார். அதற்கு அதிபதி புகார நகரத்தில் 'அம்ரிள் மஃ'ருப் செய்வதற்கான அதிகாரத்தை அவர் அவருக்கு வழங்ககுவதாக அவரிடம் சொன்னார். அதற்கு அறிஞர் அப்படியாயின் அந்த கடமையில் இருந்து ராஜினாமா செய்வதாக ஆட்சியாளர் அவரிடம் கூறினார். அவர் அப்பதவியை நிராகரித்ததைக் கண்டு ஆச்சரியப்பட்ட ஆட்சியாளர் அவரிடம், "முதலில் நீங்கள் அனுமதியின்றி 'அம்ரிள் மஃ'ருப் செய்தது என்று கூறுகிறீர்கள். நான் உங்களுக்கு அவ்வாறு செய்ய அனுமதி கொடுக்கும் போது இந்த நேரத்தில் நீங்கள் அதை விட்டு நிராகரிப்பது இது என்ன மாதிரியான வியாபாரம்? " என்று ஆட்சியாளர் கேட்டார். அறிஞர், "நீங்கள் இப்போது அனுமதி கொடுக்கலாம், ஆனால் பின்னர் எனது பயன்பாடுகளை நீங்கள் விரும்பாத போது அந்த அனுமதியை மீண்டும் எடுப்பீர்கள். ஆனால், என் இறைவன் எனக்குக்கு 'அம்ரில் மஃ'ருப் செய்ய வேண்டிய கடமையை கொடுக்கும் போது அந்த அதிகாரத்தை யாரும் பறிக்க முடியாது."என்று கூறினார். ஆட்சியாளர் அவரது பதிலில் மகிழ்ச்சி அடைந்து நீங்கள் என்ன விரும்பினாலும் வழங்கப்படுவீர்கள் என்று கூறினார். அறிஞர் அதற்கு அவரது இளமையை திரும்பப் பெற விரும்புவதாக சொன்னார். அதை செய்ய அவரால் முடியாது என்று ஆட்சியாளர் சொன்னார். அறிஞர் அவரிடம் நரகத்திற்கு பொறுப்பான மலக்குகளுக்கு தலைவரான மாலிக்குக்கு அவர் அவரை நரகத்தில் வைக்கக்கூடாது என்று ஒரு உத்தரவை எழுத வேண்டும் என்று கூறினார். அதற்கு ஆட்சியாளர்; அந்த விருப்பத்தை நிறைவேற்ற முடியவில்லை என்று பதிலளித்தார். அந்த அறிஞர் அதற்கு ஒரு "சுல்தான்" இருக்கிறார், அவர் விரும்பியதை அவர் கொடுப்பார், அவர் இதுவரை கேட்ட எதையும் "என்னால் முடியாது" என்று ஒருபோதும் சொல்லவில்லை என்று கூறினார். இதைக்கேட்ட ஆட்சியாளர் அவரது பிரார்த்தனைகளில் தன்னையும் சேர்க்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு அவரை அனுப்பி வைத்தார்.

பின்வரும் ஹதீத்-ஷரீபில் தெரிவிக்கப்படுகிறது : **"யார் பிறர் முன்னிலையில் அவர்களது தொழுகையை பகட்டுக்காக அழகாக செய்வார்கள் ஆனால் அவர்கள் தனியாக இருக்கும்போது அவ்வாறு செய்வதில்லை எனின் அவர்கள் அல்லாஹு தஆலாவை அவமதிக்கிறார்கள்"** மற்றும் "**நான் மிகவும் பயப்படுவது என்ன வென்றால் நீங்கள் 'ஷிர்க் அல்-அஸ்கரி', க்குள் வீழ்ந்து விடக்கூடும். அதாவது சிறிய ஷிர்குக்குள் மாறக்கூடும். சிறிய ஷிர்க் என்பது ரியா. இவ்வுலகில் " ரியா"வுடன் வணக்கங்களை புரிபவர் களை பார்த்து அல்லாஹ் மறுமையில் கியாமத்தில் ஒன்றுகூட்டும் நாளில் கூறுவான் ஓ! துஸ்டர்களே, உங்களுக்கு இன்று எந்த ஒரு வெகுமதியும் இல்லை நீங்கள் பகட்டுக்காக யாருக்காக துன்யாவில் யாருக்காக வணக்கம் செய்தீர்களோ திரும்பிச் சென்று அவர்களிடமிருந்து**

**வெகுமதியைக் கேளுங்கள் என்று கூறப்படும்."** "அல்லாஹு த'ஆலா கூறுகிறான்: **எனக்கு எந்த பங்காளியும் "ஷாரிக்" இல்லை'. யார் எனக்கு ஒரு துணையை சேர்த்தார்களோ அவர்கள் அவர்களுக்குரிய நன்மையை அவரிடமிருந்து பெற வேண்டும் என கூறுவான். ஆதலால் உங்களுடைய வணக்கங்களை நேர்மையுடன் செய்யுங்கள்! அல்லாஹு தஆலா நேர்மையுடன் செய்யப்படும் வணக்கங்களை ஏற்றுக்கொள்கிறான்**."

வணக்கத்தின் நோக்கம் அல்லாஹு தஆலாவின் பொருத்தத்தை பெறுவது. எந்த வழிபாடாவது ஒருவரின் தயவை அல்லது அன்பைப் பெறுவதற்காக செய்யப்படுகிறது என்றால் அந்த நபரை வணகுவதற்கு அர்த்தமாகும். எங்களுக்கு அல்லாஹு தஆலாவை மட்டுமே வணங்குமாறு கட்டளையிடப் பட்டுள்ளது. ஒரு ஹதீத் தெரிவிக்கின்றது; **"அல்லாஹ்வை ஒருவன் என்பதை ஏற்றுக்கொண்டு அவனை நேர்மையுடன் வணங்கி, சக்காத்து கொடுத்து நோன்பு வைக்கின்றவருடன் அல்லாஹ் திருப்தியடைகின்றான்."**

'ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்கள் முஆஸ் பின் ஜபல் 'றலியள்ளஹு தஆலா'வை' அழைத்து அவரை யேமனுக்கு ஆளுநராக அனுப்புவதற்கு முன்பு கூறினார்கள்; **"உங்கள் வணக்கங்களை நேர்மையுடன் செய்யுங்கள், நேர்மையுடன் செய்யப்படும் வணக்கம் அது அளவு அதிகமாக இல்லாவிட்டாலும், ஒன்று கூட்டப்படும் கியாமத்' நாளில் அது உங்களுக்கு போதுமானதாக இருக்கும்."** மற்றும் **"தங்கள் வழிபாடுகளை நேர்மையுடன் செய்யும் அவர்களுக்கு வாழ்த்துக்கள். அவர்கள் வழிகாட்டும்(ஹிதாயத்) நட்சத்திரங்கள். அவை பித்னாக்களினால் தூண்டப்படும் இருளை அழிக்கின்றன"** மற்றும் **ஷரிஅத்தில் தடை செய்யப் பட்ட உலக விஷயங்கள் சபிக்கப்பட்டவை. அல்லாஹு தஆலாவுக்காக செய்யப்படுபவை மட்டுமே மதிப்புமிக்கவை"**. உலக உடைமைகள் தற்காலியமானவை அவற்றின் ஆயுட்காலம் மிகக் குறைவு. ஒருவரின் நம்பிக்கையை (ஈமானை) தியாகம் செய்து அவற்றைப் பெற முயற்சிப்பது முட்டாள்தனம். எல்லா ஆண்களும் திறமையற்றவர்கள்(ஆஜிஸ்). அல்லாஹு நாடா விட்டால் யாரும் யாருக்கும் உதவியும் செய்யவோ அல்லது தீங்கு விளைவிக்கவோ முடியாது. அல்லாஹுதஆலா மனிதனுக்கு போதுமானவன்.

ஒருவருக்கு அல்லாஹு தலாவின் பயமும் (**கஹவ்ஃப்**) அவன் கருணையில் நம்பிக்கையும் இருக்க வேண்டும். அவரது கருணையின் மேல் நம்பிக்கை(**ரஜா**) பயத்தை விட அதிகமாக இருக்க வேண்டும். இவ்விதமான சரியான விதத்தில் நம்பிக்கையை கொண்டிருக்கும் எவரும் தனது வணக்கங்களில் மிகுந்த மகிழ்ச்சியை அடைவார்.

சில அறிஞர்கள் கூறுகிறார்கள் இளைஞர்களிடம் எதிர்பார்ப்பை விட பயம் அதிகளவு இருக்க வேண்டும் மற்றும் பெரியவர்களுக்கு பயத்தை விட அதிக நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் இருக்க வேண்டும் என்று கூறுகிறார்கள். ஆரோக்கியமற்ற மக்களுக்கு அதிக நம்பிக்கையும் எதிர்பார்ப்பும் (ரஜா) இருக்க வேண்டும். ஒன்று இல்லாமல் மற்றது இருப்பது அனுமதிக்கப்பட வில்லை அதாவது, பயம் இல்லாமல் நம்பிக்கை வைப்பது அல்லது நம்பிக்கை இல்லாமல் பயம் இருப்பது அனுமதிக்கப் படவில்லை. முந்தியது உறுதியானது, பிந்தையது ஒருவரின் நம்பிக்கையை இழப்பதாகும்.

ஒரு ஹதீத் அல்-குத்ஸியில், அல்லாஹு தஆலா அவனுடைய ஹபீப் நபி முஹம்மது 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களுக்கு அறிவிக்கின்றான்; **"என் அடிமை என்னை எதிர்பார்க்கும் விதத்தில் நான் சந்திப்பேன்"** மேலும், குர்ஆனின் சூரா (zசுமர்) இன் ஐம்பத்து மூன்றாவது ஆயத்தில் **"அல்லாஹ் தன் அடிமைகளின் அனைத்து பாவங்களையும் மன்னிக்கிறான். அவன்தான் மன்னிப்பவனும், இரக்கமுள்ளவனும்**. " இந்த அறிவுப்புகள் அல்லாஹுவின் கருணையின்மீது நம்பிக்கை பயத்தை விட அதிகமாக இருக்க வேண்டும் என நமக்கு சொல்கின்றன. . மறுபுறம், ஹதீதில் **"அல்லாஹு தஆலாஹ்வுக்கு பயந்து யார் அழுகிறார்களோ அவர்கள் நரகத்திற்குச் செல்ல மாட்டார்கள்."** மற்றும் "**எனக்குத் தெரிந்ததை நீங்கள் அறிந்திருந்தால், நீங்கள் அழுததை விட குறைவாக சிரிப்பீர்கள்**" இது நம்பிக்கையை விட பயம் அதிகமாக இருக்க வேண்டும் என்பதை எங்களுக்குத் தெரிவிக்கின்றது.

## 10– உலக இலட்சியங்கள் (தூலில் அமல்)

இதயத்தின் நோய்களில் பத்தாவது ஒன்று உலக இலட்சியங்கள்(தூலில் அமல்). இதயத்தில் இந்த நோய் உள்ள ஒருவர் உலகில் எல்லா இன்பங்களையும், மகிழ்ச்சியையும் அனுபவிப்பதற்கு ஒரு நீண்ட வாழ்க்கையை விரும்புகிறார். வணக்க வழிபாடுகளை செய்யும் நோக்கத்திற்காக நீண்ட ஆயுளை விரும்புவது உலக இலட்சியமாக கருதப்படுவதில்லை. உலக லட்சியங்கள் கொண்டவர்கள் தங்கள் வழிபாடுகளை அதற்காக நிர்ணயிக்கப்பட்ட நேரத்தில் செய்யமாட்டார்கள். அதற்காக தவ்பாவும்[1] செய்ய மாட்டார்கள். அவர்களின் இதயங்கள் கனிந்து இடம் கொடுக்காதவை. அவர்களுக்கு மரணம் நினைவில் இல்லை. உபதேசங்கள் மற்றும் ஆலோசனைகள் அவர்கள் மீது எந்த தாக்கத்தையும் ஏற்படுத்தாது. பின்வரும் ஹதீத் ஷரீப் தெரிவிக்கின்றது: **"இன்பங்களுக்கு ஒரு முடிவு வைக்கும் விஷயங்களை அடிக்கடி நினைவில் வையுங்கள்" மற்றும் "மரணத்திற்குப் பிறகு வாழ்க்கையின் நிகழ்வுகள் பற்றி உங்களுக்குத் தெரிந்ததை விலங்குகள் அறிந்திருந்தால் நன்கு உண்டு வளர்ந்த மிருகங்களை பெற்றுக்கொள்ள மாட்டீர்கள்".**மற்றும் **"மரணத்தை பகல் இரவு தொடர்ந்து நினைக்கும் எவரும் கியாமத் துடைய நாளில் தியாகிகளுடன் ஒன்று சேர்க்கப்படு வார்கள்."** உலக லட்சியங்களைக் கொண்ட ஒரு நபர் **(துலில் அமல்)** உலக செல்வங்களையும் பதவிகளையும் எவ்வாறு பெறுவது என்று எப்போதும் நினைத்து அவற்றைப் பெறுவதர்காக அவரது வாழ்க்கையை வீணாக்குகிறார். அவர் உலக இன்பங்கள் மற்றும் விளையாட்டுகளுடன் தன்னை ஈடுபடுத்தி அடுத்த உலகத்தைப் பற்றி மறந்து விடுகிறார். ஒருவரின் குடும்ப உறுப்பினர்களை ஒரு வருட காலத்திற்கு பராமரிப்பதற்கு தேவையான உணவுப் பொருட்களைப் பெற போதுமான பணம் சம்பாதிக்கப் பாடுபடுகிறது

---

[1] தவ்பாவை செய்வது என்பது உங்கள் பாவத்திற்காக மனந்திரும்புவது , மீண்டும் பாவம் வேண்டாம் என்று உறுதி எடுத்தலுடன் மன்னிப்புக்காக அல்லாஹுவிடம் கெஞ்சி மன்னிப்பு கேட்பது. பாவம் மன்னிப்புக்காக தவ்பாவின் பரிந்துரைக்கப்பட்ட முறை ஒன்று இல்லை என்றாலும் இஸ்லாமிய அறிஞர்கள் சில பிரார்த்தனைகளை பரிந்துரைக் கின்றனர் அவை பாவமன்னிப்பு மற்றும் உலக பேரழிவுகளுக்கு எதிரான பாதுகாப்பாக மற்றும் துரதிர்ஷ்டங்கள் போன்றவற்றுக்கு போதுமானவை என கூறுகின்றனர். அப் பிரார்த்தனை: "**அஸ்தக்ஃபிருள்ளாஹல் அளீம் அல் லாஇலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கையும் வ அத்தூபு இலைஹி**"

நூலில் அமல் என்று கருதப்படவில்லை. இந்த ஒரு வருட உணவு "**ஹவாயிஜ்-அஸ்லியா**" என்று அழைக்கப்படுவதுடன் வாழ்க்கைக்கு தேவையான விஷயங்களாக இது கருதப்படுகிறது. எனவே இது கட்டாய சக்காத்துக்கான "நிசாப்" கணக்கீட்டில் இது சேர்க்கப்படவில்லை. இந்த அளவு பணம் மட்டுமே வைத்திருப்பவர் பணக்காரராக கருதப்படவில்லை. ஒரு தனிப்பட விவாகம் செய்யாத மனிதர் இந்த அளவுக்கு பணம் இல்லை என்றால் 40 நாட்கள் உணவுப் பொருட்களை சேமிக்கலாம். இந்த தொகையை விட அதிகமாக சேமிப்பதால் அவர் அல்லாஹ் மீது நம்பிக்கையை (**தவக்குல்**) இழக்க நேரிடும்.

பின்வரும் ஹதீத் ஷரீப்கள் தெரிவிக்கின்றன . **"நீண்ட ஆயுளை பெற்று நற்செயல்களைச் செய்பவர் மனிதர்களில் மிகச் சிறந்தவர்"** மற்றும் **"மனிதர்களில் நீண்ட ஆயுளை பெற்றுக்கொண்டு தீய செயல்களைச் செய்கிறவர் மிக மோசமானவர்"** மற்றும் **"மரணிப்பதை விரும்புவது அல்லது மரணிக்க கேட்கவோ வேண்டாம், கபுரின் தண்டனைகள் மிகவும் கடுமையானவை. நீண்ட வாழ்க்கை ஆயுளைப்பெற்று அதை இஸ்லாத்தின் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிவதில் செலவழிப்பது ஒரு பெரிய அதிர்ஷ்டம்."** மற்றும் "**ஒரு மனிதனின் முடி அதன் உரிமையாளர் இஸ்லாத்தில் வாழ்ந்து வயது செல்லும்போது அது வெள்ளை நிறமாக மாறும். அது அவருக்கு ஒன்று கூட்டப்பட்டு கியாமத்து நாளில் ஒளியாக இருக்கும்".**

உலக லட்சியங்களுக்கான காரணங்கள் உலக இன்பங்களை விரும்புதல் அதன்மீது பற்றுவைத்தல் மற்றும் மரண சிந்தனையை கைவிடுதலும் இளைஞர்கள் ஆரோக்கியத்தில் ஒரு குறுகிய பார்வையுடனான நம்பிக்கை. ஒருவர் இந்த காரணங்களை இல்லாமலாக்கி உலக லட்சியங்களிலிருந்து விடுபட வேண்டும். மரணம் எந்த நேரத்திலும் வரக்கூடும். உங்கள் தேகாரோக்கியமோ அல்லது இளமையோ அதை நிறுத்தமுடியாது.

புள்ளிவிவரங்களின்படி, இளைஞர்களிடையே இறப்பு எண்ணிக்கை வயதானவர்களை விட அதிகம். பல நோய்வாய்ப்பட்ட மக்கள் குணமாகும் போது, பலர் ஆரோக்கியமாக இருப்பவர்கள் வெளிப்படையான காரணமின்றி நபர் திடீரென இறந்துவிடுகிறார்கள். இது அடிக்கடி நிகழ்வதை காண்கிறோம். ஒருவர் உலக அபிலாஷைகளைக் கொண்டிருப்பதன் பேரழிவு விளைவுகளைப் பற்றியும் மரணத்தை நினைவுகூருவதன் நன்மைகள் பற்றியும் அறிந்து கொள்வது அவசியம். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீதில் கூறுகிறார்கள்; **"மரணத்தை அடிக்கடி நினைவில் வையுங்கள்! மரணத்தை நினைவூட்டுவது பாவத்திலிருந்து உங்களைத் தடுப்பதுடன் மரணத்திற்குப் பின்னான வாழ்வுக்கு தீங்கு விளைவிக்கும் செயல்களைச் செய்வதிலிருந்து உங்களைத் தடுக்கின்றது."**

சஹாபாக்களில் ஒருவர் **பரா 'பின் ஆசிப் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு** அவர் கள் கூறுகிறார்கள், "நாங்கள் ஒரு இறந்த நபரின் உடலை மயானத்துக்கு எடுத்துச் சென்றோம். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் கபுருக்கருகில் அமர்ந்து அழத் தொடங்கி கண்ணீர் மண்ணில் விழத் தொடங்கியது. பின்னர் அவர்கள் கூறினார்கள் **"ஓ என் சகோதரர்களே! நீங்கள் அனைவரும் இதற்கு தயாராக இருக்க வேண்டும்".**

இது. " உமர் பின் அப்துல்அஸீஸ் 'ரஹிமஹுுள்ளாஹு', தஆலா அன்ஹு ஒரு அறிஞரை பார்த்தவுடன் அவரிடம் அறிவுரை கூறுமாறு கேட்டார்கள். அறிஞர் கூறினார். "நீங்கள் இப்போது கலீஃபா. எனவே, நீங்கள் மற்றவர்களுக்கு உத்தரவிடலாம், ஆனால் விரைவில் நீங்கள் இறந்துவிடுவீர்கள்! " கலீஃபா உமர் பின் அப்துல்அஸீஸ் அவர்கள் அவரிடம் மேலும் ஆலோசனை கேட்டார்கள். அப்போது அறிஞர், "எல்லாம் உங்கள் மூதாதையர்களில், முதல் மனிதர் மற்றும் தீர்க்கதரிசி, ஆதம் 'அலைஹிஸ்ஸலாம் மரணத்தை சுவைத்தார். இப்போது அது உங்கள் முறை. " கலீஃபா நீண்ட நேரம் அழுதார். பின்வரும் ஹதீத் ஷரீப் தெரிவிக்கின்றது; "**ஒரு மனிதகுலத்தின் வழி காட்டிக்கு மரணம் மட்டும் போதுமானதாக இருக்கும். யார் செல்வத்தை விரும்புகிறாரோ அவருக்கு களா, கத்ர் இல் நம்பிக்கை போதுமானது".** இன்னும் **"மனிதர்களிடையே மிக புத்திசாலியான ஒருவர் மரணத்தை அடிக்கடி நினைவு கூருபவர். மரணம் பெரும்பாலும் இந்த உலகில் கௌரவமாக இருக்கும், மேலும் மறுமையில் உயர்ந்த அந்தஸ்து இருக்கும்".**

மற்றும் **"ஒருவர் அல்லாஹுதலாவை பற்றி வெட்கப்பட வேண்டும். மற்றவர்களுக்காக பொருட்களை சேர்த்து வைப்பதில் ஒருவரின் நேரத்தை வீணாக்க கூடாது. ஒருவர் சாத்தியமில்லாத விஷயங்களைப் பெற பாடுபடக்கூடாது. ஒருவரின் தேவைகளுக்கு மேல் கூடுதல் கட்டிடங்கள் கட்டி வாழ்நாட்களை வீணாக்கக்கூடாது".** மற்றும் **"ஒருவர் ஹராமான வழியில் பெற்றுக்கொண்ட கட்டுமானப் பொருட்களைக் கொண்டு ஒருவரின் வீடு கட்டக்கூடாது". அவ்வாறு செய்வது என்பது உங்கள் (ஈமானையும்)நம்பிக்கையையும் உங்கள் உலக வாழ்க்கையையும் அழிக்கும்**."

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்கள் தனது அன்புக்குரிய தோழர் உசாமா பின் சயீத் 'ரலியள்ளாஹு த ஆலா அன்ஹு ' ஒரு அடிமையை ஒரு நூறு தங்ககாசுகளுக்கு முப்பது நாட்களுக்குப் பிறகு அதற்கு பணம் கொடுப்பதாக கூறி வாங்கினார் என்று கேள்விப்பட்டு **"அது உங்களுக்கு ஆச்சரியமாக இல்லையா? உஸாமா தூலில் அமல் மனிதராகிவிட்டார்**" என்று கூறினார்கள். ஒருவரின் வாழ்க்கை தேவைகளை கடனுக்கு வாங்குவது அனுமதிக்கப்பட்டுள்ளது.

மற்றொரு ஹதீத் ஷரீபில் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' **"சொர்க்கத்தில் நுழைய விரும்பும் எவருக்கும் உலக இலட்சியங்கள் வேண்டாம்." ஒருவரது உலக இலட்சியங்கள் அவரை தொழில்கள் மற்றும் வணிகங்களுடன் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு மரணத்தை மறந்துவிட வேண்டாம். ஹராமான செயல்களில் ஈடுபடும்போது அல்லாஹுதஆலா முன்னிலையில் அவர் வெட்கப்பட வேண்டும்".** ஒருவர் இஸ்லாத்தில் தடைசெய்யப்பட்டுள்ள இன்பங்களை அனுபவிக்கும் நோக்கத்துடன் நீண்ட ஆயுளை விரும்புவது தடை செய்யப்பட்டுள்ளது. இஸ்லாத்தில் தடை செய்யப்படாத உலக இலட்சியங்களை (துலில் அமல்) விரும்புவது கூட நல்ல அபிலாஷை அல்ல. ஒருவர் நீண்ட ஆயுளை வாழ ஆசைப்படக்கூடாது அதற்கு பதிலாக ஆரோக்கியமான மகிழ்ச்சியான வாழ்க்கையை விரும்ப வேண்டும்.

## 11 உலக இலட்சியங்களை அடைவதற்கு தடைசெய்யப்பட்ட வழிமுறைகளைப் பயன்படுத்துவது (தமா)

இதயத்தின் குறைபாடுகளில் பதினொன்றாவது "**தமா**' தடைசெய்யப்பட்ட வழிமுறைகளின் மூலம் உலக இன்பங்களை நிறைவேற்றுவது என்று அழைக்கப்படுகிறது. **"தமா**'வில் மிக மோசமானது மனிதர்களிடமிருந்து எதிர்பார்க்கிறது. நஃபிலான மேலதிக வணக்கங்களை செய்வது ஒருவருக்கு ஆணவத்தையும் பெருமையையும் ஏற்படுத்துமாயின் அது "தமா" வை சார்ந்தது. இதைப்போல் "முபாஹ்" வான செயல்களை செய்வதும் அது மறுமையை மறக்கடிக்க செய்யுமாயின் அது தமா வை ஏற்படுத்தும். தமாவுக்கு நேர்மாறானது "தஃப்வீஸ்" என்று அழைக்கப்படுகிறது. இது அனுமதிக்கப்பட்ட மற்றும் நன்மை பயக்கும் விஷயங்களைப் பெற முயற்சிப்பதும் அவற்றை அல்லாஹுு த ஆலா அனுமதிப்பான் என எதிர் பார்ப்பதும்.

ஷைத்தான் மனிதர்களுக்கு "முனாபிக் தனத்தை" நேர்மையானதாகவும் "தமாவை தப்வீஸ்" ஆகவும் காட்டி ஏமாற்ற முயற்சிக்கிறான். அல்லாஹுு த ஆலா ஒவ்வொரு மனித இதயத்தற்கும் ஒரு மலக்கை படைத்துள்ளான். அந்த மலக்கு இதயத்தில் (**இல்ஹாம்**) நற்சிந்தனைகளை ஏற்படுத்தும். மறுபுறம் ஷைத்தான் ஒரு நபருக்கு இதயத்தில் தீய எண்ணங்களை (**வஸ்வாஸா**) வலியுறுத்தும். ஹலாலான அனுமதிக்கப்பட்ட உணவுப் பொருட்களை உண்பவருக்கு நன்மையான மற்றும் தீய பரிந்துரைகளுக்கு இடையில் பாகுபாடு விளங்கும். மாறாக, தடைசெய்யப்பட்ட (ஹராம்) உணவுப் பொருட்களை உட்கொள்ளும் எவருக்கும் இரண்டையும் வேறுபடுத்திப் பார்க்க முடியாது. ஒரு நபரின் நஃப்ஸ்கூட தீய எண்ணங்கள், பரிந்துரைகள் அல்லது ஆசைகளை அவரிடம் வலியுறுத்துகிறது. இந்த எண்ணங்கள் அல்லது ஆசைகள் "**ஹவா**" என்று அழைக்கப்படுகின்றன. மனதில் தோண்றும் நல்லஎண்ணம் மற்றும் தீயஎண்ணங்கள் தொடர்ச்சியானவை அல்ல. ஆனால், "ஹவா" எனும் ஆசைகள் தொடர்ச்சியானவை, அவை நேரம் செல்லல செல்ல அதிகரிக்கும். ஒருவர் **திக்ர்** செய்யும்போது கெட்ட எண்ணங்கள் குறைந்து கடைசியில் இல்லாமலாகிவிடும் நப்ஸின் ஆசைகள் குறைந்து சென்று ஒருவர் பலமான "**முஜாஹதா**" செய்யும்போது மறைந்து போகும். ஷைத்தான் ஒரு நாயை போன்றது. அது துரத்தப்படும்போது ஓடிவிடுகிறது, ஆனால் பின்னர் மற்றொரு திசையில் திரும்பி வருகிறது. நஃப்ஸ் ஒரு புலி போன்றது. அதை கட்டுப்படுத்துவதன் மூலமே நிறுத்தப்படும்.

மனிதர்களுக்கு தீய செயல்களை தூண்டும் தீய ஷைத்தான் "**ஹன்னாஸ்**" என்று அழைக்கப்படுகின்றான். ஒரு மனிதன் இந்த செயத்தானின் தீய ஆலோசனையைப் பின்பற்றுவதில்லை என்றால் அது அந்த ஆலோசனையை விட்டுவிட்டு இன்னொரு தீய செயலைத்தூண்டுவான். நஃப்ஸ் எப்போதும் அழிவுகரமான மற்றும் தீய காரியங்களைச் செய்ய விரும்புகிறது. மிகவும் பயனுள்ள மற்றும் நன்மை பயக்கும் செயலை நிறைவேற்றுவதைத் தடுக்கும் பொருட்டு சைத்தான் ஒரு நபரை குறைந்த பயனுள்ள செயலைச் செய்ய தூண்டுகிறது. அவரை ஒரு கடுமையான பாவத்திற்குள் தள்ளுவதற்காக, அதில் அவனுக்கு விருப்பத்தைத் தூண்டுவதற்காக ஒரு சிறிய நல்ல பிரயோசனம் குறைந்த செயலை விரும்பச்செய்வான். இந்த அற்பமான நல்ல செயல் ஷைத்தானின் ஆலோசனையின் பேரில் நிறைவேற்றப்படுவது அந்த

மனிதனுக்கு மிகவும் இனிமையானதாக இருக்கும். அவர் அதை அவசரமாக செய்ய விரும்புவார்.

இந்த காரணத்தினால், ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் கூறினார்கள். "**அவசரம் என்பது ஷைத்தானால் பற்ற வைக்கப்படுகிறது. பின்வரும் ஐந்து விஷயங்களைப் பின்பற்றுவது இதற்கு விதிவிலக்காக இருக்கும். ஒருவரின் மகளைத் திருமணம் செய்து கொடுப்பதற்கு விரைதல், ஒருவரின் கடனை திருப்பிச் செலுத்த அவசரம், இறந்தவரின் ஜனாஸாவை அடக்கம் செய்ய அவசரம், ஒரு விருந்தினருக்கு உணவளிக்க அவசரம், மற்றும் ஒரு பாவம் செய்தபின் அதற்காக (தவ்பா) செய்வதற்கு விரைதல்". அஷியத் துல் லாமா'அத்** என்னும் கிதாபில் பின்வரும் ஹதீத் ஷரீப் தினசரி தொழுகைகளை (அதன் பரிந்துரைக்கப்பட்ட நேரம் முடியும் வரை) ஒத்திவைப்பதன் கொடூரத்தை விளக்கும் பிரிவில் எழுதப்பட்டுள்ளது.**"ஓஅலி! பின்வரும் மூன்று விஷயங்களை ஒத்திவைக்க வேண்டாம், தொழுகையை அதற்குரிய நேரத்தின் ஆரம்ப நேரத்தில் தொழுங்கள், இறந்தவர்களுக்காக தொழுகையை மைய்யித் அடக்க முன் அதன் ஆரம்பகாலத்தில் செய்யுங்கள், பொருத்தமான தகுதியுடைய ஒருவர் திருமணம் செய்ய முன்மொழிந்தால் பெண் அல்லது விதவை இருந்தால் உடனடியாக திருமணம் செய்து வையுங்கள்."**

இந்த ஹதீதில் "தகுதி" எனக்குறிப்பிடுவது அவரது (ஐந்து) தினசரி தொழுகைகளை அதன் நேரத்தில் நிறைவேற்றுவது, பாவங்கள் செய்யாமல் இருப்பது, அனுமதிக்கப்பட்ட வழியில் சம்பாதிப்பது. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் ஒரு ஹதீத் ஷரீபில் பின்வருமாறு கூறுகிறார்கள். **"ஒரு மலக்கு மூலம் ஏற்படும் உத்வேகம் இஸ்லாத்துக்கு இணக்கமாக இருக்கும். தீமைகளை தூண்டும் "வஸ்வஸா" எண்ணங்கள் ஷைத்தானின் தூண்டுதலாகும் அவை ஒருவர் இஸ்லாத்திலிருந்து வெளியேற காரணமாகும்".** ஒருவர் உத்வேகமளிக்கப்பட்ட செயல்களை செய்ய முயற்சிக்க வேண்டும், ஒருவரின் நப்ஸ் மற்றும் ஷைத்தானால் தூண்டல்களுக்கு எதிராக போராடவேண்டும். நப்ஸின் தீய ஆலோசனை களை பின்பற்றும் ஒருவர் ஷைத்தானின் கெட்ட தூண்டுதலையும் பின்பற்றுகிறார். மாறாக, நப்ஸின் ஆசைகளை பின்பற்றாதவருக்கு மலக்கினால் உத்வேகம் கொடுக்கப்பட்ட நல்ல எண்ணங்களைச் செயல்படுத்துவது மிகவும் எளிதானது. ரசூலுள்ளாஹ் ''சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' ஒரு ஹதீதில் கூறுகிறார்கள் "**ஷைத்தான் கெட்ட வஸ்வசாவை இதயத்துக்கு கொடுக்கிறான். அல்லாஹ்வின் பெயர் சொல்லி திக்ர் செய்யப்படும்போது,** (அல்லாஹுவை ஞாபகப்படுத்தி அவன் பெயர் சொல்லப்படும் போது) **ஷைத்தான் ஓடிவிடு கிறான். இல்லாவிட்டால் அவனுடைய ஊசாடல் தொடர்ந்து கொண்டி ருக்கும்."** [இந்த ஹதீத் ஷரீப் எங்களுக்கு திக்ரின்அவசியத்தை காட்டுகிறது].

இதயத்திற்கு வரும் விஷயங்களில் ஒன்று ஷைத்தானின் ஊசடல் அல்லது மலக்குகள் ஏற்படுத்தும் உத்வேகம். இது இயற்கையானது, எந்த விதமானது என்பதை இஸ்லாத்துடன் பொருந்தக்கூடிய தன்மையை கொண்டு தீர்மானிக்க முடியும். இந்த முறை தோல்வியுற்றால் ஒருவர் உண்மையான மார்க்க அறிஞரை அணுகி அவரிடம் இது ஒரு நல்லவழிகாட்டலா அல்லது தீய ஊசாடலா என்று கேட்க வேண்டும். தங்கள் மார்க்கத்தை பணத்துக்காகவும்

பதவி பட்டங்களுக்காகவும் வியாபாரம் செய்யும் “போலி அறிஞர்களிடம்” ஒருபோதும் கேட்கக்கூடாது. ஒருவர் உண்மையான பக்தியுள்ள "ஷெய்க்" அல்லது ஒரு முழுமையான பரிபூரணமான ஆன்மீக வழிகாட்டி (முர்ஷித் அல்-காமிலிடம்) கேட்கலாம். அவர்களின் ஆசிரியர்கள் அனைவரும் புகழ் பெற்றவர்கள், பரிபூரணமான ஆன்மிக வழிகாட்டிகள், ரசூலுள்ளாஹுவிடம் போய் முடியக்கூடிய தொடரான ஆன்மீக இணைப்பு உடைக்கப்படாத சங்கிலித் தொடரை கொண்டவர்கள்.

அல்லாஹ்வின் நேசர்கள் “**குதுப் அல் மதர்**” என்று அழைக்கப்படுவார்கள். அவர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைவானவர்கள் என்றாலும் கியாமத் உலக முடிவு வரைக்கும் எப்போதும் இருப்பவர்கள். அறிவொளியின் தலைவர் (**குதுப் அல்-இர்ஷாத்**) என்பவர் அஹ்லுஸ்-சுன்னத்தின் இஸ்லாமிய அறிஞர் மற்றும் ஒரு பரிபூரண ஆன்மீக வழிகாட்டி எப்போதும் எல்லா இடங்களிலும் இருக்கா மாட்டார். இந்த திறனில் அறிஞர்கள் கிடைப்பது மிகவும் அரிதானது, அவை ஒவ்வொருவருக்கும் இடையில் பின் நீண்ட கால இடைவெளி உள்ளது. இப்பொழுதுள்ள எல்லா இடங்களிலும் இருக்கும் போலி தலைவர்கள் (போலி ஷெய்குகள்) உண்மையான பரிபூரண ஆன்மீக வழிகாட்டிகளை போன்றவர்கள் என்று ஒருவர் எண்ணக்கூடாது. இந்த மோசடி தலைவர்களில் ஒருவரால் (போலி ஷெய்குகளால்) தவறாக வழிநடத்தப்பட்டு இம்மை மறுமை நிம்மதியை சந்தோசத்தை இழக்கக்கூடாது என்பதில் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

மலக்குகள் மூலம் இதயத்திற்கு வரும் இஸ்லாத்துடன் இணக்கமான விஷயங்கள் நப்சுக்கு க்கு மிகவும் கசப்பானதாக இருக்கும். மாறாக, நாஃப்ஸ் அவற்றை மிகவும் இனிமையாகக் கண்டு ஒருவர் அதை அவசரமாக செய்ய விரும்பினால் அவை ஷைத்தானுடைய தூண்டுதல் என்றும் தீய ஆலோசனை கள் என்பதை அறிய வேண்டும். ஷைத்தானுக்கு பலதந்திரங்கள் உள்ளன. அவற்றில் பத்து பிரபலமானவை:

**முதலாவது:** ஷைத்தான் ஒரு நபரிடம் அல்லாஹுத்தஆலாவுக்கு அவர்களின் வழிபாடுகள் தேவை இல்லை என்று கூறுவான். ஒருவர் குர்ஆனில் சூரா பகராவின் அறுபத்தி இரண்டாவது ஆயத்தை நினைவில் கொள்ள வேண்டும். அதன் விளக்கம். **அல்லாஹு தலா மற்றும் கடைசி நாளில் நம்பிக்கை கொண்டு எவர் செயலாற்றுகிரார்களோ அவர்களுக்கு வெகுமதி உண்டு … ”(2-62)**

**இரண்டாவது:** ஷைத்தான் ஒருவரிடம் அல்லாஹு தஆலா இரக்கமும் கருணையும் கொண்டவன், எனவே அவன் உங்களை மன்னித்து சுவர்க்க த்துக்கு அனுப்புவான் என்று கூறுவான். அவர் குர்ஆனில் சூரா லுக்மானின் 33 ஆவது ஆயத்து **"அல்லாஹ்வின் கிருபையால் திசைதிரும்ப வேண்டாம்",** மற்றும், குர்ஆனில் சூரா மர்யம் 63 ஆவது ஆயத்து கூறுகிறது **“இருதயங்களில் அல்லாஹ்வின் பயம் உள்ளவர்களை மட்டுமே நாங்கள் சொர்க்கத்திற்குள் அனுமதிப்போம்”**

**மூன்றாவது:** ஷைத்தான் உங்களுக்கு “உங்கள் வழிபாடுகள் அல்லது செயல்கள் அனைத்தும் குறைபாடுள்ள மற்றும் வேசங்களால் பூசப்பட்டிருக்கிறது, எனவே உங்களால் அல்லாஹ்வுக்கு அஞ்சும் நபராக

முடியாது.” அல்லாஹு தஆலா “சூரா மாயிதாவில் **“தங்கள் இருதயங்களில் அல்லாஹ்வுக்குப் பயந்தவர்களின் வணக்கங்களை மட்டுமே ஏற்றுக் கொள்கிறான்”** எனவே, உங்கள் வழிபாடுகள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது, இவை நீங்கள் செய்யும் அனைத்தும் ஒன்றுமில்லை (வீணானவை), நீங்கள் ஒரு மிருகத்தைப் போல அதன் உரிமையாளர் மேய்ப்பதுபோல் ஒன்றும் இல்லாததற்காக துன்பப்படுகிறீர்கள் என்று கூறுவான். நீங்கள் ஷைத்தானுக்கு; “உங்கள் வணக்க வழிபாடுகளை தண்டனைகளை தவிர்ப்பதற்காகவும் மற்றும் அல்லாஹ்வின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதற்காகவும் செய்கிறீர்கள்” என்று பதிலளிக்க வேண்டும். இன்னும், உங்கள் கடமை உங்களுக்கு ஏவப்பட்டதற்கு அடிபணிவதாகும், உங்கள் வணக்கங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டதா இல்லையா என்பது அல்லாஹு தஆலாவைப் பொறுத்தது என்றும் பர்ளுகள் ஷரத்துகளை கவனித்து செய்யப்படும் வணக்கங்கள் ஏற்றுக்கொள்ளப்படும் என்பது வாக்குறுதியளிக்கப்பட்டது என்றும் கூறவேண்டும். கட்டாயமாக்கப்பட்ட வணக்கங்களை செய்யாமல் இருப்பது பெரும் பாவமாகும். ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்’ அவர்கள் கூறினார்கள், **“புத்திசாலியான எவரும் அவரது நப்ஸின் ஆசைகளில் ஈடுபடாது வணக்க வழிபாடுகளை செய்வார்கள். முட்டாள்கள் நப்ஸ்களின் ஆசைக்கு வழிப்பட்ட பின் அல்லாஹ்வின் கருணையையும் எதிர்பார்ப்பார்கள்.”** மறுமைக்கு தேவையான அவசிய மானவற்றை இந்த இடைக்கால வாழ்வில் தயாரிப்பது அவசியமாகும்.

**நான்காவது:** “ஷைத்தான் ஒரு நபரை வணக்கங்கள் செய்வதை பின்வருமாறு கூறி தடுத்து நிறுத்த முயற்சிக்கிறான். தனது இளம் ஆற்றலைப் பயன்படுத்தி இப்போது பணம் சம்பாதிக்கவேண்டும் பின்னர், ஒரு வசதியான வாழ்வை அமைத்த பிறகு வணக்க வழிபாடுகளை அவர் செய்ய முடியும்.” அவர் ஷைத்தானுக்கு பின்வருமாறு பதில் அளிக்க வேண்டும். “மரணம் எப்போது வரும் என்று யாருக்கும் தெரியாது. ஒவ்வொருவரின் மரண நேரமும் அல்லாஹுவினால் நித்திய கடந்த காலத்தில் தீர்மானிக்கப்பட்டது. ஒருவரின் மரணம் மிக அருகில் இருக்கலாம் ஆகையால், ஒருவர் உடனடியாக அவை நிர்ணயிக்கப்பட்ட நேரங்களில் வழிபாடுகளைச் செய்ய வேண்டும். ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீதில் கூறினார்கள். **“ஹலகல்-முஸவ்விஃபுன்”,** அதாவது இன்றைய வேலையை நாளைக்கு விட்டு வைப்பவர்கள் நஷ்டவாளிகள்.

**ஐந்தாவது:** ஷைத்தான் ஒரு நபர் வணக்கம் செய்வதை நிறுத்த முடியாமல் போனால் அவன் அவரிடம் சொல்வான், “சீக்கிரம்! தொழுகையை தாமதப்படுத்த வேண்டாம், தாமதிக்க வேண்டாம்! என்று கூறுவான். ” அவ்வாறு செய்வதன் மூலம் அவன் அவருடைய வணக்கங்கள் வழிபாடுகள் முறையாகவும், கண்டிப்பாகவும் செய்வதிலிருந்து தடுக்க முயற்சிக்கின்றான். அதற்கு அவர் பின்வருமாறு பதிலளிக்க வேண்டும்

ஒரு சில பர்லான வணக்கங்கள் மட்டுமே உள்ளன. எனவே, ஒன்று அதன் சரியான நிலைமைகள் அனைத்தையும் கவனிப்பதன் மூலம் அவற்றைச் செய்ய வேண்டும். ஒருவர் மேலும் ஒரு படி மேல் சென்று ஒப்பீட்டளவில் மிக சிறிய நஃபிலான (மேலதிக) வணக்கங்கள் அவற்றுக்குரிய விதிகள் அனைத்தையும் கவனித்து செய்யும்போது அவற்றின் பலன் மிகக்கூடுதலாக

இருக்கும் ஆனால் கவனக்குறைவாக செய்யப்படும் வணக்கங்களை விட சிறந்தது என்று ஷைத்தானுக்கு சொல்ல வேண்டும்.

**ஆறாவது:** ஷைத்தான் ஒருவருக்கு அவரது வணக்கத்தை மிக அழகான முறையில் மற்றவர்கள் அதிசயப்படத்தக்க வழியில் செய்ய தூண்டுவதன் மூலம் அவரை வேஷம்போட அல்லது பாசாங்குத்தனத்தை ஏற்படுத்த முயற்சிக்கிறான்.

அவர் இந்த ஷைத்தானின் தூண்டுதலுக்கு பின்வருமாறு பதிலளிக்க வேண்டும் “யாருக்கும் ஏதேனும் நன்மை செய்யவோ அல்லது தீங்கு செய்யாவோ சக்தி இல்லை. இதுதான் ஒருவரின் நிலை என்பதால் மற்றவர்களுக்கு ஏதேனும் நன்மை அல்லது தீங்கு செய்வது கேள்விக்குறியாக உள்ளது. எனவே படைப்புகளிடமிருந்து எதையாவது எதிர்பார்ப்பது கேலிக்குரியதாக இருக்கும் அவை சக்தியற்றவை. அல்லாஹு தஆலாவால் மட்டுமே மக்களுக்கு நன்மை அல்லது தீங்கு செய்ய முடியும், இதனால், அல்லாஹ் பார்க்கின்ற ஒரு நபரின் வணக்கம் அவருக்கு போதுமானது. "

**ஏழாவது:** ஒரு நபரை அவரது வணக்க வழிபாடுகளைச் செய்வதிலிருந்து தடுக்க முடியாது என்று உணரும்போது ஷைத்தான் அவரது வணக்கத்தில் அவருக்கு பெருமையை உணர்த்துவான். அவர் எவ்வளவு புத்திசாலி, வணக்கத்தில் மிக எச்சரிக்கையாக இருக்கிறார் என்று ஷைத்தான் அவரிடம் சொல்வான். அதற்கு அவர் புத்திசாலித்தனம், விழிப்புணர்வு என்பன அவருடையதல்ல அது அல்லாஹ்விடம் இருந்து வந்த உதவி. அவனுடைய ஆதரவு இல்லாமல் அவரால் எந்த வணக்கமும் செய்ய முடியாது என்று பதிலளிக்க வேண்டும்.

**எட்டாவது:** ஷைத்தான் முனாபிக்கு தனத்தை ரகசியமாக ஊக்குவிக்க விரும்புகிறான். அவர் தனது வணக்கங்களை இரகசியமாக செய்ய வேண்டும் என்று அவருக்கு அறிவுறுத்தி அதன் மூலம் அல்லாஹு தனது அன்பையும் மரியாதையையும் பிறருடைய இதயத்தில் வைப்பான் என்று கூறுவான்.

இதற்கு ஷைத்தானுக்கு பதில் சொல்லுங்கள், “நான் அல்லாஹு தலாவுடைய அடிமை மற்றும் அவன் எனது எஜமான். அவன் என் வணக்கங்களை ஏற்கலாம் அல்லது நிராகரிக்கலாம். அவன் என்னைபற்றிய அன்பை மற்றவர்களின் இதயங்களில் வைப்பானா இல்லையா என்பது என்னுடைய பொறுப்பல்ல என்று கூற வேண்டும்.

**ஒன்பதாவது**: ஷைத்தான் ஒரு நபருக்கு சந்தேகத்தை ஏற்படுத்துவான். ஒருவர் ஏன் வணங்க வேண்டும் ஒரு நபர் சுவர்க்கம் சென்று மகிழ்ச்சி பெறக்கூடிய வரா**(ஸ’ஈத்**) அல்லது நரகம் செல்லும் துரதிர்ஷ்டமானவரா**(ஷகீ**) என்பது ஏற்கனவே நித்திய கடந்த காலத்தில் தீர்மானிக்கப்பட்டுள்ளது. அதனால், ஒருவர் மகிழ்ச்சி பெறக்கூடியவரா நபராக இருந்தால், அவர் பாவங்கள் செய்தால் மன்னிக்கப்படும் அவர் சுவர்க்கம் செல்வார். நித்திய கடந்த காலத்தில் ஒரு துரதிர்ஷ்டவசமான நபராக முன்னரே தீர்மானிக்க ப்பட்டவர் அவர் எவ்வளவு வணங்கினாலும் அவரது வணக்க வழிபாட்டைப் பொருட்படுத்தாமல் நிச்சயமாக நரகத்திற்குச் செல்வார். அதனால், தேவையில்லாமல் உங்களை சோர்வடையச் செய்யாதீர்கள்! வசதியாக

இருங்கள்! ” என்று ஷைத்தான் யோசனைகளை கொடுப்பான். இந்த வகையான பரிந்துரைகளைப் பெறுபவர் இதற்கு பதிலளிக்க வேண்டும்.

"நான் அல்லாஹு தஆலாவின் அடிமை, ஒரு அடிமையின் கடமை அவருடைய எஜமானின் கட்டளைகளை நிறைவேற்றுவது தான்” என்று கூறவேண்டும். ஷைத்தான் இதற்கு “வழிபாடுகளைச் செய்யாததற்காக தண்டனைக்கு பயம் இருந்தால், அவ்வாறான நிலையில், ஒரு நபர் அதைச் செய்ய வேண்டிய அவசியமாகிறது. ஆனால் மகிழ்ச்சியானவர்களுக்கு தண்டனைக்கு பயம் இல்லை என கூறலாம்”. அதற்கு அந்த நபர் “என் இறைவன் எல்லாவற்றையும் அறிவான், அவன் விரும்பியதைச் செய்கிறான் அவன் தேர்ந்தெடுக்கும் எவருக்கும் நன்மை அல்லது தொல்லைகளை கொடுக்கிறான். அவன் ஏன் இதைச் செய்கிறான் என்று அவனிடம் கேட்பதற்கான உரிமை யாருக்கும் இல்லை என்று பதில் அளிக்க வேண்டும்“.

இப்லிஸ்’ ஈசா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் வந்து, “நித்திய கடந்த காலத்தில் தீர்மானிக்கப்பட்ட அந்த விஷயங்கள் நடக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா” என்று கேட்டான். ஈசா அலைஹிஸ்ஸலாம் “ஆம், அது நிச்சயமாக என்றார்கள். அதற்கு இப்லிஸ் “அப்படியானால் அந்த மலையின் உச்சிக்கு பொய் குதியுங்கள். நீங்கள் நித்திய கடந்த காலத்தில் உங்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது என்று தீர்மானிக்கப்பட்டிருந்தால் உங்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது! ஈசா அலைஹிஸ்ஸலாம் அதற்கு பதிலளித்தார், “ஓ, சபிக்கப்பட்டவனே! அல்லாஹு தனது அடிமைகளை சோதிக்கிறான். அடிமைக்கு தனது எஜமானை சோதிக்க உரிமை இல்லை.”என்று கூறினார்கள்.

இந்த வகையான யோசனைகளுக்கு எதிராக தன்னைக் காத்துக் கொள்வதற்காக ஒருவர் தனக்கு தானே சொல்ல வேண்டும் ” “நித்திய கடந்த காலத்தில் நான் ஒருவன் மகிழ்ச்சியானவர்கள் என தீர்மானிக்கப்பட்டிருந்தால் (தவாப்) வெகுமதிகள் மற்றும் (தரஜா) தராதரங்களை அதிகரிக்கும் பொருட்டு வணக்க வழிபாடுகளைச் செய்வது எனக்கு மிக அவசியம். நான் துரதிர்ஷ்டவசமானவர்களில் ஒருவனாக இருந்தால் தண்டனைகளிலிருந்து தப்புவதற்காக நான் வணக்க வழிபாடுகளைச் செய்வேன் என ஒருவர் தனக்குத்தானே சொல்லிக் கொள்ள வேண்டும். மேலும், “வணக்க வழிபாடுகளைச் செய்வது எனக்கு எந்தத் தீங்கையும் செய்யாது. அல்லாஹு த ஆலாமுற்றிலும் அறிந்தவன் **(ஹக்கீம்**). எனவே, அவனுக்காக வழிபாடு செய்யும் ஒருவரை தண்டிப்பதற்கு அவனுடைய ஞானத்துக்கு பொருந்தாது .

மகிழ்ச்சியான நபர் வழிபாடுகளைச் செய்யாவிட்டாலும் தீங்கு விளைவிக்காது என்று இருந்தாலும் அது அவருக்கு எந்த நன்மையையும் அளிக்காது. எனவே ஒரு மகிழ்ச்சியான நபர் எப்படி வணக்க வழிபாடுகளை செய்யாமலிருப்பார்?. பகுத்தறிவு உள்ள எவரும் நன்மை பயக்கும் வணக்கங்களை செய்வார்கள். மற்றும் தீங்கு விளைவிக்கும் விஷயங்களிலிருந்து விலகி இருபார்கள். நித்திய கடந்த காலத்தில் நான் ஒரு துரதிர்ஷ்டவசமானவன் என தீர்மானிக்கப் பட்ருந்தாலும் அல்லாஹு த’ஆலாவிடம் கீழ்ப்படியாததால் அங்கு நரகத்திற்கு அனுப்பப்பட்ட ஒருவராக இருந்தாலும் நான் இன்னும் கீழ்ப்படிதலான அடிமையாக இருப்பதை விரும்புகிறேன். மேலும், அல்லாஹு வணக்கம் செய்பவர்களை சொர்க்கத்துக்கு அனுப்பி வைப்பதகவும் வணக்கம் செய்யாத வர்களை நரகத்தில் தண்டிப்பதாக உறுதியளிக்கிறான். அல்லாஹு நிச்சயமாக

அவனுடைய வாக்குறுதியைக் காப்பாற்றுவான். முந்தைய அறிஞர்கள் அவனுடைய வாக்குறுதியை மீறமாட்டான் என்று ஒருமனதாக அறிவித்தார்கள்.

அல்லாஹு தஆலா எல்லாவற்றையும் காரணங்களை கொண்டே உருவாக்கு கிறான். இது அவனுடையது (ஆதத் இலாஹிய்யாஹ்). தெய்வீக காரண சட்டம் அவன் தனது இந்த சட்டத்தை முஃ'ஜிசாத் மற்றும் கறாமாத்[1] போன்ற சிறப்பு நிகழ்வுகளில் மட்டுமே இடைநிறுத்துகிறான். வணக்கங்களை சுவர்க்கத்துக்கு நுழைவதற்கு ஒரு வாகனமாக அவன் ஆக்கியுள்ளான் என்பதை நமக்குத் தெரிவிக்கிறான். வேறு வார்த்தைகளில் கூறுவதானால், சுவர்க்கத்தில் உள்ள அனைத்து சுக போகங்களையும் வணக்கங்களுக்குரிய வெகுமதிகளாக படைத்தான். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் ஒரு ஹதீத் ஷரீபில் கூறுகிறார்கள், **"யாரும் அவர்களின் வணக்கங்கள் புரிவது காரணமாக சுவர்க்கம் நுழைய முடியாது".** வெகுமதியாக வழங்கப்படும் ஒன்றை ஒருவரின் முயற்சிகள் காரணமாக என்று தவறாக நினைக்கக்கூடாது.

**பத்தாவது:** இப்லிஸ் ஒரு நபரிடம், "முடிவற்ற கடந்த காலத்தில் ஒரு நபர் வழிபாடுகளைச் செய்வார் என்ற தீர்மானிக்கப்பட்டால் அந்த நபர் வணக்க வழிபாடுகளைச் செய்வார். அல்லாஹுவின் நிர்ணயத்தில் மாற்றம் இல்லை. அல்லாஹுத'ஆலாவின் ஆணையை ஏற்றுக்கொள்ள மனிதர்கள் வலியுறுத்தப் படுகிறார்கள். அதனால் அல்லாஹு தஆலாவின் நித்திய ஆணையைப் பொறுத்து அவர்கள் வழிபாடுகளைச் செய்யலாம் அல்லது செய்யாமல் விடலாம்.

இப்லீசின் இந்த ஆலோசனை முந்தையதைப் போன்றவை. அதன்படி, மகிழ்ச்சியானவர்களாக முடிவற்ற கடந்த காலத்தில் தீர்மானிக்கப்பட்டவர்கள் வணக்கங்களை செய்யமுடியும், நித்திய கடந்த காலத்தில் துரதிர்ஷ்ட மானவர்களாக தீர்மானிக்கப் பட்டவர்களுக்கு வணக்கங்களைச் செய்ய வேண்டிய அவசியமில்லை. இப்லீஸின் இந்த ஏமாற்று வேலைக்கு பின்வருமாறு ஒருவர் பதிலளிக்க வேண்டும்.

மனிதனின் நல்ல, தீய செயல்கள் உட்பட அனைத்தையும் உருவாக்குகிறது அல்லாஹு த'ஆலா தான் என்றாலும், மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் அவன் சிறிய அளவிலான நுட்ப சக்தியை (இராதா அல் ஜூஸ்இய்யா) கொடுத்தான். மனிதர்கள் இந்த வகை நுட்ப சக்தியை பயன் படுத்துகிறார்கள், ஆனால் மனிதர்கள் எதையாவது உருவாக்கினார்கள் என்ற கூற்றுடன் இந்த விருப்பத்தின் சக்தியை விளக்க முடியாது, ஏனெனில் இந்த நுட்ப சக்தி மனிதர்களை தவிர வெளிப்புற பிரபஞ்சத்தில் இல்லை. இது மனிதர்களின் இதயங்களுக்குள் இருக்கிறது. வெளிப்புற பிரபஞ்சத்தில் ஏதோ ஒன்று வெளியாகும்போது படைத்தல் என்பது நடைபெறுகிறது. இதற்கு மாறாக, அல்லாஹுவின் சர்வ வல்லமையுள்ள விருப்பம் **(இது இராதா-இ-குல்லியா என்று அழைக்கப்படுகிறது)** ஒரு சுய நிலைப்பாடாக உள்ளது.

---

[1] அல்லாஹு தஆலா அவனது தீர்க்கதரிசிகள் மற்றும் அவ்லியாக்களின் அற்புதங்களை வெளிப்படுத்த விரும்பும் போது அவனது காரண விதிகளை இடைநிறுத்துகிறான். ஒரு தீர்க்கதரிசி மூலம் ஒரு அதிசயம் நிகழும்போது, இதை ஒரு முஃஜீசா என்று அழைக்கிறோம்; அது அவனது வலியுல்லாஹ் (அவ்லியா) மூலம் நடக்கும் போது இது கறாமத் என்று அழைக்கிறோம்;

அல்லாஹுதஆலா அவனது செயல்களை படைப்பதற்காக மனிதனின் வரையறுக்கப்பட்ட நுட்பத்தை ஒரு வழிமுறை யாக படைத்தான். அல்லாஹு த ஆலா மனிதனின் வரையறுக்கப்பட்ட நுட்ப சக்தி இல்லாமல்கூட படைக்க முடியும் ஆனால் படைப்புகளை மனிதனின் நுட்பசக்தி மூலம் உருவாக்குவது அவனுடைய தெய்வீக வழக்கமாகும். எவ்வாறாயினும், தீர்க்கதரிசிகள் 'அலைஹமுஸ் சலவாத்து வதஸ்லீமாத்' மீது தனது நேசத்தின் பொருட்டும் மற்றும் அவனுடைய (நேசம் பெற்ற அடியார்களின்) அவ்லியா 'கத்தசள்ளாஹு தஆலா அஸ்ராரகுமுல் அஸீஸ்' பொருட்டும் இந்த வழமையான பழக்கத்தை இடைநிறுத்தியுள்ளான். இந்த நல்லருள் பெற்ற அடியார்கள் மூலம் அசாதாரண நிகழ்வுகளை உருவாக்குவது அவரது காரண சட்டத்துடன் இணைக்கப்பட வில்லை. இந்த நிகழ்வுகள் அற்புதங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

மனிதனின் இராதா-அல் -ஜுஸ்இய்யா (வரையறுக்கப்பட்ட நுட்பசக்தி) என்று அழைக்கப்படுவது அவனது செயல்களை சாத்தியப்படுத்துவதற்கு பயனுள்ள ஒரே ஒரு காரணி அல்ல. மறு வார்த்தையில் கூறுவதானால்; மனிதன் விரும்பும் அனைத்தும் நடப்பதும் இல்லை. அவன் விரும்பியபடி மட்டுமே உருவாக்க அல்லாஹு தஆலா லின் வழக்கமான முறையுமல்ல. இந்த காரணத்திற்காக, மனிதர்கள் தங்கள் செயல்களில் கட்டாயப்படுத்தப்படுவதும் இல்லை. மனிதர்கள் தங்களுக்கு வேண்டுவது எதையாவது செய்ய தங்களின் நுட்ப சக்தியை அவர்கள் பயன்படுத்துகிறார்கள். அல்லாஹு தஆலாவும் அதைக் கட்டளையிட்டால், அந்த செயல் நடக்கின்றது. இப்லிஸ் "அல்லாஹு ஆலா விரும்பினால் ஒரு மனிதன் வணக்க வழிபாடுகளை செய்கிறான், அவன் விரும்பவில்லை என்றால் வழிபாடுகளைச் செய்ய மாட்டான் என்று சொல்லி மனிதர்களை ஏமாற்ற முயற்சிக்கின்றான். எனவே, மனிதன் அவனது செயல்களைச் செய்ய அல்லது செய்யாமலிருக்க வேண்டிய கட்டாயத்தில் உள்ளான். ஒரு மனிதன் வேலை செய்கிறானோ இல்லையோ என்பது முக்கியமல்ல. நித்திய கடந்த காலத்தில் நிர்ணயிக்கப்பட்ட "களா கத்ர்" நடந்தேயாகும். நித்திய கடந்த காலத்தில் கொடுக்கப்பட்ட ஆணையின் படி மனிதர்கள் செயல்படுகிறார்கள் என்பது உண்மைதான். ஆனால், அவை நடப்பதற்கு மனிதர்கள் அவர்களின் நுட்ப சக்தியை பயன் படுத்துகிறார்கள். வேறு வார்த்தைகளில் கூறுவதானால், ஒரு மனிதன் எதை செய்ய வேண்டும் எதை செய்யக்கூடாது என்ற தனது தெரிவுக்கான விருப்பத்தை பயன்படுத்து கிறான்.

நித்திய ஆணை என்பதன் பொருள் அல்லாஹுதஆலா தனது எல்லையற்ற அறிவையும் ஞானத்தையும் அறிந்திருந்தான். ஒரு நபர் எவ்வாறு அவனது வரையறுக்கப்பட்ட நுட்ப சக்தியைப் பயன்படுத்துவான் என்பதை அறிந்து அதற்கேற்ப நிர்ணயித்தான் இவற்றை (லௌஹுல் மஹ்பூல்) எனும் சிறப்பு புத்தகத்தில் பதிந்தான். இது தெளிவாக உள்ளது, செய்ய நிர்பந்திக்கப்படும் எந்த பிரச்சனையும் இங்கு இல்லை. ஒருவர், மற்றொரு நபர் கொடுக்கப்பட்ட நாளில் என்ன செய்வார் என்று அறிந்து அவர் அந்த செயல்களைச் செய்ய வேண்டும் என்று ஆணையிடுகிறார். அவரது அனைத்து அறிவையும் ஒரு காகிதத்தில் எழுதுகிறார், இப்பொழுது செயலாற்ற வேண்டிய நபர் அந்த செயல்களைச் செய்ய அவர் நிர்பந்திக்கப்படுகிறார் என்று கூற முடியாது.

“நான் என்ன செய்ய போகிறேன் என்று உங்களுக்கு தெரியும் என்று கூறி அவர் புகார் கொடுக்க முடியாது. அந்த செயல்களை நான் செய்ய வேண்டும் என்று நீங்கள் விரும்பினீர்கள். நீங்கள் அவற்றை கூட ஒரு துண்டு காகிதத்தில் எழுதியுள்ளீர்கள். எனவே நீங்கள் அச்செயல்களை ஏற்படுத்தினீர்கள் , நான் செய்தேன். என்று கூறி அவர் புகார் கொடுக்க முடியாது.

ஏனெனில், அவர் தனது சொந்த விருப்பத்தைப் பயன்படுத்தி எல்லா செயல்களையும் செய்துள்ளார். மற்ற நபர் அவைகளை அறிந்திருந்தார், அவர் அவற்றைச் செய்ய விரும்பினார் மற்றும் அவற்றை ஒரு காகிதத்தில் எழுதினார் என்பதால் அல்ல. இதே போன்று அல்லாஹு தஆலாவின் அறிவு, அவன் தீர்ப்பு மற்றும் அவற்றை லௌஹுல் மஹ்பூல் புத்தகத்தில் எழுதினான் என்பது அவனது படைப்பு மீது வற்புறுத்தலைக் கொண்டிருக்கவில்லை. அல்லாஹு தஆலா நித்திய கடந்த காலத்தில் ஆறிந்திருந்தான் ஒரு குறிப்பிட்ட நபர் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்வார், எனவே அவர் செய்ய வேண்டும் என்று தீர்ப்பளித்தான் அவற்றை லௌஹுல் மஹ்பூல் புத்தகத்தில் எழுதினான். அவனது நித்திய கடந்தகால அறிவு என்பது ஒருவரால் அவரின் மட்டுப்படுத்தப் பட்ட நுட்ப அறிவைக் கொண்டு மேற்கொள்ளப்படும் செயல்களைப் பொறுத்தது. ஆகவே அந்த மனிதரின் செயல் அல்லாஹ்வுடைய அறிவு, விருப்பம் மற்றும் படைப்பு மூலம் நடைபெறுகிறது.

ஒரு நபர் தனது விருப்ப சக்தியைப் பயன்படுத்தவில்லை என்றால், அல்லாஹு தஆலா அந்நபர் தனது விருப்ப சக்தியைப் பயன்படுத்த மாட்டார் என்று நித்திய கடந்த காலத்தில் அறிந்திருப்பான். இதனால் அவன் நிர்ணயித்திருக்க மாட்டான், உருவாக்கமாட்டான். அதாவது அறிவு என்பது தெரிந்த விஷயங் களைப் பொறுத்தது என்று பொருள்படும். மனிதர்களுக்கு அவர்களின் விருப்ப சக்தி இல்லை ஆனால் அவர்களின் செயல்கள் மட்டுமே அல்லாஹு தஆலாவின் விருப்பத்தால் உருவாக்கப்பட்டது என்றால் மனிதர்கள் தங்கள் செயல்களில் கட்டாயப்படுத்தப்பட்டனர் என்று கூறலாம். உண்மையான இஸ்லாமிய நம்பகமான அஹ்ல்-சுன்னத் மத்ஹப் போதனைகளின் படி மனிதர்களின் செயல்கள் இரண்டு ஒன்றினையும் நிலைகள் மூலம் நடக்கின்றன.: மனிதனின் மட்டுப்படுத்தப்பட்ட சக்தியும் அவன் விருப்பமும், மற்றது அல்லாஹ்வுடைய எல்லையற்ற சக்தியும் அவனது படைப்பாற்றலும்.

[ஒரு மனிதனின் ஆன்மீக இதயம் (**கல்ப்**) சடத்தால் உருவாக்கப்படவில்லை. இது மின்சார அல்லது காந்த அலைகள் போன்றது. இது இடத்தை நிரப்புவதில்லை. ஆனால், அதன் சக்தியும் விளைவும் சடத்துவ இருதயத்தால்(ஒரு மனிதனின் மார்பின் இடது பக்கத்தில் அமைந்துள்ள) இதயத்தால் உருவாக்கப்படுகின்றன. **’அக்ல்** (ஞானம்), **நப்ஸ்**, மற்றும் **ரூஹ்** (ஆன்மா) ஆகியவையும் தனித்தனியே ஆன்மீக இதயம் (**கல்ப்**) போன்ற சாதனங்கள். இந்த மூன்றுசாதனங்களும் ஆன்மீக இதயத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. ஒரு மனிதனின் உணர்வு உறுப்புகள் கண்கள், காதுகள், மூக்கு, வாய் மற்றும் தோல் என்பன உணர்வு நிறங்கள், ஒலி, வாசனை, சுவை மற்றும் குளிர் அல்லது சூடு போன்ற உணர்வுகளை நரம்பு மண்டலத்தின் மூலம் மூளைக்கு செலுத்துகின்றன. மூளை அவற்றை பெற்றவுடன் உடனேயே ஆன்மீக இருதயத்துக்கு அனுப்புகின்றது. ஆன்மீக இருதயம் அதன் நுட்ப சக்தியை உபயோகித்து அவற்றுக்குள் அதன் தெரிவுகளை செய்து முடிவுசெய்கின்றது. இது

பரிந்துரைக்கப்பட்ட மாற்று வழிகளை நிராகரித்து நீக்குகிறது அல்லது அவற்றை ஏற்றுக்கொள்வதை மூளைக்கு தெரியப்படுத்துகிறது, மூளை செயல் நரம்புகள் மூலம் உறுப்புகளுக்கு கடத்துகிறது. அல்லாஹ்ஹு தஆலாவும் விரும்பி இந்த உறுப்புகளுக்கு சக்தியை அளித்தால் உறுப்புகள் தீர்மானிக்கப்பட்ட செயல்களைச்செய்து முடிக்கும். இவ்வாறுதான் தெரிவு செய்யப்பட்டு ஆன்மிக இதயத்தால் முடிவு செய்யப்பட்ட செயல்கள் நடந்தேறும்.

## 12– தற்பெருமை அல்லது அகந்தை (கிப்ர்)

இதயத்தின் பன்னிரண்டாவது நோயானது தற்பெருமையாகும். தான் மற்றவர்களை விட உயர்ந்தவர் என்று கருதுவது. இந்த நோயினால் பீடிக்கப்பட்ட ஒருவர் தான் உயர்ந்தவன் என்று நினைக்கும் போது அவரது இதயத்தில் மனநிறைவை உணர்கிறார். 'உஜ்பு (சுய-காதல்) என்பதும் தான் மற்றவர்களை விட உயர்ந்தவன் எனும் ஒரு உணர்வுதான். ஆனால் இந்த விஷயத்தில் ஒருவர் தன்னை ஒரு குறிப்பிட்ட நபர் அல்லது நபர்களை பற்றி நினைக்காமல் ஆனால் பொதுவான அர்த்தத்தில் தானும் தன் செயல்களும் மற்ற எல்லோரையும் விட உயர்ந்ததாகக் கருதுகிறது. இது மிகவும் வெறுக்கத்தக்க பண்பு மற்றும் தடைசெய்யப்பட்டுள்ளது (ஹராம்). இது ஒருவர் தனது படைப்பாளன்(ரப்பை) மறந்ததற்கான அடையாளம். இந்த நோயினால் பல மார்க்க அறிஞர்களும் அவதிப்படுகிறார்கள்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் ஒரு ஹதீத் ஷரீபில் கூறுகிறார்கள்; "**ஒருவருடைய இதயத்தில் அணுவின் எடை அளவுகூட தற்பெருமை இருந்தாலும் அவர் சொர்க்கத்தில் நுழையமாட்டார்"**. இதற்கு எதிர் மறைவானது "**தவாது**" இது சமத்துவ உணர்வாகும். ஒரு எளிமையான மனிதர் மற்றவர்களை தனக்கு சமனாக வைத்திருப்பார். அவர் தன்னை மற்றவர்களை விட உயர்ந்தவர் அல்லது தாழ்ந்தவரராக எண்ணுவதில்லை. பணிவுஎன்பது மிகவும் மதிப்புமிக்க மனிதப்பண்பு. ஒரு ஹதீத் ஷரீபில் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் கூறுகிறார்கள்; **"பணிவான மக்களுக்கு எவ்வளவு அதிர்ஷ்டம்.".** ஒரு பணிவானவர் தன்னை மற்றவரைவிட கீழானவர் என்று நினைப்பதில்லை. அவர் அடிப்படை மட்டமோ அல்லது சோம்பேறி நபரோ அல்ல. அவர் தனது வாழ்க்கைக்கு தேவையானதை அனுமதிக்கப்பட்ட ஹலாலான முறையில் சம்பாதிக்கிறார் அதிலிருந்து தர்மமாகவும், பரிசாகவும் மற்றவர்களுக்கு வழங்குகிறார். அவர் அறிஞர்கள் அல்லது படித்தவர்களுடன், அறிவாளிகளுடன் அறிமுகத்தை வளர்க்கின்றார். அவர் ஏழை மக்கள் மீது இரக்கத்தையும் கொள்கிறார்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் இன்னுமொரு ஹதீத் ஷரீபில்: **"அனுமதிக்கப்பட்ட (ஹலாலான) வழியின் மூலம் தனது வாழ்க்கையை சம்பாதிக்கும் பணிவான நபர், அவர் ஏற்றுக் கொள்ளக்கூடிய தன்மையைக் கொண்டவர், மற்றவர்களிடம் மிகவும் இலகுவானவர், வேறு யாருக்கும் தீங்கு செய்யாதவர் மிகவும் அழகான மனிதர்** ". இன்னும், **"அல்லாஹு தஆலாவின் பொருட்டு தன்னைத் தாழ்த்திக் கொள்ளும் ஒரு நபர் அல்லாஹு தஆலாவால் உயர்ந்த பதவிகளுக்கு உயர்த்தப்படுவார்".** ஒரு அகந்தயுள்ள நபரை சமனான அகந்தையுடன் நடத்துவது (**ஜாயிஸ்**) அனுமதிக்கப்பட்டது. அல்லாஹுதஆலா தனது படைபினங்களை பற்றி பெருமிதம் கொள்கிறான் (**முத்தகப்பிர்**).

அல்லாஹு தஆலாவுக்கு பெருமை உண்டு (**கிப்ர்**). ஒருவர் பெருமை கொண்டவனை பெருமையாக நடத்தும்போது அதற்காக வெகுமதிகளைப் (**தவாப்**) பெறுவார். ஒருவர் பெருமை கொண்டவனை தாழ்மையாக நடத்தும் போது அவனுக்கு (அவ்வாறு செய்வதன் மூலம்) அநீதி செய்கின்றார். நேரான வழியிலிருந்து விலகியவருடன் பணம் படைத்தவர்களுடனும் பெருமையாக நடப்பது அனுமதிக்கப்பட்டுள்ளது. அவர்களிடம் பெருமையாக பதிலளிப்பது தமது உயர்வான்மையை காட்டுவதற்காகவல்ல ஆனால் உண்மையை விளங்கப் படுத்துவதர்காக. ஒரு போரின் போது எதிரிக்கு எதிராக பெருமையாகவும் அகந்தையாகவும் இருப்பது மிகவும் பலனளிக்கும். இந்த வகை அகந்தை "ஹுயாலா"" என்று அழைக்கப்படுகிறது. ஒரு மனிதன் தர்மம் கொடுப்பது உற்சாகத்துடன் கலந்த சிறிது பெருமையான எண்ணத்தைக் கொண்டிருக்க வேண்டும். அவரது எண்ணம் பெறுநரை நோக்கி அல்ல, மாறாக அதற்கு பதிலாக கொடுக்கப்பட்ட சொத்தை அல்லது பணத்தை இழிவுபடுத்தும் நோக்கம் கொண்டது. இது ஒருவர் சொத்து அல்லது பணத்தின் அடிமை அல்ல என்பதை குறிப்பதற்காக.

ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீத் ஷரீபில் கூறுகிறார்கள்: **"கொடுக்கும் கை பெறும் கையை விட உயர்ந்தது**". நயவஞ்சகர்கள் அல்லது பகட்டாக நடந்து கொள்பவர்களுக்கு முன்னால் பெருமையாக இருப்பது அனுமதிக்கப்பட்டுள்ளது. ஒருவருக்கு கீழ் மட்டத்தில் இருப்பவர்களிடம் தாழ்மையுடன் இருப்பது அனுமதிக்கப்படுகிறது. ஆனால் மிகையானவற்றை தவிர்க்க கவனமாக இருக்க வேண்டும். அதிகப்படியான பணிவு "**தமல்லுக்"** என்று அழைக்கப்படுகிறது. அதிகப்படியான பணிவு ஒருவரின் ஆன்மீக தலைவருக்கு முன் அல்லது மார்க்க அறிஞருக்கு முன் மட்டுமே அனுமதிக்கபடுகிறது. வேறு யாரையும் நோக்கி அதிகப்படியான பணிவு (**தமல்லுக்**) அனுமதிக்கப்படாது. ஒரு ஹதீத் ஷரீபில் தெரிவிக்க ப்பட்டுள்ளது, **"தமல்லுக் இஸ்லாமிய நெறிமுறையின் ஒரு பகுதி அல்ல."**

கவிதை,

> **ஒரு ஆசிரியர் மற்றும் மருத்துவரிடம்,**
> **"தமல்லுக்" செய்ய வேண்டியது அவசியம்.**
> **முந்தையது உள் ஆத்மாவுக்கு, பிந்தையது உடல் ரீதியாக,**
> **இந்த நோய்களைக் குணப்படுத்த சேவை செய்யுங்கள்.**

பல்வேறு பெருமையான நடத்தைகளில் மிக மோசமானது அல்லாஹு தஆலாவை நோக்கி அகந்தையாய் இருப்பது. நம்ரூத் இந்த வகைக்கு ஒரு உதாரணம். அவன் தன்னை கடவுள் என்று அறிவித்தான். அவன் அல்லாஹ் வுடைய தீர்க்கதரிசியை நெருப்பில் வீசினான். ஏனென்றால் அவர் அல்லாஹு தஆலாவால் அவனுக்கு அறிவுரை கூற அனுப்பப்பட்டார். இந்த முட்டாள்களில் பிர்அவ்ன் மற்றொருவன். இவன் எகிப்தில் தன்னை கடவுள் என்று அறிவித்து, தான் எகிப்தின் சக்திவாய்ந்த கடவுள் என்று கூறினான். அல்லாஹு தஆலாவின் மூஸாவை 'அலைஹிஸ்ஸலாத்தை' அவனுக்கு அறிவுரை வழங்க தீர்க்கதரிசி யாக அனுப்பினான். ஆனால் அவன் நம்ப மறுத்துவிட்டான், பின்னர் அவன் சூயஸ் கடலில் அல்லாஹு தஆலாவால் மூழ்கடிக்கப்பட்டான். இதைபோன்று இருக்கும் மக்கள் இந்த பிரபஞ்சத்தை படைத்தவனை நம்பாதவர்கள் நாத்திகர்கள் (**தஹ்ரிஸ்**) என்று அழைக்கப்படுகின்றனர். [இதை ஒத்த நபர்கள்

நாத்திக அணுகுமுறை கொண்ட நபர்கள் ஒவ்வொரு நூற்றாண்டிலும் தோன்றுவார்கள். உதாரணத்திற்கு, மாவோவும் ஸ்டாலினும் மில்லியன் கணக்கான மக்களைக் கொன்று சித்திரவதை செய்தனர். மதத்தை பின்பற்றுபவர்களை இன்னும் இஸ்லாமிய அறிஞர்களை மற்றும் மார்க்கப் புத்தகங்களை அழித்து அவர்களின் தேசங்கள் மீது பயங்கரமும் அராஜகமும் இழைத்தனர். அவர்கள் தங்கள் ஆசைகளை அவர்களின் சக்தியைப் பயன் படுத்துவதன் மூலம் மக்கள்மீது திணித்தனர். இது அவர்களுக்கு திருப்தியைத் தந்தது. அவர்கள். படைத்தவனிடம் இருக்கும் உயர்ந்த குணங்கள் தங்களிடம் இருப்பதாக மருட்சி கொண்டு அதை மற்றவர்களிடம் அவ்வாறு கூறினார்கள். இஸ்லாமிய கல்வி நூல்களை தங்கள் நாட்டிற்கு இறக்குமதி செய்வது மற்றும் அவற்றைப் படிப்பதை தடைசெய்தனர். அல்லாஹு தஆலாவை மற்றும் இஸ்லாத்தை பற்றி பேசியவர்களை கொன்று குவித்தனர். இறுதியாக, அவர்களால் தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை அல்லாஹு தஆலாவின் கோபத்தினால் அழிக்கப்பட்டு நிர்மூல மாக்கப்பட்டனர். அவர்கள் அவர்களின் முன்னைய வரலாற்று சகாக்களைப் போல வெறுப்புடனும் சாபத்துடனும் நினைவு கூரப்படுகிறார்கள்.

மாவோ மற்றும் ஸ்டாலின் தீங்கு விளைவிக்கும் நாத்திக பிரச்சாரத்தினால் மூளைச் சலவைபெற்ற சிலர் சில அரபு நாடுகளில் தந்திரம் மூலம் அதிகார த்தை கைப்பற்றினர். இவர்கள் அந்த கம்யூனிச தலைவர்களைப் பின்பற்றத் தொடங்கி கொடூரமான சர்வாதிகார மற்றும் இஸ்லாத்துக்கு தீங்கு விளைவிக்கும் ஆட்சியை செய்யத் தொடங்கினர். அவர்கள் வரலாற்றிலிருந்து பாடம் எடுக்கவில்லை, அதாவது, முன்னய அந்த கொடுங்கோலர்களில் வாழ்க்கை எப்படி பெரும் சோகத்துடன் முடிந்தது என்பதைபற்றி , இந்த உலகில் அவர்களுக்கு காத்திருக்கும் பெரும் பேரழிவுகள் பற்றி, அல்லது அடுத்த உலகில் கிடைக்கப்போகும் தண்டனைகளை பற்றி அவர்கள் நினைப்பதில்லை.

எங்கள் நபி ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களையும் "இவர்தான் அல்லாஹு தஆ'லாவினால் அனுப்பப்பட்ட நபியா?" என்று பலர் குறைத்துப் பார்த்தார்கள். அல்லாஹு த'ஆலாவால் அனுப்பப்பட்டதா? மக்காவின் நிராகரிப்பவர்கள் "இந்த குர்ஆன் மக்காவின் தலைவர்கள் ஒருவருக்கு இறங்கியிருந்தால் நன்றாக இருந்திருக்கும்" என்று கூறினார்கள். "காபிர்களின் இந்த மேலாதிக்க நடத்தை மார்க்கத்தின் பெரியார்கள் மீது இஸ்லாமிய சரித்திரம் முழுவதிலும் நடந்துள்ளது". தங்கள் உடல்களைக் அமைத்தது பற்றி கூட தெரியாத இந்த சக்தியற்ற உயிரினங்களின் இத்தகைய நடத்தை அவர்களை படைத்த எல்லா வகையிலும் மிகவும் சக்திவாய்ந்த எஜமானனுக்கு எதிரான போர் பிரகடனமாகும். அல்லாஹு தஆலா ஆதம் அலைஹிஸ் ஸலாத்தை படைத்தது வானவர்களுக்கு ஆதமுக்கு ஸஜதா செய்யும்படி கட்டளையிட்டபோது இப்லீஸ் தான் நெருப்பிலிருந்து படைக்கப் பட்டவன் என்றும் ஆதம் களி மண்ணிலிருந்து படைக்க பட்டவர் என்றும் தான் உயர்ந்தவன் என்று கூறி அல்லாஹுவின் கட்டளைக்கு மாறு செய்தான். இப்லீஸ் நெருப்பு ஒளியைக் கொடுப்பதை கவனித்தான். அதன் அழகைப் பார்த்த இப்லீஸ் அது நீர் மற்றும் மண்ணை விட உயர்ந்தது என்று நினைத்தான். உண்மையில் மேன்மை என்பது பணிவினால், மனத்தால் உயர்வாக நினைப்பதால் அல்ல. சொர்க்கத்தில் மண் இருக்கும் அது கஸ்தூரி போல மணக்கும். நெருப்பு என்பது நரகத்தில் தண்டிப்பதற்கு ஆனதாகும். இந்த

உலகில் தீ அது தொட்டதை அழிக்கிறது, ஆனால் மறுபுறம் மண் ஒரு கட்டிடப் பொருளாக பயனுள்ளதாக இருக்கும். உயிரினங்கள் மண்ணில்(பூமியில்) வாழ்கின்றன. புதையல்கள் மண்ணின் கீழ் புதைக்கப்படுகின்றன. கஃபா மண்ணிலிருந்து கட்டப்பட்டது. அதேசமயம் நெருப்பின் ஒளி இரவின் இருளை முடிவுக்கு கொண்டு வருகிறது. பூமிக்கு ஒளி கொடுக்கப்படும் போது மண்ணிலிருந்து பூக்கள் மற்றும் பழங்களை வளர வைக்கிறது. எங்கள் நபிகள் ஹஸ்ரத் முஹம்மது ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் மண்ணில் வாழ்கின்ற படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்கலிலும் மிக உயர்ந்தவர்கள்.

ரசூலுள்ளாஹ் 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் பின்வரும் ஹதீத் ஷரீபில் கூறுகிறார்கள். **"அல்லாஹு தஆலா எங்களுக்கு அறிவிக்கிறான் கிப்ரியா (சர்வ வல்லமை), மேன்மை மற்றும் 'அசாமத் (மகத்துவம்) எனது பண்புகள். இப்பண்புகளை யாராவது என்னுடன் பகிர்வதற்கு முயற்சித்தால் நான் அவர்களுக்கு எந்த கருணையும் காட்டாமல் அவர்களைக் நரகத்தில் எறிவேன்" மற்றும் அணுவின் எடை அளவு இதயத்தில் உள்ள 'கிப்ர்' கொண்ட எவரும் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்"** ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களிடம் சுத்தமான ஆடைகளை அணிந்து சுத்தமான காலணிகளைப் பயன்படுத்த விரும்புவோர் இந்த பிரிவில் சேர்க்கப்படுவார்களா? என்று கேட்கப்பட்டபோது அவர்கள் "**அல்லாஹு தஆலா அனைத்து கிருபையும் (ஜமீல்) உள்ளவன் மற்றும் சாந்தமாய் (ஜமால்) உள்ளவர்களை நேசிக்கிறான் என்று பதில் அளித்தார்கள்"**. வேறுவிதமாக கூறினால், அல்லாஹுதலா அழகான மனிதர்களை நேசிக்கிறான். அசிங்கமான மற்றும் அருவருப்பான தோற்றத்தைத் தவிர்ப்பதற் காக தங்களைத் தூய்மைப்படுத்தும் மக்கள் அல்லது ஒரு அசிங்கமான புனைப்பெயரைப் பெறக்கூடாது என்பதற்காக அல்லது அழகாக தோற்றத் தையும் அழகாகவும் இருக்கவும் தங்களைத் தூய்மை படுத்துபவர்கள் "சாந்தமானவர்கள்" என்று அழைக்கப்படுகிறது.

வாழ்க்கைக்கு உதவக்கூடிய தேவையான பொருட்கள் "வெற்று தேவைகள்" என வகைப்படுத்தப் படுகிறது. வெற்று தேவைகளை பயன்படுத்தி அழகாகவும், அழகாக தோற்றமளிக்கும் வகையிலும் இருப்பது சாந்தமானது என கருதப்படுகிறது. உதாரணமாக, அணிய ஏதாவது இருப்பது ஒரு வாழ்க்கை தேவை. அனைவருக்கும் தங்களை மறைக்க, அழகாக தோற்றமளிக்க ஒரு பாணியில் ஏதாவது அணிவதற்கு ஆடைகள் தேவை. இது அழகு எனப்படும்.
ஒருவரின் உடலில் ஏற்படுத்தப்படும் எந்தவொரு மாற்றமும், உடைகள் அல்லது ஒருவரின் சொத்தில் அல்லது மற்றவர்களுக்கு தங்களின் மேன்மையை காட்டுவதற்காக ஏற்படுத்தப்படும் அலங்காரம், அலங்கரித்தல் அழகு(**ஜீனத்**) என அழைக்கப்படுகிறது. இவை ஒருவரின் உடல், ஆரோக்கியம், மற்றும் மரியாதை மதிப்பு என்பவற்றின் பாதுகாப்பிற்கு தேவையானதை விட அதிகம். ஒரு ஆண் எந்த சூழ்நிலையிலும் "ஜீனத்"ஐ பயன்படுத்த அனுமதிக்கபட வில்லை. பெண்களைப் பொறுத்தவரை அவர்கள் ஜீனத் இன் நகை அலங்கார பொருட்களை மஹ்ரமில்லாத[1]ஆண்கள் முன்னிலையில் அணிவது அனுமதிக்கப்படவில்லை. அல்லாஹு தலாவின் ஒவ்வொரு வேலையும் மற்றும்

[1] இந்த வார்த்தையின் விரிவான வரையறை மற்றும் விளக்கத்திற்கு, தயவுசெய்து முடிவற்ற பேரின்பம் (Endless Bliss) ஃபாசிக்கிள் நான்கு, அத்தியாயம் எட்டை பார்க்கவும்.

செயலும் அழகானது. அவன் அழகான பண்புள்ளவர்களையும் ஒழுக்கமான பழக்கவழக்க முள்ளவர்களையும் நேசிக்கிறான்.

இந்த ஹதீது தற்பெருமையுள்ளவர்கள் மற்ற பாவிகளைப் போலவே தண்டனையை அனுபவிக்காமல் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள் என்று நமக்குத் தெரிவிக்கிறது. சொர்க்கத்தில் நுழைய முடியாதவர்களுக்கான இலக்கு நரகமாகும். ஏனெனில் மறுமையில் இந்த இரண்டையும் தவிர வேறு எதுவும் இல்லை. அணுவளவு நம்பிக்கையுள்ள எவரும் என்றென்றும் நரகத்தில் இருக்கமாட்டார்கள் இறுதியில் சொர்க்கத்தில் நுழைவார்கள். பெரும் பாவத்தை செய்த எவரும் அவர் மரணத்திற்கு முன் தவ்பா செய்யவில்லை யானால் அவர் எவருடைய பரிந்துரையையும் பெறாத நிலையில் முதலில் தண்டனையை அனுபவிப்பார். பின்னர் சுவர்க்கம் நுளைவிக்கப்படுவார். ஒரு நபர் சொர்க்கத்தில் நுழைந்தவுடன், அவர் ஒருபோதும் அதிலிருந்து தூக்கி எறியப்படமாட்டார்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' கூறினார்கள். "**தற்பெருமை யற்ற, துரோகமிழைக்காத, மற்றவர்களின் உரிமைகளை மீறாத எந்த விசுவாசியும் (முஃமின்), கேள்விகணக்கின்றி சுவர்க்கம் புகுவார் என்று கூறினார்கள். மேலும், மற்றவர்களின் உரிமையை மீறிய விசுவாசியும் (முஃமின்) ஒரு களங்கமானவர் மற்றும் குறைபாடுள்ள விசுவாசி." என்று கூறியுள்ளார்கள்"**. வாழ்க்கையின் தேவைகளை பூர்த்தி செய்ய ஒருவர் கடன் வாங்கலாம் ஆனால் ஒருவர் கிடைத்தவுடன் அதை திருப்பிச் செலுத்த வேண்டும். மேற்கூறிய ஹதீத் மற்றவர்களின் உரிமைகளை மீறுவதற்கு எதிராக எச்சரிக்கிறது.

இந்த உரிமைகள்: ஒருவர் தேவை இல்லாமல் கடன் வாங்கும் பணத்தை உள்ளடக்கியது அல்லது வழிமுறைகள் கிடைத்தபின்னும் திருப்பிச் செலுத்தப்படாத கடனை, அல்லது இது சட்டவிரோத அல்லது தடைசெய்யப்பட்ட வழிமுறைகளின் மூலம் கடன் பெறப்படுவதை, மற்றும் மனைவிக்கு (மஹ்ர் பணம்) வழங்கப்படும் என்று உறுதியளிக்கப்பட்டு இன்னும் வழங்கப்படாத பணம், மற்றும் மற்றவர்களுக்கு மார்க்க அறிவை கற்பிக்கும் கடமையை பொறுப்பேற்ற ஒருவர் இதுவரை செய்யாமல் விட்டது என்பவை.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் வபாத்தாகுவதற்கு முன் தனது மருமகன் அலி ரலியள்ளாஹு தஆலா அவர்களை அழைத்து கூறினார்கள். " **யா அலி!**, ஒரு யூதனின் பெயரைசொல்லி அவனுக்கு ஒரு குறிப்பிட்ட அளவு பணம் "**கொடுக்க வேண்டியிருக்கிறது. அதை எனக்காக கொடுத்துவிடும் என்று கூறினார்கள்."** ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் அந்த யூதனிடம் சிறிதளவு பார்லியை கடன் வாங்கியிருந்தார்கள். அவரது கடைசி வேண்டுகோள் அது திருப்பிச் செலுத்தப்பட வேண்டும் என்பதாகும். ஹத்ரத் அப்துல்லா பின் சலாம் ரலியள்ளாஹு த ஆலா அன்ஹு அவர்கள் அக்காலத்தின் முன்னணி யூத அறிஞர்களில் ஒருவர். அவர் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களிடம் ஒரே ஒரு முறை பேசியபின் முஸ்லிம் ஆக மாறினார்கள். ஒரு நாள், அவர் அவரது முதுகில் விறகு சுமந்து செல்வதைக் காண முடிந்தது. மக்கள் சமூகத்தில் அவரை இவ்வாறு பார்த்தவர்கள் பணக்காரராக இருந்தபோது நிறைய பணம் வைத்திருந்த அவர் ஏன் முதுகின் மீது விறகு சுமக்கிறார் என்று

கேட்டார்கள். அவ்வாறு செய்வதன் மூலம் அவரது நப்ஸை பெருமையிலிருந்து பாதுகாக்கவே இவ்வாறு செய்வதாக கூறினார்.

ஒரு பணக்காரன் ஒரு போர்ட்டருக்கு பணம் கொடுப்பதைத் தவிர்ப்பதற்காக தனது சொந்த பொருட்களை எடுத்துச் சென்றார் என்றால் அது கீழானது (**தஸல்லுல்**). எங்கள் நபி 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்களின் **சுன்னத்**தை பின்பற்றுவதற்காகவும் மற்றும் அவரது நப்ஸின் ஆசைகளை உடைக்கவும் இதை செய்தால் இது ஒரு மிக நல்ல செயல். இது வெகுமதிகளை (**தவாப்**) தருகிறது. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள்' ஒரு ஹதீத் ஷரீபில் இவ்வாறு கூறுகிறார்கள். **"ஒன்று சேர்க்கும் நாளில் (கியாமத்) அல்லாஹு தஆலா மூன்று தரத்தில் உள்ளவர்களுடன் பேசமாட்டான், அவர்களை கடுமையாக தண்டிப்பான். அவை: ஒரு வேசித்தனமான வயோதிப மனிதன், பொய் சொல்லும் நாட்டின் தலைவன் ஒரு பெருமையடிக்கும் ஏழை மனிதன்."**

அபு உபைய்தா பின் ஜார்ரா 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் டமாஸ்கஸில் உள்ள முஸ்லீம் இராணுவத்தின் தளபதி, அவரைச் சுற்றியுள்ள மற்றவர்களுடன் சேர்ந்து கலீஃபா ஹத்ரத் உமர் ரலியள்ளாஹு த ஆலா அன்ஹு அவர்களை வரவேற்க வெளியே சென்றார்கள். ஹஸரத் 'உமர் 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹு மற்றும் அவரது அடிமையும் ஒட்டகத்தை மாறி மாறி சவாரி செய்து கொண்டிருந்தனர். டமாஸ்கஸில் நுழையப் போகின்ற சமயத்தில் சவாரி செய்வதற்கு அடிமையின் முறை வந்தது. ஹத்ரத் உமர் ரலியள்ளாஹு த ஆலா அன்ஹு அவர்கள் ஒட்டகத்திலிருந்து இறங்கி தனது அடிமையை ஒட்டகத்தின் மேல் சவாரி செய்ய பணித்தார்கள். கலிபா அவர்கள் ஒட்டகத்தின் கைற்றை பிடித்துக்கொண்டு நடந்தார்கள். ஒரு நீர்வீழ்ச்சியருகில் அவர்கள் உடன் சென்று கொண்டிருந்தபோது தனது காலனியை கழற்றி விட்டு கால்களை தண்ணீரில் விட்டார்கள். அபு உபைய்தா ரலியள்ளாஹு தஆலா அன்ஹு டமஸ்கசின் இராணுவத்தின் தளபதி அவர்கள் "ஓ, முஸ்லிம்களின் கலீஃபாவே! பூமியில் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? அனைத்து டமாஸ்கின்களும், குறிப்பாக பைசண்டைன் கிரேக்கர்கள் இங்கு முஸ்லிம்களின் கலீஃபாவைக் காணவந்துள்ளனர், அவர்கள் உங்களைப் பார்க்கிறார்கள். அவர்கள் ஒரு கணம் அவர்கள் உங்கள் நடத்தையை வெறுக்கலாம்" என்று அவர்களுடன் விவாதிக்கலானார்கள். அதற்கு அந்த புனிதர் "கலிஃபா" அவர்கள் பின் வருமாறு பதில் அளித்தார்கள். "யா! அபுஉபைய்தா! உங்களுடைய இந்த எதிர்ப்பு இங்கு கூடிய மக்களுக்கு மிகவும் தீங்கு விளைவிக்கும். அவர்கள் நினைப்பார்கள் ஒரு நபரின் மரியாதை வாகனங்களில் சவாரிசெய்வது, மற்றும் அலங்கரிக்கப்பட்ட ஆடைகளை அணிந்துகொள்வதும் என்று. உண்மையான மரியாதை ஒரு முஸ்லீமாக இருந்து அல்லாஹு தஆலாவை வணங்குவதாகும் என்று அவர்களுக்குத் தெரியாது. நாங்கள் தாழ்ந்தவர்களாக இருந்தோம்,. [நாங்கள் பாரசீக ஷாக்களின் கைகளில் அடிமைகளாக இருந்தோம்] அல்லாஹு தஆலா எங்களுக்கு இஸ்லாத்தின் மூலம் மரியாதை அளித்தான். நாங்கள் அல்லாஹு தஆலா எங்களுக்கு தந்த இந்த கௌரவத்தை தவிர வேறு ஒரு மரியாதையை நாங்கள் தேடினால் அல்லாஹு தஆலா எம்மை பழைய தாழ்வு நிலைக்கு மறுபடியும் ஆக்குவான். அவன் நம்மை தாழ்த்தக்கூடும் எல்லாவற்றையும் விட தாழ்ந்த நிலைக்கு ஆகக்கூடும். மேன்மையானது"(**இzஸத்**)" இஸ்லாத்தில் உள்ளது. யார்

வேண்டுமானாலும் இஸ்லாத்தின் நெறிமுறைகளைப் பின் பற்று பவர் உயர்ந்தவர். யார் இந்த விதிகளை விரும்பவில்லையோ மற்றும் பிற விஷயங்களில் மேன்மைகளைத் தேடுபவர்கள் தாழ்ந்தவர்கள். இஸ்லாத்தின் மற்றொரு கட்டளை பணிவு. யாராயினும் பணிவுடன் நடந்துகொள்பவர் உயர்ந்தவராக இருக்கும், அவர் மற்றவர்களை விட இன்னும் உயருவார். ஆணவம் (**தகப்புர்**) மற்றும் அகந்தை உள்ள எவரும் தாழ்ந்த நிலையில் இருப்பார்கள்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீத்-ஷரீபில் கூறுகிறார்கள்: **"ஒன்று கூட்டப்படும் நாளில்(கியாமத்), இவ்வுலகில் பெருமயடித்து கொண்டிருந்த மக்கள் அவர்களின் கல்லறைகளிலிருந்து சிறிய எறும்புகள், தாழ்ந்த மற்றும் இழிவானவை போன்று எழுப்ப படுவார்கள். அவர்கள் எறும்பு போல சிறியதாக இருபார்கள் ஆனால் அவை மனிதனின் வடிவத்தில் இருக்கும். எல்லோரும் தாழ்ந்த உயிரினங்கள் என்று பார்ப்பார்கள். அவர்கள் நரகத்தின் "bபோலிஸ்" என்ற ஆழமான பள்ளத்தாக்கில் தூக்கி எறியப்படுவார்கள். இது எல்லாவற்றிலும் கடுமையான தண்டனையைக் கொண்டுள்ளது."**

இந்த பள்ளத்தாக்கு "Bபோலிஸ்" என்று அழைக்கப்படுகிறது ஏனென்றால் அங்கு வீசப்படும் மக்கள் மீண்டும் எப்போது வெளியேறுவோம் என்பதற்கான அவர்களின் நம்பிக்கை அனைத்தையும் இழப்பார்கள். அவை அதன் நெருப்பிற்குள் இழக்கப்படும். அவர்கள் தண்ணீரைக் கேட்கும்போது, அவர்களுக்கு நரகத்தில் வசிப்பவர்களின் சீழ் வழங்கப்படும்".

அபு ஹுரைரா ரலியள்ளாஹு தஆலாஅன்ஹு அவர்கள் மதீனா நகரத்தின் ஆளுநர் முதுகில் விறகுகளை சுமந்து கொண்டிருந்தார். முஹம்மது பின் சியாத் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்களை இனம்கண்டு அவரை சுற்றியுள்ளவர்களிடம் கவனருக்கான வழியை திறவுங்கள் என்று கூறினார். அங்குள்ள இளைஞர்கள் கவர்னரின் தாழ்மையை கண்டு மிரண்டு போனார்கள்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் பின்வரும் ஹதீத்-ஷரீபில் கூறுகிறார்கள் **"தீர்க்கதரிசிகளில் ஒருவரின் உம்மத்தில் ஒரு கர்வமான நபர் இருந்தார். அவர் சஷே எனும் உடையை சுற்றி அணிவார். அதன் கீழ் ஓரங்கள் தரையில் துடைத்து செல்லும். அவரது ஆணவ நடத்தை அல்லாஹு தஆலாவை புண்படுத்தியது, இதனால் பூமி அவரை விழுங்கியது."** மற்றும் **"கழுதையில் சவாரி செய்வது, கம்பளி செய்யப்பட்ட ஆடைகளை அணிவது, ஒரு மாட்டில் பால் கறப்பது போன்ற இந்த செயல்களை செய்பவர் பெருமை உடையவர் அல்ல".**

பின்வரும் பின்வரும் ஏழு காரணங்களால் அகந்தை ஏற்படுகிறது. அறிவு அல்லது மார்க்க அறிவவை பெற்றிருப்பது, நட்செயல்களை மற்றும் வணக்கங்களை புரிவது, பரம்பரை அல்லது குடும்ப அந்தஸ்து, அழகு, வலிமை, சொத்து மற்றும் அந்தஸ்து என்பன. அறிவற்ற நபர்களுக்கு மேல் கூறப்பட்டவை இருப்பது பெருமையை ஏற்படுத்துகின்றன.

அறிவு அகந்தையை ஏற்படுத்தும் அதே நேரம் அதற்குரிய மருந்தும் அறிவுதான். தற்பெருமையை ஏற்படுத்தும் அறிவுக்கான மருந்தை பெற்றுக்கொள்வது மிக

கடினமானது. அறிவு என்பது மிக பெறுமதியானது. அறிவை பெற்றுள்ள மனிதன், தான் உயர்வானவன் மதிப்புமிக்கவன் என நினைக்கிறான். அவருடைய அந்த அறிவு உண்மையான அறிவு அல்ல அது உண்மையில் அறிவீனம் என்று சொல்வது சரியாகும். உண்மையான அறிவு அவரிலுள்ள பலவீனத்தையும் தவறுகளையும் அல்லாஹ்வின் மகத்துவத்தையும் மேன்மையையும் அவருக்கு எடுத்துக்காட்டும். அது அல்லாஹ்வின் மீது பயத்தையும் அவனுடைய படைப்புகள்மீது பணிவையும் ஏற்படுத்தி மற்றவர்களின் உரிமைகளை மதிக்கவும் செய்யும். இவ்வகையான அறிவை கற்பது கடமையாகும். அது "இல்ம் அல்- நfபி" என்று அழைக்கப்படும். அது ஒருவர் அல்லாஹ்வுக்காக மட்டும் வணங்குவதை ஏற்படுத்தும். தற்பெருமை யை ஏற்படுத்தும் அறிவுக்கான தீர்வு பின்வரும் இரண்டு விடயங்களை அறிவதன் மூலம் பெறப்படும்.

முதலாவது: அறிவின் மேன்மை என்பது இன்னொன்றுடன் சார்பானது என்று அறிவது. அது அறிவை பெற்றவரின் துயநோக்கத்தைப் பொறுத்தது. ஒருவர் ஒரு மார்க்க தலைவராக ("இமாம்"அல்லது"முஃப்தி") ஆவதற்கு அல்லது ஒரு மார்க்க அறிஞர் என்ற புகழைப் பெறவேண்டும் என்ற எண்ணத்தில் கல்வியை பெறக்கூடாது.

இரண்டாவது:ஒருவர் தான் பெற்ற கல்வியை கொண்டு அதன்படி வாழ தெரிந்து கொள்ள வேண்டும் அத்துடன் மற்றவர்களுக்கு கற்றுக்கொடுக்கவும் அவற்றை அல்லாஹ்வுக்காக மட்டுமேசெய்யவும் வேண்டும். செயலில்('அமல்) நடைமுறை படுத்தாத அல்லது நேர்மை (இக்லாஸ்) இல்லாத அறிவு ஆபத்தானது. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் பின்வரும் ஹதீதில் கூறுகிறார்கள். **"அல்லாஹு தஆலாவுக்காக அல்லாமல் அறிவை பெற்றவர் நரகத்தின் நெருப்பில் உட்கார வைக்கப்படுவார்".** சொத்து, பதவி, மற்றும் புகழ் ஆகியவற்றைப் பெறுவதற்காக பெறப்படும் கல்வி இந்த வகையை சேர்ந்தது. இவ்வுலக உடைமைகளைப் பெறுவதற்காக கற்பது இன்னும் தெளிவாக கூறினால் ஒருவர் மார்க்ககல்வியை கற்பது தனது உலக உடமைகளை அதிகரிப்பதற்காக இருப்பின் அது தங்க கரண்டியால் மலத்தை உண்பது போன்றது. அத்தகைய நபர் நம்பிக்கையின் திருடன். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் பின்வரும் ஹதீத்-ஷரீபில் கூறுகிறார்கள்; **"உலகச் சொத்தைப் பெறுவதற்காக மதக்கல்வியை பெறுபவர்கள் சொர்க்கத்தின் வாசனையை நுகரமாட்டார்கள்**." உலக சொத்துக்களைப் பெறுவதற்காக அறிவியல் (விஞ்ஞான) கல்வியை பெறுவது அனுமதிக்கப்பட்டுள்ளது.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் மற்றொரு ஹதீது ஷரீபில் இரண்டுவகையான அறிஞர்களைப்பற்றி கூறுகிறார்கள்; **"எனது சமூகத்தில் (**உம்மத்தில்**) அறிஞர்கள், இரண்டு குழுக்களில் இருப்பார்கள். முதல் குழுவினர் அவர்களின் அறிவின் மூலம் மனிதர்களுக்கு பயனுள்ள தாக இருப்பார்கள். அவர்கள் எந்த நன்மையையும் எதிர்பார்க்க மாட்டார் கள். கடல்களில் உள்ள மீன்கள், பூமியில் உள்ள விலங்குகள் மற்றும் பறவைகள், வானம் என்பன இந்த மக்களுக்காக பிரார்த்தனை செய்யும். இதற்கு மாறாகவுள்ள குழுவினர் அவர்களுடைய அறிவு மற்றவர்களுக்கு பயனளிக்காது மற்றும் அவர்களின் உலக உடைமைகளைப் பெறு**

**வதற்காக அறிவை பயன்படுத்துவார்கள். அவர்கள் நரகத்தில் நெருப்பால் ஆன விலங்குகள் அணிய வேண்டிய கட்டாயம் ஏற்படும்."** வானத்திலும் பூமியிலும் உள்ள உயிரினங்கள் எல்லாம் அல்லாஹு தஆலாவை புகழ்ந்து பேசுகின்றன என குர்ஆன் நமக்குத் தெரிவிக்கிறது. ஹதீதில் குறிப்பிட ப்பட்டுள்ள அறிஞர்கள், **"அறிஞர்கள் நபிமார்களின் வாரிசுகள்"**எனக் குறிப்பிடப்பட்டவர்கள். அல்லாஹ்வின் தூதர் ''சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் செய்து காட்டிய உதாரனங்களை பின்பற்றி ஒழுகியவர்கள். இஸ்லாத்திற்கு இணங்க தனது மத நடைமுறைகளை செய்யும் அறிஞர்கள் சூழலில் ஒளி பரவச்செய்யும் ஒளியின் மூலாதாரம் போன்றவர்கள்.

பின்வரும் ஹதீஸ்கள் பிரபல்யமானவை: "**ஒன்றுகூட்டப்படும் 'கியாமத்' நாளில், ஒரு மார்க்க அறிஞர் நரகத்தில் தள்ளப்படுவார். இவருக்கு அறிமுகமான நரகில் இருப்பவர்கள் அவரைச் சுற்றிகொண்டு கேட்பார்கள். அல்லாஹு தஆலாவின் கட்டளைகளை மற்றவர்களுக்கு கற்பித்தவர்களில் ஒருவராக உலகில் அவர் இருந்தபோதிலும் ஏன் அவர் இந்த வழியில் தண்டிக்கப்படுகிறார் என்று கேட்பார்கள். அதற்கு அவர் பதிலளிப்பார்: ஆம்! நான் வேண்டாம் என்று சொன்ன பாவங்களை நான் செய்தேன், நான் செய்யும்படி சொன்னதை நானே செய்யவில்லை, அதுதான் நான் இப்போது இந்த தண்டனையை அனுபவிக்கிறேன்"** என்று கூறுவார். மற்றும் "**நான் (மிஃ'ராஜ்) இரவில் உயரும் வானத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டபோது நான் சிலரைப் பார்த்தேன். அவர்கள் உதடுகளை நெருப்பால் செய்யப்பட்ட கத்தரிக்கோலால் வெட்டப்படுவது கொண்டு தண்டிக்கப்படுகிறார்கள். நான் அவர்களைப் பற்றி ஜிப்ரயீலிடம் கேட்டேன். அதற்கு அவர், அவர்கள் மார்க்க பிரச்சாரகர்கள் மற்றவர்களுக்கு செய்யுமாறு உபதேசம் செய்ததை அவர்கள் செய்ய மாட்டார்கள்"**. மற்றும் **"நரகத்தில் உள்ள வீரர்கள்** (மலக்குகள்) **சிலை வழிபாட்டாளர்களை தண்டிக்கமுன், பாவம்செய்த மனனம் செய்த ஹாபில்களை தண்டிப் பார்கள். ஏனெனில், இது ஒருவருக்கு தெரிந்தே செய்யப்படும் பாவம் ஒருவர் தெரியாமல் செய்யப்படும் பாவத்தை விட மோசமானது."**

நபிகளாரின் ஸஹாபாக்கள் மிகவும் ஆழமான அறிவு கொண்ட அறிஞர்கள்; ஆகையால், அவர்கள் பெரிய பாவங்களைப்போல் சிறு பாவங்களை பற்றியும் பயந்தார்கள். மேல் கூறப்பட்ட ஹதீதில் குறிப்பிடப்பட்ட மனனமிட்டவர்கள் (ஹாஃபிஸ்கள்) முந்திய வேதங்களின் ஏற்பாடு புத்தகங்களை மனனமிட்ட வர்களாக இருக்கலாம். ஏனெனில் பாவமுள்ள முஸ்லிம்கள் காபிர்களை விட பெரிதாக தண்டிக்கப்பட மாட்டார்கள். அல்லது, ஒருவேளை, அவர்கள் இந்த உம்மத்தைச் சேர்ந்த ஹாஃபிஸ்களாக இருந்தால் அவர்கள் ஹாராம்களை செய்து பாவங்களிலிருந்து தவிர்ந்து கொள்ளாமல் காபிர்களாக மாறியிருக்கலாம்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் ஒரு ஹதீதில் **"அறிஞர்கள் தீர்க்கதரிசிகளின் நம்பகமான பிரதிநிதிகள், அவர்கள் அரசாங்க அதிகாரிகளுடன் ஒன்றிணையாத வரைக்கும். உலகப் பொருட்களை தேடி ஓடாதவரைக்கும்**". **அவர்கள் எப்போது அரசாங்க அதிகாரிகளுடன் ஒன்றிணையத்தொடங்கி உலகப் பொருட்களை தேடி ஓடுகிறார்களோ**

**அப்போது அவர்கள் நபிமார்களின் நம்பிக்கை பொறுப்பை மீறியதாக கருதப்படுகிறார்கள்".**

ஒரு நம்பகமான நபர் அவரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள பொருட்களைப் பாதுகாப்பார் என எதிர்பார்க்கப்படுகிறது, இதேபோல், மார்க்க அறிஞர்களும் மார்க்கஅறிவை ஊழலிலிருந்து பாதுகாக்க வேண்டும். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம், அவர்கள் ஒருமுறை, கஃபாவை தரிசிக்க வருகை தந்தார்கள். அவர்களிடம் யார் மோசமான நபர் என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள். **"மோசமானவர்களை கேட்காதே! நல்லவர்களைப் பற்றி கேளுங்கள். தீய அறிஞர்கள் எல்லா மனிதர்களிலும் மோசமானவர்கள்"** என்று பதில் அளித்தார்கள். ஏனெனில், அவர்கள் தெரிந்தே பாவங்கள் செய்கிறார்கள்.

ஈஸா 'அலைஹிஸ்-சலாம்' அவர்கள் ஒருமுறை, **"தீய அறிஞர்கள் நீரோட்டத்தை தடுக்கும் ஒரு பாறை போன்றவர்கள். பாறை வழியாக நீர் ஊடுருவ முடியாது. எனவே, பாறை தண்ணீரின் ஓட்டத்தை நிறுத்துகிறது."** என்று கூறினார்கள். ஒரு தீய மார்க்க அறிஞர் ஒரு சாக்கடையை போன்றவர் வெளிப்புறமாக இது உறுதியான கலை வேலைபாடு, ஆனால் அது கழிவுநீரால் நிரப்பப்பட்டது. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் இவ்வாறு கூறுகிறார்கள். **"ஒன்று கூட்டப்படும் (கியாமத்) நாளில் மத அறிஞர்களுக்கு அவர்கள் தங்கள் அறிவிலிருந்து பயன் அடையாத காரணத்துக்காக கடுமையான தண்டனைகள் விதிக்கப்படும்**". இந்த காரணத்திற்காக நயவஞ்சகர்கள், வேறுவிதமாகக் கூறினால், அந்த முஸ்லிம்கள் போல் நடிக்கும் காஃபிர்கள் நரகத்தின் ஆழமான பகுதிக்குச் செல்வார்கள். ஏனெனில், அவர்கள் தெரிந்தும் பிடிவாதமாக காபிர்களாகவே இருந்தார்கள். மத(மார்க்க) அறிவை கற்றுக் கொள்ளும் நபர் நிரந்தர விமோசனத்தை அல்லது நிரந்தர தண்டனைகளைப் பெறுகிறார்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் இவ்வாறு கூறுகிறார்கள்.: "**சிலர் நரகில் தண்டிக்கப்படுவார்கள். நரகம் மிகவும் மோசமான வாசனையை வெளியிடும். அவர்களைச் சுற்றியுள்ள மற்றவர்கள் அதனால் நெருப்பைவிட மிகவும் மோசமான வாசனை யிலிருந்து பாதிக்கப்படுவார்கள். அவர்களின் துர்நாற்றம் வீசுவதற்கான காரணம் பற்றி கேட்டபோது, அவர்கள் தாங்கள் மத அறிஞர்கள் ஆனால் தங்கள் மத அறிவுக்கு ஏற்ப செயல்படவில்லை என்று பதிலளிப்பார்கள்."**

அபு தர்தா ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் ஒரு தடவை; "ஒரு மத அந்தஸ்தில் ஏதேனும் ஒரு பதவியை வகிக்கும் ஒரு நபர் அவரது அறிவுக்கு ஏற்ப அவரது மார்க்க நடைமுறைகளைச் செய்யவில்லை என்றால் அவரை ஒரு அறிஞர்(ஆலிம்) என்று அழைக்க முடியாது." இப்லீசுக்கு எல்லா மதங்களையும் பற்றிய அறிவு இருந்தது, ஆனால் அதற்கேற்ப அவனது மத நடைமுறைகளைச் செய்யவில்லை. ஒருநபர் பாலைவனத்தில் தனியாக இருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அவரிடம் பத்து வாள்கள் மற்றும் பிற ஆயுதங்கள் உள்ளன. அவர் இந்த ஆயுதங்களைப் பயன்படுத்த மிகவும் அறிவைக் கொண்ட மிகவும் தைரியமான நபர் என்றும் கருதுங்கள். அவர் அந்த ஆயுதங்களை தாக்கும் சிங்கத்துக்கு எதிராக பயன்படுத்தாவிட்டால், ஆயுதங்கள் என்ன பிரயோசனம்? அவை நல்லவை அல்ல, அதே மாதிரி ஒருவர் ஒரு லட்சம்

மார்க்க கேள்விகளுக்கு பதில்களைக் கற்றுக்கொள்வது, அவர் இந்த அறிவை நடைமுறையில் பிரயோகிக்காவிட்டால் ஒரு நன்மையும் பயக்காது. அதேபோல், தனது நோயை எவ்வாறு சரிசெய்வது என்று தெரிந்த ஒரு நோய்வாய்ப்பட்ட நபருக்கு அவர் நோயை தீர்ப்பதற்கு அந்த அறிவை பயன்படுத்தாவிட்டால் அவரது நிரப்பமான அறிவால் பயனடையவில்லை.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்:**"உலகமுடிவு நெருங்கும் காலகட்டத்தில், பெரும்பாலான வணக்கவாளிகள் அவர்களின் மார்க்கம் பற்றி அறியாதவர்களாக இருப்பார்கள், மேலும் மார்க்கத்தில் அதிகாரபூர்வமான பதவி நிலைகளில் உள்ள பெரும்பான்மையான ஆண்கள் பாவிகளாக(பாசிக்) இருப்பார்கள்".**

இந்த ஹதீதில் குறிப்பிடப்பட்டுள்ள பாவிகளான மார்க்க வாதிகள் என்பது அவர்கள் பொருள்சார் ஆதாயங்களை பெறுவதற்காக அரசாங்க அதிகாரி களுடன் சேர்ந்திருப்பவர்கள். சுஃப்யான்-இ-சவ்றி 'ரலியள்ளாஹு த ஆலா அன்ஹு' வின் கூற்றுப்படி நரகத்தில் ஒரு சிறப்பு குழி உள்ளது, அது நெருப்பால் ஆனது. அது அரசாங்க அதிகாரிகளுடன் சேர்ந்திருக்கும் குர்ஆனை மனப்பாடம் செய்த நயவஞ்சகர்களின் தண்டனைக்கு மட்டுமே இந்த குழி ஒதுக்கப்படும். மீண்டும், சுஃப்யான்-இ-சவ்றி 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹு' அவர்கள் பின்வருமாறு அறிவிக்கிறார்கள்: குர்ஆனுக்கு விளக்கமளிக்கும் அறிவில் நான் மிகவும் முன்னேறினேன். ஒரு வசனத்தை முப்பத்து மூன்று வழிகளில் வித்தியாசமாக என்னால் விளக்க முடிந்தது. பின்னர், நான் ஆட்சியாளர் (சுல்தான்) கொடுத்த வரவேற்புக்குச் சென்றேன் அந்த வரவேற்பில் நான் உட்கொண்ட உணவு காரணமாக என் எல்லா அறிவையும் இழந்தேன். முஹம்மது பின் சலாமா 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹு' அவர்கள் கூறுகிறார்கள். "சிலபொருள் ஆதாயங்களைப் பெறுவதற்காக அரசாங்க விவகாரங்களுக்கு பொறுப்பான நபர்களின் வாசலில் காத்திருக்கும் குர்ஆனை மனமிட்டவர்களின்(ஹாபில்) நிலை ஒரு அழுக்கு மீது அமர்ந்திருக்கும் ஒரு ஈவை விட மோசமானது" ஒரு ஹதீது ஷரீபில் "**அல்லாஹு தஆலா வினால் அறிவு கொடுக்கப்பட்ட நபர் ஒருவர் அந்த அறிவை மற்றவர்களுக்கு எத்தி வைக்காதவர்கள் நியாயத்தீர்ப்பு நாளில் அவரது கழுத்தில் நெருப்பால் செய்யப்பட்ட ஒரு விலங்குடன் கடுமையாக தண்டிக்கப்படுவார்கள்**".என்ற ஹதீது முந்தைய பந்திகளில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளது. அறிவை தகுதி வாய்ந்த நபர்களுக்கு கற்பிக்காத மார்க்க வாதிகள் என்று இந்த ஹதீதில் குறிப்பிடப்பட்டுள்ளது. குர்ஆனின் சூரா நிசா ஐந்தாவது ஆயத்தில் "**உங்களிடம் உள்ளவைகளை தீயவர்களுக்கு கொடுக்க வேண்டாம்**" இது கீழான மற்றும் நயவஞ்சகர்களுக்கு கற்றுக்கொடுப்பதை தடை செய்கிறது.

பின்வரும் ஹதீது, **"இஸ்லாம் எல்லா இடங்களிலும் பரவும். முஸ்லிம் வணிகர்கள் கப்பல்கள் மூலம் பெரிய கடல்கள் வழியாக வர்த்தகத்துக்காக நாடுகளுக்கு சுதந்திரமாக பயணிப்பார்கள். முஸ்லீம் வீரர்கள் தங்கள் குதிரைகளை சவாரி செய்து பிற நாடுகளுக்குச் செல்வார்கள். பின்னர், சில குர்ஆனை மனனமிட்ட (ஹாஃபிஸ்)கள் தோன்றுவார்கள் அவர்கள் என்னை விட குர்ஆனை சிறப்பாக ஓத முடியுமா? என்னை விட அதிகமாகத் தெரிந்த யாராவது இருக்கிறார்களா? என்று பெருமையாக கூறக்கூடியவர்கள். அவர்கள் நரகத்தின் விறகாகஇருக்கும்,"** என்று சுட்டிக்காட்டுகிறது. அவர்கள்

குர்ஆனை ஓதுவது நடிப்பாகும் அவர்களுடய பெருமை அவர்களை நரகத்திற்கு அழைத்துச் செல்லும்.

மற்றொரு ஹதீது-இ-ஷரீபில்: **"தான் அறிஞர் என்று கூறும் எவரும் ஒரு அறிவற்றவர்.**" எடுத்துக்காட்டாக, ஒவ்வொரு கேள்விக்கும் பதிலளிப்பதன் மூலமும் அல்லது அவர்கள் பார்க்கும் எல்லாவற்றிற்கும் ஒரு விளக்கம் கொடுப்பதன் மூலமும் தங்களை எல்லாவற்றையும் பற்றி அறிந்தவர் என முன்வைக்கும் மக்கள் உண்மையில் அவர்களின் அறியாமையைக் வெளிக் காட்டுகிறார்கள். எனக்கு பதில் தெரியாது ஆனால் படித்து பின்னர் பதிலளிப்பேன் என்று கூறுபவர் அதைவிட ஒரு மேம்பட்ட அறிஞர். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களிடம் பூமியில் எது மிகவும் மதிப்புமிக்க இடம் கேட்டபோது "**எனக்குத் தெரியாது. என் இறைவன் எனக்குத் தெரிவித்தால், நான் உங்களுக்குச் சொல்வேன்" என்று அவர் பதிலளித்தார்.** பின்னர், இதை அவர் ஜிப்ரயீல் 'அலைஹிஸ்ஸமிடம்' கேட்டார்கள். அவரிடமிருந்து இதேபோன்ற பதிலைப் பெற்றார். பின்னர், ஜிப்ரயீல் அல்லாஹுவிடம் அல்லாஹு தஆலாவிடம் கேட்டார். "**மஸ்ஜித் (மசூதிகள்**)" என்ற பதிலைப் பெற்றார்.

குரானின் சூரா அஃராபின் நூற்று தொண்ணூற்றெட்டாவது ஆயத் உறுதி படுத்துகிறது "**மன்னிப்பவராகவும் மற்றும் 'கட்டளைம'ருப்**' ஆக இருங்கள்". ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் அதன் பொருளை விளக்குமாறு கேட்டார்கள். ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் "எனது ரப்பிடம் (அல்லாஹுதஆலாவிடம்) இருந்து கேட்டு வருகிறேன் என்று போனார். அவர் திரும்பி வந்து அல்லாஹ் கட்டளையிட்டான் "**உங்களிடமிருந்து விலகிச் செல்வோருடன் நெருங்கி இருங்கள், உங்களுக்கு கொடுக்காதவருக்கு தாராளமாகக் கொடுங்கள், உங்களை ஒடுக்குபவர்களை மன்னியுங்கள்**" என்று கூறினார்கள். !

ஷ'ஃபி ரஹிமஹுள்ளாஹ் த ஆலா விடம் ஒரு கேள்வி கேட்கப்பட்ட போது அவர் பதில் தெரியாது என்று என்று கூறினார்கள். அதற்கு கேள்வி கேட்டவர்கள்; அவர் ஈராக்கின் முப்தியாக இருந்து கொண்டு "எனக்கு தெரியாது" என்று சொல்வது அவருக்கு தகுதியல்ல என்று அவரை கண்டித்தார்கள். அவருடைய பதில்: "மலக்குகளின் மிகப் பெரியவரே தனக்கு தெரியாது என்று ஒப்புக் கொண்டனர் என்ற உண்மை இருக்கும்போது, நான் ஏன் எனக்குத் தெரியாதவற்றுக்காக எப்போதும் குற்றம் சாட்டப்பட வேண்டும்?"என்று கூறினார்.

இமாம் அபு யூசுப் 'ரஹிமஹுள்ளாஹ் த ஆலா' அவர்கள் ஒரு கேள்விக்கு தனக்கு தெரியாது என்று பதில் அளித்தார்கள். அதற்கு அவர் பைத்துல் மாலிடமிருந்து உதவித்தொகையை அவர் பெற்றுக்கொண்டு அவர்களின் கேள்விக்கு பதிலளிக்கத் தவறிவிட்டார் என்று அவர்கள் அவரை நிந்தித்தபோது அவர், "எனக்குத் தெரிந்த அளவுக்கே நான் பணம் பெறுகிறேன். எனக்குத் தெரியாத அளவுக்கு பைத்துல் மால் எனக்கு குறைத்து பணம் தருகின்றது" என்று பதிலளித்தார்கள்.

நப்ஸை பின்பற்றாத அறிவற்ற நபர்களுடன் நட்பை ஏற்படுத்துதல் தங்களின் நப்ஸுக்கு அடிமையான மார்க்கவாதிகளுடன் நட்பை ஏற்படுத்துவதை விட சிறப்பாக இருக்கும். ஒரு மார்க்கவாதி அவர் ஒரு பதவியை வகிப்பதால்

பெருமைப்படுவது அவரது அறியாமையின் அறிகுறியாகும். அறிவைக் கொண்டிருக்கும் ஒருவர் பணிவாக மற்றும் அடக்கமாக இருந்து ஆணவம் மற்றும் அகந்தைக்கு எதிராக அவரை பாதுகாக்கிறார். கர்வமாக அல்லது பெருமிதமாக இருப்பது தடை செய்யப்பட்டுள்ளது. பெருமை (**கிப்ர்**) என்பது அல்லாஹு தஆலாவின் ஒரு பண்பு. பெருமையாக **கிப்ரியா** இருப்பது அல்லாஹ்வுக்கு பொருத்தமான பண்பு. தன்னுடைய நப்ஸ் பணிந்த நிலையில் உள்ளது என்று கருதும் ஒருவருடைய நிலை அல்லாஹுவின் பார்வையில் உயர்ந்ததாகும். மாறாக, தன்னை தகுதியான வராகவும் உயர்ந்தவனாகவும் நினைக்கும் ஒருவருக்கு அல்லாஹு தஆலா வின் பார்வையில் எந்த மதிப்பும் இருக்காது. அகந்தையாகவும் பெருமையுமாகவும் இருப்பதன் தீங்கு பற்றி தெரியாத எந்த அறிஞரும் உண்மையான அறிஞராக கருதப்படக்கூடாது. அதிக அறிவைப் பெறுவது ஒருவரின் அல்லாஹு தஆலா வின்மீதான பயத்தை அதிகரிக்கிறது, அவர் பாவங்களைச் செய்யத் துணியமாட்டார். இந்த காரணத்திற்காக, எல்லா தீர்க்கதரிசிகளும் பணிவான குணமுள்ளவர்களாக இருந்தனர். அவர்கள் அல்லாஹுத்தஆலாவை மிகவும் பயந்தார்கள். அவர்கள் கர்வம், சுயபற்று ('உஜ்ப்) போன்ற தீமைகளைக் கொண்டிருக்கவில்லை. ஒருவர் இளைஞர்களையும் பாவிகளையும் (**பாசிக்குகள், ஃபாஜிர்கள்**) கர்வமாக நடத்தக்கூடாது. இருப்பினும், கர்வமுள்ள மற்றவர்களை சமமான கர்வமுடன் நடத்துவது அவசியம். ஒரு கற்ற நபர் அறியாத பாவம் செய்பவரை கண்டால் "இந்த நபர் பாவம் செய்கிறார் ஏனென்றால் அவருக்குத் தெரியாது". ஆயினும் அவர்களைப் பற்றிய அறிவு இருந்தும்கூட நான் பாவங்களைச் செய்கிறேன்" என்று அவர் தனக்குத்தானே சொல்லிக் கொள்ள வேண்டும். அவர் ஒரு கற்ற நபரைப் பார்க்கும்போது; "இந்த நபருக்கு என்னை விட அதிக அறிவு இருக்கிறது அவர் அவரது அறிவுக்கு இடம் கொடுக்கிறார், அதன் மூலம் இக்ஹ்லாஸோடு இஸ்லாத்தின் நடைமுறைகளை செய்கிறார் அதேசமயம் நான் அப்படி இல்லை" என அவர் சிந்திக்க வேண்டும். அவர் ஒரு வயதானவரைப் பார்க்கும் போது "இந்த நபர் என்னை விட அதிக வழிபாட்டை செய்திருக்கலாம் என்று சொல்ல வேண்டும், அவரை விட இளமையான ஒருவரை பார்க்கும்போது "இளைஞர்களுக்கு என்னை விட குறைவான பாவங்கள் உள்ளன" என்று நினைக்க வேண்டும், இன்னும் அவரது வயது நபரை பார்க்கும்போது என் பாவங்களைப் பற்றி எனக்குத் தெரியும், அவருடைய செயல்களைப் பற்றி அல்ல என அவர் தன்னைத்தானே சொல்லிக் கொள்ள வேண்டும். அக்கிரமங்கள் அநீதிகள் நடப்பது தெரியவருமாயின் அவை தணிக்கை செய்யப்பட வேண்டும். அவர் ஒரு புதுமையான (**பித்அத்**)செய்பவர் அல்லாது ஒரு காபிரை கண்டால், "ஒரு நபரின் நம்பகத்தன்மை அவரது மவ்த்து வரை நிலை மாற்றங்களுக்கு ஏற்ப பாதிக்கப்படக்கூடியது என்னுடைய முடிவு எப்படி முடிவடையும் என்று எனக்குத் தெரியவில்லை" என அவர்சொல்லிக் கொள்ள வேண்டும். அத்தகையவர்கள் கூட ஒரு முஸ்லீமை கர்வப்படுத்தக்கூடாது. இருந்தும், நாம் அவர்களை விரும்பக்கூடாது. உண்மையில், பித்அத் களை பரப்ப முயற்சிக்கும் நபர்கள் அல்லாஹ்வின் தூதர் 'சல்லள்ளாஹு அலைஹிவசல்லம்' அவர்களின் சுன்னத்துக்கு எதிரானவர்கள் விரோதமான வர்கள். அவர்கள் சுன்னத்தின் (நூரை) பிரகாசத்தை அணைக்க முயற்சி செய்கிறார்கள்.இன்னும் பித்அத்களையும் தீங்கு விளைவிக்கும் கொள்கை களை பரப்பவும் அஹ்லுஸ்சுன்னா அறிஞர்களை மலினப்படுத்தவும்,

குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் பிழையான அர்த்தங்களை கூறவும் மொத்தத்தில் இஸ்லாத்தை உள்ளிருந்து அழிக்க முயல்கிறார்கள்.

[எங்கள் அமைப்பு வெளியிட்ட புத்தகங்கள் அனைத்தும் நன்கு அறியப்பட்ட "அஹ்லுஸ்-சுன்னத் அறிஞர்களின்" கிதாபு'களிலிருந்து மொழி பெயர்க்கப் பட்டுள்ளன. இவைகளில் நம்முடைய சொந்த ஊட்டங்கள் எண்ணங்கள் எதுவும் இல்லை. எங்களின் எல்லா நூல்களிலும் அஹ்லுஸ்-சுன்னத் அறிஞர்களின் மகத்துவத்தைப் பற்றி இளைஞர்களுக்கு விளக்க முயற்சிக்கிறோம். நாங்கள் அவர்களுக்கு மறுமையில் (ஆகிரத்தில்) மகிழ்ச்சியை அடைவதற்கான ஒரே வழி அஹ்லுஸ்சுன்னத் அறிஞர்கள் கற்பித்தவழி மட்டுமே என்று சொல்கிறோம். நாங்கள் மனிதகுலத்தின் இரட்சிப்புக்கானதும் மகிழ்ச்சிக்கானதுமான இந்த வழியை அறிமுகப்படுத்த முயற்சி செய்கிறோம். இந்த சேவைகளுக்கு உலகாயுத நன்மைகளை நாங்கள் யாரிடமிருந்தும் எதிர்பார்க்கவில்லை.

சரியான பாதையில் இருந்து விலகியவர்கள், அல்லது "லா-மத்ஹபியா" அல்லது இஸ்லாத்தின் அனைத்து வகையான எதிரிகளும் இந்த நூல்களை நாங்கள் விநியோகிக்க எடுக்கும் முயற்சியை விரும்ப மாட்டார்கள். அதனால் எங்கள் நூல்களைப் பற்றிய அசாதாரண பொய்கள் மற்றும் அவதூறுகள் தொடங்கி விடுவார்கள். அவர்கள் போதிய இஸ்லாமிய அறிவைக் கொண்டிருக்கவில்லை என்பதால் அவர்களால் இந்த விஷயத்தில் எங்களுக்கு சவால் விட முடியாது. நாங்கள் இந்த நூல்களை விற்பனை செய்வதில்லை என்பதால் விற்பனை செய்து லாபம் ஈட்டுகிறோம் என்றும் அவர்களால் கூற முடியாது. அனைவருக் கும் தெரியும். பெரும்பாலான நேரங்களில் இந்த புத்தகங்களை கேட்கும் எவருக்கும் நாங்கள் இலவசமாக அனுப்புகிறோம்.

இன்னும் சிலர் இந்த நூல்களில் ஆதாரமற்ற தகவல்கள் உள்ளது என்று மற்றவர்களிடம் சொல்கிறார்கள் என்று கேள்விப்படுகிறோம். ஆனால் நாம் எந்த பகுதி ஆதாரமற்றது என்பதைக் காட்டும்படி கூறும்போது "ஓ! நாங்கள் அதை மற்றவர்களிடமிருந்து கேட்டோம் என்று அவர்கள் எங்களிடம் சொன்னார்கள். " அல்ஹம்துலில்லாஹ்". மனச்சாட்சியுள்ள இளைஞர்கள் இந்த பொய்களையும் அவதூறுகளையும் நம்பவில்லை. எங்கள் புத்தகங்களைப் படிப்பவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது.

முஸ்லிம்களை பிளவுபடுத்த முயற்சிக்கும் நாசகார கூட்டங்களுக்கு அனுதாப ப்படக்கூடாது. ஒருவரின் வாழ்வு எப்படி முடியும் என்பதை நித்திய கடந்த காலத்தில் அல்லாஹு தஆலா தீர்மானித்திருக்கிறான் என்பதையும் ஒருவர் சிந்திக்க வேண்டும். இங்கு வாழும் போது மறுமையில் யாருக்கு அதிக அந்தஸ்துகள் கிடைக்கும் என்பதை ஒருவர் நிச்சயமாக அறிய முடியாது. மார்க்கத்தில் பொறுப்பான பதவிகளிலிருந்த அநேகம் பேர் ஈமான் அற்ற நிலையில் இறந்தனர். காஃபிர்களாக வாழ்ந்த பலர் தங்கள் முடிவை ஈமானுடன் முடித்துக் கொண்டனர். மேலே சொன்ன எல்லா விஷயங்களையும் கருத்தில் கொண்டு ஒரு காஃபிர் நரகத்தில் இருப்பார் என்று கூறும் ஒரு நபர் அவர் தான் சுவர்க்கத்தில் இருப்பார் என்று கூறுவதும் தனக்கு மறைவான அறிவு (இல்முல் கைப்) உண்டு என்று வாதிப்பதாகும். அது அவரை ஈமான் அற்ற நிலைக்குத் தள்ளும். எனவே, யாரைப்பற்றியும் அப்படி கருதுவது அனுமதிக்கப்படாது.

ஒரு நபர் பின்வருமாறு வாதிடலாம்: மற்றவர்களுக்கு ஆலோசனை வழங்குவது அவசியம். அதாவது, காஃபிர்களுக்கு மற்றும் சரியான பாதையை விட்டும் விலகியவர்களுக்கு, இன்னும் அவர்கள் தடைசெய்யப்பட்ட செயல்களில் அவர்களை ஈடுபடுவதைத் தடுக்க முயற்சித்தல்வேண்டும். ஆனால் நீங்கள் அவர்களை விட உங்களைக் குறைவாக எண்ணுபவர்களாக இருந்தால் அவர்களுக்கு அறிவுரை வழங்க முடியாது என்பது வெளிப்படை. தவிர, ஒரு நபர் அவரது உலக வாழ்க்கையை பிரதிபலிக்கும் நிலையிலேயே இறந்துவிடுவார் என்பது எங்கள் இறைவன் செயல்படும் நியதியாகும். சில நேரங்களில் இதற்கு நேர்மாறாகவும் நிகழ்கிறது, ஆனால் இந்த நிகழ்வுகள் அரிதானவை. மேலும், அல்லாஹு தஆலா "விசுவாசிகளைப் புகழ்ந்து அவர்கள் காஃபிர்களை விட உயர்ந்தவர்கள்" என்று கூறுகிறான். நாங்கள் இந்த வாதத்திற்கு பின்வருமாறு பதிலளிப்போம்: அல்லாஹு தஆலா **"அவர்களை விரும்ப வேண்டாம்"** என்று கட்டளையிட்டதால் அவர்களை விரும்பாமல் இருப்பது அவசியம். அவர்களை விட நாங்கள் உயர்ந்தவர்கள் என்பதால் அல்ல. பின்வரும் உதாரணம் இந்த விஷயத்தை மேலும் தெளிவு படுத்துகிறது.

ஒரு ஆட்சியாளர் (சுல்தான்) தனது இளம் மகனை ஏதோ தொலைதூர இடத்திற்கு ஒரு வேலைக்காரன் உடன் அனுப்புகிறார். அவர் தானாக நல்லமுறையில் நடக்கவில்லை என்றால் அவருக்கு அடிக்கும்படி வேலைக்காரனை அறிவுறுத்துகின்றான். பின்னர், மகன் பிழையாக நடக்கும்போது ஆட்சியாளர் அறிவுறுத்தலின் படி வேலைக்காரன் அவரை அடிக்கிறான். வேலைக்காரன் ஆட்சியாளர் மகனை அடிக்கும்போது தான் அவரை விட உயர்ந்தவர் அல்ல என்று அவனுக்குத் தெரியும். எனவே அவருடன் கர்வமாக இருக்கமுடியாது. இதேபோல், காபிர்களை விரும்பாத ஒரு விசுவாசி இதற்கு எடுத்துக்காட்டு. "விசுவாசிகள் உயர்ந்தவர்கள்" என்று அல்லாஹு தஆலா தெரிவிக்கின்றான் விசுவாசிகள் உயர்ந்தவர்கள் என்பது அவர்கள் உயர்ந்தவர்கள் என்பதால் அல்ல மாறாக அது அவர்களின் உயர்ந்த நம்பிக்கையின் காரணமாக உயர்ந்தவர்கள். நம்பிக்கையின் உரிமையாளர்கள் உயர்ந்தவராக இருங்கள். முடிவில்லாத மேன்மை கடைசி மூச்சில் தன்னைக் காண்பிக்கும்.

ஒரு குறிப்பிட்ட வழிபாடு மதிப்புமிக்கதாக இருப்பது சில நிபந்தனைகளை பொறுத்தது. ஒரு முஸ்லீம் பயனற்ற விஷயங்களுடன்(**மா-லா-யா-னி**) தனது நேரத்தை வீணடிப்பதில்லை. முதல் கலீஃபா ஹஸரத் அபுபக்ர் ரலியள்ளாஹு த'ஆலா அன்ஹு அவர்கள் கூறினார்கள். "அவர்கள் தடைசெய்யப்பட்ட (ஹராம்) ஒரு செயலை செய்யக்கூடாது என்பதற்காக எழுபது அனுமதிக்கப்பட்ட ஹலால் செயல்களை இல்லாமல் செய்வார்கள்". எனவே, ஒரு நபர் அவரது வணக்க வழிபாடுகளை எண்ணி கர்வமாகி விடக்கூடாது. ஒரு வணக்க வழிபாடு ஏற்றுக்கொள்ளப்படுவது சரியான நோக்கத்தை பொறுத்தது. இது அல்லாஹுத் தஆலாவுக்காக மட்டுமே செய்யப்பட வேண்டும். அத்தகைய தூய்மையான நோக்கத்தைப் பெறுவது எளிதல்ல. ஒருவரின் நஃப்சை சுத்தப்படுத்துவது தக்வாவின் மூலம் மட்டுமே அடைய முடியும் அதாவது தடைசெய்யப்பட்ட செயல்களை தவிர்ப்பது. அல்லாஹ்வுக்காக வணக்க வழிபாடுகளை செய்வது சுத்தீகரிக்கப்பட்ட நப்சில்லாத எவருக்கும் இது மிகவும் கடினம்.

ஒருவரின் பரம்பரையை வைத்து  கர்வம் காட்டுவதும் அறியாமை மற்றும் முட்டாள் தனத்தின் ஒரு அறிகுறியாகும். கயீன்(காபில்) "ஆதம் அலைஹிஸ் ஸலாத்தின் மகன். "(கன்'அன்),அல்லது யாம் (ஷேம்) நூஹ்  அலைஹிஸ்ஸலா த்தின் மகன். அவர்களின் பிதாக்கள் தீர்க்கதரிசிகளாக இருந்தும் நிராகரிப்பில் இருந்து  அவர்களைக் காப்பாற்ற முடியவில்லை. தங்கள் வம்சாவளியைக் கொண்டு தற்பெருமை கொண்டவர்கள் அவர்களின் முன்னோர்களின் நிலையை தற்போது கவனிக்க வேண்டும். அவர்கள் இப்போது ஒரு மண் கட்டி இல்லையா? ஒரு மண்கட்டியை பற்றி தற்பெருமை காட்டுவது நியாயமானதா? ஒருவர் அவர்களின் முன்னோரின் நற்செயல்,  பயபக்தியுடனும் தற்பெருமை கொள்ளக்கூடாது, ஆனால், அதற்கு பதிலாக, அவர்களைப் போன்ற ஒரு பக்தியுள்ள நபராக மாற முயற்சிக்க வேண்டும்.

பெரும்பாலான பெண்கள் தங்கள் அழகைப் பற்றி பெருமைப்படுகிறார்கள். ஆனால், அழகு நீடிக்காது. அது வேகமாக போய்விடும். அது ஒரு நபரின் நிரந்தரமாக சொத்து இல்லை. தற்காலிகமாக அவளுக்கு வழங்கப்படுவது எதையாவது பற்றி தற்பெருமை முட்டாள்தனமாக இருக்கும்.  உடல் அழகு, ஒரு அழகான இதயத்துடன், அதாவது, ஆன்மீக அழகு, மிகவும் மதிப்புமிக்கது. ஒருவரின் இதயத்தின் தூய்மை அவர் எந்தளவுக்கு எங்கள் நபி 'ஸல்லள்ளாஹு அலைஹிவசல்லமின் **சுன்னத்தை** கடைபிடிக்கிறார் என்பதில் தெளிவாகத் அறியமுடியும்.  ஒருவருடைய இதயம், உயிர், வாழ்கை  நெறி என்பன மதிப்பு மிக்கதாகக் கருதப்படாவிட்டால், மனிதர்கள் விலங்குகளிலிருந்து வேறுபட்டவர்களாக இருக்க மாட்டார்கள். அவர்கள் விலங்குகளை விடக் கீழானவர்களாகும். அவர்கள் அழுக்குகளால் நிரப்பப்பட்ட சுத்தம் செய்ய வேண்டிய இயந்திரங்கள் போன்று  இருப்பார்கள். அவை தேய்ந்துபோன இயந்திரங்களை ஒத்திருக்கும் அவைகளுக்கு பராமரிப்பு, எப்போதும் எரிபொருள் நிரப்புதல், சுத்தம் செய்தல் மற்றும் சரிசெய்தல் தேவை.  இது போன்றிருந்தால்  ஒரு நபர் எதைப்பற்றி  பெருமைப்படுவது? அதைவிட ஒருவர் பணிவு காட்ட வேண்டும். ஒருவரின் இளமை மற்றும் வலிமையைப் பற்றி பெருமைப்படுவதும் அறியாமையாக  இருக்கும். பொதுவாக, தசைகள் மற்றும் உணர்வு உறுப்புகளின் வலிமை மனிதனை விட விலங்குகளில் அதிக அளவில் உள்ளது.  அதன்படி, விலங்குகள் மனிதர்களிடம் கர்வமாக  இருக்க வேண்டும், இல்லையா? மேலும், அவர் எப்போதும் இளமையாக இருப்பார், வலுவானவர், அல்லது ஒருபோதும் நோய்வாய்ப்படமாட்டார், அல்லது ஒருபோதும் விபத்து ஏற்படாது என்று யாருக்கும்  கூறமுடியாது. மனிதகுலத்தின் பதிவு செய்யப்பட்ட வரலாற்றில் இளமை மற்றும் வலிமை அல்லது மூச்சு இழக்காத எவராவது இருக்கிறதா? எனவே, ஒரு குறுகிய காலத்திற்கு தற்காலிக மாக (அவை விலங்குகளும்) வைத்திருக்கின்றவற்றை வைத்து எவரேனும் தற்பெருமை பேசுவது அல்லது கர்வமாக எதையாவது நினைத்துப் பார்ப்பது எப்படி நியாயமானதாக இருக்கும்?

மனிதர்கள் அவர்களின் சொத்து, குழந்தைகள், அந்தஸ்து, மற்றும் நிலை குறித்து தற்பெருமை காட்டுவதும் இருப்பதும் பொருந்தாது. ஏனெனில் இவை அவற்றில் உள்ளார்ந்த உயர்ந்த பண்புகள் அல்ல. அவை மனிதர்களை விரைவாக விட்டுச்செல்லும் தற்காலிக மற்றும் இடைக்கால விஷயங்கள். தவிர, அவைகள்  ஒழுக்கக்கேடான மற்றும் தாழ்ந்த மக்களில் கூட இருக்கின்றன. உண்மையில், அவைகள்  பெரும்பாலும்  அந்த மக்களிடையே இருக்கின்றன.

இவை மேன்மையை ஏற்படுத்தும் விஷயங்கள் என்றால், அவற்றை வைத்திராத மக்கள் அல்லது அவற்றை வைத்திருந்து பின்னர் அவற்றை இழந்தவர்கள் மிகவும் தாழ்ந்த மக்களாகுவது அவசியம். சொத்து வைத்திருப்பது மரியாதைக்கு ஒரு காரணம் என்றால் ஒரு திருடர்களும் மரியாதைக்குரிய மனிதனாக கருதப்படுவார்கள் ஏனெனில் அவர் திருடப்பட்ட சொத்தை அது ஒரு குறுகிய காலத்திற்கு வைத்திருந்தாலும் கூட.

வெறுப்பு (**ஹிக்த்**) அகந்தையை ஏற்படுத்தக்கூடாது. வெறுப்பின் பொருள் வெறுப்பை வளர்ப்பது அல்லது இதயத்துடன் விரோதம் பாராட்டுவது. இந்த அரிக்கும் நோயால் அவதிப்படும் ஒருவர் அவருக்கு சமமான அல்லது உயர்ந்த ஒருவரின் மீது கோபமாக இருப்பார். அவர் இதைப் பற்றி எதுவும் செய்ய முடியாது என்பதால் அவர்மீது அகந்தையாகி விடுவார். இந்த வகையான நபர் பணிவாக இருக்க வேண்டியவர்களிடம் பணிவுடன் இருக்க முடியாது. இன்னும் மிக சரியான ஆலோசனை ஏற்றுக்கொள்ள முடியாதவர்கள். அந்த நபரை விட இவர் சிறந்தவர் என்பதை எல்லோருக்கும் காட்ட முயற்சிப்பார். அவர் ஒருவரை தவறாக காயப்படுத்தும்போது கூட, அவர் மன்னிப்பு கேட்பத்தில்லை.

பேராசை (**ஹஸது** ) தற்பெருமையை ஏற்படுத்துகிறது. அளவுக்கு அதிகமான ஆசையுள்ள ஒருவர் இன்னொருவரிடம் இருக்கும் சொத்து செல்வங்கள் அவரிடம் இருந்து விலகி இவருக்கு கிடைக்க வேண்டும் என்று விரும்புவார். மற்றவர்களிடம் அவை இருபது இவருக்கு பொறுக்க முடியாதது. அவர் பொறாமைப்படும் மற்றவர்களின் நீதியான வார்த்தைகளைக்கூட கேட்க மறுக்கிறார். அவர்கள் பெரியவர்கள் என்று தெரிந்தும் அவர்களிடம் இருந்து கேட்கவும் கற்றுக்கொள்ளவும் விரும்புவதில்லை. **(ரியா)**பகட்டுத்தனம்கூட தற்பெருமையை ஏற்படுத்துகிறது. இந்த பழக்கத்தை உடையவர் அந்நியர் களை அவரது நண்பர்கள் முன்னிலையில் கர்வத்துடன் நடத்துகிறார் ஆனால் அவர் தனியாக நண்பர்களுடன் இருக்கும்போது, அவர் அவ்வாறு செய்வதில்லை.

இஸ்லாமிய அறிஞர்கள், அகந்தையுள்ள மனிதர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றுவதற்காக, அவர்களுக்குரிய கௌரவமான ஆடைகளை அணிய வேண்டும். மேலும் கண்ணியத்துடன் செயல்பட வேண்டும். இதன் காரணத்தால், மேதகு இஸ்லாமிய அறிஞர், இமாமுல் அஃலம் அபு ஹனீபா 'ரஹிமஹள்ளாஹு தஆலா' அவர்கள் "அறிஞர்களின் தலைப்பாகை பெரிய தாக இருக்க வேண்டும் மற்றும் அவர்களின் கவுன்களின் (மேலாடை)யின் கைகள் பெரிதாக இருக்கவேண்டும் என்று கூறியுள்ளார்கள். மார்க்கப் பிரச்சாரம் செய்வோர் அழகான சுத்தமான ஆடைகளை அணிந்தால் அவர்கள் வணக்கம் செய்த நன்மைகள் கொடுக்கப்படும். அவர்கள் மதிக்கப் படாவிட்டால் அவர்களின் வார்த்தைகள் எந்த விளைவையும் ஏற்படுத்தாது. ஏனெனில் அறியாதவர்கள் அவர்களின் உடைகள் மற்றும் தோற்றங்களை வைத்தே அவர்களை மதிப்பிடுவார்கள். அவர்களுக்கு அறிவையும் நல்லொழுக்கத்தின் மதிப்பும் விளங்காது.

பெரும்பாலான மக்கள் தங்கள் அகந்தையான நடத்தை பற்றி அறிந்திருக்க மாட்டார்கள். எனவே, ஒருவர் அகந்தையின் அறிகுறிகளை அறிந்து கொள்வது அவசியம். ஒரு அகந்தையான நபர் ஒரு புதிய இடத்திற்குள் நுழையும்போது, அவர் அனைவரும் அங்கே எழுந்து நிற்க வேண்டும் என விரும்புவார். இது ஒரு

பிரசங்கதுக்காக ஒரு இடத்துக்கு செல்லும் ஒரு அறிஞருக்கு இது பொருந்தாது. அங்குள்ள மக்கள் அவரை மதிக்கிறார்கள் என்பதை அறிவார். அந்த மக்கள் எழுந்து நிற்க வேண்டும் என  அவர் விரும்பினாலும் அது கர்வம் அல்ல. பொதுவாக, ஒருநபர் தான் உட்கார மற்றவர்கள் நிற்க வேண்டும் என விரும்பினால்  அது அகந்தையாகும்.  ஹஸரத் அலி 'ரலியள்ளாஹு தஅலா அன்ஹு  அவர்கள்; "நரகத்திற்குரிய ஒரு மனிதன் எப்படியானவன் என்று பார்க்க விரும்பும் எவரும் தன்னை உட்காரவைத்து மற்றவர்கள் நிற்க வேண்டும் என விரும்புவனை பார்க்கவும்." என்று கூறினார்கள்.

அஸ்ஹாபுல் கிராம் "ரில்வானுள்ளாஹி தஆலா அலைஹிம் அஜ்மஈன்" நேசித்த ரசூலுள்ளாஹி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் உலகம், உலகில் உள்ள எல்லா வற்றையும் விட உயர்ந்தவர்கள். ரசூலுள்ளாஹி சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் சஹாபக்களிடத்தில் இருக்கும் இடத்திற்கு வந்தால் சஹாபாக்கள் எழுந்து நிற்கமாட்டார்கள்; ஏனெனில் ரசூலுள்ளாஹி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் அதை விரும்புவதில்லை. இருந்த போதிலும், ஒரு இஸ்லாமிய அறிஞர் (ஆலிம்) முஸ்லிமான மக்கள் குழுவில் வந்து சேரும்போது அவருடைய அறிவுக்கு  மரியாதை காட்டும் பொருட்டு  எழுந்து நிற்க வேண்டும்.

யஹ்யா பின் கத்தான் 'ரஹிமஹள்ளாஹு தஆலா' அவர்கள் அஸர் தொழுகை யை நிறைவு செய்து மஸ்ஜிதின் மினாரை முதுகு பக்கமாக எதிர்த்து அமர்ந்திருந்தார். அப்பொழுது  அவரது காலத்தின் பிரபலமான அறிஞர்கள் சிலர் உள்ளே வந்தனர். அவர்களில் ஒருவர் இமாம் அஹ்மத் பின் ஹன்பல் 'ரஹிமாஹுள்ளாஹு தா'லா' அவர்கள் அவர்கள் ஒரு ஹதீது  பற்றிய விளக்கத்தை அவரிடம் கேள்விகள் கேட்டனர். அவர் அவர்களின் எல்லா கேள்விகளுக்கும் பதில் அளித்தார். அவர் இருக்கும்போது மற்ற அனைவரும் நின்று கொண்டிருந்தார்கள். அவர் யாரையும் உட்காரச் சொல்லவில்லை, அவர்களில் யாருக்கும் உட்கார தைரியம் இல்லை. அவர்களின் உரையாடல் சூரிய அஸ்தமன நேரம் வரை தொடர்ந்தது.  பொதுவான வழக்கம் என்ன வென்றால், ஒரு இளைய அறிஞர் வயதான அறிவற்ற மனிதர்களைவிட உயர்ந்த இருக்கையில் அமர்ந்திருப்பார். ஒரு மாணவர் அவரது ஆசிரியர் பேசுவதற்கு முன் பேச ஆரம்பிக்கக்கூடாது, அவர் இல்லாத நிலையில் அவரது இருக்கையில் உட்காரக்கூடாது, தெருவில்  அவருக்கு முன்னால் நடக்கக்கூடாது.  ஒரு நபர் மற்றவர்கள் எழுந்து அவருக்காக நிற்க வேண்டும் என்று விரும்பினால், ஆனால் இந்த விருப்பம் சரியானதல்ல இன்னும் அதிலிருந்து விடுபட விரும்புகிறது என்றால் அவரது விருப்பம் ஒரு இயல்பான போக்காக கருதப்படுகிறது, அல்லது இப்லீஸினால் தூண்டப்பட்ட உணர்வாகும். இந்த இரண்டிலும் இது பாவமாகாது. ஏனெனில் கட்டுப்பாடு அவருடைய கைகளில் இல்லை. அவர் விரும்பியும் மாறாக நடக்கின்றது.

அகந்தையின் இன்னொரு அறிகுறி தனிமையில் நடப்பதற்கான வெறுப்பு, மற்றவர்கள் தன்னை  பின்பற்றி தனக்கு பின்னால்  நடப்பதை விரும்புவது, அல்லது பல மாணவர்கள் தொடர குதிரை சவாரி செய்வதில் ஆர்வம். ரசூலுள்ளாஹி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் மதீனாவில் ஜன்னத்துல் பகி அடக்க தலத்தை நோக்கி சென்றார்கள். சிலர் அதை பார்த்து அவருக்குப் பின்னால் நடக்க ஆரம்பித்தார்கள். ரசூலுள்ளாஹி சல்லள்ளாஹு

அலைஹி வசல்லம் அவர்கள் நடப்பதை நிறுத்தி அவருக்கு முன்னால் நடக்க அவர்களுக்குக் கட்டளையிட்டு பின்னால் அவர்களைப் பின்தொடர்ந்தார்கள். அவரது நடத்தைக்கான காரணத்தை அவரிடம் கேட்கப்பட்டபோது அவர்கள் கூறினார்கள், **“நான் அவர்களின் அடிச்சத்தம் கேட்டேன், ஒரு அணுவின் எடையளவு பெருமைகூட என் இதயத்திற்குள் வருவதை தடுப்பதற்காக அவர்களை எனக்கு முன்னால் நடக்க வேண்டும் என்று நான் கோரினேன் என்று கூறினார்கள்**”. அவர்களின் இதயத்தில் எந்தவிதமான எண்ணமும் இருக்காது என்பது வெளிப்படையானது ஆனால் இது அவரது சஹாபாக் களுக்கு கற்பிக்கும் ஒரு வழியாகும். அபு தர்தா ‘ரஹிமஹுுள்ளாஹு த்ஆலா’ அவர்களின் கூற்றுப்படி “ஒரு ஆணவமுள்ள மனிதனின் பின்னால் நடந்து செல்லும் நபர்களின் எண்ணிக்கை அதிகரிக்கும் போது அம் மனிதக்கு அல்லாஹு தஆலாவிடமிருந்து ஆண்மீக தூரம் அதிகரிக்கிறது”.

பின்வரும் செயல்கள் சுய அகந்தையை குறிக்கின்றன: அறிமுகமானவர்கள் அல்லது நண்பர்களை பார்வையிடுவது இல்லை, மற்றவர்களுடன் உட்கார்ந்து இருப்பதில் ஒரு வெறுப்பு, நோய்வாய்ப்பட்ட அல்லது நோய்வாய்ப்பட்ட மக்களுடன் ஒன்றாக உட்காருவதில்லை, வீட்டு வேலைகள், வீட்டுக்கு தேவையான ஷாப்பிங் செய்வதில்லை , ஒரு முறை அணிந்த ஒன்றை திருப்பி அணிவதில் வெறுப்பு, ஏழை நபரின் அழைப்பை ஏற்பதில்லை, பணக்காரரின் அழைப்பை ஏற்றுகொள்வது. பின்வரும் செயல்கள் மற்றவர்களின் முன் செய்யும்போது பாசாங்குத்தனம் (முனாபிக்) என்றும் தனியாக அல்லது மற்றவர்களின் முன்னிலையில் செய்யும்போது தற்பெருமையாகவும் கருதப் படுகிறது. ஒருவரின் குடும்ப உறுப்பினர்களின் மற்றும் உறவினர்களின் தேவைகளை வழங்குதல். நீதியான எச்சரிக்கைகளை ஏற்றுக்கொள்ளாமை, அறிவுரை சொல்பவர்களிடம் வாதாடுவது, குறைகளை சுட்டிக்காட்டுபவர் களுக்கு நன்றி செலுத்தாமை

ஒருநபர் பணிவானவராக இருப்பதற்கு அவரின் தோற்றம் என்ன என்பதை அறிந்து கொள்ள வேண்டும். உதாரணமாக, அவர் எங்கிருந்து வந்தார், எங்கு செல்கிறார். அவர் முன்பு இருக்கவில்லை. பின்னர், அவர் ஒரு பலவீனமான நகர முடியாத குழந்தையாக மாறினார். அவர் இப்போது நோய்வாய்ப்பட்டு இறக்க நேரிடும் என்ற பயத்தில் எப்போதும் இருக்கிறார். இறுதியில், அவர் இறந்து, அழுகி மண்ணோடு மண்ணாக மாறுவார். அவர் புழுக்கள் மற்றும் பூச்சிகளுக்கு உணவாக மாறுவார். அவரது துன்பங்கள் கைதியின் துன்பத்தைப் போன்றது. எடுத்துக்காட்டாக, தூக்கிலிடப்பட போகும் மரணதண்டனைக்கு காத்திருக்கும் ஒருவரை போன்று.அதாவது, உலகின் நிலவறையில் அவர் ஒவ்வொரு நிமிடமும் அவரது தண்டனை பற்றிய செய்திக்கு காத்திருக்கிறார். அவர் இறந்துவிடுவார். அவரது உடல் ஒரு சடலமாக மாறும் மற்றும் பூச்சிகளுக்கு உணவுப் பங்காக இருக்கும். அவர் அவரது கல்லறையில் தண்டனையை அனுபவிக்கவும் செய்வார். எல்லாவற்றிற்கும் மேலாக, அவர் கல்லறையில் இருந்து எழுப்பப்பட்டு கடைசி தீர்ப்பு நாளின் சிரமங்களை அனுபவிப்பார். நித்தியமாக நரகில் தண்டிக்கப்படுவார் என்ற பயத்துடன் வாழும் நபருக்கு இவற்றில் எது சிறந்ததாக இருக்கும்: பணிவா அல்லது கர்வமா?

அல்லாஹு தஆலா, படைப்பவன், திருப்பி எழுப்புபவன், மனிதர்களைப் பாதுகாப்பவன், சர்வ வல்லமையுள்ளவன், அவனைப்போன்று எதுவும் இல்லை,

ஒரேஆட்சியாளன் சர்வ வல்லமையுள்ளவன் கூறுகிறான், "**நான் கர்வமுள்ள வர்களை விரும்பவில்லை**,"மற்றும்**தாழ்மையானவர்களை விரும்புகிறேன்**." எனவே, பலவீனமான மனிதப்படைப்புக்கு எது மிகவும் பொருத்தமானதாக இருக்கும்? அல்லாஹுவின் மகத்துவத்தை அங்கீகரிக்கும் விவேகமான நபர் அகந்தையாக இருக்கலாமா? மனிதர்கள் எப்போதும் அல்லாஹுவிடம் அவர்களின் பலவீனங்களையும் தாழ்மையையும் பணிவையும் காட்டவும் நிரூபிக்கவும் வேண்டும். எனவே, எல்லா நேரங்களிலும் எந்த சந்தர்ப்பத்திலும் பலவீனத்தையும் மனத்தாழ்மையையும் அவனிடம் காட்ட வேண்டும். அபு சுலைமான் தாரானி 'ரஹீமஹுுள்ளாஹு தஆலா' அவர்கள் கூறுகிறார்கள். "முழு மனிதகுலமும் என்னை கீழ்த்தரமான ஒரு நபராக என்னைக் குறிக்கும் வகையில் என்னை இழிவுபடுத்த முயன்றாலும் அவர்கள் அவ்வாறு செய்யத் தவறிவிடுவார்கள். நான் அதைவிடக் குறைவானவன் என்று எனக்குத் தெரியும். ஏனென்றால் நான் யாரும் நினைக்கக்கூடிய மிகக் குறைந்த தரம்.

ஒருநபர் எப்போதும் அனைவரையும் விட தன்னை தாழ்ந்தவனாக கருத முடியுமா. இப்லீஸ் மற்றும் பிர்அவ்ன், ஸ்டாலின், மாஓ உட்பட [மற்றும் இஸ்லாத்தின் வேறு சில கொடூரமான எதிரிகள் மற்றும் ஸ்டாலின், மாவோ மற்றும் அவர்களின் உதவியாளர்கள்] போன்ற மனிதகுலம் சந்தித்த மிக மோசமான எல்லா காலத்திலும் காஃபிர்களின்? தெய்வம் என்று கூறி மில்லியன் கணக்கான மக்களை தங்கள் சொந்த விருப்பங்களை திணிக்கும் நோக்கத்திற்காக கொலை செய்து துன்புறுத்தியவர்கள். அவர்கள் அல்லாஹு தஆலாவின் கோபத்திற்கு ஆளானார், மேலும் அவர் மிக மோசமான நிராகரிப்புக்குள் அவர்கள் வீழ்ந்து விட்டார்கள்.

"என்னைப் பொறுத்தவரை; அவன் என்னை இரக்கத்துடன் நடத்தினான், எனக்கு உண்மையான நம்பிக்கையையும் வழிகாட்டலையும் தந்தான். அதற்கு நேர்மாறாக செய்ய விரும்பி இருந்தால் அவனால் அவ்வாறு செய்யவும் முடியும். அல்ஹம்து லில்லாஹ், அவன் அவ்வாறு செய்யவில்லை. ஆனால் நான் பல பாவங்களையும் வேறு யாரும் செய்யாத அக்கிரமங்களையும் செய்திருக்கிறேன். நான் எப்படி இறப்பேன் என்று தெரியாது". இந்த வார்த்தைகளை ஒருவர் தனக்குத்தானே சொல்ல வேண்டும், தாழ்மையுடன் இருக்க வேண்டும்.

ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் பின்வருமாறு கூறுகிறார்கள் **"அல்லாஹு தஆலா என்னை தாழ்மையுடன் இருக்கும்படி கட்டளையிட்டான். நீங்கள் யாரும் மற்றவர்களில் எவரிடமும் கர்வத்துடன் நடந்து கொள்ளக்கூடாது".** இந்த ஹதீதின் படி முஸ்லீம் அல்லாத **(zஜிம்மி**) குடிமக்களோடும் நாம் தாழ்மையுடன் இருக்க வேண்டும். மற்றும் எங்கள் நாட்டுக்கு அனுமதி பெற்ற நாடு (பாஸ்போர்ட்) மற்றும் வருகை தரும் வணிகர்கள், மற்றும் சுற்றுலா பயணிகள் எல்லோரிடமும் பணிவுடன் இருப்பது அவசியம். இந்த ஹதீதின் படி நாங்கள் எல்லோரிடமும் பணிவாக நடந்து கொள்வது அவசியம் என்பதால், எந்த வகையிலும் அவர்களை தாக்குவதற்கு அனுமதிக்கப்படவில்லை.

[அஹ்லுஸ்-சுன்னத் அறிஞர்கள் இது ஹதீதுக்கு கொடுக்கும் விளக்கம்: முஸ்லிம் அல்லாத நாடுகளில் வாழும் (**தாருள் ஹர்ப்**) முஸ்லிம்களுக்கு அந்த நாட்டின் குடிமக்களின் உரிமைகள், சொத்து மற்றும் மரியாதை என்பவற்றை

தாக்குவதற்கு இஸ்லாத்தில் அனுமதிக்கப்படவில்ல. திருடுவது, கலகம் செய்வது, மற்றவர்களை காயப்படுத்துவது தாக்குவதற்கும் மீறுவதற்கும், நாட்டின் சட்டங்களை மீறுதல், அரசாங்க அதிகாரிகளை அவமதிப்பது, வரிச் சட்டங்களை மீறுதல், சுங்கச்சாவடிகள் அல்லது கட்டணங்கள் தவிர்ப்பது மற்றும் இல்லாத அனைத்து ஒத்த நடத்தைகளும் இஸ்லாத்தின் நெறி முறைக்கு ஏற்றதாக இல்லை மற்றும் அனுமதிக்கப்படாது.

நிராகரிப்பவர்களின் நாடுகளில் கிறிஸ்தவ சட்டங்கள் மீறக்கூடாது என்பது அவர்களை "**உலுல்அம்ர்**" என்று அங்கீகரிப்பதாக அர்த்தமல்ல. அல்லாஹ்வுக்கு கீழ்ப்படியாத (மற்றவர்களின்) கட்டளைகளுக்கு எதிராக போராடவேண்டும் என்பது அவசியமில்லை. இந்த வகை கட்டளைகள் மதமற்ற பிரமுகர்களால் பிறப்பிக்கப்பட்டாலும் கூட அவர்களுக்கு எதிராக செயல்படக்கூடாது. நிறுவப்பட்டவருக்கு அரசாங்கத்துக்கும் அதன் சட்டங்களை எதிர்ப்பதும் எதிரான கிளர்ச்சி பித்னாவை அதாவது ஏமாற்று வேலைகள், கிளர்ச்சிகளை , ஏற்படுத்துவது ஹாராம், அதாவது இஸ்லாத்தால் தடை செய்யப்பட்டுள்ளது. இந்த விஷயம் (இஸ்லாத்தின் நடைமுறை, சமூக, பொருளாதார, பரிவர்த்தனை, நியமன மற்றும் சட்டமன்ற அறிவியல்) சம்பந்தமான வியாக்கியானங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இவை பிகுஹு'வில் வற்புறுத்தல் மற்றும் துணிச்சல் என்ற பிரிவின்கீழ் விளக்கப்பட்டுள்ளன. அது மேலும் முஹம்மது ம'தூம் 'ரஹீமஹுஉள்ளாஹு அலைஹி' அவர்கள் எழுதிய மக்தூபாத் த்தின் மூன்றாவது தொகுதியின் 55 ஆவது கடிதத்திலும் விளக்கப்பட்டுள்ளது.

ஒரு நபர் முஸ்லிம்களுக்குரிய நாட்டில் அல்லது **தார்-உல்-ஹார்ப்** என்று அழைக்கப்படும் காஃபிர்களின் நாட்டில் வாழ்ந்தாலும் எங்கள் நபி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களின் இந்த கட்டளைக்கு எதிராக செயல்படுவது, அவர் வாழும் நாட்டின் சட்டங்களுக்கு எதிராக செயல்படுவதன் மூலம் அவர் பாவம் இளைப்பது மட்டுமல்லாமல் இஸ்லாத்தை கொடூரமான வழிபாடாகவும், முஸ்லிம்களை காட்டு மிராண்டிகளாக உலகிற்கு பிரதிநிதி த்துவம் செய்துள்ளனர். இது அவர்கள் இஸ்லாத்துக்கு எதிரான செய்யும் கடும் துரோகம் ஆகும்.

'ஜிஹாத்' என்பது '**அம்ரில்-மஃருஃப்' மற்றும் 'நஹி-இ-அன்-இல்-முன்கர்'**. இதன் முந்தியபொருள் 'காஃபிர்களுக்கு இஸ்லாத்தை அறிமுகப்படுத்துதல், அதன் மூலம் நிராகரிப்பின் நோயிலிருந்து அவர்களை பாதுகாத்தல், பிந்திய பொருள் இஸ்லாமியர்களின் நடைமுறைகளை முஸ்லிம்களுக்குக் கற்பித்தல், அதன் மூலம் அவர்களை இஸ்லாம் தடுத்தவையிலிருந்து பாதுகாத்தல் என்பதாகும். இந்த இரண்டு (ஜிஹாத்தின்) கடமைகளில் ஒன்றை செய்வதற்கு மூன்று வழிகள் உள்ளன. முதலாவதாக உடல்ரீதியாக அதைச் செய்வது, அல்லது, தெளிவாக சொல்வதானால், அனைத்து வகையான ஆயுதங்களையும் பயன்படுத்தி ஜிஹாத்செய்வது. இந்தவகையான ஜிஹாத் ஏகாதிபத்திய சக்திகளுக்கும் சர்வாதிகாரிகளுக்கும் எதிராக, துன்பமுற்ற மக்கள்மீது அவர்களின் அடக்குமுறைகள், அதன் விளைவாக நிராகரிப்பின் குழிக்குள் விழுந்த மக்களை மீட்பதற்காக, இஸ்லாத்தை அறியாதவர்கள் மற்றவர்களை கண்மூடித்தனமாக பின்பற்றுவது அல்லது கொடுங்கோன்மை, அடக்குமுறை, துன்புறுத்தல், சுரண்டல், பிழையாக வழிநடத்துதல் போன்றவற்றை அனுபவிப்பதிலிருந்து பாதுகாப்பது. மிகவும் முன்னேற்றமடைந்த நவீன

ஆயுதங்கள் கொண்டு இந்த சர்வாதிகாரிகள் மற்றும் ஏகாதிபத்திய கொடுங்கோலர்களை, அவர்கள் படைகளை அழிக்க, அதன் மூலம் மோசமான அடிமைகளையும் ஒடுக்கப்பட்ட மக்களை மீட்பதற்கும் போராட பயன்படுத்தப்படுகின்றன.

பின்னர் அந்த மக்களுக்கு இஸ்லாத்தை பற்றி கற்றுக்கொடுக்கப்படுகிறது. இந்த மக்களும் அவர்கள் விருப்பத்துடன் முஸ்லிம்களாக மாற முன்வருகிறார் கள். அவர்கள் முஸ்லிம்களாக மாற விரும்பவில்லை என்றால், அவர்கள் சுதந்திரம், சமத்துவம் மற்றும் நீதியை வழங்கும் இஸ்லாமிய அரசின் கீழ் முஸ்லிம்களுடன் சமமாக வாழவும் அவர்களின் விருப்பமான மதத்தை பின்பற்றுவதற்கும் அனுமதிக்கப்படுகிறார்கள். இந்த வகை (ஜிஹாத்) இஸ்லாமிய தேசங்களால் அல்லது அவற்றின் இராணுவத்தால் மூலம் மட்டுமே செய்யப்படுகிறது. எந்தவொரு தனிப்பட்ட முஸ்லிமுக்கும் எந்த இறை மறுப்பாளரையும் ஒரு இஸ்லாமிய அரசின் அனுமதி மற்றும் முன் உத்தரவு இல்லாமல் தாக்கி கொள்ளையடிக்க இது ஒருபோதும் அனுமதிக்கப்படவில்லை. இஸ்லாமிய மதம் இஸ்லாமிய அரசுடன் சமாதான உடன்படிக்கை கொண்ட மற்றொரு தேசம் அல்லது மாநிலத்தின் எந்தவொரு குடிமகனையும் கொலை செய்யும் முஸ்லிம்களை கடுமையாக தண்டிக்கின்றது. மேற்கூறிய வற்றிலிருந்து, யுத்தம் என்பது மற்ற நாடுகளை அழிப்பது அல்லது மற்றவர்களை கொல்வது என்று அர்த்தமல்ல என்பதை இஸ்லாமிய மதத்தில் தெளிவாகக் காணலாம்.

ஜிஹாத் என்பதன் அர்த்தம் என்னவென்றால், இஸ்லாத்தை மற்றவர்களுக்கு அறிமுகப்படுத்த பாடுபடுவது. ஏனெனில் அவர்கள் சதா பேரழிவுகளிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அவர்கள் விருப்பத்துடனும் ஆசையுடனும் முஸ்லிம்களாக மாறுவதற்காக. நமது ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹிவசல்லம்', அவர்களுடைய சஹாபா கிராம்' அலைஹி மூர்-றில்வான்'கள் மற்றும் ,உண்மையான இஸ்லாமிய நாடுகள், எடுத்துக் காட்டாக ஒட்டோமன்கள், அனைவரும் இந்த வகை ஜிஹாதையே நிகழ்த்தினார்கள் . அவர்கள் ஒருபோதும் பலவீனமானவர்களை பாதுகாப்பற்ற மக்களை தாக்கவில்லை.

அவர்கள் இஸ்லாத்தின் எதிரிகளுக்கு எதிராக, கொடுங்கோன்மை காஃபிர்கள், ஏகாதிபத்தியவாதிகள், முஸ்லீம் பெயர்களைக் கொண்ட வழிதவறிய நாசகாரரர்கள், மற்றும் இஸ்லாம் அந்த ஏழை மக்களை சென்றடைவதையும், அதைத் தொடர்பு கொள்வதை தடுத்தவர்களுக்கும் எதிராக போராடினார்கள். அவர்கள் ஏகாதிபத்திய சக்திகளுக்கு எதிராக போராடி அவர்களை அழித்தனர். மற்றும் அடிமைப்படுத்தப்பட்டு அவர்களின் சித்திரவதை சக்திகளின் கீழ் பரிதாபமாக வாழ்ந்த மக்களை விடுவித்தது அவர்களுக்கு இஸ்லாத்தை கற்பித்தனர். இதனால் அவர்கள் முஸ்லிம்களாக மாற வாய்ப்பளித்து அவர்களின் சொந்த விருப்பத்தில் நிரந்தர இன்பத்தை பெற்றுக்கொள்ள அவர்களுக்கு உதவியது.

இஸ்லாமிய இராணுவத்தின் அல்லது இஸ்லாமிய அரசின் இரண்டாவது கடமை முஸ்லிம்களையும் இஸ்லாத்தையும் பாதுகாப்பது, மற்றும் இஸ்லாமிய நாடுகளைத் தாக்கும் மதவெறி பிரிவினைவாதிகள், முஸ்லிம்களையும் இஸ்லாத்தையும் அழிக்க முயற்சிக்கும் காஃபிர்களுக்கு எதிராக ஜிஹாத்

செய்வது. அல்லாஹுஆதஆலா சூரா அன்பாலில்; இஸ்லாமிய அரசு அமைதியான காலத்தில் அறிவியல் ஆராய்ச்சிகள் செய்யவும் கற்றல் வசதிகளை உருவாக்கி காஃபிர்களின் நாடுகளில் தயாரிக்கப்பட்ட சமீபத்திய ஆயுதங்கள் பற்றி ஆராய்தல் இன்னும் அவற்றை தயாரித்தல் போன்றவற்றில் ஈடுபடுமாறு கட்டளை இடுகின்றான். புதிய ஆயுதங்களை தயாரிக்கும் இந்த கடமையை புறக்கணிக்கும் அதிகாரிகள் இஸ்லாத்தின் ஷாரியத்துக்கு கீழ்ப்படியாத வர்கள் மற்றும் மில்லியன் கணக்கான முஸ்லிம்களின் மரணத்திற்கும், இஸ்லாத்தின் பலவீனத்தின் விளைவாக அவர்கள் எதிரிகளின் தாக்குதல்களை எதிர்கொள்ளவும் தவறிவிட்டனர்.

இஸ்லாமிய ஜிஹாத்தின் இரண்டாவது வழி அனைத்து வகையான தொடர்பாடல் வழிகளையும் பாவித்து இஸ்லாத்தை பரப்புவதற்கும் அதன் மனிதநேயத்தை அறிவிப்பதுமாகும். இந்தவகை ஜிஹாத் இஸ்லாமிய நாடுகளின் கட்டுப்பாடு மற்றும் உதவியின் கீழ் இஸ்லாமிய அறிஞர்களால் மட்டுமே செய்யப்படுகிறது. நம் காலத்தில் இஸ்லாத்தின் எதிரிகள், அதாவது; மிஷனரிகள், கம்யூனிஸ்டுகள், ஃப்ரீமேசன்கள் மற்றும் எந்த மதுஹபையும் பின்பற்றாத இஸ்லமியர்கள்,(லா-மத்ஹபியா). இவர்கள் எல்லா வகையான தகவல்தொடர்பு வழிகளையும் பயன்படுத்தி இஸ்லாத்தைத் தாக்குகிறார்கள். அவர்கள் பொதுவாகக் மக்களையும் அறியாத முஸ்லிம்களையும் பொய்கள் மற்றும் அவதூறுகளை உருவாக்கி ஏமாற்றி அதன் மூலம் இஸ்லாத்தை அழிக்க வேண்டும் என முயற்சிக்கின்றனர்.

சமீபத்தில், 1992 இல், கிறிஸ்தவர்கள் பதினொரு கேள்விகளைத் தயாரித்து அனைத்து இஸ்லாமிய நாடுகளுக்கும் விநியோகிக்கப் பட்டதாக கேள்விப் பட்டோம். பங்களாதேஷின் அறிஞர்கள் இவற்றுக்கான பதில்களை எழுதி திரைக்குப் பின்னால் சதி செய்யும் கிறிஸ்தவ குருமார்களை அவமானப் படுத்தினர். இஸ்தான்புல்லில் அமைந்துள்ள ஹக்கிக்கத் நூல் நிலையம் இந்த பதில்களைச் கோர்த்து அதை **அஸ் சிராத்துல் முஸ்தகீம்** என்ற நூலில் **"அல்-அகாசிப்-உல்-ஜதிததுல்-ஹிரிஸ்தானியா"** என்ற பெயரில் அச்சடித்து உலக முழுவது இப்போது அதை விநியோகித்து வருகிறது. மேலும், மற்றொரு குழு, அதாவது; காதியானி (அஹ்மதியாஸ்), பஹாயிஸ், மௌதுதியை பின்பற்று பவர்கள், தப்லீக்-ஜமாத்தினர், சலாஃபியா குழுவை சேர்ந்தவர்கள், இன்னும் எந்த மத்ஹபையும் சேராதவர்கள் (லா-மத்ஹபியா) மற்றும் வஹாபிகள் குர்ஆன் அல்-கரீம் மற்றும் ஹதீத்-ஷரீப்களுக்கு தவறான மற்றும் பிழையான அர்த்தங்கள் கொடுப்பதன் மூலம் இஸ்லாத்தின் சரியான பாதையிலிருந்து விலகியிருக்கிறார்கள். இந்த படுபாதகர்களில் சிலர் தங்கள் மதங்களுக்கு எதிரான கொள்கைகளை வெகுதூரம் எடுத்துச் சென்று நிராகரிப்பில் வீழ்ந்துள்ளனர். அவர்கள் அனைவரும் தங்கள் ஊழல் மற்றும் வழிதவறிய நம்பிக்கைகளை, புத்தகங்கள், பத்திரிகைகள் மற்றும் சிறு புத்தகங்களை வெளியிடுவது மற்றும் ரேடியோக்கள் மூலம் பரப்பினர். இந்த நோக்கத்திற்காக அவர்கள் மில்லியன் கணக்கானவற்றை செலவிடுகிறார்கள். ஒருபுறம், அவை "அஹ்லுஸ் சுன்னத்" என்று ஏமாற்றி இஸ்லாத்தை உள்ளிருந்து அழிக்கின்றனர். முஸ்லிம்கள் அதாவது," சுன்னி முஸ்லீம்களையும் மறுபுறம், அவர்கள் எல்லா மக்களுக்கும் மதத்தின் பெயரில் "சரியான இஸ்லாம் அல்லாத" ஏதாவது ஒன்றை அறிமுகப்படுத்துகிறார்கள். இவை அனைத்திற்கும் இடையில் பிரச்சாரம், முஸ்லிம்களாக மாற விரும்பும் மக்கள் குழப்பம் அடைந்து

அவர்களில் சிலர் முஸ்லிமாக வேண்டும் என்ற எண்ணத்தை விட்டுவிடு கிறார்கள். இன்னும் சிலர் அவர்கள் முஸ்லிம்களாக மாறுகின்றனர் ஆனால் நம்பகத்தன்மை இல்லாத தவறான பாதையில் நுழைந்துகொள்கிறார்கள்.

இன்று, மிகப் பெரிய ஜிஹாத் "அஹ்லுஸ்-சுன்னத்" அறிஞர்களால் அழிவுகரமான மற்றும் தந்திரமான இஸ்லாத்தின் உள்ளே மற்றும் வெளியே உள்ள எதிரிகளின் பிரச்சாரங்களுக்கு எதிராக நிகழ்த்தப்படுகிறது. எங்கள் நபி முஹம்மது 'ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் 'மற்றும் அவரது சகாபாக்களின் வழியான அஹ்லுஸ்-சுன்னத் அறிவின் போதனைகளை அனைத்து வகையான தகவல் தொடர்புகளையும் பயன்படுத்துவதன் மூலம் உலகம் முழுவதும் பரவ செய்கின்றார்கள்.

ஜிஹாத்தின் மூன்றாவது வழி பிராத்தனைகள் மூலம் அதைச் செய்வது. அது "பர்ள்-அய்ன்" அல்லது வேறுவிதமாகக் கூறினால், ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இந்த வகை ஜிஹாத் செய்வது கட்டாய கடமையாகும். இந்த வகை ஜிஹாத் செய்யாதது கடுமையான பெரும் பாவம். இந்த மூன்றாவது வகை ஜிஹாத் செய்வது முதல் இரண்டு வகையான ஜிஹாத்தை செய்பவர்களுக்காக பிரார்த்தனை மூலம் செய்யப்படுகிறது. முதல் இரண்டு வகையான ஜிஹாத் செய்பவர்களுக்கு முதல் இரண்டு வகைகளில் ஜிஹாதில் தீவிரமாக பங்கேற்காதவர்களின் பிரார்த்தனை தேவைப்படுகிறது. நேர்மையுடன் செய்யப்படும் அனைத்து பிரார்த்தனைகளும் நிச்சயமாக ஏற்றுக் கொள்ளப் படும். அல்லாஹுவின் உதவியில் நம்பிக்கை வைத்து இஸ்லாத்தின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து மேலே குறிப்பிட்ட மூன்று வகையான ஜிஹாத் செய்பவர்களுக்கு அல்லாஹு எந்த சந்தேகமும் இல்லாமல் உதவிபுரிவான். தங்களை ஜிகாதுக்காக தயார் செய்யாதவர்கள், புதிய போர் உபகரணங்கள் மற்றும் ஆயுதங்களை முன்பே ஆயத்தம் செய்யாதவர்கள், தங்களுக்குள் வலுவான சகோதரத்துவத்தையும் அன்பையும் உண்டாக்காது அதற்கு பதிலாக பிரார்த்தனை மூலம் மட்டுமே ஜிஹாத் கடமையைச் செய்பவர்களின் பிரார்த்தனைகளை அல்லாஹு தஆலா ஏற்றுக்கொள்ள மாட்டான்.

பிரார்த்தனைகள் (துவா) ஏற்றுக்கொள்ள படுவதற்கான நிபந்தனைகள். இந்த நிபந்தனைகள் நம் பிரார்த்தனை மூலம் எந்த முடிவை எதிர்பார்கின்றோமோ அந்த முடிவப்பெற்றுக்கொள்ளும் வகையில் அதற்கு தேவையான காரணிகள் எல்லாவற்றையும் முதலில் நிறைவற்றுவதில் மிகவும் உறுதியாக இருக்க வேண்டும். நாம் மேலே கூறியது போல், ஜிஹாத்தில் வெற்றிபெற, இஸ்லாத்தின் கட்டளைகளை கட்டாயம் பின்பற்ற வேண்டும். இஸ்லாம் நம்மை ஜிஹாதுக் காக தயார் செய்ய கட்டளையிடுகிறது. முதல்வகை ஜிஹாத் மிக நவீன ஆயுதங்களை பெற்றுக்கொள்தல் மற்றும் அவற்றை எவ்வாறு பயன்படுத்துவது என்பது பற்றிய பயிற்சிசெய்வது. மேலும், பொறுப்பான தளபதிகள் மற்றும் தலைவர்களுக்கு கீழ்ப்படிதலும் ஒழுக்கமும் தேவைப்படுகிறது. பிரிவினைவாத இயக்கங்களைத் தவிப்பது. கட்டளை நிலைய(வக்பு) நிதியங்கள் இருந்தால், வசதியுள்ள ஒவ்வொரு முஸ்லிமும் அத்தகைய அறக்கட்டளைகளுக்கு உதவ வேண்டும். அஹ்லுஸ் ஸுன்னத் அறிஞர்கள் அல்லது அவர்களுக்கு உதவும் நிதியங்களுக்கு உதவுவது சொத்து மூலம் ஜிஹாத் ஆகும். உடல் மற்றும் நிதி மூலம் ஜிஹாத் செய்பவர்களுக்கு சொர்க்கத்தில் நிரந்தர தோட்டங்களை அல்லாஹு தஆலா உறுதியளிக்கிறான். அலி முஹம்மது பெல்ஹீ பாரசீக

மொழியில் எழுதப்பட்டு 1411 A.H. இல் அச்சிடப்பட்ட அவரது கிதாப் ஆன முஃப்தி-இல்-முஜாஹித் இல் ஜிஹாத்தைபற்றி விரிவாக விளக்குகிறார்.

ஒரு ஹதீது ஷரீப் பின்வருமாறு கூறுகிறது : "அவர்கள் எவ்வளவு அதிர்ஷ்டத்தை அடைந்தவர்கள், **"தாழ்மையுடன் நடந்து கொள்பவர்கள், தங்கள் குறைபாடுகளை அறிந்தவர்கள், மற்றும் அவர்களின் வாழ்க்கையை ஹலால்ஆன (**இஸ்லாம் அனுமதிக்கும் வழி மற்றும் விதிமுறைகள்**) வழிகளில் சம்பாதிப்பவர்கள், மற்றும் அவர்களின் வருவாயை பயனுள்ள நோக்கங்களுக்காக செலவழிப்பவர்கள், ஃபிக்ஹு பற்றிய அறிவை தசவ்வுஃப் (**அதாவது ஹிக்மத்துடைய**) அறிவுடன் இணைக்கின்றவர்கள். மற்றும் ஹலாலுக்கும் ஹராமுக்கும் இடையிலான எல்லைகளில் விழிப்புடன் இருக்கின்றவர்கள், மற்றும் ஏழைகளிடம் இரக்கமாக நடந்துகொள்பவர்கள், அல்லாஹு தஆலாவுக்கு மிகப் பிரியமாக நடப்பவர்கள், தார்மீக பழக்க வழக்கங்களை அழகாகப் பெற்றவர்கள், யாருக்கும் தீங்கு விளைவிக்காதவர்கள், அவருடைய கோட்பாட்டுடன் இணங்கி நடைமுறையில் இருப்பவர்கள், மேலும் அவர்களின் சொத்துக்களின் மேலதிகமானதை நன்கு கையாளுபவர்கள், மற்றும் அவர்களின் பேச்சின் உபரியைத் தக்க வைத்துக் கொள்ளுபவர்கள்."** பணிவு என்பதை கேலிசெய்வதற்காக, நடிப்புக்காக, வெறும் தோற்றத்துக்காக, அல்லது பணம் சேர்ப்பதற்காக, உயர்ந்த நிலையை பெறுவதற்காக, பாதுகாப்பு போன்ற நோக்கங்களுக்கு பயன்படுத்தினால் அது ஒரு தீமையாக முடியும். இந்த தீங்கிலிருந்து விடுபடுவதற்கு அதை ஏற்படுத்தும் விஷயங்களை நீக்க வேண்டும். இந்த விஷயங்களிலிருந்து விடுபடுவது உண்மையான மனத்தாழ்மையைப் பெற்றுத்தரும்.

## அறிவு மற்றும் அறிவாளிகளின் மதிப்பு

ரியாத்-உன்-நாசிகீன் எனும் புத்தகம் பாரசீக மொழியில் எழுதப்பட்டுள்ளது. [இந்த புத்தகம் ஹிஜ்ரி 835ல் முஹம்மது ரபாமி என்பவரால் எழுதப்பட்டது. அது பம்பாயில் ஹிஜ்ரி 1313 இல் வெளியிடப்பட்டது. [இது 1994 இல் இஸ்தான்புல்லின் ஹகீகத் நூலகத்தினால் ரண்டாவது முறை மறுபதிப்பு செய்யப்பட்டது]. இதில் பக்கம் 356 இல் தொடங்கி பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. நஜ்முத்தீன் அபுபகர்ராசி(இவர் ஹிஜ்ரி 654இல் மறைந்தார்) அவரால் எழுதப்பட்ட**"மிர்சாத்-உல்-இபாத் மினல்-மப்தாஇ இலல்-மஆத்"** என்ற கிதாபில் பின்வரும் ஹதீது எழுதப்பட்டுள்ளது. "**ஒருவர் அறிஞர்களிடம் மரியாதை பெறுவதற்காக அல்லது அறிவற்றவர்களுடன் வாக்குவாதம் செய்து பிரபலமானவராக மாறவேண்டும் என்ற நோக்கில் மார்க்க அறிவைக் கற்றுக்கொள்ளும் ஒருவருக்கு சொர்க்கத்தின் வாசனை கூட கிடைக்காது."**

இதிலிருந்து; செல்வம் அல்லது பட்டம் பதவிகளைப் பெறுதல் அல்லது அவரது மிருகத்தனமான ஆசைகளை நிறைவேற்றும் நோக்கில் மத அறிவைக் கற்றுக்கொண்டு அந்த அறிவைப் பின்பற்றாதவர், இஸ்லாமிய அறிஞர்(ஆலிம்) அல்ல என்று புரிந்து கொள்ளப்படுகிறது. மற்றொரு ஹதீது இவ்வாறு கூறுகிறது :**"உலக உடைமைகளை பெறுவதற்காக கற்றுக்கொள்ளும் ஒருவர் அந்த உலக உடைமைகளை பெற்றுக்கொள்வார், ஆனால் அவருக்கு மறுமையில் (ஆஹிரத்தில்) கிடைப்பது நரகத்தின் நெருப்பாகும்."** இந்த வகை அறிவு யாருக்கும் பயனளிக்காது. இத்தகைய அறிவை தவிர்ப்பது அவசியம்.

பின்வரும் ஹதீதில் கூறப்படுகின்றது, **"ஓ ரப்! பயனற்ற அறிவிலிருந்து என்னைப் பாதுகாத்து விடு."** ஒரு முஸ்லீம் கற்றுக்கொள்ள வேண்டிய அறிவு "இஸ்லாமிய அறிவு." அழைக்கப்படுகிறது. இஸ்லாமிய அறிவு "மத அறிவு" மற்றும் "அறிவியல் அறிவு" எனும் இரண்டு பிரிவுகளைக் கொண்டது.

பயனற்ற அறிவும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதலாவது வகை; மேற்கூறப்பட்ட மக்களால் கற்றுக் கொள்ளப்பட்டு நரகத்திற்குச் செல்வார்கள் என்று கூறப்பட்ட மத அறிவு. இரண்டாவது வகை; மத அறிவுடன் தொடர்புபடாத அறிவியல் (விஞ்ஞான) அறிவு. இது[பண்டைய ரோமர்கள் யூதர்களை சிங்கங்களுக்கு வீசுவதன் மூலம் சித்திரவதை செய்வார்கள், பாலஸ்தீனில் இடைக்காலத்தில் முஸ்லிம்களுக்கு எதிரான கிறிஸ்தவர்களின் காட்டுமிராண்டித்தனமான தாக்குதல்கள், ஐரோப்பாவில் ஹிட்லர் மக்களை பெருமளவில் கொன்றது, மற்றும் ஆசியாவில் ரஷ்ய மற்றும் சீன கம்யூனிஸ்டுகள், பிரிட்டன் நாடுகளை ஏமாற்றி அவர்களை ஒருவருக்கொருவர் சண்டையியிட தூண்டியது, இவை அனைத்தும் இந்த அறிவைப்பயன்படுத்தி நிறைவேற்றப்பட்டன.]

அல்லாஹு தஆலா கூறுகிறான் இந்த பயங்கரமான மக்கள் மனித குலத்தின் எதிரிகளாக இருந்தாலும் அறிவியலில் முன்னேறிய அறிவு கழுதைகளை ஒத்திருக்கிறது. அவன் குறிப்பிட்டு கூறுகிறான், "**அவர்கள் "தவ்ரா" மற்றும் புதிய ஏற்பாடு (டெஸ்டமென்ட்) சுமந்த கழுதைகளைப் போன்றவர்கள்**." விஞ்ஞான அறிவைக் கொண்ட இந்த கொடூரமான மக்கள் இஸ்லாமிய அறிவை அறியாததனால் சரியான பாதையில் இல்லாதவர்கள். அல்லாஹுதஆலா அவர்களை பொருந்திக்கொள்ள வில்லை.

**குனூஸ்-உத்-தக்காயிக்** கிதாப் பின்வரும் ஹதீதை உள்ளடக்கியது, **"உங்களில் மிகச் சிறந்தவர்கள் குர்ஆனைக் கற்றுக்கொள்பவர்களும் கற்றுக்கொடுப்பவர்களும்."** மிஷ்காத்த்தில் பின்வரும் ஒரு ஹதீது ஷரீபை மேற்கோள் காட்டுகிறார். **"ஒவ்வொரு முஸ்லீம் ஆணும் பெண்ணும் இஸ்லாமிய அறிவைக் கற்றுக்கொள்ள வேண்டும்."** இந்த ஹதீதில் குறிப்பிடப்படும் அறிவு அல்லாஹுத் தஆலாவால் விரும்பப்படுவதும் ஏற்றுக் கொள்ளப்படுவதுமாகும். யார் அதை கவனமாகக் கையாள மாட்டார்களோ அவர்களுக்கு அறிவை கற்பிப்பது பன்றிகளின் கழுத்தில் தங்கச் சங்கிலிகளைப் போடுவது போன்றது. [பின்வரும் ஹதீது ஷரீப் ஜூன்12, 1995 தேதியிட்ட காலண்டர், துருக்கிய செய்தித்தாள் வெளியிட்டது. **"கியாமத்தின் நேரம் நெருங்கும்போது உண்மையான மார்க்க அறிவு மிகவும் அரிதாக இருக்கும், அறியாத மார்க்கவாதிகள் அவர்களின் சொந்த கருத்துக்களின்படி ஃபத்வா கொடுப்பார்கள் அது சரியான பாதையில் இருந்த மக்களை வழி கெடுக்கும்."**

மற்றொரு ஹதீதில், ரசூலுல்லாஹ்' சல்லள்ளாஹு 'அலைஹி வசல்லம் கூறுகிறார்கள். **"மார்க்க அறிஞர்களிடமிருந்து மக்கள் ஓடிவிடும் காலம் வரும் இறந்த கழுதையிலிருந்து அவர்கள் ஓடிப்போவது போல."** அந்த நேரத்தில் மனிதர்கள் ஊழல் நிறைந்தவர்களாகவும் அசிங்கமான வர்களாகவும் இருப்பார்கள். ஏனென்றால், அல்லாஹுதஆலா அறிவை மதிக்கிறான். ஆனால் உலகை வணங்கும் அந்த முட்டாள்கள் அவர்களின் குழந்தை பருவத்தில் பள்ளிசெல்லாதவர்கள் இன்னும் வயதுக்கு வந்த

பின்னரும் ஒரு உண்மையான இஸ்லாமிய மார்க்க அறிஞரின் சகவாசத்தையும் நெருக்கத்தையும் பெற்றுக் கொள்ளாதவர்கள். எனவே, அவர்களின் ஆபத்தான நிலையைப் பற்றி அவர்களுக்கு தெரியாது. அவர்கள் தேவையான அறிவைப் பெறுவதுமில்லை, உண்மையான மார்க்க அறிஞரின் புத்தகத்திலிருந்து படித்து கற்றுக்கொள்ளவும் இல்லை. பணம் மற்றும் சொத்துக்களை பதுக்கி வைப்பது மற்றும் ஒரு நிலையை பெறுவது மட்டுமே கவலை. அவர்கள் அனுமதிக்கப்பட்ட ஹலால் முறையில் சம்பாதிக்கிறார்களா அல்லது அனுமதிக்கப்படாத ஹறாமான வழியிலா என்று கவலைப்படுவதில்லை. அவர்கள் சரியானதுக்கும் தவறானதுக்கும் இடையில் உள்ள வேறுபாட்டை அங்கீகரிக்கவில்லை. அவர்கள் மார்க்க அறிவுக்கும், உண்மையான மார்க்க அறிஞர்களுக்கும் உரிய மதிப்பு கொடுப்பதில்லை. இவர்கள் பார்வையில் உண்மையான மத அறிஞர்களின் புத்தகங்கள் மற்றும் போதனைகள் விலங்குகளை விற்கும் சந்தையில் வாசனை திரவியங்களை விற்பது, அல்லது குருடனுக்கு கண்ணாடி விற்கும் நபரைப் போன்றவர்கள். அல்லது குர்ஆனின் தாஹா சூராவை அபு லஹபிற்கு ஓதுவது, அல்லது தெருவில் அலைந்து திரியும் நபர்களின் பைகளை முத்துக்கள் மற்றும் விலைமதிப்பற்ற கற்களைக் கொண்டு நிரப்புவது அல்லது ஒரு புத்திசாலி மனிதன் பார்வையற்றவர்களுக்கு மஸ்காரா(கோல்) (புருவங்களுக்கு பாவிக்கும் அழகு சாதனம்) பரிசளித்தல் போன்றது. ஆனால் ஒரு புத்திசாலி மனிதன் இந்த நடவடிக்கைகள் எதையும் செய்ய மாட்டான்.

அல்லாஹு தஆலா இந்த வகை நபர்களை பின்வருமாறு விவரிக்கிறான்: "**அவர்கள் விலங்குகளைப் போன்றவை. உண்மையில், அவர்கள் விலங்குகளை விட குறைவானவர்கள்.**" அனஸ் பின் மாலிக் ரலியல்லாஹு த ஆலா அவர்கள் அறிவிக்கும் ஹதீதுஷரீபில் இது பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. "**எந்தவொரு நியாயமான காரணமும் இல்லாமல் ஒரு அறிஞரை அவமதிக்கும் ஒருவரை அல்லாஹுத்தஆலா ஒரு சமூகத்தின் முன்னிலையில் அவமானப்படுத்துவான். ஒரு அறிஞரை கண்ணியப் படுத்தும் ஒருவர் அல்லாஹு தஆலாவால் தீர்க்கதரிசிகளைப் போல மதிக்கப்படுவார்.**" மற்றொரு ஹதீது ஷரீபில் பின்வருமாறு கூறப்படுகினறது: **"ஒரு நபர், ஒரு அறிஞருடன் பேசும்போது அவரது குரலை அறிஞரை விட உயர்த்தினால், அல்லாஹு தஆலா அவரை இந்த உலகத்திலும் மறு உலகத்திலும் அவரை இழிவுபடுத்துவான். அவர் வருத்தப்பட்டு மனந் திரும்பினால் அவர் மன்னிக்கப்படுவார்."** உண்மையான அறிஞர்களுடன் மரியாதையுடன் இருக்க வேண்டியது அவசியம் என்று மேற்கூறியவற்றில் இருந்து தெளிவாகத் தெரிகிறது.

ஒரு கவிதை:

**நீங்கள் ஒரு துளி நீரிலிருந்து உருவாக்கப்பட்டீர்கள், மறக்க வேண்டாம்!**
**ஒருபோதும் உங்களை அறிஞர்களுடன் சமமாக நினைக்காதீர்கள்!**
**முஸ்தபா கட்டளையிட்டதைக் கேளுங்கள்!**
**அறிஞர்களை மதிப்பது என்னை மதிப்பது!**

அறிந்து கொள்ளுங்கள், அறிவும் அறிஞர்களும் மட்டுமே மனிதனை தவறான பாதைகளிலிருந்து காப்பாற்றுவார்கள். வழிகாட்டி இல்லாமல்(**ரஹ்பார்**) ஒருவரால் ஒருபோதும் உண்மையான பாதையை கண்டுபிடிக்க முடியாது. இந்த காரணத்திற்காக உண்மையான அஹ்லுஸ் சுன்னத் அறிஞர்களைக்

கண்டுபிடித்து அவர்களால் எழுதப்பட்ட சரியான மார்க்க புத்தகங்கள் படிக்கவேண்டியது அவசியம்.

இது சூரா "கஹ்ஃப்" இல்' கூறப்பட்டுள்ளது. நபி மூசா அலைஹிஸ்ஸலாம் பெரிய தீர்க்கதரிசி; அவர்களின் அறிவு மிக உயர்ந்த நிலையில் இருந்தது அதனால் அவர் அல்லாஹு தலாவுடன் உரையாடினார், அல்லாஹு தஆலா வின் அன்பின் பாணத்தை பருகினார்(ஷெர்பத்) அவர் இன்னும் ஹிள்ர் அலைஹிஸ்ஸலாத்திடம் அறிவை கற்றுக் கொள்வதர்க்காக அவருடைய மாணவர் யுஷா அலைஹிஸ்ஸலாமுடன் இணைந்தார். மூசா (மோசே) 'அலைஹிஸ்ஸலாம்' தர்க்கத்தில் தேர்ச்சி பெற்றிருந்தாலும், ஹிள்ரிடமிருந்து (அலைஹிஸ்ஸலாம்) அறிவைக் கற்றுக்கொள்ள சென்றார். இது புகாரி ரஹீமஹுள்ளாஹு தஆலா அவர்களால் எழுதப்பட்ட தப்சிரில்(விரிவுரை) விரிவாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. "ஓ என் சகோதரனே! அறிவையும் அறிவை பெற்றவரையும் விட விலைமதிப்பற்ற ஒன்றை நீங்கள் கண்டுபிடித்தீர்களா? அதனால் நீங்கள் உங்கள் வாழ்க்கையை அதனுடன் களிப்பீர்ர்கள். அறிவு மற்றும் அறிஞர்களை மதிக்கும்படியும் மற்றும் அல்லாஹு தஆலா வின் வழியில் உள்ளவர்களின் வரிசையில் சேருங்கள் என்றும் எங்கள் மார்க்கம் கட்டளையிடுகிறது என்பது உங்களுக்குத் தெரியாதா? இந்த காரணத்திற்காக, , உங்கள் வாழ்க்கையை தேவையற்ற விஷயங்களுடன் செலவிட வேண்டாம். ஒரு ஹதீது ஷரீப் பின்வருமாறு கூறுகிறது**: "ஒரு தீர்க்கதரிசிக்கும், சரியான அறிவைப் பெற்று அதன்படி செயல்படுகின்ற அறிஞருக்கும் இடையே ஒரு அளவு வித்தியாசம் உள்ளது. அந்த வித்தியாசத்தின் அளவு நபித்துவத்தின் அளவாகும்."** இந்த அதிர்ஷ்டத்தை அடைவதற்கு ஒருவர் அறிவைக் கற்றுக்கொள்ள முயற்சிக்க வேண்டும்.

ஒரு கவிதை:

**ஓ! அறிவைக் கற்கும் மகிழ்ச்சியான நபரே!**
**உங்கள் வாழ்க்கையின் ஒரு நிமிடம் கூட வீணாக்காதீர்!**
**இந்த ஆலோசனையின் பெறுமதியை சிந்தையில் எடுங்கள் !**
**கவலைக்குரியவர் , சிந்தையில் எடுக்காதவர்**.

**கதை:** இமாம் அபு யூசுப் காதிவுக்கு பதினைந்து வயது மகன் இருந்தார். அவர் தனது மகனை மிகவும் நேசித்தார். ஒரு நாள் மிகவும் பிரியமான மகன் திடீரென்று இறந்தார். அவர் தனது மாணவர்களிடம் அவரது இறந்த மகனின் இறுதி சடங்கிற்காக இஸ்லாம் பரிந்துரைத்த சேவைகளை அவருக்கு பதிலாக செய்ய வேண்டும் என்று கூறினார். ஏனெனில் அவர் தனது ஆசிரியரின் வகுப்பை இழக்க விரும்பவில்லை. இமாம் இறந்த பிறகு, சிலர் அவரைக் கனவில் கண்டார்கள். அவர் சொர்க்கத்தில் ஒரு பெரிய மாளிகையின் முன் நின்று கொண்டிருந்தார். அது மிக உயரமான மாளிகை அது "அர்ஷ்"ஐ நோக்கி விரிவடைவதாகத் தோன்றியது. ". இந்த மாளிகை யாருடையது என்று அவர்கள் கேட்டபோது, அவர் கூறினார். அது அவருடைய மாளிகை என்று. பின்னர் அவர் அந்த மாளிகையை எப்படிப் பெற்றார் என்று கேட்டார்கள். அறிவின் மீதான அவரது அன்பு மற்றும் கற்றல் அதை கற்பித்தல் மீதான அவரது அன்பின் காரணமாக என்று கூறினார். என் சகோதரனே! இந்த உலகிலும் மறு உலகிலும் மகிழ்ச்சியாகஇருக்க வேண்டும் என்பதற்காக அறிவைக் கற்றுக் கொள்ளுங்கள்!

ஒரு கவிதை:

**எல்லா நேரத்திலும் மகிழ்ச்சியாக இருக்க,**
**எல்லா இடங்களிலும் மரியாதையை பெற்றுக்கொள்ள,**
**அறிவைப் பெற முயற்சி செய்யுங்கள்,**
**அறிவின் கிரீடத்தை சுமந்து பழகிக் கொள்ளுங்கள்!**

கதை: மவ்லானா முஹம்மது ரபாமீ, **ரியாத்-உன்-நாசிகீன்** புத்தகத்தின் ஆசிரியர் கூறுகிறார்கள். தனது ஆசிரியர் அல்லாமா முஹம்மது ஜலால் கயினி சும்மா ஹிராவீவின் மூத்த மகன் மிகவும் பக்தியுள்ள அறிஞர். அவர் மரணத்தருவாயின் போது, அவரது தந்தை அவரது படுக்கையில் இருந்தார். அவரது மரணத்திற்குப் பிறகு, அவர் முகத்தை மூடிக்கொண்டு பள்ளிக்குச் சென்று கற்பிக்கத் தொடங்கினார். சிறிது நேரம் ஹதீது கற்பித்தார். போதனைக்குப் பிறகு அவர் திரும்பிச் சென்று அடக்கம் செய்வதற்கான தயாரிப்புகளை செய்யத்தொடங்கினார். நகரத்தைச் சுற்றியுள்ள மலைகளிலிருந்து ஒரு குரல், "என் மகனின் மரண நேரம் வந்துவிட்டது. அவர் இறந்துவிட்டார். இது அல்லாஹு தஆலாவின் ஆணைப்படி இருந்தது என்பதால் நான் அவருடைய ஆணையை ஏற்று அதில் ஒப்புக்கொண்டேன். நான் வேறு எதையும் யோசிக்கவில்லை. ஹசன் பின் அதிய்யா 'ரஹிமாஹுல்லாஹுத ஆலா கூறினார்கள். "**இஸ்லாமிய அறிஞர் ஒருவரின் மரணத்திற்காக வருத்தப்படாத எவரும் ஒரு நயவஞ்சகர். ஒரு இஸ்லாமிய அறிஞரின் மரணத்தை விட மனிதர் களுக்கு பெரிய பேரழிப்பு எதுவும் இல்லை. ஒரு இஸ்லாமிய அறிஞர் இறந்துவிடுகிறபோது வானமும் வானத்தில் உள்ளவர்களும் எழுபது நாட்களுக்கு அழுகிறார்கள்."** "ஒரு உண்மையான மார்க்க அறிஞர் இறக்கும் போது, மார்க்கத்தில் ஒரு காயம் ஏற்படுகிறது அந்த காயம் உலகின் முடிவு வரை தொடர்கிறது. மற்றொரு ஹதீத்-ஷரீபில் பின்வருமாறு கூறப்படுகிறது: **"ஒரு மனிதர் அறிவைக் கற்கும் வழியில் ஒரு அறிஞர் அல்லது ஒரு மாணவர் அல்லது அவர்களை நேசிப்பவர். இந்த மூன்று வகைகளைத் தவிர வேறு நபர்கள் நிலையான ஈக்கள் போன்றவர்கள்." இவற்றில் நான்காவது குழுவில் ஒருவனாக இருக்க முயற்சி செய்யாதிர்கள்."**

ஒரு கவிதை:

**அறிவு, அது நரகத்திலிருந்து மனிதர்களைக் காப்பாற்றும்**
**அறிவு என்பது உங்களிடமிருந்து யாரும் பறிக்க முடியாத சொத்து.**
**அறிவைத் தவிர வேறு எதையும் கேட்க வேண்டாம்,**
**அறிவு என்பது இரு உலகங்களிலும் மகிழ்ச்சியை வழங்கும் வழிமுறை!**

இது "பல்தாஜியின் ஃபத்வாக்களில்" இமாம்-இல் சத்ருஸ்-ஷஹீத் [ சத்ருஸ்-ஷஹீத் ஹுசாமுத்தீன் உமர், செமர்கண்டில் 536 இல் ஷஹீதாக்கப்பட்ட தியாகி] கூறுகிறார், "ஒரு நபர், அவர் ஒரு உண்மையான (ஆலிம்) அறிஞரைக் கேலி செய்தால் அவரின் திருமணம் (நிகா) தானாகவே இல்லாமல் ஆகிவிடும்". ஒரு ஆலிமை முட்டாள், அறியாதவன், பன்றி, கழுதை அல்லது அது போன்ற கூறினால் கசை அடி மூலம் தண்டிக்கப்படுவான். இப் பெயர்களைக் எவரும் அவரை கேவலப்படுத்தும் நோக்கில் கூறினால் அவர் ஒரு காஃபிராக மாறுவார் அவரது நிகாஹ்வும் செல்லுபடியாகாது அது தானாகவே நீக்கிவிடும். இமாம் முஹம்மது அவர்கள் கூறுகிறார்கள் நிராகரிப்பை(குஃப்ர்) ஏற்படுத்தும் ஒரு

வார்த்தையை உச்சரிப்பது போல் இது கருதப்படும். அறிவையும் அறிஞர்களையும் அவமதிக்கும் எவரும் காஃபிராக மாறுவார்கள். அல்லாஹு த ஆலா நம் அனைவருக்கும் பயனுள்ள அறிவைக் கொடுத்து பயனற்றவற்றி லிருந்து நம்மைப் பாதுகாப்பானாக.

## 13– அதிகப்படியான பணிவு (தசல்லுல்)

அதிகப்படியான பணிவு மனப்பான்மை (தஸல்லுல்), அல்லது அர்த்தம் அல்லது தன்னை தாழ்த்திக்கொள்வது. தாழ்வுமனப்பான்மை தடைசெய்யப்பட்டுள்ளது (ஹராம்). பிற தடைசெய்யப்பட்ட விஷயங்களை போல் இது கட்டாயத் தேவையின்(**தரூரத்**) காரணமாக இதை செய்வதற்கும் அனுமதிக்கப்படுகிறது (ஜாயிஸ்). கட்டாய தேவைகளுக்கு சில எடுத்துக் காட்டுகள் பின்வருமாறு: ஒருவரின் மார்க்கம், சொத்து, மரியாதை, வாழ்வை(உயிரை) பாதுகாக்க, கொடுங்கோலன் ஒருவனிடம் இருந்து தன்னை காப்பற்றிக்கொள்வதற்கு. கட்டாய தேவைக்காக சிரமத்தை தவிர்க்க ஒரு எளிதான தீர்வைத் தேடுவது அனுமதிக்கப்படுகிறது. அதிகப்படியான பணிவு என்பது தீமைகளில் ஒன்றாகும். பின்வருபவை அதிகப்படியான பணிவில் நல்லவற்றுக்கான எடுத்துக்காட்டு. ஒரு அறிஞரை (ஆலிமை) பார்வையிடும்பொருட்டு ஒரு ஷூ தயாரிப்பாளர் செல்லும்போது, அறிஞர் அவரை வாழ்த்த எழுந்து நின்று வரவேற்பது அவரை உட்காரச் சொல்வது, அவர் வெளியேறும்போது, அவர் அவருடன் கதவு வரை நடந்து செல்வது. அவரது காலணிகளை அவருக்கு முன்னால் வைக்கிறது. அல்லது, அறிஞர் அவரை வரவேற்க எழுந்து பின்னர் உட்கார்ந்து காண்பிப்பார், அவரது தொழில்,வர்த்தகம் பற்றி அவருடன் உட்கார்ந்து உரையாட வேண்டிய இடத்துக்கு அழைத்தல், அவரது வருகையின் நோக்கத்தை அவரிடம் வினவுதல், அவருடன் பேசுதல், அவரின் கேள்விகளுக்கு மகிழ்ச்சியுடனும், புன்னகை யுடனும் பதில் அளித்தல், அவரின் அழைப்பை ஏற்றுக்கொள்ளுதல், அவரின் கஷ்டங்களை போக்க உதவி செய்தல் என்பன அவர் காட்டிய பணிவு ஆகும். ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"ஒருவர் தனது முஸ்லீம் சகோதரரை கஷ்டத்திலிருந்து காப்பாற்றுபவருக்கு (மறுமையில்) அவர் மேலதிக ஹஜ் மற்றும் 'உம்ரா' செய்ததைப் போல தவாப் வழங்கப்படும்".**

ஹஸ்ரத் ஹசன் 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹு' அவர்கள் தாபித் பனாணி ரஹிமாஹுள்ளாஹு தஆலாவிடம் அவருக்காக ஒரு விடயத்தை செய்ய வேண்டும் என்று கேட்டார்கள். அதற்கு தாபித் ரஹிமாஹுள்ளாஹ் தான் மஸ்ஜிதில் இ'திகாபில் பிஸியாக இருப்பதாகவும், அதை வேறு நேரத்தில் அவருக்காக செய்வதாகவும் கூறினார். ஹஸ்ரத் ஹசன்'ரலியள்ளாஹு தஆலா அவர்கள் தாபித் பெனாணி 'ரஹிமஹுல்லாவை 'பார்த்து: "உங்கள் இடத்தை விட்டு வெளியேறுவது உங்களுக்குத் தெரியாதா, முஸ்லீம் சகோதரரின் தேவைகளில் ஒன்றைப் பார்ப்பதற்காக வெளியே செல்வது ஒரு நஃபிலான ஹஜ் அல்லது 'உம்ரா செய்வதைவிட அதகம் நன்மை பயப்பது" என்று கூறினார்கள்.

இந்த ஹதீது ஷரீப் "அதிகாரம் இருப்பவர்கள் தேவைப்படும் மக்களுக்கு உதவி செய்வதும் மற்றும் ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களுக்கு அவர்களின் அதிகாரம் மற்றும் சொத்துக்களை பயன்படுத்தி ஆதரிப்பதும் உதவி

செய்பவர்களுக்கும்” இது முற்றிலும் (தவாபை கொடுக்கும்) பலனளிக்கும் என்ற முடிவுக்கு ஒரு அடிப்படையாக இருக்கின்றது.

ஒரு நாள் தன்னை பராமரிப்பதற்கு தேவையானவை [**நஃபக்கா**] இருக்கும் போது தர்மம் வாங்கும் எவரும் அதிகப்படியான மனத்தாழ்மையுடன் செயற்படுவது தடுக்கப்பட்டது(ஹராம்). ஒரு நாளைக்கு பராமரிப்பதற்கு தேவையானவை [நஃபக்கா] என்று பொருள். ஒரு நாள் [நஃபக்கா] உள்ள ஒருவர், இல்லாத மற்றவர்களுக்காக அல்லது மற்றவர்களுக்கு நன்கொடையாக பணம் செலுத்த ஒருநாள் வழிமுறையை (நஃபக்கா) சேகரித்தால் அது அதிகப்படியான பணிவில் சேராது. ஒரு பெரிய பரிசை எதிர்பார்க்கும்போது பதிலுக்கு, ஒரு சிறிய பரிசை வழங்குதல் அதிகப்படியான பணிவை உண்டாக்கும். குர்ஆனில் உள்ள வசனங்கள் இதைத் தடை செய்கின்றன. பரிசு கொடுக்கும் வகையில் ஒரு சிறந்த பரிசைத் திருப்பித் தருவது மிகவும் நல்ல செயல். பெறப்பட்ட பரிசுக்கு ஒரு சிறந்த பரிசு எதிர்பார்க்கப்பட்ட நிலையில் அதற்கு பதிலாக எதோ ஒரு பரிசை வழங்க அனுமதி இல்லை. வரவேற்புக்கு அழைக்கப்படாமல் செல்வதும் அதிகப்படியான பணிவு.

ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **“அழைப்பிற்கு கலந்து கொள்ளாமல் இருப்பது பாவம். அழைக்கப்படாமல் கலந்துகொள்வது ஒரு திருட்டு."** தடைசெய்யப்பட்ட (ஹராமான ) விஷயங்கள் அல்லது விவகாரங்கள் எதுவும் நடைபெறவில்லை என்றால் ஒரு திருமண விழாவின் அழைப்புக்கு கலந்துகொள்வது அவசியம் (வாஜிப்). மற்ற அனைத்து வகையான அழைப்புகளிலும் கலந்துகொள்வது சுன்னத். பெருமைக்காக, பகட்டுக்காக, பிழையானவற்றுக்காக செய்யப்படும் அழைப்பிதழ்களை ஏற்க அனுமதிக்கப்படவில்லை. அரசாங்க அதிகாரிகள், பணக்காரர்கள் மற்றும் நீதிபதிகள் உடன் நட்பை ஏற்படுத்துதல் அவர்களிடமிருந்து உலக நன்மைகளைப் பெறுவது என்ற நம்பிக்கையுடன் என்பது அதிகப்படியான பணிவு. கட்டாயத் தேவை (**தரூரத்**) விஷயத்தில் விதிவிலக்கு ஏற்கனவே மேலே விவவரிக்கப்பட்டது. இந்த நபர்களில் ஒருவரை சந்தித்து தலைகுனிவது மூலமோ அல்லது ஸஜ்தா செய்வதன் மூலமோ வாழ்த்துக்கள் தெரிவிப்பது அதிகப்படியான பணிவு மற்றும் ஒரு பெரிய பாவம். வழிபாட்டின் நோக்கத்திற்காக தலைவணங்குவது நிராகரிப்பை(குப்ரை) ஏற்படுத்தும். இது யூத வணக்க வழியைப் பின்பற்று வதை குறிக்கும். [ஒரு ஏழை நபர் என்றால் தேவைப்படுபவர் என்று பொருள். இஸ்லாத்தில், ஒரு நபர் அவரது வாழ்க்கையின் அடிப்படை தேவைகளை வாங்குவதற்கு போதுமான பணம் இருந்து ஆனால் அறுப்பதற்கு ஆடுகளை வாங்குவதற்கு போதுமான பணம் இல்லை எனின் அவர் ஏழை.

ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அல்லாஹு தஆலாவிடம் கேட்ட வறுமையின் நிலை பொருட்கள் வைத்திருப்பதின் வறுமையிலிருந்து வேறுபட்டது; இதன் பொருள் நீங்கள் செய்யும் எல்லாவற்றிலும் உங்களுக்கு எப்போதும் அல்லாஹு தேவை என்னும் உணர்வு என்பதே உண்மை.

அப்துள்ளாஹ் அத்-தஹ்லவி ‘ரஹிமாஹுள்ளாஹு த ஆலா தனது துர்ருள் ம'ரூஃப் எனும் கிதாபில் கூறுகிறார்கள் , “சூஃபித்துவத்தில், ஏழை (பக்ர்) என்றால் ஆசை இல்லாதவர் என்று பொருள் அல்லது, வேறுவிதமாகக் கூறினால் அல்லாஹு தஆலாவை திருப்தி செய்வதை விட வேறு ஆசை இல்லாத ஒருவர்.

இந்த வரையறையை பூர்த்தி செய்யும் ஒருவர் வாழ்க்கையின் தேவை களை(நபாகா) பூர்த்தி செய்ய எந்த வழியும் இல்லாதபோது பொறுமை மற்றும் மனநிறைவை அடைவார். அவர் அல்லாஹு தஆலாவின் களா கத்ரை பொருந்திகொண்டு அவனுக்கு கீழ்ப்படிவதற்காக அவருக்கு தேவையான வற்றை பெறுவதற்கான வேலைகளை செய்வார். அவர் பணிபுரியும்போது, அவர் வணக்கங்கள் செய்வதை நிறுத்த மாட்டார். அவருக்குரிய கட்டளை யிடப்பட்ட கடமையான(ஃபர்ளான) வணக்கங்களை செய்வதுடன் தடை செய்யப்பட்ட செயல்களைச் செய்யமாட்டார். அவர் சம்பாதித்து செலவழிக்கும் போது இஸ்லாத்தின் கட்டளைகளை பின்பற்றுவார். இந்தவகையானவர் களுக்கு செல்வம் இருப்பதுபோல் வறுமையும் பயனுள்ளதாக இருக்கும். அது இரு உலகத்திலும் மகிழ்ச்சியைப் பெறுவதற்கான ஒரு வழியாக இருக்கும். தனது நஃப்சை பின்பற்றும் ஒருநபர் பொறுமை மற்றும் மனநிறைவு இல்லாதவர். அல்லாஹு தஆலாவின் களாகத்ரில் ஆணையில் திருப்தி அடைவதில்லை. அவர் ஏழையாக இருக்கும்போது அவருக்கு மிகக் குறைவாகக் கொடுத்தான் என்று கூறுகிறார். அவர் பணக்காரராக இருக்கும்போது, அவர் அதில் திருப்தி அடைவதில்லை. இன்னும் வேண்டும் என்பார். அவர் தனது வருவாயை தடைசெய்யப்பட்ட விஷயங்களில் செலவிடுவார். அவரது வறுமையும் அல்லது செல்வமும் இந்த உலகத்திலும் மறு உலகத்திலும் அவருக்கு பேரழிவாக இருக்கும்.

எந்தவொரு வணிகத்தையும் அல்லது வர்த்தகத்தையும் செய்வது, அனுமதிக் கப்பட்ட சம்பளம் தரும் வேலைகள், ஒரு கூலிக்கான வேலை: உதரணத்திற்கு;., ஆடு மாடு மேய்ப்பவர், தோட்டக்காரர், ஸ்டோன்மேசன், போர்ட்டராக வேலை செய்வது அல்லது கட்டுமான வேலைகளில் பணிபுரிவது அதிகப்படியான பணிவு அல்ல. நபிமார்கள் 'அலைஹிமுஸ்ஸலாவத்து வதஸ்லிமாத்', இறை நேசர்கள், சஹாபாக்கள் இந்த வகையான வேலைகளைச் செய்தார்கள். ஒருவர் தனக்கு, தனது மனைவி, பிள்ளைகளுக்காக உழைப்பது ஒருவருக்கு கட்டாய கடமை(ஃபர்ள்). மற்றவர்களுக்கு உதவ வேண்டும் என்ற நோக்கத்துடன் (ஃபர்ளான தொகையைத் தாண்டி) அதிக பணம் சம்பாதிப்பதற்காக அனைத்து வகையான வேலைகளிலும் பணியாற்ற இது அனுமதிக்கப்படுகிறது (முபாஹ்). நபி இத்ரிஸ் 'அலைஹிஸ்-சலாம்' ஒரு தையல்காரராக பணியாற்றினார். நபி தாவுத் 'அலைஹிஸ்-சலாம்' இரும்பு வேலை செய்பவராக பணியாற்றினார். நபி ஆபிரகாம் (இப்ராஹும்) 'அலைஹிஸலம்' ஒரு விவசாயியாகவும், ஜவுளி வணிகராகவும் பணியாற்றினார். நபி ஆதம் 'அலைஹிஸ்-சலாம்' முதல் முறையாக துணிகளை நெய்தார். [இஸ்லாத்தின் எதிரிகள் முதல் மனிதர்கள் குகைகளில் இலைகளால் தங்களை மூடி வாழ்ந்தார்கள் என்று எழுதியுள்ளார்கள். ஆனால் அவர்களிடம் அதற்கு சான்றாக எந்த ஆவணமும் இல்லை) தீர்க்கதரிசிகள் ஈசா(இயேசு,) நூஹு (நோவா) சாலிஹ் அலைஹி முஸ்ஸலாம்' ஆகியோர் முறையே காலணி தயாரித்தல், தச்சு மற்றும் பை தயாரித்தல் போன்ற தொழில்களைச் செய்தனர்.

பெரும்பாலான தீர்க்கதரிசிகள் 'அலைஹிமமுஸ்ஸலவாத்து-வ தஸ்லிமாத்' மேய்ப்பர்கள். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம்' அவர்கள் ஒரு ஹதீதில் கூறுகிறார்கள் **"ஒருவரின் வீட்டுத் தேவைகளை வாங்குதல் மற்றும் சுமத்தல் அவர்கள் ஒருவரின் வீட்டிற்குச் செல்வது என்பது ஒருவர் கர்வமானவர் அல்ல என்பதற்கான அறிகுறியாகும்**".

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம்' அவர்கள் பொருட்களை வாங்கினார் மற்றும் பல்வேறு பொருட்களை விற்றார்கள். அவர் விற்றதைவிட அதிகமாக வாங்கினார்கள். அவர்கள் மற்றவர்களுக்காக வேலை செய்தார்கள், அவர்கள் மற்றவர்களை அவருக்காக வேலை செய்யவும் பயன்படுத்தினார்கள். அவர்கள் வணிக நிறுவனங்களில் சேருதல் போன்று அதற்கு சமனான வணிக நடவடிக்கைகளில் பங்கேற்றார்கள். அவர்களது நேரத்தில் வணிக நடவடிக்கைகள் மற்றும் வணிக கூட்டாண்மைகளை நிறுவியது. அவர்கள் ப்ராக்ஸி(வகாலத்) மூலம் பலரை பிரதிநிதித்துவப் படுத்தினார்கள். அதேபோல் கொடுப்பதன் மூலம் பல செயல்பாடுகளில் தன்னை பிரதிநிதித்துவப்படுத்த பலரை நியமித்தார்கள். அவர்கள் பரிசுகளை வழங்கினார்கள் மற்றும் பெற்றார்கள் . அவர்கள் பணம் அல்லது வேறு கடன் வாங்கினார்கள். அவர்கள் அறக்கட்டளைகளை (வக்ஃப்) நிறுவினார். இந்த உலக நடவடிக்கைகள் அனைத்தும் செய்யும்போது அவர் ஒருபோதும் கடுமையான வார்த்தைகளை கூறவில்லை, நடத்தும்போது யாருடனும் கோபம் கொள்ளவுமில்லை. அவர்கள் சத்தியப்பிரமாணம் செய்து மற்றவர்களுக்கு சத்தியபிரமானம் செய்து வித்தார்கள். அவர் முக்கியமாக தனது உறுதிமொழிகளை நிறைவேற்றினாலும், அங்கே அவ்வப்போது அவர் சத்தியப்பிரமாணத்தை மீறியதற்காக ( கஃப்பாரத்) இழப்பீடு பணம் செலுத்தினார்கள். அவர்கள் நகைச்சுவைகளை செய்வார்கள் ஆனால் அவரது நகைச்சுவைகள் எப்போதும் உண்மையை அடிப்படையாகக் கொண்டவை, எனவே அவை எப்போதும் பலனளிக்கும். மேற்கூறிய நடவடிக்கை களை தவிர்ப்பது அல்லது வெட்கப்படுவது கிப்ராக இருக்கும். பலர் இந்த விடயங்களில் பணிவு அதன் தீவிரத்துடன் குழப்பம் அடைகிறார்கள், தவறாக நினைக்கிறார்கள். நஃப்ஸ் ஆனது 'தவாது' மற்றும் 'தஸல்லுல்' ஆகியவற்றுக்கு இடையேயான சிறிய வேறுபாடுகளில் பல நபர்களை ஏமாற்றுகிறது.

## 14– சுய காதல் (உஜுப்)

தீமைகளில், பதினான்காவது சுயகாதல். ஒருவர் தனது வணக்கங்களையும் நற்செயல்களையும் விரும்புவதும் அதில் பெருமிதம் கொள்வதும்.ஒருவர் தான் செய்த வணக்க வழிபாடுகள் மற்றும் நற்செயல்களை பெரிதாக நினைப்பதுடன் அவை தனது பலனை இழந்து விடக்கூடாது என்று பயப்படுவதும் கவலைப்படுவது சுய விருப்பமாக இருக்காது. அத்தோடு இந்த வணக்க வழிபாட்டுச் செயல்கள் அல்லாஹுவின் அனுக்கிரகத்தினால் அவன் கருணை காரணமாகத்தான் செய்யப்படுகின்றது என்று சந்தோஷப்படுவதும் சுய அன்பாக இருக்காது. ஆனால், நல்ல வணக்க வழிபாடுகளை செய்து சாதித்து விட்டோம் என்று அல்லாஹுவின் கருணை பற்றி சிந்திக்காமல் சந்தோசப்படுவது அது சுய அன்பாக இருக்கும்.

(மின்னத்) என்பது சுய காதலுக்கு எதிரரானது, அதாவது உங்கள் வணக்கம் என்பது உங்கள் சொந்த முயற்சியாலும் உழைப்பினால் மட்டும் பெறப்பட்ட நற்பேறு அல்ல ஆனால் அல்லாஹு தஆலாவின் அருள்பாலிப்பு என்று உணர்தல். இந்த முறையில் சிந்திப்பது சுயகாதலின் ஆபத்து இருக்கும்போது அவசியமானது(ஃபர்ள்), மற்றப்படி அனுமதிக்கக்கூடியது (முஸ்தஹப்). மனிதர்களை சுயஅன்பில் வழி நடத்தும் ஆதிக்கம் செலுத்தும் முக்கிய காரணிகள் அறியாமையும், உணராமை (கஃப்லத்) ஆகும். சுயகாதல் ஒரு

தீங்கானது என்பதால் அதை அகற்றுவதற்கு நாம் முயற்சிக்க வேண்டும். சுயகாதலிலிருந்து விடுபடும் பொருட்டு, தன்னிடம் உள்ள எல்லா வகையான பயனுள்ள செயல்கள், மற்றும் திறன்கள், வசதிகளையும் பற்றியும் ஒருவர் சிந்திக்கவேண்டும்., உதாரணத்திற்கு; அறிவாற்றல், உள்ளம், மற்றும் அறிவு, என்பன அவர் நற்செயல்களையும் வணக்கங்களையும் செய்வதற்காக அவருக்கு அல்லாஹ்வினால் வழங்கப்பட்டவை. அல்லாஹுவினது படைப்பு என்பதன் காரணமாக, அவனது ஆணை, மற்றும் விருப்பப்படி சொத்துக்கள் பதவிகள் என்பன அனைத்தும் அவனால் எங்களுக்கு வழங்கப்படுகின்றன. நிஃமத் என்றால் மனிதர்களுக்கு நன்மை பயக்கும் விஷயங்கள். அவற்றை பெறுவதன் மூலம் மனிதர்கள் மகிழ்ச்சியை அனுபவிக்கிறார்கள். எல்லா நிஃமத்துகளும் அல்லாஹுவால் மட்டுமே அனுப்பப்படுகின்றன. அவற்றை படைத்து அனுப்புவது அவனைத் தவிர வேறு யாரும் இல்லை.

சஹாபாக்கள் 'ரலியள்ளாஹு த்ஆலா' அலைஹிம் அஜ்மஈன்' ஹுனைன்' புனித யுத்தத்தில் இஸ்லாமிய முன்னணியில் போரிடும் ஏராளமான வீரர்களை பார்த்தபோது அவர்களில் சிலர் தாங்கள் இனிமேல் ஒரு போரையும் இழக்கமாட்டோம் என்று கூறினார்கள். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்கள் கூறியதைக் கேட்டு மிகவும் வருத்தப்பட்டார்கள். போரின் தொடக்கத்தில் அல்லாஹுதஆலாவின் உதவி வரவில்லை. இஸ்லாமிய முன்னணியின் வீரர்கள் போரை இழக்கத் தொடங்கினர். ஆனாலும் பின்னர், அல்லாஹு தஆலா அவர்களின் மீது பரிதாபப்பட்டு அவர்களுக்கு வெற்றியை வழங்கினான்.

நபி தாவுத் 'அலைஹிஸ்சலாம்' பின்வருமாறு பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார் "எனது ஆண்டவனே! நம் குழந்தைகளில் சிலர் உன்னிடம் பிரார்த்தனை செய்யாத இரவு இல்லை, இன்னும் எங்கள் குழந்தைகளில் சிலர் உனக்காக நோன்பிருக்காத பகல் இல்லை என்று பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அல்லாஹு தஆலா பதிலளித்தான்: "**என்னுடைய நாட்டம் இல்லாமல், நான் வலிமையையும் வாய்ப்பையும் கொடுக்கா விட்டால், அவை எதுவும் செய்யமுடியாது"**. தாவுத் 'அலைஹிஸ் சலாத்தின்' இந்த முறைப்பாடு அல்லாஹுதஆலா வை புண்படுத்தியது, மேலும் அவர் விரும்பத் தகாத அனைத்தையும் அனுபவித்தார் என்று வரலாற்று புத்தகங்களில் எழுதப்பட்டுள்ளது. விஷயங்கள். நாங்கள் பெருமையை (கிப்ரை) ஏற்படுத்தும் காரணங்களை ஏற்கனவே விளக்கியுள்ளோம். அவை சுயகாதலையும்(உஜுப்) ஏற்படுத்துகின்றது. அல்லாஹு தஆலா வின் நற்பேறுகளுக்கு நன்றி செலுத்துவதும் அவனின் பெரிய நன்கொடை.

சுயகாதல்(உஜுப்) எண்ணற்ற ஆபத்துகளையும் தீங்குகளிலும் முடிவடைகிறது. முதலில் அது நம்முடைய பாவங்களை மறந்துவிடச் செய்கிறது. பாவம் நம் இதயங்களை இருளடையச்செயகிறது. ஒருவர் அவர் செய்த பாவங்களைப் பற்றி சிந்திக்கும்போது அவரது வழிபாடுகளை தகுதியானதாகக் காண முடியாது. மேலும் வணக்க வழிபாடுகளைச் செய்ய முடியும் என்பது அல்லாஹு தஆலாவின் நற்கருனையும் பேராதரவும் ஆகும். சுயகாதல் உள்ளவர்கள் அல்லாஹு தஆலாவின் தண்டனையை மறந்தது மட்டுமல்ல அவர்கள் மற்றவர்களின் புத்திமதிகளையும் கேட்க மாட்டார்கள். இதனால் அவர்கள் பயனுள்ள உதவியைப் பெறுவதற்கான வாய்ப்பை இழக்கிறார்கள்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்''ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"மூன்று விஷயங்கள் ஒரு நபரை பேரழிவுகளுக்கு தள்ளுகின்றன: கஞ்சத்தனம்(bபுகுல்), பேராசை (ஹவா) மற்றும் 'உஜ்ப்' (தற்புகழ்ச்சி)."** ஒரு கஞ்சத்தனமான ஒருநபர், அல்லாஹு தஆலாவுக்காக மற்றவர்களுக்கு செய்ய வேண்டிய கடமையான செயல்களை செய்வதை விட்டும் இழக்கிறார். தனது நஃப்சின் ஆசைகளை (ஹவா) பின்பற்றும் சுயகாதல் உள்ள ஒருவர் அவரது "நஃப்ஸை" போற்றுபவர் நிச்சயமாக சில பேரழிவுகளிலும் படுகுழியில் விழுவார்.

இமாம் முஹம்மது அல்-கஸ்ஸாலி 'ரஹிமாஹுள்ளாஹு தஆலா' கூறினார்கள் "எல்லா வகையான தீமைகளும் மூன்று மூலங்களிலிருந்து உருவாகின்றன: பொறாமை, நயவஞ்சகம், மற்றும் சுயகாதல். உங்கள் இதயத்திலிருந்து இவற்றை அழிக்க முயற்சி செய்யுங்கள்!" சுயஅன்பு கொண்ட ஒருவர் எப்போதும் நான், என்னை; என்றே கூறுவார். அவர் எப்போதும் எந்தவொரு கூட்டத்திலும் முன்னணி நிலையில் இருக்கவேண்டும் என்று விரும்புகிறார். அவர் எப்போதும் அவருடைய சொல்லை மற்றவர்கள் கேட்க வேண்டும் என்றும் விரும்புவார்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வாஸல்லம்'' அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள் "**பாவமில்லாமல் இருப்பது உங்களை ஏமாற்றி மிகப்பெரிய பாவத்துக்குள்(உஜுப்) தள்ளக்கூடும் என்று "நான் பயப்படு கிறேன்"**. ஒரு பாவி மனத்தாழ்மையையும் குற்றவாளி உணர்வையும் காண்பிப்பார் எனவே பாவமன்னிப்பை கேட்பார். ஒரு நபர் சுயஅன்பு கொண்ட நபர் அவரது அறிவுமீது, அல்லது செயல்களில் பெருமிதம் கொன்டு கர்வமாக மற்றும் அகங்காரமானதாக இருக்கும் போது அவர் மனந்திரும்புவது கடினமாக இருக்கும். அல்லாஹு த்'ஆலா, வணக்கவாளிகளின் பெருமை வாய்ந்த குரல்களைவிட பாவிகள் மனஅழுத்தத்துடன் புலம்புவதை விரும்புகிறான்.

மிக மோசமான வகை சுயஅன்பு என்பது ஒருவரின் சொந்த தவறுகளையும் ஒருவரின் நஃப்ஸின் விருப்பங்களையும்(ஹவா) விரும்புவது அல்லது போற்றுவது. இதைக் கொண்டு தன்னைக் கெடுத்துக் கொண்ட ஒருவர் அவரது நஃப்ஸின் ஆசைகளைப் பின்பற்றுவதில் எப்போதும் மனநிறைவு பெரும்; வேறுவிதமாகக் கூறினால் அவர் தனது நஃப்ஸுக்கு அடிமையாகிறார், எந்த அறிவுரைகளையும்` ஏற்றுக்கொள்வதில்லை. ஏனென்றால் மற்ற அனைவருமே அறியாதவர்கள் என்று அவர் நினைக்கிறார். ஆனாலும் உண்மையில் அவர் மிகவும் அறியாதவர்.

வழிதவறிய மக்கள் (அஹ்லுல் பித்அத்) எந்த மத் ஹபையும் பின்பற்றாதவர்கள், அதாவது,'லா-மத் ஹபிய்யா'வினர் இந்த வகையில் அவர்களின் வழிதவறிய நம்பிக்கைகள் மற்றும் அவர்களின் நெறிதவறிய வழிபாடுகலுடன் அவர்கள் இணைக்கப்பட்டு உள்ளனர். தங்களின் பாதை தான் சரியான பாதை என்று எண்ணுகின்றனர். இந்த வகையான சுய அன்புக்கு சிகிச்சை பெறுவது மிகவும் கடினம் .

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்'' அவர்களிடம் 'சூரா மாயிதா'வின்150ஆவதுஆயத்தின் அர்த்தத்தை விளக்குமாறு கோரப்பட்டார்கள்.

“**ஓ விசுவாசிகளே! நீங்கள் உங்களை பாதுகாத்துக் கொள்ளுங்கள்: நீங்கள் உண்மையான வழிகாட்டுதலைப் பின்பற்றினால், வழிதவறியவர்களிடமிருந்து உங்களுக்கு எந்த நஷ்டமும் ஏற்படாது. ... ”(5-105)**

ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு’ அலைஹி வாஸல்லம்’ பதிலளித்தார்கள், **"இஸ்லாத்தின் கட்டளைகளை மற்றவர்களுக்கு அறிவியுங்கள் மற்றும் இஸ்லாத்தில் தடுக்கப்பட்டவைகளையும் விளக்குங்கள்! ஒருநபர் சுயகாதலின் மூலமாக உங்கள் பேச்சைக் கேட்காமல் இருந்தால், நீங்கள் உங்கள் சொந்த குறைபாடுகளை சரிசெய்யுங்கள். ”** “சுயகாதல்” நோய்க்கு நோய் தீர்க்கும் மருந்தை தயாரிப்பவர்கள் அஹ்லுஸ்-சுன்னத் அறிஞர்கள் அறிஞர்கள். இந்த நோயுற்றவர்களுக்கு தங்கள் சொந்த நோய் பற்றி தெரியாது என்பதால் அவர்கள் தங்களை ஆரோக்கியமானவர்கள் என்று கருதுகிறார்கள். இந்த மருத்துவர்களின் அறிவுரைகளையும் அறிவையும் அவர்கள் ஏற்கமாட்டார்கள். [அதாவது; உண்மையான இஸ்லாமிய அறிஞர்களின்], அதனால் அவர்கள் அழிவுகரமான நோய்களுடன் தொடர்கிறார்கள். உண்மையில், இந்த அறிஞர்கள் எங்கள் நபிகள் நாயகம் சல்லள்ளாஹு’ அலைஹி வஸல்லம்’ அவர்களிடமிருந்து கற்றுக்கொண்ட நோய்தீர்க்கும் மருந்தை வழங்குகிறார்கள். அறிவற்ற மற்றும் முட்டாள் மக்கள்; இந்த அறிஞர்கள் இந்த மருந்தை தாங்களாகவே தயாரிக்கிறார்கள் என்று நினைகிறார்கள். அவர்கள் தான் சரியான பாதையில் உள்ளனர் என்று தங்களை போற்றுகிறார்கள்.

## 15– பொறாமை (ஹசது)

பதினைந்தாவது தீங்கு பொறாமை (ஹசது). இந்த நோயால் பாதிக்கப்பட்ட ஒருவர் அல்லாஹு தஆலாவால் மற்றவர்களுக்கு வழங்கப்பட்ட நிஃமத்து களை அவர்களுக்கு கிடைத்திருக்க வேண்டாம் என்று நினைக்கிறார்கள். வேறு வார்த்தைகளில் கூறுவதானால், அவர்கள் அந்த நிஃமத்களை இழக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார். மற்றவர்களுக்கு தீங்கு விளைவிக்கும் விஷயங்கள் இருக்கக்கூடாது என்று நினைப்பது பொறாமை அல்ல அது நன்மை(ஃகய்ராத்) ஆகும்.

உலக லாபங்களைப் பெறுவதற்கான மார்க்க அறிவை பயன்படுத்துபவர்கள் அவர்களின் அறிவை இழக்கவேண்டும் என்று நினைப்பது ஃகய்ராத். தடை செய்யப்பட்ட ஹராமான அல்லது அடக்குமுறை விஷயங்களை ஊக்குவிக்க, அல்லது பித்அத்துகளை பரப்புவதற்கு அல்லது இஸ்லாத்தை அழிப்பதற்கு பயன்படுத்தும் செல்வம் மற்றும் உடைமைகளை அழிக்க விரும்புகிறது பொறாமை அல்ல மாறாக அது மார்க்கத்தின் மீது ஃகய்ராத் ஆகும்.

இதயத்தில் பொறாமை உள்ள ஒருவர் எனினும், அதை அவர் விரும்பாத அல்லது அதன் பாவத்தை தாங்க விரும்பாத ஒருவர் பாவியாகமாட்டார். இதயத்திற்கு வரும் விஷயங்கள், உதரணத்திற்கு; எண்ணங்கள் அல்லது நினைவுகள் பாவங்களாக கருதப்படுவதில்லை, ஏனெனில் இவற்றைக் கட்டுப்படுத்தும் திறன் ஒருவரின் ஆற்றலுக்குள் இல்லை. இருப்பினும், ஒருவர் அதைப்பற்றி கவலைப்படவில்ல, பொறாமை இருப்பதைப் பற்றி மனம் வருந்தவில்லை அல்லது பொறாமைப்பட ஆசைப்படுகிறார் எனின் அது பாவமாகவும் தடைசெய்யப்பட்ட செயலாகவும் இருக்கும். மேலும், ஒரு நபரின்

பொறாமை அவரது செயல்களிலும் வார்த்தைகளிலும் பிரதிபலித்தால், அதுஒரு பெரிய பாவமாக இருக்கும்.

எங்கள் அன்புக்குரிய நபி ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம்'' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"மனிதர்கள் பின்வரும் மூன்று விஷயங்களிலிருந்து தங்களை விடுவிக்க முடியாது: 'சூ-யி-(z)ஜான், 'தயாரா' மற்றும் 'ஹசத்'. ஒரு நபருக்கு வேறொரு நபர் பற்றி இருக்கும் மோசமான அபிப்பிராயம் சூ-யி-(z)ஜான், அவர் தனது மோசமான கருத்துக்கு ஏற்ப செயல்படக்கூடாது. அல்லாஹு தாலாவிடம் உங்கள் நம்பிக்கை (தவக்குல்) வைத்து அச்சுறுத்தலாக இருக்கலாம் என்று நீங்கள் நினைக்கும் விஷயங்களைச் செய்யுங்கள். நீங்கள் ஒரு நபரை பற்றி பொறாமை ப்பட்டால் அவரை ஒருபோதும் காயப்படுத்த வேண்டாம்".**

"தயாரா" என்றால் தவறான கெட்ட சகுனத்தை நம்புவது. சூ-யி-(z)ஜான் என்பது ஒரு குறிப்பிட்ட நபரை ஒரு தீயவனாக நினைப்பதாகும். இந்த ஹதீதிலிருந்து ஒருவரின் இதயத்தில் பொறாமை ஏற்படுவது தடைசெய்யப்படவில்லை ஆனால், ஒருவரின் இதயத்தில் அதன் இருப்பு பற்றி மகிழ்ச்சி அடைவது மற்றும் அதன் தொடர்ச்சியை விரும்புவது என்பன தடைசெய்யப்பட்டுள்ளது.

பின்வருவது **ஹதீகா** எனும் கிதாபிலிருந்து ஒரு பந்தியில்:

"ஆன்மீக இதயத்திற்கு வரும் சிந்தனை பின்வருவனவற்றில் ஐந்து பிரிவுகளில் பொருந்துகிறது. இதில் முதலாவது வகை: தங்கியிருக்கும் சத்தி இல்லாதது. அது உடனே விரட்டப்பட்டு விடுகிறது. அது 'ஹாஜிஸ் அழைக்கப்படுகிறது. இரண்டாவதாக சிறிது நேரம் இதயத்தில் தங்கிவிடுகிறது. இது 'ஹாதிர்' அழைக்கப்படுகிறது. மூன்றாவது ஒன்று இதயத்தில் சந்தேகத்தை ஏற்படுத்தும், உதாரணத்திற்கு; அது செய்யப்பட வேண்டுமா இல்லையா போன்றது. இது 'ஹதீதுன்-நஃப்ஸ்' என்று அழைக்கப்படுகிறது. நான்காவது இதயம் செய்வதற்கு விரும்புகிறது, இது 'ஹெம்'. என்று அழைக்கப்படுகிறது. ஐந்தாவது நான்காவது வகையிலிருந்து வேறுபடுகிறது, விருப்பம் வலுவாகிறது இதயம் அதை செய்ய முடிவுசெய்கிறது. வலுவான விருப்பத்துடன்அதை செய்ய முடிவு செய்கிறது; இது "**அஸ்ம்**" மற்றும் "**ஜஸ்ம்**"என்று அழைக்கப்படுகிறது.

முதல் மூன்று பிரிவுகளும் மலக்குகளால் பதிவு செய்யப்படுவதில்லை. நான்காவது நிலை, எடுத்துக்காட்டாக; "ஹெம்" இது ஒரு நல்ல செயலாக இருந்தால் (தவாப்)வெகுமதியாக பதிவு செய்யப்படும். மேலும், இது தீய செயல்களில் ஒன்றாயிருந்து அதை ஒருவர் அதைச் செய்யவில்லை என்றால் அது வெகுமதியாக (தவாப்)பதிவு செய்யப்படும். ஐந்தாவதைப் பொறுத்தவரை "அஸ்ம்": அது தடைசெய்யப்பட்ட செயல்களில் ஒன்று என்றால் மற்றும் செய்யப்பட்டால் ஒரு பாவம் பதிவு செய்யப்படும். அது செய்யப்படாவிட்டால் அது மன்னிக்கப்படும்.

எங்கள் அன்புக்குரிய நபி 'சல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்''ஒரு ஹதீது ஷரீபில் பின் வருமாறு கூறுகிறார்கள்: **"இருதயத்தால் உருவான தீய எண்ணங்கள் அவை நடைமுறைகளாக உருவாகாவிட்டால் அல்லது மற்றவர்களிடம் கூறப்படாவிட்டால் மன்னிக்கப்படும்."**

இதயத்தில் அவநம்பிக்கை அல்லது மன முரண்பாடுகள் அல்லது பிழையான சிந்தனைகள் ஏற்படும் போது இவற்றால் நீங்கள் வருத்தப்பட்டு நீங்கள் அவற்றை நிராகரித்து இதயத்திலிருந்து தூக்கி எறிந்து விட்டால் இந்த குறுகிய கால நிலை அவநம்பிக்கையாக இருக்காது. இருப்பினும், ஒரு நபர் பல ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு காஃபிராக மாற திட்டமிட்டால், அவர் அதை வேறு ஏதாவது நிலைகளுக்காக செய்தாலும் அவரது திட்டம் உருவாகும் தருணத்திலிருந்து அவர் ஒரு காபிர் ஆகிறார். அதேபோல், பல வருடங்களுக்கு பின்னர் ஒரு காஃபிரை திருமணம் செய்ய முடிவு செய்யும் ஒரு பெண்,அவள் முடிவெடுக்கும் தருணத்திலிருந்து காஃபிராக மாறுவாள்.

[சில ஹராமான செயல்களை செய்வதற்கான பாவம் அதை செய்ய எடுக்கும் முடிவைவிட பெரியது. பாவம் ஒரு பெயர்ச்சொல், அதாவது அதை செய்பவர்களுக்கு தண்டனை வழங்கப்படும். பாவம் செய்வது என்பது தண்டனைக்குரிய தடைசெய்யப்பட்ட செயல்களை செய்வது. இவ்வுலகில் செய்யப்படும் வணக்க வழிபாடுகளுக்காக மறுமையில் வழங்கப்படும் வெகுமதிகள் “தவாப்”என்று கூறப்படும்.

அல்லாஹு த்ஆலா உலக வாழ்வின் போது செய்யப்படும் நன்மைகள், வணக்கங்களுக்கு வெகுமதிகள் “தவாப் கொடுப்பாதாக எங்களுக்கு வாக்குறுதி அளித்துள்ளான். இந்த உலகில் நற்கருமங்கள் செய்தவர்களுக்கு வழிபாடுகளை செய்தவருக்கு வெகுமதிகளை வழங்க வேண்டிய அவசியமில்லை (வாஜீப்) இல்லை. ஆனால் அல்லாஹு த்ஆலா அவனது எல்லையற்ற கருணை மற்றும் மகத்துவத்துடன் அவ்வாறு செய்வதாக உறுதியளித்துள்ளான். அல்லாஹு தனது வாக்குறுதியை ஒருபோதும் மறுக்க மாட்டான், அவனது வாக்குறுதியை நிச்சயமாக அவன் செய்வான்.]

எங்கள் அன்பு நபி ‘சல்லள்ளாஹு’ அலைஹி வாஸல்லம்’’ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"ஒரு நபர் தனது இதயத்தில் தடைசெய்யப்பட்ட(ஹராம்) விஷயம் ஒன்றை செய்ய முடிவை எடுத்து ஆனால் அல்லாஹு தஆலாவுக்கு பயந்து அதைச் செய்யாது விட்டால் அது ஒரு பாவமாக பதிவு செய்யப்படாமாட்டாது. ஆனால் அவர் அந்த தடைசெய்யப்பட்ட செயலைச் செய்தால் பாவம் பதிவு செய்யப்படும்.”**

ஒரு காஃபிராகவோ அல்லது வழிதவறியவராகவோ (அஹ்லுல்பித்அத்) மாற விரும்புவது தடைசெய்யப்பட்டுள்ளது. ஏனெனில், இந்த நோக்கங்கள் சாராம்சத்தில் தீயவை. ஒரு தடைசெய்யப்பட்ட செயலைச் செய்வதற்கான எண்ணம் தீயது ஏனெனில் அது ஒருவர் அந்த தடை செய்யப்பட்ட செயலைச் செய்ய காரணமாகிறது. சிந்தனை தனக்குள்ளேயே இருப்பது தீமை அல்ல, ஆனால் அந்த தீயசிந்தனையை நிறைவேற்றுவது தீயது மற்றும் அசிங்கமானது. சிந்தனையில் உண்டான அந்த தடைசெய்யப்பட்ட செயல் செய்யப்பட வில்லையானால் அது பாவமாகாது. இந்த சகிப்புத்தன்மை நபிகள் நாயகம் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வாஸல்லம்’’ அவர்களை பின்பற்று பவர்களுக்கு அல்லாஹு த்ஆலாவின் பெரிய நிஃமத்தாகும்.

மற்றவர்கள் வைத்திருப்பதைப் போன்ற நற்பேறுகளை பெற ஆசைப்படுவது பொறாமை அல்ல, அந்த ஆசை மற்றவர்கள் அந்த பேறுகளை இழக்கவேண்டும் என்ற தீய ஆசையாக மோசமடையாதிருக்கும் வரை. இந்த மிதமான போட்டி

உணர்வு (கிப்தா-envy) என்று அழைக்கப்படுகிறது. இது ஒரு நல்லொழுக்கம். இது இஸ்லாமிய நெறிகளின்படி வாழும் ஒரு பக்தியுள்ள முஸ்லீமை போட்டி கொள்வது அவசியம் (வாஜிப்). உதாரணத்திற்கு; பர்லான கடமைகளை நிறைவேற்றி தடுக்கப்பட்டவைகளிலிருந்து தவிர்ந்து வாழும் ஒருவர். உலக நிஃமத்துக்களை பெற்றுக்கொண்ட ஒருவரை போட்டி போடுவது (கிப்தா). இஸ்லாத்தில் "மக்ருஹ் தன்சீஹி" சற்று விரும்பவில்லை. ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: ,

"**அல்லாஹு தஆலா ஒரு மு'ஃமின் மீது ஃகைராத் வைத்துள்ளான் மற்றும் முஃமினுக்கும் மற்ற முஃமின்மின் மேல் ஃகைராத் உள்ளது".** அல்லாஹு தஆலா ஃகைராத் காரணமாக விபச்சாரத்தை தடைசெய்துள்ளான்.

அல்லாஹு தஆலா கூறுகிறான், **"ஓ ஆதமின் மக்களே! நான் உங்களை படைத்தேன் எனக்காக, மற்ற எல்லாவற்றையும் உங்கள் பயன்பாட்டிற்காக படைத்தேன். ஆனால் உங்களுக்காக நான் உருவாக்கியவை உங்களை படைத்ததின் நோக்கத்தை மறக்கடிக்கச் செய்யக்கூடாது. "**ஒரு ஹதீத் அல்-குத்ஸியில் வந்துள்ளது அல்லாஹு தஆலா அறிவிக்கிறான்**: "நான் உங்களை படைத்தேன் எனக்காக. நீங்கள் மற்றய விஷயங்களில் பாராமுகமாக இருந்துவிட வேண்டாம். நான் உங்கள் வாழ்வாதாரத்தை வழங்குவேன், கவலைப்படாதீர்கள்.! "**

நபி யூசுப் அலைஹிஸ்ஸலாம் அந்த நேரத்தில் ஆட்சியாளரை (சுல்தான்) பார்க்கப் போகும் ஒருவரிடம் அவர் தனது பெயரை ஆட்சியாளரின் முன்னிலையில் குறிப்பிட வேண்டும் என்று கேட்கிறார். இது அல்லாஹு தஆலாவிடம் **ஃகைராத்** ஐ ஏற்படுத்தியது. அதனால் யூசுப் அலைஹி ஸ்ஸலாம் பல வருடங்கள் சிறையில் இருக்க காரணமாக அமைந்தது. நபி இப்ராஹிம் அலைஹிஸ்ஸலாம் அவரது மகன் இஸ்மாயில் பிறந்ததில் ஏற்பட்ட மகிழ்ச்சி அல்லாஹு தஆலாவிடம் ஃகைராத் தை ஏற்படுத்தியது. அல்லாஹு தஆலா நபி இப்ராஹிம் அலைஹிஸ்ஸலாத்தை மகன் இஸ்மாயிலை அறுக்க கட்டளை யிட்டான்.

அல்லாஹு தஆலாவின் மிகவும் நேசத்துக்குரிய அவ்லியாக்கள் என்று அழைக்கப்படும் அவரது அடிமைககள் பலர் அல்லாஹுவின் ஃகைராத் காரணமாக மிகவும் ஒழுக்கத்துக்குரியவர்கள் ஆனார்கள். ஃகைராத் என்றால் ஒருவரின் உரிமைகளை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள ஒருவர் சம்மதிக்கவில்லை என்பது இதன் பொருள்.

அல்லாஹு தஆலாவின் ஃகைராத் என்பது மனிதன் பாவங்களைச் செய்கிறதை அவன் சம்மதிக்கவில்லை. இங்கு என்ன விளங்குவது என்றால் மனிதன் "அவன் விருப்பப்படி ஒரு வாழ்க்கையை நடத்துவதற்கு அல்ல, மாறாக அவனுக்கு உண்மையான அடிமையாக இருக்க வேண்டும்" என்று விரும்புகிறான். இன்னும் விரிவாக சொல்வதானால்: அவனுடைய கட்டளைகளுக்கும் தடைகளுக்கும் கீழ்ப்படிவது. தனது விருப்பப்படி செயல்படும் உரிமை அல்லாஹு தஆலாவுக்கு மட்டும் தனித்துவமாக வரையறுக்கப்பட்டுள்ளது. மனிதப்படைப்பை பொறுத்தவரை அவற்றின் ஆசைகளை நிறை வேற்றுவது அல்லது பாவங்கள் செய்வது என்பது அல்லாஹு தஆலாவின் உரிமையை மீறுவதாகும். அதாவது, அல்லாஹு தஆலாவின் உரிமையை பகிர்வது போன்றதாகும்.

ஒரு விசுவாசி அவன் பாவங்களை செய்யாமலிருக்க தன்மீது ஃகைராத் இருக்க வேண்டும்.. ஒரு விசுவாசியின் பாவம் செய்யும் போது ஏற்படும் ஒரு வலுவான உணர்வு, அதிருப்தி, இதயம் துடிப்பது என்பன இந்த ஃகைராத் தின் இருப்பதன் அறிகுறிகளாகும். ஒரு விசுவாசியின் இதயம் அல்லாஹு தஆலாவுக்கு சொந்தமான ஒரு வீடு, அதில் நல்லொழுக்கங்கள் குடியிருக்கின்றன. தீய மற்றும் அசிங்கமான எண்ணங்களை ஒருவரின் இதயத்தில் அனுமதிப்பது என்பது ஊடுருவும் நபர்கள், அதில் வாழும் அழகான நற்குணங்களை வற்புறுத்தி அவர்களுடன் (அசிங்கத்துடன்) ஒத்துழைக்க கட்டாயப்படுத்துவதும் அடக்குமுறை பிரயோகிப்பதும் போன்றது. இந்த அடக்குமுறைக்கு இதயத்தின் தெரிவிக்கும் எதிர்ப்பு அதை படபடப்புக்குள்ளாக்குகிறது. இது இதயத்தின் ஃகைராத்.

அன்சாரின் தலைவரான ஸஃ'த் பின் உபாதா 'ரலியள்ளாஹு த'ஆலா' அன்ஹு அவர்கள் ரஸூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம் அவர்களிடம். யாரஸூலள்ளாஹ்! 'சல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்' நான் என் மனைவியை மற்றொரு மனிதனுடன் படுக்கையில் பார்த்தால் நான்கு பேர் கண்சாட்சிகள் இல்லாமல் நான் அவளைக் கொல்ல முடியாதா? என்று கேட்டார்கள். "இல்லை, உங்களால் முடியாது," என்று மனித குலத்தின் மிகச்சிறந்த மாநபி பதிலளித்தார். ஸஃ'த் பின் உபாதா 'ரலியள்ளாஹு த'ஆலா' வுக்கு அந்த பதிலில் சகிக்கமுடியாத போது, தேவையான நான்கு நேரில் பார்த்தவர்களுக்காக என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நான் அவளை அங்கேயே கொன்றுவிடுவேன் என்றார். அதற்கு '**ரஸூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம்' "உங்களுடைய தலைவர் கூறுவதைக்கேளுங்கள்" என்று கூறினார்கள். அவர் மிகவும் ஃகையுர். நான் அவரை விட அதிகம் ஃகையூர் மற்றும் அல்லாஹு த ஆலா என்னை விட மிகமிக அதிகமாகவே ஃகையுர் உள்ளவன் என்று கூறினார்கள்**. (ஃகையுர் என்பது ஃகைராத் என்பதன் பெயெர் எச்சம்.).

மனிதகுலத்தின் கௌரவமான நபியவர்கள் கூறவிரும்பியது: இது அங்கீகரிக்கப்பட்ட ஃகைராத்(உரிமை) அல்ல. இஸ்லாத்தின் எல்லைகளை நான் மீறமாட்டேன், நான் அவரைவிட ஃகையுர் கூடியவர். அல்லாஹு த'ஆலா தான் ஆகவும் கூடிய ஃகையுர் உள்ளவன்; ஆனாலும் அவன் விபச்சாரத்தை தண்டிக்க விரைந்து செல்வதில்லை. இது "மற்றொரு முஸ்லீமின் தடைசெய்யப்பட்ட ஒரு செயலை சாட்சியாகக் காணும் ஒவ்வொரு முஸ்லிமும் உடனடியாக தண்டனையைப் (த'சீர்) பயன்படுத்த வேண்டும் என்று கூறி ஒரு தகுதியான தண்டனையை அவர் முன்கூட்டியே நிறைவேற்றுவதன் நியாயமற்ற தன்மையை சுட்டிக்காட்டுகிறது!.' குற்றம் சாட்டப்பட்டபின், கண்கண்ட சாட்சிகள் தண்டனையை நிறைவேற்ற அனுமதிக்கப்படவில்லை. இந்த விடயத்தில் தண்டனையை நிறைவேற்றுவது இஸ்லாமிய அரசாகும்; அதாவது (முஸ்லீம்) நீதிபதியின் கடமை. ஒருவர் ஒரு விபச்சார செயலை பார்த்தால் அவர்களை நேரடியாகக் கொன்று விடுகிறார்கள். விசாரணையின் போது அவர் நான்கு சாட்சிகளை ஆஜர்படுத்த வேண்டும். அவர் இதற்கு சத்தியம் செய்வது போதுமானதாக இருக்காது. அவர் நான்கு சாட்சிகளை ஆஜர்படுத்தத் தவறினால், கொலைக்கான தண்டனையை நீதிபதி அவருக்கு விதிக்க வேண்டும்.

ஒரு பெண்(முதல் மனைவி), இரண்டாவது மனைவிக்கு ஃகைராத் காண்பிப்பது அனுமதிக்கப்பட வில்லை (ஜாயிஸ்அல்ல). 'ரஸுலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம்' அவர்கள் ஒரு இரவு தனது மனைவி ஹத்ரத் ஆயிசா 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹா' அவர்களின் அறையை விட்டு வெளியேறி னார்கள். ஹத்ரத் ஆயிஷா, 'ரலியள்ளஹு தஆலா அன்ஹா' அவர்கள் நினைத்தார்கள் ரஸுலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வஸல்லம்' அவர்கள் அவரது வேறு ஒரு மனைவியின் அறைக்குச் சென்றதாக நினைத்தார்கள். அவரது மனைவிகளில் ஒருவரை பற்றி ஃகைராத் வைத்திருந்தார்கள். ரஸுலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்' அவர்கள் அறைக்குத் திரும்பியதும் 'அவரைக் கவனித்தார்கள். அவர் துக்கமாயிருப்பதை பார்த்து "**உங்களிடம்' ஃகைராத் 'இருந்ததா?**" என்று கேட்டார்கள். அதற்கு ஆயிஷா 'ரலியள்ளஹு தஆலா அன்ஹா' அவர்கள் "உங்களைப் போன்ற எல்லா மனிதர்களிடையே மிகவும் கௌரவமானவர், எல்லா உயிரினங்களிடமும் அதிகம் இரக்கமுள்ளவரை பற்றி 'என்னைப் போன்ற ஏழை உயிரினம் ஃகைராத் வைத்திருக்க வேண்டாமா என்றார்கள். அதற்கு அவர், **"நீங்கள் இப்லீஸின் தீய யோசனை (வஸ்வசாவை) பின்தொடர்ந்தீர்கள்**" என்று கூறினார்கள்.

ஆயிஷா 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹா' அவர்கள் இப்லீஸின் (வஸ்வசா) தீய யோசனை என்னிடம் இருக்கிறதா என்று விசாரித்தார்கள். அதற்கு அவர்,**"ஆம் இருக்கிறது"** என்றார்கள். அவர் மேலும் விசாரித்தார். ரஸுலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு'அலைஹிவாஸல்லம்' அவர்களிடமும் இப்லீஸ் இருக்கிறானா என்று கேட்டார்கள். அதற்கு ரசூலுள்ளாஹ்: **"ஆம், இருக்கிறான், ஆனால் அல்லாஹு தஆலா இப்லீஸின் தீய பரிந்துரைகளிலிருந்து என்னை பாதுகாக்கிறான்**". அவர் தனது இப்லீஸ் அவரிடம் ஒரு முஸ்லீமாகிவிட்டார், இப்போது அவன் நல்ல எண்ணங்களை மட்டுமே பரிந்துரைகிறான் என்று குறிப்பிட்டார்கள்.

ரஸுலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம்' அவர்கள் இன்னொரு ஹதீதில் குறிப்பிடுகிறார்கள்; **"அல்லாஹு த'ஆலா எனக்கு இரண்டு நிஃமத்துக்களை வழங்கினான், அதை அவன் வேறு யாருக்கும் கொடுக்க வில்லை: என் இப்லீஸ் ஒரு காபிர் ஆக இருந்தான் அவன் அதை எனக்கு ஒரு முஸ்லீமாக ஆக்கியுள்ளான், இன்னும் இஸ்லாத்தை பரப்புவதற்கு எனக்கு உதவி செய்யும் மனைவிகளை தந்து அவன் என்னை ஆசீர்வதித்தான்".** ஆதம் 'அலைஹிஸ்ஸலாத்தின் இப்லீஸ் ' ஒரு காஃபிர் மற்றும் அவரது மனைவி ஈவ் (ஹஸரத் ஹவ்வா) சொர்க்கத்தில் இப்லீஸின் சத்தியத்தால் ஏமாற்றப் பட்டார். அதனால் ஹஸரத் ஆதம் 'அலைஹிஸ்ஸலாம்' நன்கு அறியப்பட்டதாக அமைந்தது.

அல்லாஹுத'லாவை நோக்கிய மக்களின் ஹைராத் என்பது தடை செய்யப்பட்ட செயல்களைச் செய்வதில் அவர்களின் விருப்பமின்மை யாகும்.

அறிவுரை கூறுவது (நஸீஹத்) பொறாமைக்கு நேர்மாறானது. ஒருவரின் இதயத்தில் (உலக அல்லது உலகம் தவிர்ந்த) பேறுகளைப் பெற்ற மற்றொரு நபரைப் பற்றி, அவர் அந்த பேறுகளை வைத்திருக்க வேண்டும், அதன்மூலமாக நல்ல (மத அல்லது உலக) விடயங்களைச் செய்ய வேண்டும். அனைத்து முஸ்லிம்களும் மற்றவர்களுக்கு அறிவுரை வழங்குவது தற்போதைய (வாஜீப்). ரஸுலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹிவாஸல்லம்' அவர்கள் கூறினார்கள்:

**“ஒருவர் நற்செயல்களைச் செய்வதற்கான காரணியாகும் இன்னொரு நபர், அந்நபர் செய்கின்ற நன்மையை போலவே நன்மைகளை பெறுவார்”** மற்றும் **“தனக்காக நிஃமத்துக்களை கேட்கும் எந்த முஸ்லீமும், மற்ற முஸ்லிம்களுக்கும் அதே நிஃமத்துக்களை கேட்கவில்லையானால் அவரிடம் ஈமான் இல்லை**”. மற்றும் **"மார்க்கத்தின் அடிப்படை அறிவுரை வழங்குவதாகும்.”**

அல்லாஹுா தஆலாவின் பொருட்டு அறிவுரை வழங்குவதன் பொருள் அல்லாஹுா தஆலா இருப்பதை மற்றவர்களுக்கு அறிவிப்பதாகும். அதாவது; ஒரு அல்லாஹ் மட்டுமே இருக்கிறான், அவன் பரிபூரணமான மற்றும் அழகிய பண்புகளை அவர் கொண்டிருக்கின்றான், அவன் குறைபாடுகள் இல்லாதவன் அல்லது எந்தவிதமான குறைபாடான பொருத்தமில்லாத பண்புகளையும் கொண்டிருக்காதவன். ஒவ்வொருவரும் அவனுடைய தயவையும் அவனுடைய பொருத்தத்தையும் பெற வேண்டும் என்ற தூய நோக்கத்துடன் அவனை வணங்குவது அவசியம். அவனுக்கு எதிராக எதையும் யாரும் சாதிக்க முடியாது, யாரும் செய்யவும் கூடாது. எல்லோரும் அவனை நேசிப்பவர்களையும் (நண்பர்களை) நேசிக்க வேண்டும், அவனுக்கு எதிராக கிளர்ச்சி செய்பவர் களை எதிர்க்கவேண்டும். அவனுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிகின்றவர் களை நேசிக்கவும், அவனுடைய கட்டளைகளுக்கு கீழ்ப்படியாதவர்களை நேசிக்காமலும், அவனுடைய நற்பேறுகள் (நிஃமத்துகளை) மேற்கோள் காட்டி, அவனுக்கு நன்றி செலுத்தவும் வேண்டும். அவனுடைய படைப்புகள் மீது எல்லோரும் பரிவு காட்ட வேண்டும். அவனுக்குரிய எந்தவொரு பண்புகளையும் வேறு எவரும் வைத்திருப்பதாக யாரும் வலியுறுத்தக்கூடாது.

குர்ஆனைப்பற்றி (நஸீஹத்) வழங்குவது என்பது அனைவருமே குர்ஆனில் கூறப்பட்ட உண்மைகளை நம்பிக்கை கொள்ள வேண்டும்; குர்ஆனில் கூறப்பட்ட கட்டளைகளை எல்லோரும் நிறைவேற்ற வேண்டும்; குர்ஆனின் புரிதல் இல்லாத யாரும் அவர்களின் குறை புரிதலைக்கொண்டு குர் ஆனுக்கு மொழிபெயர்ப்பு செய்ய முயற்சிக்ககூடாது. எல்லோரும் குர்ஆனை அதற்கு சிறந்த உண்மையான முறையில் ஓத வேண்டும் அதிகம் ஓத வேண்டும். "**வுழு**" இல்லாமல் குர்ஆனைத் தொடுவது அனுமதிக்கப்படவில்லை என்பதை எல்லோரும் அறிந்து கொள்ள வேண்டும்.

நபிகள் நாயகத்தை 'சல்லள்ளாஹுா' அலைஹி வாஸல்லம்' அவர்களை பற்றிய அறிவு மிகஅவசியமானது என்பதை (மற்றவர்களுக்கு) தெரியப்படுத்த வேண்டும். அவர்கள் கூறிய,கற்பித்த அனைத்தையும் நம்புவதுடன் அவர்களை யும், அவர்களுடைய பெயரையும் பெரிதும் கண்ணியப்படுத்த வேண்டும்; அவர்களது **சுன்னத்**தை நடைமுறைப்படுத்துவது மற்றும் அவற்றை பரப்புவது மற்றும் அவர்களது அழகான ஒழுக்கங்களையும் நெறிமுறைகளையும் அறிவதும் பின்பற்றுவதும், அதேபோல், அவர்களது வம்சத்தினரை (**அஹ்லு பைத்துகள்**) மற்றும் அவரது தோழர்களை(**சஹாபா**[1] மற்றும் அவர்களை பின்பற்றி யவர்களை நேசிப்பது கண்ணியப்படுத்துவது அனைவருக்கும் மிக அவசியமானது.

---

[1] தயவுசெய்து கிடைக்கும் நற்பேறுகள் பெற்ற சஹாபாக்கள்”(Sahaaba The Blssed) என்ற புத்தகத்தைப் பாருங்கள். ஹக்கட் கிடாபேவி, பாத்தி-இஸ்தான்புல், துருக்கி.

ஒரு நாட்டின் அரசாங்கத்துக்கும் (நசீஹத்) ஆலோசனை வழங்க வேண்டியது அவசியம். அல்லாஹுு தஆலாவை மதித்து அவனது மார்க்கத்தை பாதுகாத்து மக்கள் மார்க்க கடமைகளை செய்வதற்கு வேண்டிய வசதிகள், மற்றும் சுதந்திரத்தை வழங்கும் அதிகாரிகளுக்கு வசதிகள் மற்றும் உதவிகளை செய்ய வேண்டும் என்று மற்றவர்களுக்கு அறிவுறுத்துமாறு கூறவேண்டியது அவசியம். சரியான வழிகள் பற்றி அவர்களுக்கு அறிவுரை கூறுவதுடன் அவர்கள் முஸ்லிம்களின் உரிமைகளை மதிக்குமாறும் அவர்களுக்கு கூற வேண்டும். அவர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்வதற்கும் சட்டங்களை மீறுவதற்கும் அல்ல. அவர்கள் இஸ்லாத்திற்கும் மனிதகுலத்திற்கும் சேவை செய்வதற்காக பிரார்த்திக்க வேண்டும். அவர்கள் இல்லாத நிலையிலும் அவர்களுக்காக பிரார்த்திக்க வேண்டும் மற்றும் காபிர்களுக்கு எதிராக அவர்கள் (ஜிஹாத்) செயும்போது அவர்களுக்கு நிதி அல்லது உடல் ரீதியாக உதவுவது அல்லது அவர்களுக்காக பிரார்த்திப்பதன் மூலம் உதவ வேண்டும். கட்டாய வரி மற்றும் தர்மம் (சதகா) செலுத்த வேண்டும். அது துப்பாக்கிகளால் யாரையும் தாக்க அல்ல. மக்களை நீதியாக வழிநடத்தி அரசாங்கத்தின் பொறுப்பாளர்களுக்கு எதிராக அவர்கள் கிளர்ச்சி செய்யாமல் அவர்கள் அடக்குமுறை மற்றும், அநீதியில் ஈடுபட்டாலும் கூட மென்மையான முறையில் அவர்களை சரியான பாதைக்கு இட்டுச் செல்வது அவசியம் என்று அனைவருக்கும் சொல்ல வேண்டும். எல்லோரும் மார்க்க போதனைகளை பின்பற்ற வேண்டியது அவசியம் என்று சொல்ல வேண்டும். மேலும் மார்க்க சட்டங்களின்(ஃபிக்); "அஹ்ல்-சுன்னத் அறிஞர்கள்" எழுதிய இல்முல் ஹால் மற்றும் நெறிமுறைகள் புத்தகங்களை பின்பற்றுதல், ஆலோசனை வழங்குதல் (நசீஹத்) போன்ற விஷயங்களைச் அவர்கள் எல்லோரும் செய்ய வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்ல வேண்டும்.

இந்த உலகத்திற்கும் மறு உலகிற்கும் பயனுள்ளதாக இருக்கும் செயல்களை செய்ய வேண்டும், தீங்கு விளைவிக்கும் விஷயங்களை செய்வதை தவிர்க்க வேண்டும். யாரையும் காயப்படுத்தக்கூடாது, அவர்களுக்கு தெரியாததை மற்றவர்களுக்கு கற்பிக்க கூடாது. அவசியமானபோது அவர்களின் தவறுகளை அறிந்து கொள்வது அவசியம். அவர்கள் கடமைப்பட்ட செயல்களைச் செய்ய வேண்டும் தடைசெய்யப்பட்ட செயல்களைச் செய்யக்கூடாது என்று அறிவுறுத்த வேண்டும். இந்த விஷயங்களை மென்மையாகச் சொல்ல வேண்டும். இளைஞர்களிடம் கருணை காட்டுவதுடன், பெரியவர்களுக்கு மரியாதை செலுத்த வேண்டும், மற்றவர்கள் உங்களை எப்படி நடத்த வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்களோ அதேபோல் நடந்து கொள்ளுங்கள் என்றும், நீங்கள் மற்றவர்கள் உங்களை எப்படி நடத்தக்கூடாது என்று விரும்பு கிறீர்களோ அதேபோல் நீங்கள் மற்றவர்களை நடத்தாதீர்கள் என்று அவர்களுக்குச் சொல்ல வேண்டும். இறுதியாக, அவர்கள் மற்றவர்களுக்கு பண ரீதியாக மற்றும் உடல் ரீதியாக உதவ வேண்டும் என்று அவர்களுக்கு கூற வேண்டும்.

எங்கள் நபி ரஸூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹுு' அலைஹி வாஸல்லம்' அவர்கள் ஒரு ஹதீத்-ஷரீபில் : **"முஸ்லிம்களுக்கு உதவி செய்யாதவர்கள் மற்றும் முஸ்லிம்களின் நலன் மற்றும் வாழ்க்கை வசதிகளுக்காக வேலை செய்யாதவர்கள் அவர்களில் ஒருவர் அல்ல." அல்லாஹ், குர்ஆன், மற்றும் ரசூலுள்ளாஹ்வை பற்றி அரசாங்கத்தின் தலைவர் மற்றும் அனைத்து**

**முஸ்லிம்களுக்கும் அறிவுரை வழங்காதவர்கள் அவர்களில் ஒருவர் அல்ல."** என்று கூறியுள்ளார்கள்.

பொறாமை வணக்கங்களின் பலனைக் குறைக்கிறது. எங்கள் நபி ரஸூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வாஸல்லம்' அவர்கள் ஒரு ஹதீத்-ஷரீபில் கூறினார்கள்.: **"பொறாமைபற்றி ஜாக்கிரதையாய் இருங்கள், நெருப்பு மரத்தை அழிப்பது போல பொறாமை வெகுமதிகளை(தவாப்) அழிக்கும் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.** பொறாமை கொண்ட ஒருநபர் அவர் பொறாமை கொண்ட மற்ற நபரைப் பற்றி புறம் பேசுவார், மற்றும் வதந்திகளை கூறுவார். அது அவரது சுயம் மற்றும் அவரது சொத்துக்களை பாதிக்கும். தீர்ப்பு நாளில் அவரது நன்மைகள் (தவாப்கள் ) அவரிடமிருந்து எடுக்கப்பட்டு, அவர் தாக்கிய நபர் சந்தித்த இழப்புக்கான இழப்பீடாக அந் நபருக்குக் கொடுக்கப்படும்.

ஒரு பொறாமை கொண்ட நபர் ஒரு நபரின் நிஃமதுக்களை பார்க்கும்போது அவர் பொறாமைப்படுகிறார். அவர் மிகுந்த துயரத்தை உணர்கிறார் மற்றும் தூக்கத்தை இழக்கிறார். நல்ல செயல்களைச் செய்கிறவர்களுக்கு பத்து மடங்கு வெகுமதிகள் கிடைக்கும். பொறாமை அவைகளில் ஒன்பது மடங்கை அழிக்கின்றது, ஒன்றை மட்டும் விட்டுவிடும். குப்ரை (நிராகரிப்பை) தவிர செய்த எல்லா நன்மைகளையும் அழிக்கும் வேறு பாவமில்லை. அவை கடுமையான பாவங்கள் அல்ல என நம்பிக்கொண்டு இஸ்லாத்தில் பெரிதாக கவனம் செலுத்தாமல் தடை செய்யப்பட செயல்களை செய்வது குப்ரை ஏற்படுத்தும். இஸ்லாத்தில் தடைசெய்யப்பட்ட செயல்களையும் மத விரோத செயல்களை (**இர்திதாத்**) செய்வது என்பன நற்செயல்களுக்கு கொடுக்கப் படும் நன்மைகள் அனைத்தையும் அழித்துவிடும்.

எங்கள் நபி 'ஸல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் 'ஒரு ஹதத்-ஷரீபில் கூறுகிறார்கள்: **"நீங்கள் (முஸ்லிம்கள்) கடந்த காலத்து உம்மத்துக்களிடம் இருந்து இரண்டு கடுமையான நோய்களை வைத்துக்கொண்டு இருக்கிறீர்கள். ஒன்று பொறாமை மற்றது ஷேவிங்(மழித்தல்). நான் 'ஷேவிங்' என்று சொல்வது அவர்கள் தலையில் முடியை மொட்டையடித்து விட்டார்கள் என்பது பொருள் அல்ல. அவர்கள் தங்கள் வேதங்களை அவற்றின் வேர்களில் இருந்தே முற்றாக அழித்து விட்டார்கள். நம்பிக்கை இல்லாத எவரும் ஒருபோதும் சொர்க்கம் நுழைய மாட்டார்கள் என்று நான் உங்களிடம் சத்தியம் செய்கிறேன். நீங்கள் ஒருவரை ஒருவர் நேசிக்கா விட்டால் நீங்கள் நம்பிக்கையைப் பெறமுடியாது**. **ஒருவருக் கொருவர் நேசிக்க நீங்கள் ஒவ்வொருவரையும் அடிக்கடி 'சலாம்' கூறி வாழ்த்த வேண்டும்."** [இந்த ஹதத்-ஷரீப் சலாம் கூறுவதன் முக்கியத்துவத்தையும் வாழ்த்துக்களை பரிமாறிக்கொள்வதையும் அதன் நடைமுறையை கட்டளை யிடுகிறது.] இரண்டு முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் பொழுது அவர்களில் ஒருவர் "சலாமுன் அலைக்கும்" என்று சலாம் சொல்வது '**சுன்னத்**' மற்றவர் 'வஅலைக்குமுஸ்ஸலாம்' என்று பதில் கூறுவது **பர்ளு.** காஃபிர்கள் பயன்படுத்தும் பிற சொற்றொடர்களை பாவிப்பது, ஒருவருக் கொருவர் கை, உடல் அசைவுகள் அனுமதிக்கப்பட்டதல்ல. இரண்டு முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் பார்க்கும்போது அவர்கள் ஒருவருக்கொருவர் கேட்க முடியாத தூரத்தில் இருந்ததால் மேற்கூறப்பட்ட வாசகங்களையும் (சலாம்), வலது கையை தனது

புருவம் வரை உயர்த்தி வாழ்த்த முடியும். காஃபிர்களை சந்திக்கும்பொழுது அவர்கள் பயன்படுத்தும் சொற்றொடர்களை பயன்படுத்துவது அனுமதிக்கப் படுகிறது (பித்னாவை தவிர்ப்பதற்காக).

ஒரு ஹதீத்-ஷரீபில் கூறப்பட்டுள்ளது: "**ஒரு முஸ்லீம் நன்மையைக் கொண்டிருக்கிறான், ஆனால் அவர் பொறாமைப்படும்போது எல்லா நன்மைகளும் அவரிடமிருந்து விலகி விடும்.**" ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் 'மற்றொரு ஹதீத்-ஷரீபில் கூறுகிறார்கள்; **பொறாமை கொண்டவர்களும், 'நமீமா' மற்றும் 'கஹானத்' செய்பவர்கள் என்னுடன் இல்லை."**நமீமா"என்பது ஒருவரின் வார்த்தைகளை இன்னொரு வருக்கு எடுத்துச்செல்கிறது (கோள்). இது பித்னாவை தூண்டுவதற்கும் முஸ்லிம் களிடையே கருத்து வேறுபாட்டை ஏற்படுத்துவதற்கும் செய்வதாகும். "கஹானத்" என்பது தெரியாதவற்றில் கணிப்பைக் கடைப்பிடிப்பதாகும். [அந்த அறியப்படாத எதிர்கால நிகழ்வுகளை கணிக்க முயற்சிப்பவர்கள் சாத்திரக்காரரர்கள் (கஹின்) என்று அழைக்க ப் படுகிறார்கள். நாம் அவர்களை நம்பக்கூடாது.] இந்த ஹதீதிலிருந்து பொறாமை கொண்டவர்கள் ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்களின் சபா'அத்தை (பரிந்துரையை) பெறமாட்டார்கள் என்று தெரிகின்றது. பரிந்துரை கேட்க அவர்களுக்கு உரிமை இல்லை.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்'ஒரு ஹதீத்-ஷரீபில் கூறுகிறார்: " **ஆறு வகையான நபர்கள் நியாயத்தீர்ப்பு நாளின் கூடும் இடத்தில் ஆறு விஷயங்களில் விசாரிக்கப்பட்டு தண்டிக்கப்படுவார்கள், பின்னர் நரகத்திற்குள் வீசப்படுவார்கள்: அடக்குமுறையிலிருந்த மாநிலத்தின் தலைவர்கள் 'ஜூல்ம்'; அரபிகள் அவர்களின் இன ஃகைராத்துக்காக, சிறிய கிராமங்களின் தலைவர்கள் அவர்களின் பெருமை (கிப்ர்)க்காக, வணிகர்கள் நம்பிக்கை துரோகம் அல்லது வஞ்சகத்துக்காக, கிராமவாசிகள் அறியாமையில் இருந்ததற்காக, ஆலிம்கள்(அறிஞர்கள்) பொறாமைக்காக.** வணிகர்கள் இது போன்ற சொற்களின் அர்த்தங்களைக் கற்றுக் கொள்வது அவசியம். பொய், வட்டி, வஞ்சகம் மற்றும் பிறரின் நிதியை கையகப்படுத்துதல், செல்லுபடியாகா வணிக நடைமுறைகள், மற்றும் தடை செய்யப்பட்ட நடவடிக்கைகளிளிருந்து தன்னை எவ்வாறு பாதுகாத்துக் கொள்வது என்பதை அறிவதற்கு.

கிராம மக்களும் ஒவ்வொரு முஸ்லிமும் கற்றுக் கொள்ள வேண்டும் "அஹ்லுஸ்-சுன்னத் நம்பிக்கை" பற்றிய அறிவு. மற்றும் மார்க்க அறிவு தேவையான செயல்கள் நடைமுறைகளை எவ்வாறு செய்வது (இல்முல் ஹால்பற்றிய அறிவு). இந்த ஹதீத்-ஷரீப் சமூகத்தில் மார்க்க பதவிகளை வகிக்கும் ஆண்களில் பொறாமை அதிகம் இருப்பதாக நமக்குத் தெரிவிக்கின்றது.

தஃப்சீர் அல் கபீர் பின்வரும் தகவல்களை தெரிவிக்கின்றது. "பொறாமை பத்து பகுதிகள் அதில் ஒன்பது மார்க்கவாதிகளிடம் உள்ளது. உலக சிரமங்கள் பத்து பாகங்கள் மற்றும் அவற்றில் ஒன்பது பக்தியுள்ள மனிதர்களான 'சாலிஹின்களிடம் உள்ளது. துஷ்பிரயோகம், மற்றும் சீரழிவு 'zஜில்லட்' என்பது பத்து பாகங்கள், அவற்றில் ஒன்பது யூதர்கள் மத்தியில் உள்ளன. பணிவு 'தவாசு' என்பது பத்து பாகங்கள், அவற்றில் ஒன்பது நாசரா க்களிடையே உள்ளன (வரையறுக்கப்படாத மதத்தின் விசுவாசிகள் ஈஸா அலைஹி ஸலாமுக்கு

வெளிப்படுத்தினர்). பசி 'ஷஹ்வத்' பத்து பாகங்கள், அவற்றில் ஒன்பது பெண்களில் உள்ளன. ஒரு பகுதி ஆண்களிடம் உள்ளது. அறிவு '' இல்ம் 'என்பது பத்து பாகங்கள் மற்றும் ஒறு பகுதி ஈராக்கில் உள்ளது. நம்பிக்கை(ஈமான்) பத்துபாகங்கள் மற்றும் அவற்றில் ஒன்பது எமன் இல் உள்ளது . ஞானம் '' அக்ல் 'பத்து பாகங்கள், அவற்றில் ஒன்பது ஆண்களிடம் உள்ளது. உலகின் 'பரக்கத்' நற்பேறுகள் பத்து பாகங்கள், அவற்றில் ஒன்பது டமஸ்கஸ் இல் உள்ளன. அவை "ஹஸரத் ஃபக்ருத்தீன் ராசீ தப்ஸீரில் எழுதியவை அவருடைய குறிப்பிட்ட காலங்களில் காணப்பட்ட உண்மைகள்.

ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்கள் வருகை மூலம் இந்த உலகை கௌரவித்தார்கள். அதற்கு முன்னர் யூதர்களின் யுத்தங்களுக்கு செல்ல முன்னர் பின்வருமாறு பிரார்த்தனை செய்வது அவர்களின் வழக்கமாயிருந்தது. ஓ 'எங்கள் ஆண்டவரே! உனது கௌரவமான நபியை நீ அனுப்புவதாக உறுதியளித்தாய். அவரை நீ மிகவும் நேசிக்கின்றாய் அவரின் பொருட்டால்.....என்று கேட்பார்கள் அவர்களின் பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப் படும். அல்லாஹுதஆலா அவர்களுக்கு உதவி செய்வான். ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அந்த மக்களை இஸ்லாத்திற்கு அழைத்தபோது அவர்களுக்கு தெரியும் இவர்தான் வாக்குறுதியளிக்கப்பட்ட நபி என்பது, ஆனால் அவர்களின் பொறாமையினால் அவரை நிராகரித்தார்கள். அவர்களின் பொறாமை அவர்களை வழிநடத்துகிறது. முடிவற்ற பேரழிவுகளும், மற்றும் தண்டனைகளும் அவர்களின் முழு சந்ததியினரையும் பாதிக்கின்றது. அல்லாஹு த்ஆலா ஷைத்தானின் தீங்குகளிலிருந்தும் பொறாமை பிடித்த துஷ்டர்களிடமிருந்தும் பாதுகாத்து கொள்ளுமாறு எங்களுக்கு கட்டளை இடுகின்றான்.

"ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' இன்னொரு ஹதீதில் கூறுகிறார்கள்: **"உங்கள் தேவைகளை ஒரு இரகசியமான முறையில் பணக்காரர்களிடம் கேளுங்கள் ஏனெனில் மற்றவர்கள் பொறாமை படுவார்கள்".** உங்களின் தேவைகள், அவசியமானவைகள் அருட்கொடைக ளை(நி'மத்துக்களை) பெற்ற பணக்காரர்களால் கவனிக்கப்படுகின்றன என்று மற்றவர்கள் உணரும்போது அவர்கள் உங்கள்மீது பொறாமைப்படுவார்கள். இரகசியம் பேணும் ஒரு மனிதருக்கு ஒருவழி இருக்கிறது. அவர் அதை மறைக்கலாம் அல்லது வெளிப்படுத்தலாம். இரகசியத்தை வெளிப் படுத்தும் ஒரு நபர் பெரும்பாலும் வருத்தப்பட வேண்டியிருக்கும்.

ஒரு மனிதனுக்கு அவன் பேச்சின்மீது கட்டுப்பாடு அவனுடைய வார்த்தைகள் வாயிலிருந்து வெளியாகும் வரைதான் அவனுக்கு வெளியில் சொல்வது அல்லது மறைப்பது என்ற தெரிவிருக்கின்றது. ஆனால் அவரது வார்த்தைகள் வாயிலி ருந்து வெளிவந்தவுடன் அந்த வார்த்தைக்கு அவர் அடிமை. மக்கள் பெரும் பாலும் தங்கள் சொத்துகளிடம் வைத்திருக்கும் உறுதி ரகசியங்களுடன் அவ்வளவு இருப்பதில்லை. ஒரு பழமொழி இவ்வாறு கூறுகிறது: "உன்னுடைய 'zஜஹாப்','zஜிஹாப்' மற்றும் 'மதுஹப் ரகசியம். [இந்த சூழலில் "ஜஹாப்" தங்கம் என்று பொருள்; "ஜிஹாப்" என்றால் நம்பிக்கை; "மதுஹப்" என்பது உங்களுடைய தினசரி நடவடிக்கைகள்.]

ஒரு நபரின் பொறாமை அல்லாஹுவின் ஆணையை மாற்றாது. ஒரு பொறாமை கொண்ட நபர் கவலைப்படுகிறார் மற்றும் தேவையில்லாமல்

சோர்வடைகிறார். அவர் குவிக்கும் பாவங்கள் கூடுதல் இழப்பாக இருக்கும். ஹஸரத் முஆவியா ரலியள்ளாஹு தஆலா தனது மகனுக்கு அறிவுறுத்தி னார்கள் ''பொறாமையை கடுமையாக தவிர்க்கவும். பொறாமைப்படுவதன் மூலம் நீங்களே மிக வேகமாகவும் அதிகமாகவும் பாதிப்படைவீர். அது உங்களுக்கு ஏற்படுத்தும் சேதம் நீங்கள் உங்கள் எதிரிக்கு கொடுப்பதை விட வியத்தகு முறையில் வேகமாகவும் மிக அதிகமாகவும் இருக்கும்".

சுஃப்யான் அல்-சவ்ரீ, 'ரஹ்மத்துள்ளாஹி த'ஆலா' கூறினார்கள். பொறாமை இல்லாதவர்கள் தெளிவானமனம் படைத்தவர்களாக இருப்பார்கள். பொறாமை எப்போதும் தொடர்ச்சியான மரியாதைக் குறைவை ஏற்படுத்துவதை தவிர பொறாமை கொண்ட எந்த நபரும் அவரது விருப்பங்களை பெற்றவர்களில்லை. பொறாமை நரம்புகளை சிதைக்கின்றது ஆயுட்காலத்தை குறைக்கின்றது. அஸ்மா 'ரஹிமாஹுள்ளாஹி தஆலா' இவ்வாறு குறிப்பிடுகிறார்:"நான் நூற்று இருபது வயதான ஒரு கிராமவாசியை சந்தித்தேன். அவரிடம், அவரது நீண்ட வாழ்க்கையின் ரகசியம் என்ன என்று கேட்டேன். அவர் ஒருபோதும் பொறாமை ப்படவில்லை என்று கூறினார்."

அபுல் லைஸ் சமர்கந்தீ 'ரஹ்மத்துள்ளாஹி த'ஆலா' குறிப்பிடுகிறார்: மூன்று பேர் இருக்கிறார்கள், அவர்களுடைய பிரார்த்தனைகள் ஒருபோதும் ஏற்றுக் கொள்ளப்படாது. 'ஹராமானவைகளை கொண்டு வாழ்பவர், புறம் பேசுபவர், மற்றவர் பொறாமை கொண்டவர். பொறாமைக்கு ஆளாகும்நபர், இரு உலகங்களிலும் எந்த இழப்பையும் ஒருபோதும் காணமாட்டார். மாறாக, அவர் அதிலிருந்து பயனடைவார். பொறாமை கொண்டவர் தனது வாழ்க்கையை துயரத்தில் செலவிடுவார். அவர் அப்போது பொறாமைக்கு உள்ளானவர் எதையும் இழக்காததையும் மாறாக, அவருடைய செல்வம் அதிகரித்து வருவதையும் பார்த்து நரம்புகள் செயலற்று போவதை உணர்வார்.

ஒரு பொறமை கொள்பவர் அவரது பொறாமையிலிருந்து விடுபட பரிசுகளை அனுப்பவேண்டும், ஆலோசனை வழங்க வேண்டும், வாழ்த்துக்களை தெரிவி க்க வேண்டும். அவரிடம் மனத்தாழ்மையைக் காட்டவேண்டும், அதற்காக அவருக்காக அவரின் செல்வம் பெருகவேண்டும் என்று பிரார்த்திக்க வேண்டும்.

**வறண்ட நிலங்களில் வெறிச்சோடி,**
**நான் சுற்றித் திரிகிறேன், இடைவிடாமல் அழுகிறேன்;**
**என் இதயம் அன்பை ருசித்தவுடன்,**
**அது இரத்தம் கசியும், நான் அதை இடைவிடாமல் எச்சரிக்கிறேன்.**

**தெய்வீக உத்தமத்தில், அன்பு வழங்கப்பட்டுள்ளது,**
**வானமும் பூமியும் அதன் சாராம்சத்தில் பாதிக்கப்பட்டுள்ளன;**
**யாராவது இருக்க வேண்டுமா, அதில் புத்திசாலித்தனம்,**
**அழுங்கள், என் கண்களே, ஐயோ, என் நற்குணம்!**

## 16– வெறுப்பு (ஹிக்த்)

வெறுப்பு என்பது இதயத்தின் 16 வது நோயாகும். "ஹிக்த்" மற்றொரு நபரை வெறுப்பது, பகைத்துக்கொள்வது, ஒருவரின் இதயத்தில் மனக்கசப்பை ஏற்படுத்துவது. உங்களுக்கு அறிவுரை வழங்கும் ஒருவரை பகைத்துக் கொள்வது தடைசெய்யப்பட்டுள்ளது (ஹராம்). அவரை வெறுப்பதற்கு பதிலாக

அவருடைய அறிவுரைக்கு நீங்கள் கீழ்ப்படிய வேண்டும். அல்லாஹு த'ஆலா வின் கட்டளையை அவர் மேற்கொள்வதால் அவர் நேசிக்கப்பட வேண்டும், மதிக்கப்பட வேண்டும். கொடுங்கோலர்கள் மற்றும் ஒடுக்கு முறையாளர்கள் மீதான வெறுப்பு தடைசெய்யப் படவில்லை.

ஒரு கடன் கொடுத்தவர் இறந்தால், அவருக்கு செலுத்த வேண்டிய கடன் அவருடை பரம்பரையினருக்கு மாறும். கடன் பெற்றவர் அவர்களுக்கு பணம் செலுத்தவில்லை என்றால், அவர் நியாயத்தீர்ப்பு நாளில் அக்கடனை செலுத்து மாறு வேண்டப்படுவார். ஒரு அடக்குமுறையாளரை (ளாலிம்) மன்னிப்பது நல்லது. உஹுத் மலை யுத்தத்தின் போது ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்களின் முகம் காயமடைந்து அவரது அருள் பெற்ற பற்களில் ஒன்று உடைந்தது". சஹாபா 'ரில்வானுல்லாஹி தஆலா அன்ஹும் அஜ'ம'ஈன்கள் அவர்களது நிலையை அவதானித்து மிகவும் வருத்தமடைந்து ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு' அலைஹி வசல்லமிடம் காபிகளின் மீது அல்லாஹ்வின் தண்டனை இறங்குவதற்கு பிரார்த்திக்கு மாறு கேட்டனர். அதற்கு ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் " **நான் சபிப்பதற்கு அனுப்பப்படவில்லை, பயனுள்ளதும் நன்மை பயக்கும் விஷயங்களுக்காக பிரார்த்திக்கவும் எல்லா படைப்புகள் மீதும் கருணை அன்பு காட்டுவதற்கா கவும் அனுப்பப்பட்டுள்ளேன்."** பின்னர் அவர் தொடர்ந்தார், **"யா ரப்! இந்த மக்களுக்கு நேர்வழிக்கான வழியை (ஹிதாயத்தை) காட்டு. அவர்களால் உண்மையை அடையாளம் காண முடியவில்லை, அவர்களுக்குத் தெரியாது".** என்று கூறினார்கள். அவர் தனது எதிரிகளை மன்னித்தார், அவர்கள் மீது தண்டனை அனுப்பும்படி கேட்கவில்லை.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் 'ஒரு ஹதீது-ஷரீபில் கூறுகிறார்கள்: **"தர்மம் கொடுப்பது ஒருவரின் சொத்தை குறைக்காது. சொத்துக்கள் மீதான 'சதக்கா' சொத்தை குறைக்காது. அல்லாஹ் மன்னிப்பவர்களை கௌரவமான ''அஸீஸ்' தரங்களுக்கு உயர்த்துகிறான். அல்லாஹ்வின் பொருட்டு மன்னிப்பவர்களை அவனால் உயர்த்தப் படுவார்கள் ".** குலாபாதீ 'ரஹிமஹுள்ளாஹு தஆலா' அவர்கள் ஹதீதில் கூறப்பட்டுள்ள தர்மம் என்பது கட்டாய சக்காத்தை குறிப்பதாக விளக்குகிறார். பணிவுள்ள மக்கள் தங்கள் வழிபாடுகளுக்கு அதிக வெகுமதிகளைப் பெறுவார்கள். அவர்களுடைய பாவங்களும் மிக விரைவாக மன்னிக்கப்படும்.

மிருக ஆன்மாவின் ஆசைகள் மனிதனின் படைப்பில் பொதிந்துள்ளன. மனிதர்கள் சொத்து மற்றும் பணத்தை விரும்புகிறார்கள். அதேமாதிரி, கோபத்தின் உணர்வுகள்(கதாப்), பழிவாங்குதல் மற்றும் பெருமை (கிப்ர்) போன்றவையும் தாங்களே வெளிப்படுகின்றன. இந்த ஹதீத்-ஷரீபில் இந்த தீமைகளை குணப்படுத்த தர்மம், மற்றும் கட்டாய சக்காத்தை பரிந்துரைக் கிறது. மன்னிப்பை பரிந்துரைப்பதன் மூலம் இது உணர்வுகளின் காரணமாக எதிர்மறையான விளைவுகளான கோபம் மற்றும் பழிவாங்குதலை சுத்தப்படுத்துகிறது.

இந்த ஹதீத்-ஷரீபில் குறிப்பிடப்பட்டுள்ள மன்னிப்பு ஒரு திட்டவட்டமான, நிபந்தனையற்ற உத்தரவாகக் கூறப்படுகிறது. திட்டவட்டமான தடை உத்தரவை ஒருசில நிபந்தனைக்குள் கட்டுப்படுத்த முடியாது. இது எல்லா வற்றையும் உள்ளடக்கியது. மன்னிப்பது ஒருவரின் இழப்பீட்டைப் பெற

முடியாவிட்டாலும் கூட சிறந்தது. இது சேதத்திற்கான இழப்பீடு பெறுவது ஒருவரின் அதிகாரத்தில் இருக்கும் போது இன்னும் சிறந்தது. இழப்பீடும் பெறும் சத்தி ஒருவர் கையில் வலுக்கட்டாயமாக இருக்கும் போது மன்னிப்பு பெறுவது மிகவும் நப்சுக்கு (ego)கடினமான விஷயம். அடக்குமுறையாளரை மன்னிப்பது மிக உயர்ந்த லேசான தன்மை (**ஹில்ம்**), சகிப்புத்தன்மை, இரக்கம் மற்றும் துணிச்சல். உங்களுக்கு ஒருபோதும் உதவி செய்யாத நபருக்கு ஒரு பரிசு வழங்குதல், மிக உயர்ந்த நிலையிலுள்ள தயவு(**இஹ்சான்**) ஆகும். உங்களுக்கு தீமை செய்த ஒருவருக்கு ஒரு உதவி செய்வது மனிதாபிமானத்தின் மிக உயர்ந்த அளவு. இந்த பண்புகள் ஒரு எதிரியைகூட நண்பனாக்கும்.

ஈசா அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள், "நான் முன்னதாக சொன்னேன்; ஒருவரின் பற்களை உடைக்கும் எவரையும் அதே மாதிரி பதில் தாக்குதல் செய்யவேண்டும்; , ஒருவரின் மூக்கு அல்லது காதை வெட்டும் எவருக்கும் அதே மாதிரி பதிலடி கொடுக்க வேண்டும் என்று. ஆனால் நான் இப்போது சொல்கிறேன்; முதலில் உங்களுக்கு ஒரு தீமை செய்பவருக்கு தீமையை கொண்டு பதிலளிக்காதீர்கள், இரண்டாவதாக, யாராவது வலது கன்னத்தில் உங்களைத் தாக்கினால் உங்கள் இடது கன்னத்தைக் காட்டுங்கள."

ஷெய்க் இப்னு அல் அரபி 'ரஹிமஹுள்ளாஹு த'ஆலா' [முஹைதீன் இப்னு அரபி 638 இல் ஹிஜ்ரீ, டமஸ்கஸில் 1240 A.D. காலமானார்,], கூறினார்கள்; "உங்களுக்கு எதிராக தீமை செய்தவர்களுக்கு நன்மை செய்வது என்பதன் அர்த்தம் உங்களுக்கு வழங்கப்பட்ட நற்பேறுகளுக்கு நீங்கள் 'சுக்ரான்' நன்றி செலுத்துகிறீர்கள். உங்களை நல்ல முறையில் நடத்தியவர்களுக்கு நீங்கள் பிழையாக நடந்து கொண்டீர்களானால், நீங்கள் பெற்ற நி'மத்களுக்கு நீங்கள் நன்றி செலுத்தவில்லை என்பது அர்த்தம்."

ஒருவர் தன்னிடமிருந்து ஒருவர் எடுத்து சென்றதை பெற்றுக்கொள்வது சரியானதாகும். ஆனால் அதைவிட கூட பெறுவது அல்ல. அப்படி செய்வது எதிர் தாக்குதலாகும் (**இந்திஸார்**). மன்னிப்பு உயர்நிலையில் உள்ள நீதியாகும் (**அதாலத்**). பதில் தாக்குதல் கீழ் நிலையில் உள்ள நீதியாகும். ஒரு சாலிஹான மனிதர் செய்யக்கூடிய உயர்நிலை நீதியாகும். ஒரு அடக்குமுறையாளரை அல்லது கொடுங்கோலரை மன்னிப்பது அவர்களுக்கு ஒரு பலவீனமான (**'அஜ்ஸ்**) தோற்றத்தை தரக்கூடும். இதனால் அதிகரித்த அடக்குமுறைக்கு ஆளாகநேரிடலாம். கொடுங் கோலர்களுக்கும் ஒடுக்குமுறையாளர்களுக்கும் எதிராக எப்போதும் பதிலடி கொடுப்பது அடக்குமுறையின் அளவைக் குறைக்கிறது அல்லது அதை முழுவதுமாக நிறுத்துகிறது. இவ்வாறு மன்னிப்பதற்கு பதிலாக பதிலடி கொடுப்பது போன்ற நிகழ்வுகள் அதிக பலனளிக்கும்.

ஒருவர் தரவேண்டியதை விட அதிகமாகப் பெறுவது அநீதி (**ஜவ்ர்**). என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அநீதி செய்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள். ஒரு ஒடுக்குமுறையாளரை மன்னிக்கும் நபர் அல்லாஹுத'ஆலாவின் அன்பைப் பெறுவார். ஒரு அடக்குமுறையாளரிடமிருந்து அவருக்கு வர வேண்டிதை திரும்பப் பெற்றுக் கொள்வது நீதியானதாகும். காஃபிர்களுக்கு நீதி வழங்கப்பட வேண்டும். ஆனாலும், பழிவாங்குவதற்கு ஒரு சக்தி இருக்கும்போது மன்னிப்பது ஒரு சிறந்த பழக்கம். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் ஒருவர் ஒரு அடக்குமுறையாளரை சபித்ததை கண்டு அவரை

நோக்கி, **“நீங்கள் பதிலடி (இந்திசார்) செய்தீர்கள்”.** அவரை மன்னித்து இருந்தால், அது நன்றாக இருந்திருக்கும் என்று கூறினார்கள்.

பரிகா முதலாவது பாகத்தில் முடிவில் மேற்கோள் காட்டப்பட்டுள்ள ஒரு ஹதீது ஷரீபில் ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ அவர்கள் கூறியுள்ளார்கள்: **“மூன்று விஷயங்களைக் கொண்ட ஒருவர் அவர் விரும்பும் எந்த வாசல் வழியாகவும் சொர்க்கத்தில் நுழைவார்; ஒருவரின் உரிமையை முன்னர் மீறியவர் அதை அவருக்கு திருப்பித் கொடுப்பவர், ஒவ்வொரு தொழுகைக்கு பின்னரும் சூரா இக்ஹ்லாசை பதினொரு முறை ஓதியவர், தான் இறப்பதற்கு முன் தனது கொலைகாரனை மன்னிப்பவர்**.” [குர்ஆனில் துல்கர்னைனின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர் ஒரு தீர்க்கதரிசி அல்லது வலீ.] துல்கர்னைன் ஒரு தீர்க்கதரிசி இல்லை என்று கூறிய அறிஞர்கள் சொன்னார்கள் தீர்க்கதரிசிகளிடம் இருந்த நான்கு நல்லொழுக்கங்கள் அவருக்கு வழங்கப்பட்டன. இந்த நான்கு நற்பண்புகள்: அவருக்கு பழிவாங்கும் அதிகாரம் இருக்கும்போது அவர் மன்னிப்பார், அவர் வாக்குறுதியளித்தால் அதை அவர் செய்வார், எப்போதும் உண்மையையே கூறுவார், அவர் தனது வாழ்வாதாரத்தை(**ரிஸ்க்**) முந்தைய நாளிலிருந்து தயாரிக்க மாட்டார். ஒருவருக்கு மன்னிப்பதற்காக கொடுக்கப்படும் வெகுமதி (தவாப்)அவர் அனுபவித்த அநீதியின் அளவுக்கு விகிதாசாரமாக இருக்கும்.

பதினொரு தீமைகள் வெறுப்பில்(**ஹிக்த்**) இருந்து வெளிவருகின்றன: 1. பொறாமை; 2. மற்றவர்களுக்கு ஏற்படும் துரதிர்ஷ்டத்தில் (ஷமாதத்) ஏற்படும் மகிழ்ச்சி 3.பிரிப்பு(ஹிஜ்ர்); 4 .மற்றவர்களை இகழ்ச்சியுடன் (இஸ்திஸ்கார்) பார்ப்பது; 5.பொய்; 6.புறம்பேசுதல்; 7.மற்றவர்களின் ரகசியங்களை அம்பலப்படுத்துவது 8.ஒருவரை கேலிசெய்வது; 9.மற்றவர்களுக்கு தேவையற்ற சிரமம் கொடுப்பது 10. மற்றவர்களின் உரிமைகளை கிடைக்காமல் தடுப்பது; 11.மன்னிப்பதை தடைசெய்வது.

வெறுப்பு(ஹிக்த்) உள்ள எவரும் பின்வருவனவற்றில் சிக்கிக் கொள்வார்கள்; பாவங்கள்: அவதூறு; பொய்; தவறான சாட்சியம்; புறம் பேசுதல்; மற்றவர்களின் ரகசியங்களை அம்பலப்படுத்துகிறது,; கேலி; ஆக்கிரமிப்பு; மீறல் மற்றும் நன்மை பயக்கும் வருகைகளை நிறுத்துவது.

பின்வரும் ஹதீது ஷரீப் சூனியம் இஸ்லாத்தில் அனுமதிக்கவில்லை என்பதை காட்டுகிறது; **“பின்வரும் மூன்று தீயசெயல்களை கொண்டிராதவர்களின் எல்லா பாவங்களும் மன்னிக்கப்படும். அவநம்பிக்கை (ஷிர்க்) என்னும் நோய்; சூனியம் செய்வது; மற்றும் இஸ்லாமிய சகோதரர்கள் மீது வெறுப்பு(ஹிக்த்) கொண்டிருப்பது**. “சிஹ்ர்” என்பது சூனியம், (அஃப்சூன்) என்பது சூனியம் செய்வது. இது இஸ்லாத்தில் தடைசெய்யப்பட்டுள்ளது (ஹராம்). சூனியத்தை கடைப்பிடிக்கும் நபர் பாரசீக மொழியில் “ஜாதூ (மந்திரவாதி)” என்று அழைக்கப் படுகிறார். சூனியம் செய்பவர் சூனியம் மூலம் எதையும் செய்ய முடியும் என்று நம்பினால் அவர் ஒரு காஃபிராக மாறுவார். சூனியத்தை இருப்பையும் அதன் விளைவையும் மறுக்கும் நபரும் ஒரு காஃபிராக மாறுவார். நாம் சூனியமும் வேறு எந்த மருந்தையும் போலவே அல்லாஹு த'ஆலாவின் ஆணையைப் பொறுத்து விளைவுகளை ஏற்படுத்தும் என்று நம்ப வேண்டும், அல்லாஹுதஆலா உங்கள் விருப்பங்களை எது வேண்டுமானாலும் செய்வான் என நம்புவது ஒரு பெரும்பாவம். இருப்பினும்,

இது கிட்டத்தட்ட அவநம்பிக்கையின் செயல் அல்ல. சூனியத்திற்கு சிகிச்சை எனும் துருக்கிய புத்தகமான **ஸ'ஆதத்-இல்அபிதிய்யா** வில் இது விரிவாக எழுதப்பட்டுள்ளது. ரசூலுல்லாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: "**அல்லாஹு த'ஆலா, புனித ஷ'பான் மாதத்தின் பதினைந்தாம் நாளில் அவனுடைய எல்லா உயிரினங்கள்மீதும் கருணை காட்டுகிறான் எனினும், அவன் காஃபிர்கள் 'முஷ்ரிக்கீன்கள்' 'முஷாஹின்'களை மன்னிப்பதில்லை.** "முஷாஹின்" என்பது பித் 'அத்களை பின்பற்றுபவர்(**அஹ்லுல் பித்'அ**) எந்த மதுஹபுக்களையும் பின்பற்றாதவர்.

[அஹ்லுஸ் ஸுன்னத் ஜமா'அத்தின் மதுஹபுகளை பின்பற்றாதவர் தவறான பாதையைப் பின்பற்றுபவர்கள் அஹ்லுல் பித்'ஆ என்று அழைக்கப் படுகிறார் கள். நான்கு மதுஹபு களில் ஒன்றைப் பின்பற்றாதவர்கள் ஏற்கனவே அஹ்ல்-அஸ்ஸுன்னத் குழுவிலிருந்து பிரிந்தவர்கள். அஹ்லுஸ் ஸுன்னவிலிருந்து பிரிந்தவர்கள் நிராகரிப்பவர்களாக அல்லது வழிதவறிய அஹ்லுல் பித்'ஆ[1] வாக ஆகின்றார்கள். நிராகரிப்பவர்களில் பல்வேறு வகையினர் உள்ளனர். அவர்களில் மோசமானவர் "முஷ்ரிக்குகள்."முஷ்ரிக்" என்பது அல்லாஹு த'ஆலாவையும் நியாயத்தீர்ப்பு நாளையும் நம்பிக்கை கொள்ளாதவர்கள். நாத்திகர்கள், ஃப்ரீமேசன்கள் மற்றும் கம்யூனிஸ்டுகள் அனைவரும் "முஷ்ரிக்கள்". அஹ்லுல்-பித்'அத் என்பவர்கள் நிராகரிப்பவர்கள் அல்ல தவறான பாதையைப் பின்பற்றுபவர்கள். ஆனால், இஸ்லாமிய அறிஞர்கள் தெரிவிகின்றனர் பித்'அத்,கூட்டத்தை சேர்ந்தவர்களின் கொள்கைகள் சில குர்ஆன், ஹதீதுகளில் தெளிவாக கூறப்பட்ட நம்பிக்கை கோட்பாடுகளை மறுப்பதாக ஆகும்போது அவர்கள் நிராகரிப்புக்குள் வீழ்கிறார்கள்.

குர்ஆனும் ஹதீஸ் இலும் காஃபிர்கள் என்ற வார்த்தைக்கு பதிலாக "முஷ்ரிக்" பயன்படுத்தப்படுகிறது. எடுத்துக்காட்டாக, குர்ஆனில் அல்லாஹுத'ஆலா கூறும்போது அவன் "முஷ்ரிக்கை" மன்னிக்கமாட்டான் என்பதன் அர்த்தம் அவன் எந்த வகையான காஃபிரையும் மன்னிக்கமாட்டான் என்று கூறுகிறான். அந்த மக்கள் சரியான பாதையிலிருந்து விலகிய அவர்களின் வழி தவறிய நம்பிக்கையில் அதிக தூரம் செல்ளா விட்டால், அவர்கள் இன்னும் முஸ்லிம்கள், அவர்கள் "அஹ்ல்அல்-கிப்லா". ஆனால், அவர்கள் இஸ்லாத்துக்கு செய்யும் தீங்கு காஃபிர்களால் ஏற்படும் தீங்கை விட மோசமானது. எந்தவொரு ஒரு மதுஹபையும் பின்பற்றாத இஸ்லாமிய அதிகாரத்தில் பதவிகளில் உள்ளவர்கள்; உதாரணத்திற்கு: மௌதூதி, சையித் குத்பை பின்பற்றுபவர்கள்

---

[1] எங்கள் நபி ''சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' முஸ்லிம்கள் நம்பகமான விஷயங்களில் எழுபத்து மூன்று குழுக்களாகப் பிரிந்து செல்வார்கள் அதில் ஒன்று மட்டுமே **அஹ்லுஸ்-சுன்னத்** அல்லது **ஃபிர்கா-இ-நஜியா** சரியான பாதையை பின்பற்றும் என்று கூறினார்கள். மீதமுள்ள அனைத்து எழுபத்திரண்டு குழுக்கள் தோன்றின, அவற்றில் பெரும்பாலானவை காலப்போக்கில் காணாமல் போயின.

அஹ்ல்-சுன்னத் அல்லது ஃபிர்கா-இ-நஜியா வழியில் நம்பிக்கை சம்பந்தமான இரண்டு உப கிளைகள் மதுஹபுகள் அதாவது; **அஷ்'அரிய்யா, மா'துரீதிய்யா** என்ற இரண்டு மதுஹபுகளும், நடைமுறை ஷரி'அத் சம்பந்தமாக நான்கு மதுஹபுகள் ஹனபி,, ஷாஃபீ, மாலிகி, மற்றும் ஹம்பலி ஆகியவை நடைமுறையில் உள்ளன. இவைகள் மேற்கூறிய ஹதீதில் ரசூலுள்ளாவினால் பரிந்துரைக்கப்பட்ட ஃபிர்கா-இ-நஜியா வழியாகும். Belief and Islam, The Sunnî Path, Endless Bliss (five fascicles), Documents of the Right Word மற்றும் பல வெளியீடுகளை பார்க்கவும்.

தங்களை சலாஃபியா"என்று அழைப்பவர்கள் ஆனால் சாராம்சத்தில் இப்னு தைமியாவின் போதனைகளை பின்பற்றுகிறார்கள் மேற்குறிப்பிட்டபடி அஹ்லுல் பித்'அ பிரிவை சேர்ந்தவர்கள்.

புகழ்பெற்ற இந்திய அறிஞர்களில் ஒருவரான, அதாவது, முப்தி மஹ்மூத் பின் அப்துல் கய்யூர் பிஷாவூரி 'ரஹிமஹுுள்ளாஹு தஆலா தனது ஹுஜ்ஜத்-உல்-இஸ்லாம் நூலில் (ஹிஜ்ரி 1264 [1848 A.D], இல் பிரசுரிக்கப்பட்டது]. துஹ்பத்-உல்-அரப்-இ-வல்-அஜம் என்ற சிறு நூலிலிருந்து பின்வரும் பாரசீக மேற்கோளை முன்வைக்கிறார். சூரா நஹ்ல் இன் 43வது ஆயத்து மற்றும் சூரா அன்பியாவின் 7வது ஆயத்துகளின்படி "செய்தியை வைத்திருப்பவர்களிடம் கேளுங்கள்" என்பது முஜ்தாஹித்களின் போதனைகளை பின்பற்றுவது முஸ்லிம்களுக்கு வாஜிப் ஆகும். சூராதவ்பாவின் 100வது ஆயத்: " **இஸ்லாத்தின் முன்னணியில் முதன்மையானவர்கள் தங்கள்வீடுகளை கைவிட்டவர்கள் (முஹாஜிரீன்கள்) அவர்களுக்கு உதவி வழங்கியவர்கள் (அன்சாரீன்கள்) மற்றும் அவர்களை எல்லா செயல்களிலும் பின்பற்றியவர்கள், அல்லாஹ் அவர்களை பொருந்திக் கொண்டான், அவர்களும் அல்லாஹ்வை பொருந்திக் கொண்டார்கள்**. இந்த ஆயத்துகள் அவர்களை பின்பற்றும்படி கட்டளை யிடுகின்றது. முஆஸ் பின் ஜபல் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களை எமனின் கவர்னராக நியமித்த பின் அவர்களிடம் ரசூளுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்கள் அவர் மக்களின் விவகாரங்களை எவ்வாறு நிர்வகிப்பது என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் கூறினார்கள். குர்ஆனிலும் ஹதீதிலும் கானமுடியாதபோது தனது புரிதலின்படி (இஜ்திஹாத்) படி கொண்டு தீர்ப்பு செய்வேன் என்று கூறினார்கள். ரசூளுள்ளாஹ் சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்கள் இந்த பதிலை மிகவும் விரும்பியவர்களாக அல்லாஹ்வுக்கு நன்றி கூறினார்கள். ஜலாலுத்தீன் சுயூத்தி 'ரஹீமஹுுள்ளாஹு த ஆலா அன்ஹு' தனது ஜஸிலுல் மவாஹிப் எனும் நூலில் தெரிவிக்கிறார்கள். மாலிகி அறிஞர்களில் ஒருவரான அஹ்மத் ஷிஹாபுத்தீன் கராஃபீ 'ரஹீமஹுுள்ளாஹு த ஆலா அன்ஹு'அவர்கள் [எகிப்தி வாழ்ந்தவர்கள் ஹிஜ்ரி 684/ 1285A.D இல் மறைவு] கூறினார்கள். ஒரு புதிய முஸ்லிம் அவர் விரும்பும் அறிஞரை பின்பற்றவேண்டும் என்று ஏகோபித்த இஜ்மா உள்ளது.

ஒரு ஹதீதுக்கலை அறிஞர் (இமாம்) ஒரு குறிப்பிட்ட ஹதீது ஸஹீஹ் என்று கூறினால் சாதாரண முஸ்லிம்களுக்கும் சஹீஹாக இருக்கும். அதே போல் ஒரு குறிப்பிட்ட பத்வா (மார்க்க தீர்ப்பு) ஸஹீஹ்[1] என்று ஒரு பிக்'ஹு அறிஞர் கூறினால் அதே சாதாரண மக்களுக்கும் சஹீஹாகும். அதே மாதிரி, மார்க்க சட்ட விற்பன்னர்களான பிக்ஹு உடைய இமாம்கள் சரி எனக்கண்டு அவர்களுக்கு வழங்கப்பட்ட தீர்ப்புகளை(பிக்ஹு மசாலாக்களை) சாதாரண மக்கள் மீண்டும் அத் தீர்ப்புகளை குறித்த விடயங்களுக்கு பாவிப்பதற்கு அனுமதிக்கப்படுகிறது (ஜாயிஸ்). உதாரணத்திற்கு; அவர்கள் இந்த இந்த கேள்விகளுக்கு இது பிக்ஹு சட்டம் அல்லது மாறாக இந்த விடயங்களை (செயல்களை) இந்த இந்த மாதிரிஅல்லது வழிகளில் செய்வது சரியானது என்று வரையறுத்து கூறுவது.

---

[1] தயவுசெய்து முடிவற்ற பேரின்பத்தின் இரண்டாவது பாசிக்கலின் ஆறாவது அத்தியாயத்தைப் பார்க்கவும்

குர்’ஆனின் சூரா நிஸா’வில் ஐம்பத்தெட்டாவது ஆயத்தில் “ **நீங்கள் சில மத விடயங்களில் உடன்பட முடியாதபோது குர்ஆனிலும் நபியுடைய சுன்னத்திலும் பதிலை தேடுங்கள் (**அலைஹிஸ் ஸலாம்**)”** இந்த கட்டளை "முஜ்தஹித்" அறிஞர்களை நோக்கி அறிவிக்கின்றது. இப்னு அல் ஹஸ்ம் தெரிவிக்கின்றார்; உயிருடன் இருப்பவரையோ அல்லது மறைந்தவரையோ பின்பற்றுவது ஹலால் இல்லை. ஒவ்வொரு தனிமனிதனும் தனது சொந்த ‘இஜ்திஹாத்’ செய்ய வேண்டும்! அவரது அறிக்கை சரியானது அல்ல, ஏனெனில் அவர் “அஹ்ல்லுஸ் சுன்னா அறிஞர் அல்ல. [இது எங்களுடைய **அஷத்துல்-ஜிஹாத்** எனும் புத்தகத்தின் இறுதியில் எழுதப்பட்டுள்ளது., இப்னு அல்-ஹஸ்ம் ஒரு மதுஹாப் இல்லாத வழிதவறிவர். ஒரு மார்க்க தீர்ப்பு வழங்குபவர்(முப்தி) ஒரு முஜ்தஹிது ஆக இருக்கவேண்டியது அவசியம் (வாஜிப்). ஒரு முத்லக் முஜ்தஹித் அல்லாத ஒருவர் மார்க்க தீர்ப்பு (பத்வா) வழங்குவது தடைசெய்யப்பட்டுள்ளது (ஹராம்). ஆனால் அவர் முந்தி வழங்கப்பட்டிருந்த பத்வாக்களை தெரிவிக்கலாம். ஒரு முத்லக் முஜ்தஹித் அல்லாத முப்தியிடம் பத்வா கேட்பதுவும் அனுமதிக்கப்படவில்லை

**கிபாயா** எனும் நூலில் நோன்பை பற்றிய அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது: முஜ்தஹிதல்லாத ஒருவர் தான் கேட்டறிந்த ஹதீதை வைத்து செயல்பட முடியாது. ஏனெனில், அந்த ஹதீது மேலதிக விளக்கம் தேவைப்படும் ஹதீதுகளில் ஒன்றாகவோ அல்லது அந்த ஹதீதின் உத்தரவு இன்னொரு ஹதீது மூலம் மாற்றியமைக்கப்பட்டிருக்கலாம். ஆனால் பத்வாக்கள் அப்படியல்ல. [வேறுவிதமாகக் கூறினால் பத்வாக்கள் நிச்சயமாக எப்பொழுதும் நம்பத் தகுந்தவை) இது பற்றி எந்த சந்தேகமும் இல்லை, பத்வாவை அனைவரும் பின்பற்றியாக வேண்டும். இந்த விஷயத்தில் **தக்ரீர்** எனும் நூலில் ஒரே மாதிரியான தகவல்கள் உள்ளன. **துஹ்பதுல் அரபி வல் அஜம்** எனும் கிதாபின் மொழிபெயர்ப்பு இங்கே முடிகிறது.

வெறுப்புக்கான காரணங்களில் ஒன்று கோபம் (கதப்). ஒரு நபர் கோபப்படுகிறார், ஆனால் பழிவாங்க முடியாமல்போகும் போது அவரது கோபம் வெறுப்பாக மாறுகிறது. கோபம் அதிகரிக்கும்போது இரத்தத்தின் பதற்றம் இயக்கம் அதிகரிக்கின்றது. அல்லாஹ்வுக்காக கோபம் கொள்வது பாராட்டத்தக்க செயல் இது ஒருவரின் மார்க்கத்தின் மீதுள்ள “ஃகைராத்” தினால் வெளிப்படுகிறது.

-

## 17– மற்றொருவரின் துரதிர்ஷ்டத்தில் மகிழ்ச்சியடைவது (ஷமாதத்)

மற்றொருவரின் துரதிர்ஷ்டத்தில் மகிழ்ச்சி அடைவது “ஷமாதத்” எனப்படும். . ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ ஒரு ஹதீது ஷரீபில் இவ்வாறு கூறுகிறார்கள்: **“ஒரு இஸ்லாமிய ஒரு சகோதரரிடம் ‘ஷமாதத்’ வேண்டாம். உங்களிடம் ‘ஷமாதத்’ இருந்தால் அல்லாஹுத ஆலா அவரை பேரழிவிலிருந்து விடுவித்து பின்னர் அதை ஒத்த பேரழிவைக் கொண்டு உங்களை தண்டிப்பான்”**. ஒரு அடக்குமுறையாளரின் மரணத்தைக் கேட்டவுடன் விடுதலையின் மகிழ்ச்சியை உணர்கிறது ‘ஷமாதத்’ ஆகாது. ஒருவரின் எதிரியின் மரணத்தைத் தவிர வேறு பேரழிவுகளையும் துன்பம் தொல்லைகளையும் கேட்டு மகிழ்ச்சி அடைவது "ஷமாதத்" ஆகும். பேரழிவுகள்

மற்றும் தொல்லைகளுக்கு காரணம் ஒருவர் என்று நம்புவது அதைவிட மோசமானது. உதாரணத்திற்கு; ஒருவரின் பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்பட்டதன் காரணமாக அவரின் எதிரி பேரழிவுகள் துன்பம் தொல்லைகளுக்கு ஆளாகிறார் என்று நம்புவது. இப்படியான நம்பிக்கை ஒருவர் உஜுப் எனும் சுய அன்புக்கு ஆளாவதற்கு காரணமாகலாம். ஒருவரின் எதிரியின் துன்பம் தெய்வீக ஏமாற்றமாக ("மக்ர்" அல்லது "இஸ்தித்ராஜ்") இருக்கலாம் என்பது பற்றி ஒருவர் சிந்திக்க வேண்டும். எனவே, அந்த தொல்லைகளை நீக்க பிரார்த்தனை செய்ய வேண்டும்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: "ஒரு மு'ஃமின் சகோதர மு'ஃமினுக்காக செய்யும் பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும். ஒரு மலக்கு அல்லாஹு த'ஆலா **அந்த நன்மையை உனக்கும் தருவானாக என்று கூறுவார். மற்றவர்கள் அதற்கு ஆமீன் என்று கூறுவார்கள். மலக்குகளின் து'ஆ ஒருபோதும் நிராகரிக்கப்படாது"**. எதிரி ஒரு கொடுங்கோலன் (ளாலிம்) என்றால் அவன் அனுபவிக்கும் பேரழிவுகள் மற்றும் தொல்லைகள் மற்றவர்களை அடக்குவதைத் தடுக்கும் எனின் அப்பொழுது அவரின் துன்பங்கள் தொல்லைகள் பற்றி மகிழ்ச்சியாக இருப்பது "ஷமாதத்" ஆக இருக்காது. ஒரு பாவமாக இருக்காது, மாறாக அது மத ஃகைராத் ஆக இருக்கும். மதத்தின் மீதான ஃகைறாத் என்பது ஒருவரின் நம்பிக்கையின் உறுதியைக் குறிக்கிறது. அல்லாஹ்வுக்காக ஃகைறாத் இருப்பது நல்லது. ஒருவரின் பிரார்த்தனைகள் மிருக ஆசைகள் காரணமாக இருந்தால் அது அவ்வளவு நல்லதல்ல. உண்மையில் கொடுங்கோலன் துன்பங்கள் தொல்லைகள் பற்றி மகிழ்ச்சியாக இருப்பது ஒரு நல்ல விஷயம் அல்ல, ஆனால் அது அவன் மற்றவர்களை அடக்குவது, கஷ்டப்படுத்து வதிலிருந்து தடுக்கின்றது என்பதால் அது அனுமதிக்கப்படுகின்றது.

## 18– பிரித்தல் (ஹிஜ்ர்)

"ஹிஜ்ர்" என்பது ஒருவருடன் நட்பாக இருப்பதை நிறுத்துவதாகும். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"ஒரு விசுவாசி (மு'ஃமின் ) மற்றொருவருடன் விசுவாசியுடன் மூன்று நாட்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டது (ஹலால்) அல்ல. மூன்று நாட்களுக்குப் பிறகு அவர் சென்று சலாம் சொல்வது வாஜிப் ஆகும். மற்றவர் அந்த சலாத்தை ஏற்றுக்கொண்டு பதில் சொன்னால் அவர்கள் இருவரும் தவாபை வெகுமதியைப் பகிர்ந்து கொள்வார்கள். இல்லையெனில் பிந்தையவருக்கு பாவம் பதிவு செய்யப்படும்".** ஒரு ஆண் அல்லது பெண் விசுவாசி வேறொரு விசுவாசி (மு'ஃமின்) உடன் கோபப்படுவதற்கும் அவர்களுடனான உறவைத் துண்டிக்கவும் சில சாதாரண தகராறுகள் காரணமாக அவர்களுடன் பேசாமல் இருக்கவும் அனுமதிக்கப் படவில்லை. முஸ்லிமல்லாதவர்கள் (ஜிம்மிகள்), எ.கா., கிறிஸ்தவர்கள் மற்றும் யூதர்கள் ஒரு முஸ்லீம் அரசின் குடிமக்கள் மார்க்க வணக்கங்கள், திருமணம்[1] அல்லாத முஆமலாத் சம்பந்தமாக முஸ்லிம்களைப் போலவே கருதப்பட வேண்டும். வணக்கம் மற்றும் திருமணம் தவிர மற்ற

[1] இஸ்லாத்தின் சமூகக் கோட்பாடுகளின்படி திருமண ஒப்பந்தம். விரிவான தகவல்களுக்கு, ஐந்தாவது பாசிக்கலின் பன்னிரண்டாவது அத்தியாயத்தைப் பார்க்கவும் முடிவற்ற பேரின்பம்.

செயல்கள் மு’ஆமலாத் என அழைக்கப்படும். [உலக விவகாரங்களில் முஸ்லிம் அல்லாத குடிமக்களுடன் குறுக்கு வழியில் செல்வது (முரண்படுவது) அனுமதிக் கப்படவில்லை.அவர்களை நேர்த்தியாகவும் நடத்துவதன் மூலம் புன்னகை யுடன் , அவர்களின் இதயங்களை சமாதானப்படுத்துவது அவசியம். அவர்களை நோக்கி துன்புறுத்தல், தவறான நடத்தை ஏற்படக்கூடிய சூழ்நிலைகளைத் தவிர்ப்பது அவசியம். இஸ்லாமிய அரசின் எல்லைகளுக்கு உள்ளே அல்லது வெளியே எங்கிருந்தாலும், அது ஒரு முஸ்லீமாகவோ அல்லது முஸ்லிம் அல்லாதவராகவோ இருக்கலாம், யாராக இருந்தாலும், எந்தவொரு நபரின் உரிமை, சொத்து, பாதுகாப்பு அல்லது மரியாதை ஆகியவற்றை மீறுவது எந்த வகையிலும் அனுமதி இல்லை. இஸ்லாமிய அரசின் எல்லைக்குள் வாழும் அல்லது முஸ்லிம் அல்லாதவர்கள் அல்லது வருகை தரும் முஸ்லிம் அல்லாத சுற்றுலா பயணிகள், அல்லது இஸ்லாமிய அரசின் எல்லைக்குள் இருக்கும் முஸ்லிம் அல்லாத வணிகர்கள் ஆகியோருக்கு முஸ்லீம்களுக்கு இருக்கக்கூடிய அதே உரிமைகளை அனுபவிக்க உரிமை உண்டு.

வணிக நோக்கங்களுக்காக சட்ட விதிகளைப் பொறுத்து இஸ்லாமிய அரசின் குடிமகன் என்ற ரீதியில் ஒரு முஸ்லீமகளுக்கு இருக்கும் அதே உரிமைகளை மத வழிபாடுகளைத் தவிர அன்றாட வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்தையும் அனுபவிக்க உரிமை உண்டு. அவர்களின் மத கடமைகள் அல்லது வணக்க வழிபாடுகள் செய்வதற்கு இஸ்லாம் சுதந்திரம் வழங்குகிறது. முஸ்லிம்கள் அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு அடிபணிவதும் தீயகாரியங்களில் ஈடுபடாது இருப்பதுவும் அவசியமானது. அவர்கள் நாட்டை ஆளும் சட்டத்தை மீறுவதற்கு முடியாது. எந்தவித குற்றமும் இழைக்ககூடாது. அவர் மற்றவர்களை குழப்பம் செய்வதற்கு தூண்டக்கூடாது. அவர் மற்றவர்கள் முஸ்லிமாயினும், அல்லது காபிர்களாயினும் நல்லமுறையில் நடந்து கொள்ள வேண்டும். ஒரு முஸ்லீம் மற்றவர்களின் உரிமைகளை கடைபிடிக்க வேண்டும், ஒருபோதும் மற்றவர் கள்மீது அடக்குமுறைகளை பாவிக்ககூடாது. அவரது நடத்தை மேம்படுத்து வதன்மூலம் இஸ்லாத்தின் உள்ளார்ந்த அழகான ஒழுக்கங்கள் மற்றும் இஸ்லாத்தின் நீதமான அடிப்படை ஒழுக்க நெறிமுறைகள் கோட்பாடுகளை ஏற்று நடப்பதன் மூலம் நூலம் நாட்டின் மற்ற பிரஜைகள் இஸ்லாமிய மதத்தை மதிக்கவும் போற்றவும் காரணமாக இருக்கவேண்டும்.]

இஸ்லாம் நிர்ணயித்த மூன்று நாள் வரம்பு முடிவடைவடைவதற்கு முன் உறவை முறித்த நபரிடம் சென்று அவருடன் இணைந்து நடப்பதற்கு முற்சிப்பது மிகவும் நலமானது. மூன்று நாள் சகிப்புத்தன்மை சிரமத்தைத் தவிர்ப்பதற்காக கொடுக்கப்படுகின்றது. மூன்று நாள் வரம்புக்குப் பிறகு பாவக்கணிப்பீடு தொடங்கி நாட்கள் செல்லச் செல்ல தொடர்ந்து வளர்கிறது. அது அவர்களுக்கிடையில் உடன்பாடு தோன்றும் வரை வளர்ந்து கொண்டிருக்கும். ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ ஒரு ஹதீது ஷரீபில்: **உங்களை புண்படுத்திய மனிதனிடத்துக்கு சென்று சமாதானமாகுங்கள். உங்களை ஒடுக்கியவரை மன்னியுங்கள். உங்களை மோசமாக நடத்திய ஒருவரிடம் நல்லவராக இருங்கள்!**” ”அஸ்ஸலாமு’ அலைக்கும்” என்று சொல் பவருக்கு பத்து நன்மைகளும்(வெகுமதிகளும்),” அஸ்ஸலாமு’ அலைக்கும் வரஹ்மத்துள்ளாஹி” என்று சொல்பவருக்கு இருபது நன்மைகளும், அஸ்ஸலாமு’ அலைக்கும் வரஹ்மத்துள்ளாஹி வபரக்காத்துஹு என்று சொல்பவருக்கு முப்பது நன்மைகளும் கொடுக்கப்படும். திரும்ப பதில்

அளிப்பவருக்கும் அதேமாதிரி சமமான நன்மைகள் கொடுக்கப்படும். அதாவது, வஅலைக்கும்சலாம் என்றவருக்கு பத்து நன்மைகள், வஅலைக்கும் சலாம் வரஹ்மத்துள்ளாஹி" என்று சொல்பவருக்கு இருபது நன்மைகளும், வஅலைக்கும்சலாம் வரஹ்மத்துல்லாஹி வபரக்காத்துஹு என்று சொல்ப வருக்கு முப்பது நன்மைகளும் கொடுக்கப்படும். மூன்று நாள் வரம்பிற்குள் உறவை புதுப்பிற்காத ஒருவர் மன்னிபையோ அல்லது சபா'அத்தையோ பெறவில்லை ஆயின் நரகத்தில் தண்டிக்கப்படுவார்.ஒரு பாவம் செய்யும் நபருடன் அவருக்கு பாடம் கற்பிப்பதற்காக உறவை முறிப்பது அனுமதிக்கப்பட்டது, 'முஸ்தஹபும்'[1] கூட. இது அவரை அல்லாஹு தஆலாவின் பொருட்டு தனிமைப் படுத்துவதாகும். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளா ஹு'அலைஹி வசல்லம்' கூறினார்கள்: "அனைத்து நல்ல **செயல்களுக்கும் வழிபாடுகளுக்கும் மிகவும் மதிப்புமிக்கது 'ஹுப்பி பில்லாஹ்' மற்றும் 'புக்தி பில்லாஹ்'"** ஹுப்பி பில்லாஹ் என்பது அல்லாஹ் வின் பொருட்டு நேசம் வைப்பது, புக்தி பில்லாஹ் என்பது அல்லாஹ் வின் பொருட்டு வெறுத்தல் பிரிதல் என்பதாகும்.

அல்லாஹு தஆலா மூஸா அலைஹிஸ்சலாமிடம் நீர் எனக்காக என்ன செய்தீர்? என்று கேட்டான். அதற்கு அவர்; நான் உனக்காக தொழுதேன், உனக்காக நோன்பிருந்தேன், உனக்காக தர்மம் செய்தேன், இன்னும் திக்ர் செய்தேன் என்று கூறினார். அதற்கு அல்லாஹ்: நீர் தொழுதது ஒரு சான்று (புர்ஹான்) ஆகும், அது தீய செயல்கள் செய்வதிலிருந்து உம்மை காப்பாற்றும். உமது நோன்பு நரக நெருப்பில் இருந்து உம்மை காப்பாற்றும், நீர் கொடுத்த தருமம் (சக்காத்) கியாமத் நாளில் உமக்கு நிழல் தரும், நீர் செய்த திக்ர் நீர் ஒன்று கூட்டப்பட்டு கேள்வி கேட்கும் இடத்தில் ஒளியை தரும். யா,மூசா நீர் எனக்காக என்ன செய்தீர்? என திரும்பவும் கேட்டான். இம்முறை, நபி மூஸா அலைஹிஸ்ஸலாம் அல்லாஹுவிடம்; அவனுக்காக அவர் எப்படி ஏதாவது செய்ய முடியும் என்பதை அவருக்கு வெளிப்படுத்த வேண்டும் என்று கெஞ்சினார் . "அதற்கு இறைவன், " எனக்காக எனது நண்பர்களை நட்பு வைத்தாயா?, எனக்காக எனது எதிரிகளை வெறுத்தாயா?, என்று கூறினான். அப்போதுதான் நபி மூஸா அளஹிஸ்ஸலாம் விளங்கி கொண்டார்; எல்லா நற்செயல்களிலும் வழிபாடுகளிலும் சிறந்தது '**ஹுப்பி பில்லாஹ்**' என்பது அல்லாஹ் வின் பொருட்டு நேசம் வைப்பதும்,' **புக்திபில்லாஹ்**'என்பது அல்லாஹ் வின் பொருட்டு (ஒதுக்கி வைப்பது) வெறுத்தலும் என்பதாக.

பாவங்களைச் செய்யும் நபருடன் "ஹிஜ்ர்" ஐ நீண்ட காலத்திற்கு செய்வதற்கு அனுமதிக்கப்படுகிறது. பின்வரும் சம்பவம் முஸ்லிம்களிடையே நன்கு அறியப்பட்ட ஒன்றாகும்; புகழ்பெற்ற இமாம் அஹமது இப்னு ஹன்பல் ரஹ்மாதுள்ளாஹி அலைஹி அவர்கள் அவரது மாமா மற்றும் ஒன்றுவிட்ட சகோதரர்களிடமிருந்து அவர்கள் சிறிது காலம் விலகி இருந்தனர். ஏனெனில் அவர்கள் தங்களுக்கு வந்த ஒரு பரிசை அது இஸ்லாம் தடைசெய்த ஹராமான ஒரு வழியால் வந்தது என்று அறிந்தும் அதை அவர்கள் ஏற்றுக்கொண்டனர் என்பதற்காக. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்கள் மூன்று பேருடனும் அவர்களின் மனைவி மாருடனும் ஹிஜ்ர்' சிறிதுகாலம் விலகி இருந்தார்கள். அவர்க தபுக் புனித யுத்தத்தில் பங்கு கொள்ளாமல் இருந்ததால் அப்படி செய்தார்கள்.

---

[1] ஒரு சிறப்பான செயல், அது கட்டாயம்  இல்லை என்றாலும் இஸ்லாம் பாராட்டுகிறது.

## 19– கோழைத்தனம் (ஜுபுன்)

"**ஜூப்ன்**"என்பது கோழைத்தனமாக இருப்பது. கோபத்தின் தேவையான அளவு (**கதப்**)என்றும் அல்லது கடுமையாக நடந்துகொள்வது துணிச்சல் (**ஷஜாத்**) என்று அழைக்கப்படுகிறது. கோபம்  தேவையான அளவைவிட  குறைவாக இருப்பது  கோழைத்தனம் என்று அழைக்கப்படுகிறது.  கோழைத்தனம் ஒரு தீமை. இமாம் முஹம்மது பின் இத்ரிஸ் ஷாஃபியி 'ரஹிமாஹுள்ளாஹ் தஆலா கூறுகிறார்கள்; துணிச்சலைக் கோரும் ஒரு சந்தர்ப்பத்தில் கோழைத்தனமாக செயல்படும் ஒருவரின் நிலைமை ஒரு கழுதைக்கு ஒத்திருக்கிறது. ஒருநபர் நீதிபதியால் ஒரு தண்டனை வழங்கப்பட்டு அதை அவர் ஏற்கவில்லை என்றால் அவர் பிசாசாக இருப்பார். ஒரு நிலைமை ஏற்படும்போது  ஒரு கோழையினால் அவரது மனைவிக்காகவோ அல்லது அவரது உறவினர்களுக்காகவோ ஃகைராத்தை காட்ட முடியாதுபோகும். அவரால் அவர்களை பாதுகாக்க முடியாது போகும். அதனால்அடக்குமுறை (**zஜூல்ம்**) மற்றும் இழப்பு(**zஜில்லட்**) ஆகியவற்றை அனுபவிக்க நேரிடும். தடைசெய்யப்பட்ட ஒரு செயல் (ஹறாம்) நடப்பதை கண்டதும் அவர் எதையும் சொல்ல மாட்டார். அவர் மற்றவர்களின் பணம் மற்றும் பொருட்கள் மீது பேராசைப்படுவார். அவரால் ஒரு தொழிலில் உறுதியாக  இருக்கமுடியாது.  அவர் மற்றவர்களிடமும் பேராசை கொண்டி ருப்பார். அவருக்கு கொடுக்கப்பட்ட கடமையின் முக்கியத்துவத்தை கவனிக்க மாட்டார். அல்லாஹுதஆலா குர்ஆனில் சூராதவ்பாவில் துணிச்சல் உள்ளவர் களை புகழ்ந்துரைக்கிறான். இன்னும் சூரா நூரில் விபச்சாரகர்களை தண்டிக்கும் போது கருணை காட்டவேண்டாம் என்று கட்டளை பிறப்பிக் கின்றான்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில்"**என் அன்பு மகள் ஃபாத்திமா திருட்டு செய்தாலும், நான் அவர் கையை துண்டிப்பேன்"** என்று கூறுகிறார்கள். சூரா பத்ஹ்  இல் "அல்லாஹு தஆலா அவனின் அருமைதூதரின் தோழர்களை (சஹாபாக்களை) புகழ்கின்றான்**. "அவர்கள் நிராகரிப்பவர்களுடன் (**காபிர்களுடன்**) கடுமையானவர்கள்."** அவர்கள் யுத்தத்தில் காஃபிர்களைப் பற்றி கடும் கோபப்படுவதாலும் கடுமையாக நடத்துவதாலும் அவர்களைப் புகழ்கிறான். சூரா தவ்பாவின் 73வது ஆயத் கூறுகிறது **"காபிர்களை நோக்கி கடுமையாக இருங்கள்"** நாம் அவர்களை தாக்கும்போது கோழைத்தனமாக இருக்கக்கூடாது என்பதே இதன் பொருள். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில்: **"எனது உம்மத்தில் (முஸ்லிம்களில்) சிறந்தவர் இரும்பு போன்ற உறுதியானவர்.**" இஸ்லாத்தைத் தாக்கும் அல்லது விரோதப் போக்கைக் கொண்டவர்களிடம் முஸ்லிம்கள்  முரட்டுத்தனமாக இருக்க வேண்டியதும் அல்லது முஸ்லிம்கள் பக்கம் சார்பாக ஒற்றும்மையாக இருப்பது அவசியம். அவர்களிடம் கோழைத்தனமாக இருப்பது அனுமதிக்கப்படாது (ஜாய்ஸ்). முதுகெலும்பில்லாத கோழைத்தனம்  இறப்பு (மவ்த்தின்) நேரம் பற்றிய அல்லாஹுவின் ஆணையை மாற்றாது.ஒருவரின் இறப்பு நேரத்தைப் பற்றி அல்லாஹு உத்தரவு பிறப்பிக்கும் போது உயிர் பறிக்கும் மலக்கு (இஸ்ராயில்) அந்த நபரை எங்கிருந்தாலும் கண்டு பிடிப்பார். ஒருவர் ஆபத்தானவற்றுக்கு தன்னை வெளிப்படுத்துவது அனுமதிக்கப்படவில்லை. ஆபத்தான இடத்தில்

தனியாக தங்குவது அல்லது ஒரு ஆபத்தான சாலையில் தனியாக நடப்பது பாவமான விடயம்.

## 20– தஹவ்வூர் (அதிகப்படியான கோபம்)

அதிகப்படியான கோபம் அல்லது கடுமையான தன்மை ஆபத்தான நிலைகளை அடைகிறது. தஹவ்வுர் (தைரியம், முரட்டுத்தனம்) என்று அழைக்கப்படுகிறது. தஹவ்வூர் உள்ள ஒரு நபர் கடுமை, கோபம் மற்றும் முரட்டுத்தனம் பண்புகளை வெளிப்படுத்துவார். தஹவூருக்கு எதிரானது மென்மையானது (ஹில்ம்). ஒரு மென்மையான இயற்கையான நபர் கோபத்தை ஏற்படுத்தும் ஒரு சூழ்நிலையை எதிர்கொள்ளும்போது அவர் கோபமாகவோ உனர்ச்சிவசமாகவோ இருக்க மாட்டார். ஒரு கோழை நபர் தனக்கு மட்டுமே தீங்கு விளைவிப்பார். மாறாக, கோபமடைந்த ஒருவர் தனக்கு தீங்கு செய்வதுடன் மற்றவர்களுக்கும் தீங்கு செய்வார். கோபம் ஒருவரை நம்பிக்கையின்மைக்குகூட இட்டுச் செல்லக்கூடும்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீதில் கூறுகிறார்கள் :**"கோபம் (கதப்) ஒருவரின் நம்பிக்கையை களங்கப்படுத்துகிறது."** ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' உலக விவகாரங்களுக்காக 'கோபப்படு வதை ஒருபோதும் காணவில்லை. அல்லாஹுத ஆலாவின் பொருட்டு மட்டுமே அவர்கள் கோபப்படுவார்கள்.

கோபமடைந்த நிலையில் இருக்கும் ஒருவர் அவநம்பிக்கையை ஏற்படுத்தும் வார்த்தைகளை சொல்லலாம் அல்லது செயல்களை செய்யாலாம். கோபமடைந்த ஒருவர் தனது எதிரி தனது கோபத்திற்கு எதிர்வினை யாற்றலாம் அல்லது பதிலாக ஏதாவது செய்யலாம் என்று முன்னரே சிந்திக்க வேண்டும். கோபப்படும் ஒரு நபரின் இதயம் நிலை தடுமாறுகிறது. இந்த உறுதியற்ற தன்மை அவரது முகத்தில் ஒரு அசிங்கமான மற்றும் வலிமையான தோற்றத்தை பிரதிபலிக்கிறது. கோபத்தை அடக்குவது அல்லது கட்டுப் படுத்துவது **"காஸ்ம்"** என்று அழைக்க ப்படுகிறது. கோபத்தை அடக்குவதில் வெற்றி என்பது மிகவும் நல்ல மற்றும் நன்மை பயக்கும் செயலாகும், மேலும் ஒருவர் பல வெகுமதிகளை (**தவாப்கள்**) பெற்றுக்கொள்ள காரணமாகிறது. கோபத்தை வெல்லுபவருக்கு வெகுமதியாக சொர்க்கம் கிடைக்கும். அல்லாஹு ஒரு நபரை மிகவும் நேசிக்கிறான் அவர் அல்லாஹு தஆலாவின் பொருட்டு தனது கோபத்தை கட்டுப்படுத்துவதுடன் பதிலடி கொடுக்காமல் தனது எதிரியை மன்னித்துவிடுவார். பின்வரும் ஹதீது ஷரீப் இந்த வகை நபரைப்பற்றி தெரிவிக்கின்றது. **அல்லாஹுதஆலாவுக்காக, தனது கோபத்தை அடக்கும் ஒருவருக்கு அல்லாஹு தஆலா அவனுடைய தண்டனையை ('அதாப்) அவரிடமிருந்து நீக்கிவிடுவான்,"** மற்றும் **"அல்லாஹு தஆலா மூன்று குணங்களைக் கொண்டுள்ள ஒரு முஸ்லீமை நேசிப்பான், பாதுகாப்பான், கருணை காட்டுவான்: கொடுக்கப்பட்ட நிஃமத்திற்கு நன்றி தெரிவிப்பவர்; அடக்குமுறையாளரை மன்னிப்பவர்; தன்னுடைய கோபத்தை அடக்குபவர்"**. ஒருவர் கொடுக்கப்பட்ட நிஃ'மத்திற்கு நன்றி செலுத்துவது என்பது அதை இஸ்லாம் வகுத்த வழிகாட்டுதல்களின்படி பயன்படுத்துவது. பின்வரும் ஹதீது ஷரீபில் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்'கூறினார்கள்: **"மிகவும் கோபமுள்ள ஒருவர் அவர்**

**விரும்பும் எதையும் செய்ய அதிகாரம் உள்ளபோதும் அவர் மென்மையாக நடந்து கொண்டால், அல்லாஹு தஆலா அவரது இதயத்தில் பாதுகாப்பு உள்ள உணர்வையும், ஈமானையும் நிரப்புவான்”**. மற்றும் **“தனது கோபத்தை மறைக்கின்ற அல்லது அடக்கும் எவரையும் அல்லாஹுவால் சமமாக நடத்தப்படுவார். அல்லாஹு தஆலா அவரது வெட்கக்கேடான விஷயங்களையும் குறைகளையும் மறைத்து விடுவான்.”**

" இமாம் அல்-கஸ்ஸாலி ‘ரஹிமாஹுள்ளாஹு தஆலா கூறினார்கள். “கோபம் ‘கதப்’ஐ வெல்வதை விட மென்மையாக இருப்பது (‘ஹில்ம்)’ மிகவும் விலை மதிப்பற்றது.” ஒரு ஹதீது ஷரீப் மென்மையின் மதிப்பை (ஹில்ம்) சுட்டிக்காட்டுகின்றது:, **“ஓ அல்லாஹ்! எனக்கு ‘‘இல்ம்’ அறிவைக் கொடு, ‘ஹில்ம்’ மென்மையை கொண்டு என்னை அலங்கரி, பக்தியுள்ள ‘தக்வா’ வை எனக்கு தந்தருள், என்னை உடல் நலத்தை கொண்டும் ஆபியத்தை கொன்டும் அழகுபடுத்து”.**

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ரலியள்ளாஹு த ஆலா அன்ஹுவை யாரோ சபித்தனர். அதற்கு அவர்கள் அந்த நபரிடம் அவருக்கு எந்தவொரு உதவி தேவைப்பட்டாலும் அல்லது அவரது எந்தவொரு பிரச்சனையை தீர்க்க வேண்டுமானாலும் கேட்குமாறு வேண்டிக் கொண்டார்கள். இதை கெட்ட அந்த நபர் வெட்கப்பட்டு தலையை கீழே வைத்து மன்னிப்பு கேட்டார். மற்றொரு நபர் ஹஸரத் ஹுசைனின் ரலியள்ளாஹு தஆலா அன்ஹுவின் மகனான ஜெய்னுல் ஆபிதீன் அலி ரலியள்ளாஹு தஆலா அன்ஹுவை சபித்தார். அதற்கு ஜெய்னுல் ஆபிதீன் அலி ரலியள்ளாஹு தஆலா அன்ஹு தனது ஆடையை கழற்றி பரிசாகக் கொடுத்தார்கள்.

ஈஸா ‘அலைஹிஸ்-சலாம்’ அவர்கள் சில யூதர்களை கடந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் அவரை எல்லா வகையான அசிங்கமான பெயர்களையும் கூறி அழைக்கத் தொடங்கினர். அவர் அவர்களிடம் மீண்டும் மென்மையாக பேசினார். எல்லாவற்றையும் மீறி அவர் ஏன் அவர்களிடம் இவ்வளவு தயவு காட்டினார் என்று அவரிடம் கேட்கப்பட்டபோது அவர்கள், ஒருவர் வைத்திருப்பதைத்தான் மற்றவர்களுக்கு கொடுப்பார் என்று பதில் அளித்தார்கள். யாரையும் தொந்தரவு செய்யாதவர் வசதியாக இருப்பார், மகிழ்ச்சியாக இருப்பார்,எல்லோரும் அவரைப் புகழ்வார்கள் என்பது பொதுவான விதி.

ஒரு ஹதீது ஷரீப் கூறுகிறது: **“கோபம் (கதப்)என்பது ஷைத்தானின் தீய தூண்டுதலால் (வாஸ்வாசா) காரணமாக ஏற்படுகிறது. ஷைத்தான் நெருப்பிலிருந்து படைக்கப்பட்டான். நெருப்பு தண்ணீரினால் அணைக்கப் படுகிறது. கோபத்தை அடக்குக்குவதற்கு (வுளு)செய்ய வேண்டும்**”. இந்த காரணத்திற்காக, ஒரு கோபமான நபர் “அ’ஊது பிஸ்மில்” உடன் “குல் அ’ஊது” இரண்டு கடைசி சூராக்களையும் ஓத வேண்டும். கோபமடைந்த நபரின் புத்தி (‘அக்ல்) செயல்படுவதை நிறுத்திவிடும், அவர் இஸ்லாம் நிர்ணயித்த வரம்புகளுக்கு அப்பால் செல்வார். கோபமடைந்த ஒருவர் அவர் எழுந்து நின்றால் கீழே அமர வேண்டும். ஒரு ஹதீது ஷரீப் பின்வருமாறு கூறுகிறது: **“யாராவது கோபமுற்றால் (கதப்) அவர் எழுந்து நின்றால் உட்கார வேண்டும். கோபம் தொடர்ந்தால், அவர் தனது ஒரு பக்கத்தில் படுத்துக் கொள்ள வேண்டும்! ”** இது நிற்கும் நபர் பழிவாங்கலுக்காக விரைவாக

செயற்படுவத்து எளிது. கீழே உட்கார்ந்து விடுவது அவரது கோபத்தை குறைக்கிறது. படுத்துக்கொள்வது அவரது கோபத்தை மேலும் குறைக்கிறது. கோபம் தற்பெருமையின் (கிப்ர்) இன் விளைவு. கீழே படுத்துக் கொள்வது இதை குறைக்கின்றது. ஒரு கோபமான நபர் பின் வரும் து'ஆவை ஓதவேண்டும் என்று ஒரு ஹதீது ஷரீப் கட்டளையிடுகிறது. **"அல்லாஹுஃமக்ஃபீர் லி-ஸன்பி வஅசிப் ஃகைச கல்பி வ அஜிர்னி மினஷ் ஷைத்தான்**." இதன் பொருள்பின்வருமாறு: "**ஓ என் அல்லாஹ்! என் பாவத்தை மன்னித்துவிடு. என்னை என் இதயத்தில் உள்ள கோபத்திலிருந்தும் ஷைத்தானின் தீய பரிந்துரைகளில் இருந்தும் என்னை காப்பாற்று**.

கோபத்தை ஏற்படுத்திய ஒரு நபர் கோபம் கொண்ட நபருக்கு மென்மையாக பேசி சிகிச்சை செய்ய முடியாவிட்டால் அவர் அவரிடமிருந்து பிரிந்து அவரை இனி பார்க்கக்கூடாது. ஒருவர் உலக அல்லது மத விவகாரங்களுக்காக மற்றவர்களிடம் கோபப்படக்கூடாது. "**லா தஃஹ்ஃதப்"** எனும் ஹதீது ஷரீப் கோபத்தைத் தடைசெய்கிறது. ஒரு நபர் கோபப்படும்போது அவரது நரம்புகள் அனைத்தும் நிலையற்ற தாகிவிடும் அவரது உடலின் சில பாகங்கள் உடல் ஆரோக்கியத்தை இழக்கின்றன. டாக்டர்களால் அந்த நோய்க்கு ஒரு தீர்வைக் கண்டறியமுடியாது. அந்த நோய்க்கு ஒரே தீர்வு"லா தஹ்ஃதப்" எனும் ஹதீது ஷரீப்.

கோபமான நபர் அவரது வார்த்தைகள் மற்றும் நடத்தை மூலம் அவரைச் சுற்றியுள்ளவர்களை காயப்படுத்துகிறார். அவர்கள் கூட நரம்பு நோய்களால் பாதிக்கப்படுகிறார்கள். அவர்களின் வீட்டில் எந்த அமைதியும் நல்லிணக்கமும் காணப்படாது. அது பிரிவினை அல்லது கொலைக்கு கூட காரணமாக இருக்கலாம். ஒரு வீட்டில் கோபப்படுவோர் யாரும் இல்லை எனில் , மகிழ்ச்சி, ஆறுதல், அமைதியும் அங்கு ஏற்படும். கோபப்படும் ஒருவர் இருந்தால் அங்கு எந்த ஆறுதலும், அமைதியும், மகிழ்ச்சியும் இருக்காது. அங்கே எப்போதும் கணவன் மற்றும் மனைவி இடையே அல்லது மகன் மற்றும் அவரது தாயார் இடையே ஒருவித கருத்து வேறுபாடு அல்லது பகைமை கூட இருக்கலாம். இஸ்லாமிய ஷரீ'அத் விதிகளின்படி இணங்குவது மகிழ்ச்சி, ஆறுதல் மற்றும் அமைதியை தரும் என்பதை இவற்றிலிருந்து புரிந்து கொள்ள வேண்டும். ஷாரியத்தின் விதிகளைப் பின்பற்றும் காஃபிர்கள் கூட இந்த உலகில் மகிழ்ச்சி அடைவார்கள்.

அறிவற்ற மற்றும் முட்டாள்கள் கோபத்தை(கதப்) மற்றும் கடும்சினம் (தஹவ்வூர்)ஐ துணிச்சல் (ஷாஜாத்), மரியாதை, ஆண்மை, மற்றும் தேசபக்தி என்றும் கூறுகிறார்கள். அவர்கள் தீங்கான கோபத்தை (கதப்) கவர்ச்சியான வார்த்தை கொண்டு அழகுபடுத்துகிறார்கள். அவர்கள் கோபம் இருப்பது ஒரு நல்ல விஷயம் என்றும் அந்த கூற்றை ஆதரிப்பதற்கு பெரிய நபர்கள் எவ்வாறு கோபமடைந்தார்கள் என்பது தொடர்பான கதைகளை மற்றவர்களிடம் முன்வைக்கிறார்கள். அவர்களின் அணுகுமுறை அவர்களின் அறியாமையை பிரதிபலிக்கிறது மற்றும் அவர்களின் மூளைசரியாக செயற்படவில்லை என்பதை நிரூபிக்கிறது. உண்மையில், ஒரு நோய்வாய்ப்பட்ட நபருக்கு ஆரோக்கியமான நபரை விட வேகமாக பைத்தியம் பிடிக்கும், ஆண்களை விட பெண்கள் விரைவாக கோபப்படுவார்கள், இளைஞர்கள் வயதானவர்கள் விட அதிகமாக கோபத்தை உடையவர்கள்

முப்பது வயதுக்குக் குறைவானவர்கள் இளைஞர்கள் என்று அழைக்கப்படு கிறார்கள், முப்பது முதல் ஐம்பது வயதுக்குட்பட்டவர்கள் முதியவர்கள்(matured) என்றும், ஐம்பது வயதுக்கு மேற்பட்டவர்கள் வயதானவர்கள்,(ஷேக்) என்றும், எழுபது வயதுக்கு மேற்பட்டவர்கள் மிகவும் வயதான மனிதர்கள் (பீர் அல் பானி) என்று அழைக்கப்படுகிறார்கள்.

இயற்கையில், ஒருநபரின் கோபத்தை எழுப்பிவிடும் அடிப்படையான தூண்டுதல் சக்தி மிகவும் கோபமான பிரசங்கமாயிருக்கும். இது இஸ்லாத்தின் அறிவுறுத்தல்கள் மற்றும் மார்க்க நூல்களை காட்டிலும் பிரசாரகரின் தனிப்பட்ட மனநிலையை அடிப்படையாகக் கொண்டதாயிருக்கும். அதற்கான ஒரே சிகிச்சை இலகுவானது, மென்மையான மற்றும் இனிமையான வார்த்தை. ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' அவர்களின் இரண்டு அருள்பெற்ற பேரன்மார் ஹஸரத் ஹசன் மற்றும் ஹுசைன் ரலியள்ளஹு தாலா அன்ஹுமா' பாலைவனத்தில் சென்று கொண்டிருக்கும் போது ஒரு வயதான மனிதர் வுளு செய்வதைக் கண்டார்கள். அந்த வயோதிபர் வுளுவின் எல்லா அவசியமான நிபந்தனைகளையும் நிறை வேற்றாததை கண்டு அவரின் வுளு செல்லுபடியாகாது என்று அம்மனிதருக்கு சொல்வதற்கு வெட்கப்பட்டார்கள். அவர்கள் இருவரும் அம்மனிதரை அணுகி அவர்கள் இருவரும் யார் சிறந்த வுளு செய்பவர் என்று தகராறு செய்வதாக அவரிடம் சொன்னார்கள். அதற்கு மத்தியஸ்த்தம் செய்யும்படியும் அம் முதியவரை கேட்டுக்கொண்டார்கள். அவர்கள் இருவரும் தேவையான எல்லா நிபந்தனை களையும் பூர்த்திசெய்து வுழுவை செய்து முடித்தார்கள். வயதானவர் அவர்களின் செயல்களை உன்னிப்பாக கவனித்தார். கடைசியில் அவர்களிடம், "ஓ எனது அருமை பிள்ளைகளே! வுளு செய்வது எப்படி என்பதை இப்போதுதான் உங்களிடமிருந்து கற்றுக்கொண்டேன்' என்று கூறினார்.

நபி இப்ராஹம் 'அலைஹிஸ்ஸலாம்' இருநூறு நெருப்பு வணங்கிகளுக்கு (மஜூஸி) விருந்து அளித்தார். அவர்கள் இப்ராஹாம் 'அலைஹிஸ்ஸலாத்திடம் அவர்களுக்காக என்ன செய்யவேண்டும் என்று கேட்டார்கள். இப்ராஹிம் 'அலைஹி ஸலாம்' அவர்கள் அவருடையஇறைவன் அல்லாஹுத்தஆலாவுக்கு சுஜூது செய்ய சொன்னார்கள். மஜூசிகள் தங்களுக்குள் கலந்தாலோசித்து அவருடைய தாராள மனப்பான்மை காரணமாக அவர்கள் அவரை புண்படுத்த வேண்டாம் என்று முடிவு செய்தனர். அவர்கள் சிரம் பணிந்த பிறகு அவர்கள் அவர்களின் பழைய நிலைக்கு திரும்பி தங்கள் கடவுள்களை வணங்குவதாக கூறினார்கள். அவர்கள் சஜ்தா செய்து கொண்டிருக்கும்போது இப்ராஹம் 'அலைஹிஸ்ஸலாம்' அல்லாஹ்விடம் முறையிட்டார்கள். ஓ எனது ஆண்டவனே!, எனக்கு இதுவரை மட்டும்தான் செய்ய முடிந்தது இனி உன்னிடம் தான் அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தருவதற்கும் நல்வழியை காண்பிப்பதற்கும் சக்தியுள்ளது, உன்னுடைய கருனையைகொண்டு அவர்களை முஸ்லிம்களாக ஆக்குவதன் மூலம் அவர்களை கௌரவப்படுத்து.! என்று பிரார்த்தித்தார்கள். அல்லாஹ் அவர்களின் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டான். அவர்கள் அனைவரும் முஸ்லிமானார்கள்.

ஒரு நபர் அவர் தனியாக இருக்கும்நிலையில் தடைசெய்யப்பட்ட செயலை செய்ய முற்படும்போது அவருக்கு ஆலோசனை கூறுவது அவசியம். தடை செய்யப்பட்ட செயலைச் செய்தால், அவர் உடனடியாக மென்மையான

முறையில் எச்சரிக்கப்படுவார். அனைவருக்கும் தனிப்பட்ட முறையில் ஆலோசனை கூறுவது மிகவும் பயனுள்ளதாக இருக்கும். ஒரு நபரின் கோபத்திற்கு மற்றொரு காரணம் தவறான புரிதல் ஆகும். தவறான புரிதலை தவிர்க்க பரிந்துரைக்கப்பட்ட வழி தெளிவானது, விளங்கக்கூடிய மொழியில் கூறுவது. தெளிவற்ற மொழி கேட்பவரை எரிச்சலூட்டும்.

சரியான போதனை (அம்ர்-அல்-ம'ஃருப்) செய்வதற்கு மூன்று நிபந்தனைகள் கடைப்பிடிக்க பட வேண்டும். முதல் நிபந்தனை அல்லாஹ்வின் கட்டளை மற்றும் தடைகளை கூறுவதற்கு ஒரு தூய நோக்கம் இருக்க வேண்டும். இரண்டாவதாக, பிரச்சாரம் செய்ய விரும்பும் விடயத்தை பற்றிய போதிய அறிவும் தகவல்களின் ஆதாரங்கள் மற்றும் ஆவணங்கள் உட்பட முழு தேர்ச்சியும் இருக்க வேண்டும். மூன்றாவதாக, அதன் விளைவாக ஏற்படக் கூடிய பிரச்சினைகளின்போது பொறுமை காத்தல். மிகவும் துல்லியமான, மென்மையான வார்த்தை பிரயோகம் என்பன முன்நிபந்தனை. கடுமையான வார்த்தைகள் குழப்பத்தை உருவாக்கும், பித்னாவை தூண்டும் என்பதால் தவிர்க்கப்பட வேண்டும்.

ஒரு இரவு ஹஸரத் உமர் ரலியள்ளாஹு தஆலாவின் கிலாபத்தின் போது கலிபாவும் அப்துள்ளாஹ் இப்னு மஸ் ஊத் 'ரலியள்ளாஹுத ஆலாவும்' இரவில் மதீனாவின் வீதிகளை பார்வையிட்டு கொண்டிருந்தார்கள். அப்போது, அருகில் உள்ள வீடு ஒன்றிலிருந்து ஒரு பெண் பாடும் குரல் வந்தது. கலீபா அவர்கள் அந்தவீட்டின் கதவின் கீஹோல் வழியாக எட்டிப்பார்த்தார்கள். உள்ளே ஒரு வயதானமனிதர் தனக்குமுன் மது பாட்டிலுடன் அமர்ந்திருப்பதைக் கண்டார் மற்றும் அறையின் நடுவில் ஒரு இளம் பாடகியும் இருந்தார். அவர் அப்போது ஜன்னல் வழியாக அறைக்குள் விரைந்து நுழைந்தார். அந்த முதியவர் கூறினார்: "ஓ, நீங்கள் அமீருல் முஃ'மினீன் (விசுவாசிகளின் தலைவர்)! தாங்கள் தயவு செய்து அல்லாஹுதஆலா வின்பொருட்டு ஒருநொடி என்பேச்சைக் கேளுங்கள்?" ஹஸ்ரத் உமர் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள்," சரி. மேலே சொல்லுங்கள் என்றார்கள்.

அந்த முதியவர், "நான் தவறு ஒன்றைத்தான் செய்திருக்கிறேன் ஆனால், நீங்கள் அல்லாஹுவின் மூன்று வெவ்வேறு சட்டங்களை மீறியுள்ளீர்கள் என்றார். ஹஸ்ரத் உமர் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு மூன்று வெவ்வேறு மீறல்கள் என்ன என்று விசாரித்தபோது; அந்த முதியவர், அல்லாஹுதஆலா மற்றவர்களின் வீடுகளைப் எட்டிப்பார்ப்பதை தடைசெய்திருக்கிறான். நீங்கள் கீஹோல் வழியாக என் வீடு உள்ளே பார்த்திருக்கிறீர்கள். அல்லாஹுதஆலா அவர்களின் அனுமதியின்றி மற்றவர்களின் வீடுகளுக்குள் நுழைவதை தடைசெய்கிறான். ஆனால் நீங்கள் அனுமதி இல்லாமல் உள்ளே வந்துள்ளீர்கள். இறுதியாக, அல்லாஹுதஆலா குடியிருப்பாளர்களை வாழ்த்துவதற்காக எங்களுக்கு வீடுகளுக்கு முன் கதவு வழியாக நுழையுமாறும் கட்டளையிட்டு இருக்கிறான். ஆனால், நீங்கள் ஜன்னல் வழியாகவும் வாழ்த்து இல்லாமலும் நுழைந்திருக்கிறீர்கள் என்று கூறினார். ஹஸ்ரத் உமர் 'ரலியள்ளாஹு தஆலா அன்ஹு' நீதியுடன் மற்றும் நேர்மையுடனும் பதிலளித்தார்கள். "நீங்கள் கூறியது அனைத்தும் சரியானவை" பிறகு மன்னிப்பு கேட்டு, அவர் கண்ணீருடன் வெளியேறினார்.

எங்களுக்கு அறிவுரை வழங்கும் நபர்களைப் பற்றியும், அனைத்து முஸ்லிம் களைப்பற்றியும் எங்களுக்கு நல்ல அபிப்பிராயம் இருக்கவேண்டும். அவர்களின் அறிவுரையின் விளக்கத்தை நம்பிக்கையுடன் நாம் விளங்க வேண்டும். முஸ்லீமின் நல்லவைகளிலும் பக்தியிலும் நம்பிக்கை வைத்தல் வெகுமதிகளை வழங்கும் ஒருசெயல். ஒரு குறிப்பிட்ட முஸ்லீமை நம்பக்கூடாது என்ற முன்கணிப்பின் அடிப்படையில் அவநம்பிக்கை ஏற்படுவது உண்மையில் அவநம்பிக்கை கொள்பவரின் தளர்வான ஒழுக்கங்களின் பிரதிபலிப்பாகும். சொல்லப்படுவது என்ன என்று புரிந்துகொள்வதற்கு நாம் முயற்சிக்க வேண்டும். எங்களால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்றால் அது பற்றி நாங்கள் விசாரிக்க வேண்டும். எங்களுக்கு ஏதாவது ஒன்றை சொல்லும் ஒருவர் பற்றி தவறான கருத்தை நாம் உடனடியாக கொள்ளக்கூடாது. ஷைத்தானால் இதயத்திற்குள் கொண்டு வரப்படும் தீய ஆலோசனைகளில் மற்றவர்களை பற்றி மோசமான அபிப்பிராயத்தை (சூ-இல்சன்) தோற்று விப்பதில் ஷைத்தான் கூடியளவு வெற்றி பெறுகிறான். சூ-இல்சன் என்பது தடுக்கப்பட்டது (ஹராம்). ஒரு குறிப்பிட்ட வார்த்தை மிகவும் தீயதாக தெளிவாக ஒலித்தால் அல்லது உச்சரித்த நபரின் நாவின் தவறு அல்லது நினைவாற்றல் குறைவு என்பதாக கருத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஒருஏழை நபர் ஒரு பணக்காரரிடமிருந்து ஏதாவது கோரும்போது அவரது கோரிக்கை மறுக்கப்படுமெனில், அது இரண்டு பேர் பக்கத்திலும் கோபத்தை (**கதப்**) ஏற்படுத்தக்கூடும். வேலையில் பரபரப்பாக, அல்லது சிந்தனையில், அல்லது கவலையில், அல்லது மன உளைச்சலுடன் இருக்கும் ஒருவரிடம் கேள்வி கேட்பது அல்லது ஏதாவது சொல்வது அவரை கோபம் அடைய வைக்கலாம். அழுகிற குழந்தை அல்லது சிறுவர்கள் எழுப்பும் சத்தம் அல்லது விலங்குகளின் சத்தமும் கூட சிலருக்கு கோபத்தை ஏற்படுத்தும். இந்த இயற்கையின் மீது ஏற்படும் கோபம் மிகவும் விரும்பத்தகாதது.

இன்னும் மோசமான வகை கோபம், அடிக்கடி காணப்படுவது ஒன்றாகும் உயிரற்ற பொருட்களின் இயக்கங்களை நோக்கி காட்டப்படுகிறது. மனிதர்களின் உணர்ச்சி வசப்படுவதற்கு எடுத்துக்காட்டுகள் அதிகப்படியான பைத்தியக்காரத் தனமாக இருக்கும். அவர்கள் ஒரு கோடரியால் வெட்ட அது குறி வைத்த இடத்திலிருந்து சரியும்போது, அல்லது ஒரே வெட்டில் பிளக்காத போது, அவர்கள் வைத்திருப்பதை எறிந்து விடுவார்கள் அல்லது வெறித் தனமாக நாசமாக்கிவிடுவார்கள். உதாரணத்திற்கு எரித்து விடுவார்கள். தாங்களாகவே வெறிபிடித்து தங்கள்மீது சத்தியம் செய்து ஏதாவது செய்யும் நபர்களும் இருக்கிறார்கள். நீங்கள் வணக்கம் செய்வதில் ஏற்படும் குறைபாட்டுக்காக நீங்கள் உங்களோடு கோபப்படுவது ஒரு சிறப்பான செயல், அது ஒரு வகையான மார்க்கத்தின் மீதுள்ள ஃகைராத்; அது தவாபை உருவாக்குகிறது.

தலைவர்கள் மீது கோபம், அரசாங்கத்தின் மீது அல்லது ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லமை நோக்கி அல்லது அவர்களுக்கு இடப்பட்ட கட்டளைகளின் மற்றும் தடைகள் காரணமாக அல்லாஹ்வை நோக்கி கோபம் அடைவது மிக மோசமான கோபம். இந்த வகை கோபம் அவநம்பிக்கையை ஏற்படுத்துகிறது. ஹதீது ஷரீப் **“கோபம் (கதப்) ஒருவரின் நம்பிக்கையை களங்கப்படுத்துகிறது”** என்பது ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி

வசல்லம்’மிடம் கோபப்படுவது நிராகரிப்பை ஏற்படுத்தும் என்று காட்டுகின்றது. எவராவது தடைசெய்யப்பட்ட செயலை செய்வதைக் கண்டு கோபப்படுவது ஒரு நல்ல செயல். அது ஒருவரின் மதத்தின் மீதுள்ள ஃகைராத்தை காட்டுகிறது. ஆனால், கோபப்படும்போது ஒருவர் இஸ்லாத்தின் எல்லைகளிலிருந்து அல்லது புத்தியை(’அக்ல்) விட்டு வெளியேறக்கூடாது. ஒரு நபரை அசிங்கமான பெயரில் அழைப்பது உதாரணத்திற்கு; காஃபிர், முனாஃபிக் மற்றும் போன்றவை தடைசெய்யப்பட்டுள்ளது (ஹராம்). அந்த வகையான பெயர் சொல்லி அழைத்தவருக்கு தண்டனை கொடுப்பது அவசியமாகிறது. ஒரு பாவம் செய்யும் நபரைப் பார்த்து அதை பிரதிபலிக்கும் வகையில் முட்டாள், மடையன் என்று அழைப்பது இஸ்லாத்தின் விதிகளுக்கு எதிரானது அல்ல. இருந்தும், அப்பாவியை மென்மையான இனிமையான வார்த்தைகளை கொண்டு அறிவுரை கூறுவது நல்லது.

இனிமையான சொற்கள், ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ கூறுகிறார்கள்: **“அல்லாஹுதஅலா எப்போதும் மென்மையாக பேசக்கூடிய வர்களை விரும்புகிறான்**.” தடைசெய்யப்பட்ட செயல்களைச் செய்யும் ஒருவரை பலத்தை பிரயோகித்து நிறுத்துவது மாநில அதிகாரிகள் அல்லது பொலிஸ் படையினரின் பொறுப்பாகும். ஆனாலும் தேவையானதை விட அவரை அடிப்பது அல்லது சித்திரவதை செய்வது அடக்குமுறை (zஜூல்ம்). இது ஒரு பாவமான செயல். சட்டத்தை அமுல்படுத்தும் அதிகாரி அல்லது அரசாங்க உறுப்பினர்கள் இல்லாத நிலையில் சக்திவாய்ந்த நபர் ஒருவர் அந்த மனிதனை நிறுத்தலாம். இருப்பினும், எந்தவொரு சட்ட நடவடிக்கை மரண தண்டனை மற்றும் வீட்டைஇடிப்பது போன்றவை நீதிபதி மற்றும் அரசாங்க அதிகாரத்துக்கு மட்டுமே உட்பட்டது . ஒருவருக்கு கொடுக்க வேண்டியதை விட கூடுதல் தண்டனை கொடுப்பது zஜூல்ம் (அநீதி மற்றும் கொடுமை). அதே மாதிரி, மாநில அதிகாரிகள் ’அம்ர்-இல்-ம’ஃரூஃப்’ மற்றும் ’நஹி-இ-முன்கர்’ மீது குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கு சித்திரவதை செய்வது ஹராம் மிகவும் மோசமானது.

மென்மை(**ஹில்ம்**) கோபத்திற்கு (**கதப்**) நேர்மாறானது. ஒருவரின் கோபத்தை சமாளிப்பதை விட மென்மை சிறந்தது. மென்மை என்பதன் பொருள் கோபப்பட வேண்டாம் என்பது. இது மிகவும் புத்திசாலி என்பதற்கு அறிகுறியாகும். ’பின்வரும் ஹதீது ஷரீபில் ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ அவர்கள்கூறுகிறார்கள்:**“கோபத்தை ஏற்படுத்தும் ஒரு சம்பவத்திற்கு ‘கதப்’ பதிலாக மென்மையுடன் செயல்படுபவர்களை அல்லாஹுதஆலா நேசிக்கிறான்**”.மற்றும் **“அல்லாஹுதஆலா மென்மை யான ‘ஹில்ம்’, வெட்கம் ‘ஹயா’ மற்றும் ‘இஃfப்பத்’ உள்ளவர்களை நேசிக்கின்றான். அசிங்கமான வார்த்தைகளை புஹ்ஷ்’ பேசுபவர்களை யும் மற்றும் மற்றவர்களை துன்புறுத்தி பிச்சை எடுப்பவர்களை அவன் விரும்புவது இல்லை.”** “இஃfப்பத்” என்பது மற்றவர்களின் செல்வத்தின் மீது ஆசை வைக்காதவர்கள். “புஹ்ஷ்” என்றால் அழுக்கு மற்றும் அசிங்கமான பொருள்.

ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ அடிக்கடி கேட்கும் து’ஆ பிரார்த்தனை, **“ஓ என் ஆண்டவனே! எனக்கு அறிவு(இல்ம்), மென்மை (ஹில்ம்), பக்தி (தக்வா) மற்றும்’ ஆஃபியத்தை தந்தருள்**” என்று கேட்பார்கள்.

“இல்ம் அல்-நஃபி” அறிவின் மூன்று கிளைகளை கொண்டது: கலாம், ஃபிக்ஹு, மற்றும் அக்ஹ்லாக் என்பன. இந்த பிரார்த்தனையில் “ஆபியத்” என்பது பின்வரும் ஐந்து விடயங்களை குறிக்கின்றது. ஈமான், மற்றும் பித்’அத் இல்லாத ஈமான்; பேரழிவுகள் இல்லாதது செயல்கள் மற்றும் வணக்கங்கள்; (அனைத்து வகையான) ஷஹ்வா இல்லாத ஒரு நாஃப்ஸ்; ஹவா மற்றும் வஸ்வசா இல்லாத இதயம்; மற்றும் நோய்கள் இல்லாத உடல்.

ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ விடம் அவர்கள் ஒரு சிறந்த பிரார்த்தனை எதுஎன்று கேட்ட **போது “அல்லாஹு தஆலா விடம் ஆஃபியத்தை ’கேளுங்கள் ஈமானுக்கு பிறகு ஆஃபியத்தை விட சிறந்தது எதவுமில்லை என்று பதிலளித்தார்கள்**. “[ஒருவர் ஆபியத்தை அடைவதற்காக அதிகம் அதிகம் பிழைபொறுக்க தேடவேண்டும். அதாவது ( **இஸ்திஃபார்**[1] செய்ய வேண்டும்)]. ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள். “**அறிவு ‘இல்ம் ’மற்றும்’ சகீனா’கொண்ட நபராக இருங்கள்!. கற்றல் அல்லது கற்பித்தலின் போது மென்மையாகப் பேசுங்கள்! உங்கள் அறிவைப் பற்றி ஒருபோதும் பெருமை கொள்ள வேண்டாம்! ”** “சகீனா” என்றால், முதிர்ச்சியும் கண்ணியமும் கொண்டது. ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ பின்வரும் ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்.**"நரகத்தின் நெருப்பு இஸ்லாத்துக்கு இணக்கமாக வாழும் மற்றும் இயற்கையில் மென்மையான ஒரு நபரை எரிக்காது. மென்மையாக இருப்பது நி’மத்துகளைத் தருகிறது. ஒருவரின் கடமைகள் அல்லது வியாபாரத்தை செய்வதில் மந்தமாக அல்லது அதிகமாக இருப்பது கவனக்குறைவான நிலையை ஏற்படுத்துகிறது ‘gகஃப்லத்’,** ”மற்றும்” **மென்மையாக இல்லாத நபர் ‘ரிஃப்க்’ ஒரு பயனற்றவர் நன்மை பயப்பவர் அல்ல,** ”மற்றும் **“மென்மை ‘ரிஃப்க்’ ஒரு நபரை அலங்கரிக்கிறது, அவரது குறைபாடுகளை நீக்குகிறது**”. ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹு’ அலைஹி வசல்லம்’ இன்னொரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **“அறிவு என்பது கற்பதனால் பெற்றுக்கொள்ளப்படுகிறது. மென்மை ‘ஹில்ம்’ என்பது அதைப் பெறுவதற்கு முயற்சிப்பதன் மூலமும், கடுமையாக உழைப்பதன் மூலமும் பெறப்படுகிறது. அல்லாஹுத ஆலா பயனுள்ள விடயங்களையும் செய்ய முயற்சிப்பவர்களுக்கும் நன்மை பயக்கும் செயல் களை செய்பவர்களுக்கும் வெற்றியை வழங்குவான். தீயசெயல் களிலிருந்து தவிர்ப்பவர்களை அவன்பாதுகாப்பான்.**

## 21– வாக்குறுதியை முறிப்பது (ஃகத்ர்)

கோபத்தை ஏற்படுத்தும் விஷயங்களில் ஒன்று, ஒருவர் கொடுத்த வாக்குறுதி அல்லது சொல்லை(**ஃகத்ர்**) மீறுவது. ஒருநபர் ஏதாவது வாக்குறுதி அளிக்கும் போது, அது வாக்குறுதி (**வஃ’த்**) என்று அழைக்கப்படுகிறது. வாக்குறுதி இரண்டு நபர்களால் பரஸ்பரம் செய்யப்பட்டால் அது “**அஹ்த்**” என்று அழைக்கப் படுகிறது. ஒரு வாக்குறுதி(வஃ’த்) சத்தியத்துடன் வலியுறுத்தப்படுவது "**மீசாக்**" என்று அழைக்கப்படுகிறது. ஏதாவது ஒன்றுக்காக பரஸ்பரம் உறுதியளித்த வர்களில் ஒருவர் செய்த ஒப்பந்தத்தை மீறினால் அல்லது ஒப்பந்தத்தை மற்றவரிடம் அறிவிக்காமல் முறித்தால்; உதாரணத்திற்கு; ஒரு நாட்டின் தலைவர் நிராகரிப்பவர்கள் உள்ள அயல் நாட்டுடன் செய்து கொள்ளப்பட்ட

சமாதான ஒப்பந்தத்தை முறிப்பதற்காண தேவையை அதை அந்த அயல் நாட்டின் தலைவருக்கு அறிவிக்க வேண்டியது கடமை(**வாஜிப்**) ஆகும். முதலில்

---

[1] இஸ்திஃபாரின் பிரார்த்தனை: **"அஸ்தக்ஃபிருள்ளாஹ் அல் அளீம் அல்லதீ லா இலாஹ இல்லாஹுவல் ஹையுல் கைய்யும் வ அதூபு இலைஹி**

அவர்களுக்கு அறிவிக்காமல் ஒப்பந்தத்தை முறிப்பது(**ஃகத்ர்**) அனுமதிக்கப் படவில்லை. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"ஃகத்ரைச் செய்கிறவன் நியாயத்தீர்ப்பு நாளில் (கியாமத்) அதற்கு கடுமையாக தண்டிக்கப்படுவான்**". வாக்குறுதியை முறிப்பது (ghகத்ர்) தடைசெய்யப்பட்டுள்ளது. நிராகரிப்பவர்களுடன்(காபிர்) செய்யப்பட ஒப்பந்தத்தை (அஹ்த்) தொடர்வது அவசியமானது.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"நம்பத்தகாத ஒருவர் நம்பிக்கை (ஈமான்) இல்லாதவர்**. **"தனது ஒப்பந்தத்தை மீறும் ஒருவர் மார்க்கம் இல்லாதவர்.''** இந்த ஹதீது ஷரீfப் மற்றவர்களின் நம்பிக்கைக்கு துஷ்பிரயோகம் செய்பவர்களிடம் பூரண நம்பிக்கை இல்லாததையும் அவர்கள் அதற்கான சரியான சிகிச்சை அளிக்கப்படாவிடில் அவர்கள் ஈமானை இழப்பார்கள் என்பதையும் சுட்டிக்காட்டுகிறது.

## 22– நம்பிக்கையை மீறுதல் (ஹியானத்)

இதயத்தின் இருபத்தி இரண்டாவது நோய் "ஹியானத்". ஹியானத் செய்வது கோபத்தை(கதப்) ஏற்படுத்துகிறது. "ஹியானத்" என்பதும் தடை செய்யப்பட்டு ள்ளது (ஹராம்). அது முனாபிக் தனத்தின் அடையாளம். இதற்கு நேர்மாறானது (அமானத்) நம்பகத்தன்மை. ஹியானத் இன் பொருள்பின்வருமாறு: தன்னை மற்றவர்களுக்கு நம்பகமானவர் என சித்தரிக்கும் ஒருவர் பின்னர் இதை பொய்யாக்கும் ஒன்றைச் செய்கிறார். ஒரு முஃ'மின் என்பவர் மற்றவர்களின் நம்பிக்கையை பெற்றவர், மற்றவர்கள் அவரிடம் வாழ்வை அல்லது சொத்தை ஒப்படைப்பார்கள். அமனாத் (நம்பகத்தன்மை) மற்றும் ஹியானத் (நம்பிக்கையை மீறுதல் )என்பது பொருட்களுக்கும் சொத்துகளுக்கு மட்டுமல்ல அது பேச்சிலும் எழுத்திலும் உள்ளது.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் ஒரு ஹதீது ஷரீபில் இவ்வாறு கூறுகிறார்கள்:**"ஆலோசனை வழங்கும் ஒரு நபர் நம்பகமானவர்"** உண்மையில், மற்றவர்கள் இந்த நபர் அவர்களுக்கு உண்மையைச் சொல்வார் என நம்புகிறார்கள். அந்த கேட்கப்பட்ட விடயத்தை வேறு யாரிடமும் சொல்லமாட்டார் என நம்புகிறார்கள். கேட்கப்பட்ட கேள்விக்கு அவர் உண்மையை சொல்வது அவசியம் (வாஜிப்). ஒரு நபர் தனது சொத்தை தான் நம்பும் வேறொருவரின் பொறுப்பில் வைக்கலாம். அதேபோல், ஒருவர் அவரிடம் நிச்சயமாக உண்மையை சொல்லும் இன்னொருவருடன் கலந்தாலோசி க்கலாம். குர்ஆன் அல் கரீம் இல் சூரா ஆலஇம்ரான் 159வது ஆயத்தில்; **"நீங்கள் செய்யத் திட்டமிட்டுள்ள விஷயங்களை முன்பே மற்றவர்களுடன் கலந்தாலோசிக்கவும்"**எனக் கூறுகிறது. "மற்றவர்கள் உடன் ஆலோசனை செய்வது ஒரு கோட்டை போன்றது, இது ஒருவரை பின்னர் வருந்துவதிலிருந்து பாதுகாக்கிறது.

ஒருவர் ஆலோசிக்க விரும்பும் நபர் அவரது காலத்தின் மனிதர்கள் பற்றி, நாட்டின் சட்டங்கள், நிலைமைகள், கால நிலவரம், நேரம் பற்றி, அறிந்து வைத்திருக்க வேண்டும். இது அரசியல் மற்றும் நிர்வாகம் பற்றிய அறிவு (இல்ம் அல்-சியாசத்). மேலும், அவர் தூர நோக்குள்ளவராகவும் போதிய அறிவு பெற்ற புத்திசாலியாகவும் ஆரோக்கியமானவராகவும் இருக்கவேண்டும். ஒருவர் அவருக்குத் தெரியாத ஒன்றைச் சொல்வது அல்லது அவரது அறிவுக்கு முரணான ஒன்றை சொல்வது பாவம். அவர் இந்த விஷயங்களை தவறுதலாக சொன்னால் அது அவருக்கு பாவமாக இருக்காது. ஒருவர்மேலே குறிப்பிட்ட மற்றும் தகுதிகள் பண்புகளை வைத்திருக்காத நபருடன் ஆலோசித்தால் இரு கட்சியினரும் பாவத்தைச் செய்தவரவர். உலக மற்றும் மார்க்க விடயங்களை பற்றி மார்க்கதீர்ப்பு (பத்வா) வழங்குபவர் பொறுத்தவரை மேற்கூறிய தகுதிகள் இல்லாதவராயின் அவர் மலாயிக்கத்து மார்களால் சபிக்கப்படுவார். மற்றொரு வகையான ஹியானத் என்பது உங்களுக்குத் தெரிந்த ஒன்றைச் செய்ய வேறு யாரையாவது கட்டளையிடுவது தீங்கு விளைவிக்கும்.

[இது புகழ்பெற்ற கிதாப் ஹதீக்காவில் எழுதப்பட்டுள்ளது; அப்துள்ளாஹ் இப்னுல் மஸ்ஊத் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு கூறினார்கள் "உங்கள் மார்க்கத்திலிருந்து நீங்கள் முதலில் இழக்கும் விஷயம் நம்பகத்தன்மை (அமானத்) ஆக இருக்கும். நீங்கள் இழக்க நேரிடும் கடைசி விஷயம் 'சலாத்' தொழுகை. சிலர் தொழுவார்கள் ஆனால் அவர்களிடம் ஈமான் இருக்காது.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"யார் அவரது நண்பரை கொலை செய்கிறாரோ அவர் எனது 'உம்மத்தில் ஒருவர் அல்ல. கொலை செய்யப்பட்ட நபர் ஒரு காஃபிர் ஆக இருந்தாலும். இது உண்மைதான்.**

## 23– வாக்குறுதியை மீறுதல்-2

கோபத்தின் மற்றொரு காரணம்(கதப்) முறிந்த வாக்குறுதி. ஒரு தரப்பினரால் மட்டுமே வழங்கப்பட்ட வாக்குறுதி(வஃத்) என்று ஏற்கனவே விளக்கப்பட்டு உள்ளது. இரு தரப்பினரின் வாக்குறுதியும் ஒப்பந்தம்(அஹ்த்) என்று அழைக்கப்படுகிறது. தண்டனையின் வாக்குறுதியை "வ'இத்" என்று அழைக்கப்படுகிறது. இந்த வகையான வாக்குறுதியை நிறைவேற்றாமல் இருப்பது கருணை என்று அழைக்கப்படுகிறது. பொய் வாக்குறுதிஅளிப்பது இது தடைசெய்யப்பட்டுள்ளது (ஹராம்). இந்த வகை வாக்குறுதியைக் கடைப்பிடிக்காதது கூடுதல் பாவம் ஆகும். அத்தகைய வாக்குறுதியைக் கடைப்பிடிப்பது பொய்யின் பாவமாக இருக்கும் அது மன்னிக்கப்படக்கூடியது.

ஒரு சட்டவிரோத விற்பனை ஒப்பந்தமும் (ஃபாசிட்பே) இது போன்றது. அத்தகைய விற்பனை ஒப்பந்தத்தை ரத்துசெய்து அந்த விற்பனையை கைவிடுவது (வாஜிப்) கடமையாகும். கட்சிகள் விற்பனை ஒப்பந்தத்தை ரத்து செய்து மன்னிப்பு கோரும்போது அவர்களுடைய பாவம் மன்னிக்கப்படும். ஆனால் அவர்கள் அவ்வாறு இந்த வகை சட்டவிரோத விற்பனை ஒப்பந்தத்தை ரத்து செய்யாவிட்டால் அவர்களின் பாவம் இரட்டிப்பாகும். ஒருவரின் வாக்குறுதியை நிறைவேற்றுவது அவசியம்.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"முனாபிக் தனத்தின் மூன்று அறிகுறிகள் உள்ளன: பொய்**

**பேசுதல், கொடுத்த வாக்குறுதியை மீறுதல் மற்றும் நம்பிக்கையில் (அமானத்) மோசடி செய்தல்.** ஒருவருக்கு தனது வாக்குறுதியை அவருக்கு அப்பாற்பட்ட காரணங்களினால் வைத்திருக்க முடியாவிட்டால், அது முனாபிக் தனத்தின் ஒரு அடையாளமாக இருக்காது. மறுபுறம், ஒரு ஒப்படைக்கப்பட்ட சொத்து அல்லது ரகசியம் என்பவற்றை மீறினால் அது முனாபிக் தனமாக இருக்கும். பிரபல ஸஹீஹ் புகாரி எனும் ஹதீது கிரந்தத்தில் எழுதப்பட்டுள்ள ஹதீது ஷரீப். அம்ர் இப்னு ஆஸ் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அறிவித்து உள்ளார்கள். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' கூறினார்கள்: **"நான்கு விஷயங்கள் முனாபிக்கு தனத்தின் அறிகுறியாகும்: நம்பிக்கை துஷ்பிரயோகம்; பொய்பேசுதல்; ஒருவரின் வாக்குறுதியை கடைப்பிடிக்கா திருத்தல் ; ஒப்பந்தத்தின் மற்ற கட்சிக்கு அறிவிக்காமல் ஒரு ஒப்பந்தத்தை மீறுதல்(ஃகத்ர்); மற்றும் நீதித்துறை நீதிமன்றத்தில் உண்மையை சொல்லாமல் மறைப்பது.**

இப்னு ஹஜர் மக்கீ 'ரஹ்மத்துள்ளாஹி த'ஆலா அலைஹி அவர்கள் ஒருவரின் நோக்கத்துக்கும் அவரது வெளிப்புற நடத்தைக்கும் இடையில் இருக்கும் இடைவெளி முனாபிக் தனம் என்று வரையறுத்து கூறியுள்ளார்கள். நம்பிக்கை சார்ந்த விஷயங்களில் முனாபிக்தனம் இருப்பது அவநம்பிக்கை (குஃப்ர்) ஆகும். ஒருவரின் வார்த்தைகளில் அல்லது செயல்களில் பாசாங்குத்தனம் தடைசெய்யப்பட்டுள்ளது. நம்பிக்கை சார்ந்த விஷயங்களில் நடிப்பு மற்ற வகை நிராகரிப்புகளைவிட மோசமானது. எதிர்காலத்தில் நிறைவேற்றும் நோக்கத்துடன் ஒரு வாக்குறுதியை (வஃத்) வழங்குதல் அனுமதிக்கப்படுகிறது (ஜாயிஸ்) மற்றும் தவாப் கிடைக்கும். இந்த வகையான வாக்குறுதியை பூர்த்தி செய்வது "வாஜிப்" அல்ல, ஆனால் அது "முஸ்தஹப்." அதை நிறைவேற்றாமல் இருப்பது மக்ரூஹு தன்சீஹி.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறினார்கள்: "**ஒருவர் நிறைவேற்றும் நோக்கத்துடன் கொடுத்த வாக்குறுதியை அவரால் நிறைவேற்ற முடியாவிட்டால் அது பாவமாக மாட்டாது"**.

"ஹனபி மற்றும் ஷாபி'ஈ அறிஞர்கள் ரஹ்மாதுள்ளாஹி தஆலா அலைஹிம் இன் போதனைகளின்படி எந்தவொரு நிர்ப்பந்தம் 'உத்ர் (இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்ட நிர்ப்பந்தம், காரணம்) இல்லாமல் பரஸ்பர ஒப்பந்தத்தை (அஹ்த்) முறிப்பது மக்ரூஹ், உத்ர் இருக்குமானால் அதைச் செய்ய அனுமதிக்கப்படுகிறது. இருந்தும், உங்களிடம் 'உத்ர்' இருந்தால். ஆனாலும், நீங்கள் அதை முறிக்க விரும்பினால், அதை சம்பந்தப்பட்ட தரப்பினருக்கு தெரிவிக்கவேண்டியது(**வாஜிப்**) அவசியம். ஹன்பலி அறிஞர்களின் போதனை களில் கூறியபடி, வாக்குறுதியை நிறைவேற்றுவது வாஜீப், நிறைவேற்றாமல் விடுவது தடைசெய்யப் பட்டுள்ளது (ஹராம்) . இது **தக்வா**வின் அடிப்படையில் நான்கு மதுஹபினாலும் அனுமதிக்கப்பட்ட முறையில் ஏதாவது செய்வது ஸஹீஹ்.

ஒவ்வொரு முஸ்லிமும் நான்கு மதுஹபுகளில் ஏதேனும் ஒன்றில் உள்ள எல்லா முஸ்லிம்களையும் நேசிப்பது வாஜீப் மற்றும் அவர்களுக்காக பிரார்த்திப்பது நான்கு மதுஹபுகளுக்கிடையே அனைத்து வகையான வேறுபாடுகளை

தவிர்க்க உதவும். இருப்பினும், நான்கு மதுஹபுகளை சேர்ந்த அனைத்து அறிஞர்களும் ஒருமனதாக ஒரு **தல்பிக்** செய்வதை அனுமதிக்கவில்லை**.**

**தல்பிக்** என்றால் நான்கு மதுஹபுககளிலிருந்து சில செயல்களை தெரிவு செய்து வணக்கம் செய்வதற்கு ஒரு எளிதான வழியை உருவாக்குதல். அதன் மூலம் செய்யப்படும் செயல் நான்கு மதுஹபுகளிலும் பிரயோசனமற்றதாகி விடும். இருப்பினும், ஒரே மதுஹபில் உள்ள எல்லா ருக்சாக்களையும் (எளிதான வழிகள் இணைத்து வழிபாட்டு நடவடிக்கைகளை செய்வது சஹிஹ் (செல்லுபடியாகும்) ஆகும்.

[ஒரு குறிப்பிட்ட வழிபாடு அல்லது ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்ய, ஒரு முஸ்லீம் முதலில் நான்கில் ஒரு மதுஹபின் விதிகளை பின்பற்ற விரும்ப வேண்டும். பின்னர் அந்த விதிகளின்படி செயல்பட வேண்டும். நான்கு மதுஹபுகளும் அமலை செய்வதற்கு சுலபமான வழியைக் கற்பிக்கிறார்கள், இது '**ருஹ்சத்**' என்று அழைக்கப்படுகிறது, மற்றும் ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்வதற்கான கடினமான வழி '**அஸிமத்**' எனப்படும்.

ஆரோக்கியமான மற்றும் திறமையான நபர் கடினமானதை விரும்புவது நல்லது. (**'அஸிமத்**), ஏனென்றால் கடினமான ஒன்றைச் செய்வது நப்சுக்கு மிகவும் தாங்க முடியாதது, மிகவும் துன்பகரமான, மற்றும் அதிக ஆர்வ குறைவி உண்டாகுவது. வழிபாடுகள் நப்ஸை அடக்குவதற்கும் படிப்படியாக அதன் வலுவை குறைக்கும் நோக்கத்திற்காக கட்டளையிடப்பட்டது. மனித நஃப்ஸ், அதன் உரிமையாளருக்கும் அதை படைத்த அல்லாஹ்வுக்கும் எதிரானது. அதன் மூலம் அதன் ஊசட்டத்திலிருந்து இருந்து தடுக்கிறது. ஆனாலும், முழுமையாக அதை அழிப்பது சாத்தியமற்றது, ஏனென்றால் அது உடலுக்கு சேவை செய்கிறது. இது ஒரு முட்டாள்தனமான மற்றும் அறிவற்ற வேலைக்காரன்.

பலவீனமான அல்லது நோய்வாய்ப்பட்ட நபர் அல்லது ஒரு கடினமான நிலையில் இருக்கும் நபர் வணக்கங்களை அல்லது செயல்களை கைவிடு வதைவிட, வழிபாட்டை செய்வதற்கு இலகுவான (ருஹ்சத்) வழியைப் பயன்படுத்த வேண்டும். உண்மையில், ஒரு குறிப்பிட்ட வழிபாட்டைச் செய்வது நடைமுறையில் சாத்தியமில்லை என்றால் ஒருவரின் சொந்த மதுஹபில் உள்ள வசதிகளை (**ருஹ்சத்**) பயன்படுத்துவதன் மூலம் அல்லது மற்ற மூன்று மதுஹபுகளில் ஒன்றைப் பின்பற்றுவதன மூலம் வழங்கப்பட்ட வசதிகளைப் பயன்படுத்துதல் அனுமதிக்கப்படுகிறது

## 24 மற்றவர்கள் மீது தவறான அபிப்பிராயம் கொள்வது(சூ-ஜான்)

ஒருவரின் பாவங்கள் மன்னிக்கப்படாது என்று கருதுவது அல்லாஹுதஆலா வை மோசமான அபிப்பிராயம் **சூ-ஜான்** கொள்வதை போன்றது. இன்னும், எல்லா விசுவாசிகளும்(மு'மின்கள்) பாவிகள் என்று அபிப்பிராயம் கொள்வது. அதாவது விசுவாசிகளுக்கு எதிராக சூ-ஜான் செய்வதாகும். சூ-ஜான் என்பது தடைசெய்யப்பட்ட (ஹராமான) செயல். ஒருவர் தடைசெய்யப்பட்ட செயலைச் செய்வதைப் பார்த்தவுடன் அவருக்கு எதிராக வெறுப்பு கொள்வது அல்லது அவர் தடைசெய்யப்பட்ட செயல்களைச் செய்துள்ளார் என்பதைக் அறிந்து அவரை வெறுப்பது சூ-ஜான் ஆகாது. மாறாக, இது அல்லாஹுத ஆலாவின் பொருட்டு எடுக்கப்பட்ட வெறுப்பு(புஃக்த் அல்-பில்லாஹ்). இதற்கு தவாப் உண்டு. ஒரு முஸ்லீம் மற்றொரு முஸ்லீம் (சகோதரர்) தவறு செய்வதைப்

பார்க்கும்போது அவர் அதை நல்ல முறையில் விளக்க முயற்சிக்க வேண்டும் (ஹுஸ்ன் அல்-ஜான்) மற்றும் அந்த செயலை அவர் மீண்டும் செய்வதிலிருந்து அவரைக் காப்பாற்ற முயற்சிக்க வேண்டும். ஒரு எதிர்மறை சிந்தனை இதயத்திற்கு வந்தாலும் அது நீண்ட காலம் இல்லாதிருப்பின் அது சூ-ஜான் ஆகாது. ஒரு வலுவாக இதயத்தில் வளரும் எதிர்மறையான சூ-ஜான் ஆக இருக்கும்.

குர்ஆன் அல்-கரீமில் சூரா "ஹுஜுராத்" இன் பன்னிரண்டாவது ஆயத்தில்: **"விசுவாசிகளே! (முடிந்தவரை) சந்தேகத்தை தவிர்க்கவும்; சில விடயங்களில் சந்தேகம் ஒரு பாவம்: ..."** ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறினார்கள்:" **சூ-ஜான் வேண்டாம். சூ-ஜான் தவறான முடிவுகளை ஏற்படுத்துகிறது. மற்றவர்களிடம் தனிப்பட்ட விவகாரங்களை அலச வேண்டாம்; மற்றவர்களின் தவறுகளை கவனிக்கவேண்டாம்;. மற்றவர்களுடன் வாக்குவாதம் செய்ய வேண்டாம்; மற்றவர்களிடம் பொறாமைப்பட வேண்டாம். ஒருவருக்கு எதிராக பகைமை வேண்டாம்; மற்றொருவரை பற்றிகோள் பேச வேண்டாம்; ஒருவரை ஒருவர் சகோதரர்கள் போல் நேசிக்கவும்; ஒரு முஸ்லீம் மற்றொரு முஸ்லிமின் சகோதரர். எனவே, ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லீமை வெறுக்க மாட்டார்; அவர் அவருக்கு உதவுவார். அவர் அவரை இழிவுபடுத்த மாட்டார்;** ஒரு முஸ்லிம் மற்ற முஸ்லிமை கொலை செய்வது ஹராம் தடைசெய்யப்பட்டுள்ளது.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம்' ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிரார்கள்: **"ஒரு முஸ்லீம் மற்றொரு முஸ்லீமின் உயிர், சொத்து அல்லது மரியாதையை தாக்கமாட்டார். அல்லாஹு தஆலா உங்கள் உடலின் வலிமை அல்லது அழகைப் பார்ப்பதில்லை. உங்கள் செயல்களையும் பார்ப்பதில்லை. ஆனால் அவர் உங்கள் இருதயங்களைப் பார்க்கிறான்.**" அல்லாஹு தஆலா இதயங்களில் நேர்மையையும் அவன் மீது பயத்தையும் பார்க்கிறான். உங்களின் செயல்கள் வணக்கங்கள் ஏற்றுக்கொள்ளப் படவும், அதற்கான தவாப்களை பெறவும் அவைகள் தேவையான நிபந்தனைகளை பின்பற்றி மற்றும் சரியான நோக்கம் (அல்லாஹு தஆலாவுக்காக) இக்ஹ்லாசுடன் மிகுந்த கவனத்துடனும் செய்யப்பட வேண்டும்.

இது இல்ஹாது, (அவதூறு ஒருவர் இஸ்லாத்திலிருந்து வெளியேற காரணமாகிறது) ஒரு மனிதனின் ஒருவணக்க வழிபாடு அவரது நோக்கத்தை கருத்தில் கொள்ளாமல் ஏற்றுக்கொள்ளப்படும்(சஹிஹ்) என்று கூறுவது ஒரு அவதூறாகும். இது இல்ஹாத். அப்படி கூறும் ஒருவர் சிந்தீக் ஆக இருக்கும். "அல்லாஹு தஆலா உங்கள் இதயங்களைப் பார்க்கிறான் அவன் நல்ல நோக்கத்துடன் செய்யும் எதையும் அவர் ஏற்றுக்கொள்வான் என்பது தரீகத்தின் அறியாத ஷைகுகளுக்கு சொந்தமானது.

[இந்த அறியாத ஷைகுகள் தங்கள் இதயங்கள் சுத்தமாக இருப்பதாகக் கூறுகிறார்கள் பின்னர் அனைத்து வகையான தடைசெய்யப்பட்ட செயல் களையும் (**ஹராம்**களை) மற்றும் அக்கிரமங்களை செய்கிறார்கள். நல்லது நோக்கத்துடன் செய்யும் எதுவும் ஒரு வழிபாட்டுச் செயலாகும், மேலும் அது உங்களுக்கு வெகுமதிகளைத் தரும் என்று அவர்கள் கூறுகிறார்கள். இந்த மேலோட்டமான பாவிகளை யாரும் விரும்பி பின்பற்றக்கூடாது. அவர்களின்

மதீனா நகரத்தின் நயவஞ்சகர்களின் தலைவர் அப்துள்ளாஹ் பின் சலுல் ஆகும். பத்ர் போரில் முஸ்லிம்களின் வெற்றியைக் கண்டதும், அவர்கள் தங்களை முஸ்லிம்கள் என்று கூறிக்கொண்டனர். ஆனால் அவர்கள் அவர்களின் இதயங்கள் வழியாக நம்பவில்லை. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் பின்வரும் தவறான செயலை சுட்டிக் காட்டினார்கள்.: **"முஸ்லிம்களிடம் சொற்களில் நட்பாக இருப்பார்கள் ஆனால் நடத்தையில் விரோதம் காட்டுபவர்கள் அல்லாஹு தஆலா மற்றும் மலக்குகளின் பார்வையில் சபிக்கப்பட்டவர்!** :

மற்றுமொரு ஹதீது ஷரீபில் இவ்வாறு கூறுகிறார்கள் : **"ஒரு நயவஞ்சகனுக்கு மூன்று அறிகுறிகள் உள்ளன: அவன் பொய் பேசுவான்;, வாக்குறுதி அளித்தால் அதை கடைப்பிடிக்கமாட்டான். அவன்மீது நம்பிக்கை வைத்தால் நம்பிக்கையை ஏமாற்றுவான்".** அவர் ஒரு முஸ்லீம் என்று சொன்னாலும் இந்த வகைநபர் முனாபிக்காக இருக்கும். அவர் தொழுகையை நிறைவேற்றினாலும் கூட.

## 33– உறுதியான சிந்தனை இல்லாமை, சிந்திப்பது இல்லை

ஒரு நபர் தனது பாவங்களைப் பற்றி சிந்தித்து மனம் திருந்தி பாவமன்னிப்பு கேட்கவேண்டும். அவருடைய வணக்கங்களை பற்றி சிந்தித்து அதற்காக நன்றி செலுத்த வேண்டும். மேலும், அவரது சொந்த உடலின் மிகவும் அழகான, கலை நுட்பமான கட்டமைப்புகள் மற்றும் அவற்றின் உறுப்புகள் ஒவ்வொன்று க்குமிடையேயான தொடர்புகள், மற்ற படைப்புகளின் கட்டமைப்பு மற்றும் தொடர்புகள் பற்றி சிந்தித்து அல்லாஹுத ஆலாவின் மகத்துவத்தை விளங்க வேண்டும். இந்த படைப்புகளினதும் மற்றவை களினதும் மொத்தமான நிலை உலகம்(ஆலம்) என்று அழைக்கப்படுகிறது.

["**ஆலம்**" மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது,' **ஆலம் அல் அஜ்சாத்**, அதாவது சடத்துவ உலகம், பௌதீக உலகம், மற்றது '**ஆலமுல் அர்வாஹ்**' அதாவது ஆன்மாக்களின் உலகம், ஆன்மீக உலகம்; மற்றது '**ஆலமுல் மிதால்**', அதாவது ஆன்மீக மற்றும் பௌதீக உலகங்களுக்கு இடையிலான உலகம். ஆலமுல் மிதால்' இருப்பின் உலகம் அல்ல. இது தோற்றத்தின் உலகம். மற்ற இரண்டு உலகங்களில் உள்ள ஒவ்வொரு இருப்புக்கும் 'ஆலமுல் மிதால்[1] இல் ஒரு தோற்றம் உள்ளது.

**ஆலமுல் அர்வாஹ்**' (ஆன்மாக்களின் உலகம்) அர்ஷையும் தாண்டியது உள்ளடக்கியது (அதாவது ஒன்பதாவது சொர்க்கத்தையும்) தாண்டியது. அவை சடமான பொருட்கள் அல்ல. அவைகளின் உலகம் **ஆலமுல் அம்ர்** என்றும் அழைக்கப்படும்.

'**ஆலம் அல் அஜ்சாத்**' சடத்துவ உலகம் இது இது ஆலம் அல் 'khகல்க்' என்றும் அழைக்கப்படுகிறது. இது இரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது. மனித குலத்தை கொண்டது '**ஆலம் அல் சக்ஹீர்**' என்று அழைக்கப்படுகிறது. மனித குலத்தைத் தவிர மற்ற அனைத்தையும் கொண்டது '**ஆலம் அல் கபீர்**' என்று அழைக்கப்படுகிறது. ஆலம் அல் கபீர் இல் உள்ள எல்லாவற்றிற்கும் ஒரு பிரதி நிதித்துவம் அல்லது மனித இனத்தின் சாயல் 'ஆலம் அல் சக்ஹீர்' இல் உள்ளது.

மனிதனின் ஆன்மீக இதயம் ஆன்மாக்களின் உலகத்திற்கு ஒரு நுழைவாயில். இந்த நுழைவாயில் காஃபிர்களின் இதயங்களில் தடுக்கப்பட்டுள்ளது அல்லது பாழாகிவிட்டது. இதன் காரணத்தால் காஃபிர்களில் ஆன்மாக்களின் உலகத்தை அறிந்தவர் இல்லை. காபிர்களுக்கு ஆன்மீக இதயம் வாழ்க்கையை பெறுவதற்காக ஆன்மாக்களின் உலகத்திற்கான அதன் கதவைத் திறப்பது ஒரே சாத்தியம், ஒரேவழி நம்பிக்கை கொண்டு ஒரு முஸ்லீம் ஆகிவிடுவதுதான்.

ஒருவிசுவாசி இந்த ஆன்மீக இதயத்தின் நுழைவாயில் வழியாக ஆன்மாக் களின் உலகத்துக்கு நுழைவதற்கு கடுமையாக முயற்சிக்க வேண்டும். அதன் பிறகு முடிவில்லாத நித்தியத்தை நோக்கி முன்னேற வேண்டும். சூஃபிஸம் பற்றிய விரிவான அறிவு (தசாவ்வுஃப்), இது இஸ்லாத்தின் போதனைகளின் முக்கியமான எட்டு கிளைகள் துறைகளில் முயற்சிகளில் ஒன்றாகும். இந்த வகை அறிவின் வல்லுநர்கள் அல்லாஹ்வின் நண்பர் (வலி) மற்றும் அறிவொளி(முர்ஷித்)அழைக்கப்படுகிறார்கள். அனைத்து "முர்ஷித்களிலும் பிரபலமானவர் இமாம் அர்-ரப்பானி அஹ்மத் ஃபாறுக்கி, 'ரஹிமாஹுல்லாஹு தஆலா அவர்கள் ஹிஜ்ரி1034இல் 1624A.D. இல் இந்தியாவில் காலமானார்.

பல்கலைக்கழகங்களில் மருத்துவம் மற்றும் விஞ்ஞானம் படிக்கும் விவேகமான வர்களுக்கு நுட்பமான கலை மற்றும் படைப்புகளில் உள்ள சமநிலையை கவனிப்பதற்கும், அவற்றிற்கிடையே உள்ள நுட்பமான தொடர்புகளை புரிந்து கொள்வதற்கும், அல்லாஹு த ஆலாவின் மாண்பு, அவனுடைய அறிவு மற்றும் சக்தியை நம்பிக்கை கொள்வதற்கு சாத்தியமில்லை. இவை அனைத்தையும் கவனித்து புரிந்துகொண்ட பிறகு நம்பிக்கை கொள்ளாதவன் ஒன்றில் ஒரு அசாதாரண, பிற்போக்குத்தனமான, அறிவற்ற மற்றும் பிடிவாதமான முட்டாள் அவரது உணர்வுரீதியான ஆசைகளைப் பின் தொடர்பவர், அல்லது அவரது நப்ஸுக்கு அடிமையான ஒருநபர், அல்லது ஒரு மகிழ்ச்சியற்ற கொடுங்கோலன் மற்றவர்களைத் துன்புறுத்துவதில் இருந்து மகிழ்ச்சியைப் பெறுபவன். ஒருவர் காஃபிர்களின் வாழ்க்கைக் கதைகளைப் படித்தால், அவர்கள் இந்த வகைகளில் ஒன்றைச் சேர்ந்தவை என்பது தெளிவாகின்றது.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் 'ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"படைப்புகளின் ஒழுங்கைப் பற்றி தியானிப்பதன் மூலம் அல்லாஹு மீது நம்பிக்கை கொள்ளுங்கள்."**

வானியல் அறிவு பூமி, சந்திரன், சூரியன் மற்றும் பிற பரலோக சடத்துவ படைப்புகளின் இயக்கங்கள், அவற்றின் சுழற்சி ,மேலும் அவற்றுக்கிடையே நுணுக்கமான கால தூர கணிப்புகள் பற்றிய அறிவு என்பன இது ஒரு நபரின் நம்பிக்கையை (ஈமானை) உறுதிப்படுத்துகிறது. மலைகள் உருவாக்கத்தில் பல நன்மைகள் மற்றும் பயன்பாடுகள், உலோகங்கள், ஆறுகள், கடல்கள், விலங்குகள், தாவரங்கள் மற்றும் நுண்ணுயிரிகள் கூட. எதுவும் ஒரு பயனற்ற நோக்கத்திற்காக உருவாக்கப்பட்டவை அல்ல. மேகங்கள், மழை,மின்னல், இடி, நிலத்தடி நீர், ஆற்றல் பொருட்கள்,மற்றும் காற்று, சுருக்கமாக, உருவாக்கப்பட்ட அனைத்து பொருட்களும் உயிரினங்களும் சில தொழில்பாடுகளையும் செயல்களையும் செய்கின்றன. எண்ணற்ற படைப்புகள், பொருட்களால் வழங்கப்படும் எண்ணற்ற சேவைகளைப் பற்றி மனிதகுலம், இதுவரை, மிகக் குறைவாகவே புரிந்து கொள்ள முடிந்தது.

உயிரினங்களைப் முற்றாக புரிந்து கொள்ளும் திறன் இல்லாத மனதிற்கு படைப்பாளனை விளங்கிக்கொள்வது சாத்தியமா?, அவனுடைய மகத்துவத்தை உணர்ந்து கொண்ட இஸ்லாமிய அறிஞர்கள் அவனது பண்புகளில் திகைப்படைந்து அவனை புரிந்து கொள்ள முடியாது என்பதை உணர்ந்ததாகக் கூறினார்கள். மூசா 'அலைஹிஸ் சலாம்' அவர்களின் விசுவாசிகளில் ஒருவர் முப்பது ஆண்டுகள் பிரார்த்தனை செய்தார். ஒரு மேகமூட்டம் அவரை சூரியனுக்கு எதிராக நிழல் கொடுத்து வந்தது. ஒரு நாள் மேகத்தைக் காணவில்லை, அதனால் அவர் சூரியனுக்குக் கீழே இருக்க வேண்டியிருந்தது. காரணம் என்னவென்று அவர் தனது தாயிடம் கேட்டபோது, அவர் ஏதேனும்

---

[1] இந்த மூன்று உலகங்கள் பற்றிய விரிவான தகவல்களுக்கு Endless bliss இன் மூன்றாவது பாசிக்கலின் ஆறாவது அத்தியாயத்தைப் பார்க்கவும், மற்றும் ஆலமுல் மிதாலை பற்றி முதல் பாசிக்கலின் முப்பத்தி ஆறாவது அத்தியாயத்தை பார்க்கவும்.

பாவங்களைச் செய்திருக்கலாம் என்று சொன்னாள். அவர் இல்லை என்று சொன்ன போது, அவரது தாயார் விசாரித்தார், "நீங்கள் வானம், பூமி அல்லது பூக்களை நீங்கள் பார்க்கவில்லையா? அவைகளைப் பார்த்தபோது, நீங்கள் அதை படைத்தவனது மகத்துவம், மேன்மையை பற்றி நினைக்கவில்லையா? என்று கேட்டார்.? "நான் அவைகளைப் பார்த்தேன், ஆனால் அவர் பதிலளித்தார். சிந்திக்கும் விடயத்தில் நான் மந்தமாக இருந்தேன்."என்றார். அப்போது அவள்,"இதைவிட பெரிய பாவம் வேறு ஏதாவது இருக்கிறதா? உடனே தவ்பாவை செய்யுங்கள். " என்று கூறினார்.

விவேகமான நபர் சிந்திக்க வேண்டிய கடமையை மறந்துவிடக் கூடாது. அவர் நாளை இறக்க மாட்டார் என்று ஏதேனும் உத்தரவாதம் உள்ளவர்கள் யாராவது இருக்கிறார்களா? அல்லாஹு த'ஆலா எந்தப் பயனும் இல்லாமல் எதையும் உருவாக்கவில்லை. இதுவரை மனிதர்கள் புரிந்துகொள்ள முடிந்த பயன்கள் இதுவரை உள்ளன. அவர்கள் புரிந்து கொள்ளாதவை அதைவிட அதிகமானவை. (இஸ்லாமிய) அறிஞர்களின் கூற்றுப்படி, நான்கு வழிகளில் சிந்திக்க முடியும். யோசித்துப் பாருங்கள் அல்லாஹு த'ஆலாவின் அழகிய கலைகளைப் பற்றி இது மனிதனுக்கு மனிதர்கள் அவனை நம்புவதற்கும் அவனை நேசிப்பதற்கும் காரணமாகிறது. வணக்கங்களுக்காக அவன் வாக்களித்த வெகுமதிகள் அந்த வணக்கங்களை செய்வதற்கு ஒருவருக்கு காரணமாகின்றன

அவனால் அறிவிக்கப்படும் தண்டனைகள் பற்றி யோசித்துப் பாருங்கள்; ஒருவர் அவனைப் பயப்படுவதற்கும் அதன் மூலம் ஒருவர் மற்றவர்களுக்கு அநீதி இழைப்பதைத் தடுக்கிறன்து. ஒருவர் அவருக்கு வழங்கப்பட்டுள்ள அனைத்து நிஃ'மத்துகளையும் பொருட்படுத்தாமல் அவரின் நஃப்ஸுக்கு அடிமைப்பட்டு இருப்பதையும், பாவங்களைச் செய்து, கவனக்குறைவான நிலையில் வாழ்வதையும் பற்றி யோசித்துப் பாருங்கள்; அவன் அல்லாஹு தலாவின் கீர்த்திக்கு அவமரியாதையை ஏற்படுத்துகிறான். அல்லாஹுதஆலா பூமியை யும் வானத்தையும் கவனிப்பவர்களையும் அவற்றிடமிருந்து படிப்பினைகள் பெறுவோர்களையும் நேசிக்கின்றான்.

ஒரு ஹதீது ஷரீபில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது: **"வேறு எந்த வழிபாட்டு முறையும் தியானம் மாதிரி அவ்வளவு மதிப்புமிக்கது அல்ல**. மற்றொரு ஹதீது ஷரீபில் இவ்வாறு கூறுகிறது: **"ஒரு கணம் தியானம்**

**செய்வது அறுபது ஆண்டுகளின் வணக்கத்தை விட மிகவும் பயனுள்ளதாக இருக்கும்."** இமாம் அல் கஸ்ஸாலி ரஹ்மாதுள்ளாஹி தஆலா அவர்களின் பாரசீக மொழியில் எழுதப்பட்ட **கீமியாஅஸ் ஸ'ஆதத்** எனும் புத்தகத்தில் தகஃப்புர் (தியானமும் சிந்தனையும்) என்பதை பற்றி நீண்ட விரிவுரைகள் எழுதப்பட்டுள்ளன.

## 34– முஸ்லீம்கள் மீது சாபமிடுதல்

இரண்டு ஹதீது ஷரீபுகள் பின்வருமாறு கூறுகிறது: **"உங்கள் மீது அல்லது உங்கள் சந்ததியினரின் மீது தீங்கு விளைவிக்கும் சாபங்களை உச்சரிக்க வேண்டாம். நீங்கள் பெறுவதற்கு அல்லாஹுதஆலா முன்னரே தீர்மானித் தவற்றில் அவனுடைய நிஃ'மத்துகள் அதிகரிப்பதற்கு பிரார்த்தியுங்கள்". "உங்கள்மீது உங்கள் பெற்றோர்கள் அல்லது ஒடுக்குபவர்கள் மீது ஒடுக்கப் பட்டவர்கள் இடும் சாபங்கள் (அல்லாஹு தஆலாவினால்) நிராகரிக்கப் படமாட்டாது".** ஒரு முஸ்லீம் காஃபிராக மாற வேண்டும் என்று பிரார்த்திப்பவர் காபிராக மாறுவார். அடக்குமுறைகளை மேற்கொள்ளும் ஒருவர், காபிராக இறக்க வேண்டும் அவர் முடிவற்ற தண்டனையை அனுபவிக்க வேண்டும் என்று விரும்புபவர் அவ்வாறு காபிராக மாட்டார். குர்ஆன் அல்-கரீம் மூஸா அலைஹிஸ் ஸலாம் இது போன்றதை செய்தார் என்று அறிவிக்கின்றது.

இமாமுல் அஃ'லம் அபுஹனிஃபா 'ரஹிமாஹுள்ளாஹு தஆலா' வேறொருவர் காபிர் ஆக வேண்டும் என்று விரும்புவது நிராகரிப்புக்கான ஒரு காரணத்தை ஏற்படுத்தும் என்று கூறியுள்ளார்கள். ஒருவரின் அடக்குமுறையாளரைத் தவிர வேறு ஒருவர்மேல் சாபத்தை உச்சரிப்பது தடைசெய்யப் பட்டுள்ளது (ஹராம்). அதிதீவிரமாக அநீதி விளைவிக்கும் அடக்குமுறையாளரின் மீது ஒரு சாபத்தை உச்சரிக்க அனுமதிக்கப்படுகிறது. அனுமதிக்கப்பட்ட எதிர் விளைவு மட்டும் செய்ய வேண்டும். 'உத்ர்' (அதாவது காரணம்) அனுமதியளிக்கின்றது. அநீதி இழைத்த ஒருவர் மீது சாபமிடாது நீங்கள் பொறுமையாக இருப்பது மிகவும் சிறந்தது; மன்னிப்பதே மிகச்சிறந்தது. எந்த ஒரு காஃபிருக்கும் அல்லது ஒரு இஸ்லாமிய அரசின் முஸ்லிம் அல்லாத குடிமகனுக்கு "உங்களுக்கு அல்லாஹ் நீண்ட ஆயுளைக் கொடுக்கட்டும்" என்று சொல்வது அனுமதிக்கப்படவில்லை. பின்வரும் நோக்கங்களுடன் அத்தகைய பிரார்த்தனை செய்ய அனுமதி க்கப்படுகிறது, எ.கா., அவர் ஒரு முஸ்லீமாக மாறுவதற்காக அல்லது அவர் ஆக வேண்டும் என்பதற்காக அல்லது அவரது வரிகளை செலுத்த வேண்டும், இதனால் முஸ்லிம்கள் அதிக சக்திவாய்ந்தவர்களாக மாறுவார்கள் என்பதற்காக. ஒரு காஃபிரை, ('சாலாமுன் அலைக்கும்)'என்று பயபக்தியுடன் சொல்வதன் மூலம் வாழ்த்தும் நபர் , ஒரு காஃபிராக மாறுகிறார். ஒரு காபிர் மீது பக்தியை மரியாதையை கொடுக்கும் எந்த வார்த்தையும் சொல்வது குப்ரை உண்டாக்கும். உதாரணமாக, ஒரு காஃபிரிடம் "என் எஜமான்" என்று சொல்வது அவநம்பிக்கையை ஏற்படுத்துகிறது.

**கல்லறையில் உள்ள மலக்குகள் உன்னை,**
**"நீ ஒழுங்காக வணங்கினாயா என்று கேள்வி கேட்க?**
**இறந்தவுடன் பாதுகாப்பை அடைவீர்கள் என்று நினைக்கிறீரா?**
**கவனித்துக்கொள், வேதனை உங்களுக்காக காத்திருக்கிறது! "**

## 35– முஸ்லீம்களுக்கு பொருத்தமற்ற பெயர்களை வைப்பது

ஒரு முஸ்லீமுக்கு முறையற்ற பெயர்களைக் கொடுப்பது அல்லது மற்றவர்கள் வழங்கிய முறையற்ற பெயர்களைக்கொண்டு ஒரு முஸ்லீமை அழைப்பது அனுமதிக்கப்படவில்லை. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் குறிப்பிடுகிறார்கள்: **"ஒரு முறையற்ற பெயரைக் கொண்ட நபர் அதை நல்ல பெயராக மாற்ற வேண்டும்"** எடுத்துக்காட்டாக, 'ஆசியா' என்ற பெயரை 'ஜமீலா' என்று மாற்ற வேண்டும். முஸ்லிம்களுக்கு நல்ல பெயர்களைக் கொடுப்பது அனுமதிக்கப்படுகிறது.

குழந்தைகளுக்கு ரஷீத் மற்றும் அமீன் போன்ற புகழ்பெற்ற பெயர்களை வழங்கக்கூடாது. முஹியித்தீன் அல்லது நூருத்தீன் போன்ற கற்பனையான மற்றும் 'பித்'அத்' தான பெயர்களால் அழைப்பது மக்ரூஹ்வான செயல். பாவிகள், அறியாத மூடர்களை மற்றும் முனாபிக்குகளை இந்த வகையான பெயர்களைக் கொண்டு அழைப்பது நல்லதல்ல. இப்பெயர்கள் புகழ்பெற்றவை பாராட்டத்தக்கவை. அவற்றில் உருவகமாக துணைப்பிரிவுகளாக அவற்றைப் பயன்படுத்தவும் முடியாது. சிலர் இஸ்லாமிய அறிஞர்கள் அத்தகைய பெயர்களை உங்கள் குழந்தைகளு க்கு கொடுப்பதன் நியாயத்தன்மைக்கான தங்கள் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். பக்திக்கு புகழ்பெற்ற அறிஞர்களுக்குரிய இந்த பெயர்களை அவற்றின் உள்ளார்ந்த அர்த்தங்களு டன் குழந்தைகளுக்கு வைக்கும்போது அவர்கள் நற்பலனை அடைய வேண்டும் என்பதற்காக பயன்படுத்துவது அனுமதிக்கப்பட்டது

புகழ்பெற்றஅறிஞர் இப்னுஆபிதீன் 'ரஹிமஹுல்ளாஹு தஆ'லா அன்ஹு' அவர்கள் **ரத்துல் முஹ்தார்** என்னும் அவர்களின் நூலின் ஐந்தாவது பாகத்தில் குறிப்பிடுகிறார்: முஸ்லிம் குழந்தைகளுக்கு மிகச்சிறந்த மற்றும் பொருத்தமான பெயர்கள் அவற்றின் சிறந்த ஒழுங்கு படுத்துதலில் முதலாவது அப்துல்லாஹ் ,பிறகு அப்துர்ரஹ்மான் ஆதன் பிறகு முஹம்மத் அதன் பிறகு அஹமத் அதன் பிறகு இப்ராஹீம் என்பன. அல்லாஹ்வின் நாமங்கள் அலி, ரஷீத், அஸீஸ், என்பவற்றை வைப்பதற்கு அனுமதி உள்ளது. ஆனால் இப்பெயர்கள் அதற்குரிய மிகபக்தியுடன் அழைத்தல் வேண்டும். இந்த பெயர்களை தெரிந்து கொண்டு அவற்றை அவமரியாதை செய்வது குப்றியத்தை உண்டாக்கும். உதாரணத்திற்கு அப்துல் காதிர் என்பதற்கு பதிலாக அப்துல் கொய்துர், அல்லது ஹசன் என்பதற்குக்கு பதிலாக ஹசோ என்பது இப்ராஹீம் என்பதற்கு பதிலாக இபோ என்பது அந்த பெயர்களை தாழ்த்தி பேசுவதாகும். இருந்தபோதிலும், ஒருவருக்கு இப்படி தாழ்த்தும் நோக்கம் இல்லாமல் இப்படி பெயர்களை மாற்றி அழைப்பது குப்ரை உண்டாக்காது, அப்படி அழைக்காமல் இருப்பது நலம் ஏனெனில் அது குப்ருக்கு அண்மையில் உள்ளது. ஒரு குழந்தை பிறந்த உடன் இறந்தால் அதற்கு ஒரு பெயரைக் கொடுக்காமல் அதை அடக்கம் செய்யக்கூடாது. 'அப்துன்னபி என்ற பெயர்கூட அனுமதிக்கப்படுகிறது, அதை பயன்படுத்தாமல் இருப்பது நல்லது.

ஹஸரத் சையித் அப்துல்ஹகீம் அர்வாஸி 'ரஹிமாஹுல்ளாஹு தஆலா' அவர்கள் ஒவ்வொரு பிற்பகல் (அசர்) தொழுகைக்கு பிறகு செவ்வாய், வியாழன் மற்றும் வெள்ளிக்கிழமைகளில் இஸ்தான்புல்லில் உள்ள பயாசிட் மசூதியில் ஹிஜ்றி 1362 கமரி, [1943 ஏ.டி.] ஆண்டில் அவர் இறக்கும் வரை இருபத்தைந்து ஆண்டுகள் கல்வி கற்றுக்கொடுத்தார்கள். தனது ஒரு பிரசங்கத்தின் போது அவர் இவ்வாறு கூறினார்கள்: "ஒரு குழந்தைக்கு அவரது பெற்றோர் மீது

மூன்று உரிமைகள் உள்ளன: பிறந்த பின் ஒரு முஸ்லீம் பெயரைக் கொடுப்பது; அவருக்கு வாசிப்பு, எழுத்து, அறிவு (இல்ம்) என்பவற்றை கற்றுக்கொடுப்பது, அறிந்து கொள்ளும் வயது வந்ததும் கைவினைகள் தொழில்களை கற்றுக் கொடுப்பது; அவர் பருவமடைதலை எட்டும்போது அவருக்கு திருமணம் செய்துகொடுப்பது.

ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் சில சீரழிந்த மக்கள் நெறிமுறையற்ற முறையில் வளர்க்கப்பட்டு போலி டிப்ளோமாக்கள் மற்றும் அறிவார்ந்த பட்டங்கள் வழங்கப்படுகிறது பின்னர் இஸ்லாமிய நாடுகளுக்கு அனுப்பப்படு கின்றனர். இந்த அறியாத நிராகரிப்பாளர்கள் உயர்நிலைப் பள்ளிகளுக்கு ஆசிரியர்களாக அல்லது பேராசிரியர்களாக பல்கலைக்கழகங்கள் நியமிக்கப் படுகிறார்கள். அவர்கள் அவர்களின் பதவி நிலைகளைக் கொண்டு முஸ்லிம் குழந்தைகளை சிக்க வைக்கின்றனர், அவர்களை மார்க்கமற்றவர்களாகவும் மற்றும் மதுஹபு அற்றவர்களாகவும் மாற்றிவிடுகிறார்கள். அவர்களால் மனமாற்றம் செய்யப்பட்ட இந்த குழந்தைகள் எளிதில் துரோகிகள் மற்றும் கொலைகாரர்கள் ஆகிவிடுகின்றார்கள். தங்கள் பிள்ளைகளை இந்த பள்ளி களுக்கு அனுப்பும் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை தங்கள் கைகளால் நரகத்திற்கு வீசுகிறார்கள்.

## 36– மன்னிப்பை நிராகரித்தல்

ஒரு முஸ்லீம் முன்வைத்த மன்னிப்பதற்கான ஒரு காரணத்தை நிராகரிப்பது மக்ரூஹ்[1]. ஒரு ஹதீது ஷரீபில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது:“**உங்கள் முஸ்லீம் சகோதரனால் காட்டப்பட்ட மன்னிப்பை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பது பாவம்**”. மன்னிப்பை ஏற்றுக்கொள்வதும் தவறுகளை கவனியாதிருப்பதும் அல்லாஹ்வின் பண்புகளில் உள்ளது. அல்லாஹுு தஆலா தன்னுடைய இந்த பண்புகளை நடைமுறைப் படுத்தாது இருப்பவர்களுடன் கோபம் கொள்கிறான். அவர்களை தண்டிப்பான். மன்னிப்பு கேட்பதற்கு மூன்று வழிகள் உள்ளன; முதல்வழி மண வருத்தத்துடன், “நான் ஏன் இதை செய்தேன், அல்லது இந்த காரணத்திற்காக செய்தேன் என்று விளக்கி கூறுவது.

இரண்டாவது வழி மன்னிப்பு கேட்பது, “நான் அவ்வாறு செய்திருக்ககூடாது அதை விரும்பவில்லை என்று அல்லது அவ்வாறு செய்தேன், ”அல்லது” ஆம், நான் அவ்வாறு செய்தேன், ஆனால் நான் மீண்டும் அவ்வாறு செய்ய மாட்டேன் என்பது.” மூன்றாவது நீங்கள் செய்ததை மறுப்பதே வழி. “நான் அதை செய்தேன், ஆனால் நான் இனிமேல் செய்ய மாட்டேன் ”என்பது தவ்பாவாக இருக்கும். ஒரு விசுவாசி, ஒரு குற்றம் செய்தவர் மன்னிப்பு கேட்கும்வரை காத்திருப்பார். நயவஞ்சகர்கள் மற்றவர்களின் தவறுகள் அம்பலப்படுத்த பட வேண்டும் என்று விரும்புகிறார்கள்.

ரசூலுள்ளாஹ் ‘சல்லள்ளாஹுு’ அலைஹி வசல்லம்’ அவர்கள் ‘ஒரு ஹதீது ஷரீபில் குறிப்பிடுகிறார்கள்: **“நீங்கள் கற்புடன் இருக்க வேண்டும்**. **அசிங்கமான செயல்களை செய்ய வேண்டாம். மேலும், உங்கள் மனைவி களை கற்புள்ளவராக உருவாக்குங்கள்.** மேலும், **“நீங்கள் தூய்மையான வராக இருந்தால், உங்கள் மனைவிகளும் கூட கற்புடன் இருப்பார்கள். நீங்கள் உங்கள் பெற்றோரிடம் அன்பு காட்டினால், உங்கள் பிள்ளைகளும் உங்களிடம் அன்பு காட்டுவார்கள். மற்றொரு முஸ்லீமின் மன்னிப்பை**

**ஏற்றுக்கொள்ளாத நபர் மறுமையில் 'ஆகிரத்தில்' கவ்தர் தடாகத்தில் இருந்து தண்ணீர் குடிக்க மாட்டார்."**

இந்த ஹதீது ஷரீப்; தனது முஸ்லீம் சகோதரர் ஒரு தீய செயல் செய்ததை அறியாத முஸ்லீம், மற்றும் அவர் கோரும் மன்னிப்பும் பொய்யானது என்று அறியாத முஸ்லிம்பற்றி கவலை கொண்டுள்ளது. அவரது காரணத்தை நிராகரிப்பது, மற்றொரு முஸ்லிமை பற்றி 'சூ-சான்' என்று பொருள். அவர் பொய் சொல்கிறார் என்பதை நீங்கள் அறிந்தும் அவரது காரணத்தை ஏற்றுக்கொள்வது அவரை மன்னிப்பது என்று பொருள்படும். அத்தகைய சந்தர்ப்பங்களில் மன்னிப்பது கட்டாயம் (வாஜிப்) இல்லை;ஆயினும் இது ஒரு சிறப்பான செயல் (முஸ்தஹப், நன்மையானது.)

---

[1] நபி 'ஸல்-அல்லாஹு' அலைஹி வசல்லம் 'அவர்களால் விரும்பப்படாத செயல்

## 37– குர்ஆன் அல்-கரீம் பற்றி பிழையான விளக்கம்

"தஃப்ஸீர்" என்பது ஆராய்வது மற்றும் விளக்குவது என்று பொருள். இது தெரிவிப்பதற்கு மற்றும் விளக்குவதற்குரிய ஒரு செயல்முறை. "த'வீல்" என்றால்' பாராயணம்' அல்லது 'ஓதுவது'. "தஃப்ஸீர்" என்பது ஒரு கருத்தை கொடுப்பது. "த'வீல்" என்பது பல சாத்தியமான அர்த்தங்களிலிருந்து தெரிவு செய்வது." உங்கள் தனிப்பட்ட கருத்துக்களை தஃப்ஸீர் என்ற பெயரில் கூறுவது அனுமதிக் கப்படவில்லை. ரிவாயத் (அறிக்கையிடல், பரிமாற்றம், கூறுவது) என்பது அதன்மீது தப்சீரை உருவாக்குவதற்கு அடித்தளம் போன்றது. த'வீலில் ஆதிக்கம்செலுத்தும்காரணி திராயத்(தனிப்பட்டபுரிதல், அறிவுசார் நுணுக்கம்).

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் 'ஒரு ஹதீது ஷரீபில் குறிப்பிடுகிறார்கள்:**"குர்ஆன்அல்-கரீமுக்கு தனது தனிப்பட்ட கருத்துக் களுடன் விளக்கும் ஒரு நபர் அவரது விளக்கம் சரியானதாக இருந்தாலும் கூட கிட்டத்தட்ட பிழையில் இருக்கிறார்."** அல்லாஹு த'ஆலாவின் வார்த்தையை பகுத்தறிவு அர்த்தங்களை கொண்டு கீழிறக்குவது மிகவும் தவறானது. ஒரு சிறு அர்த்தத்திற்குள் முன்வைக்கப் படும் விளக்கங்கள் மொத்தமாக முழுமை போன்ற சில உயர் மட்ட தகுதிகள் இல்லாதவை.

ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்களிடமிருந்து சஹாபாக்கள் ரலியள்ளாஹு தாலா அன்ஹும், மற்றும் தப்ஸீரின் உஸுல் முறையில் தேர்ச்சி பெற்ற அறிஞர்களின் பல்வேறு தப்சீர்கள், மற்றும் குறைசிகளின் மொழிவழக்கு வாய்மொழி மற்றும் இலக்கிய நடைகள் உருவக சொற்றொடர்,முஜ்மல் (சுருக்கமான) மற்றும் முஃபஸ்ஸல், விரிவான விவரிப்பு கள் மற்றும் இடையே வரையறுக்கும் அறிவியல் திறன். பொதுவான மற்றும் குறிப்பிட்ட அர்த்தங்கள், காரணங்கள் மற்றும் சந்தர்ப்பங்கள் பற்றிய விழிப்புணர்வு, ஒவ்வொரு ஆயத்-கரீமின் வெளிப்பாடு, நாசிக் (ரத்து செய்தல்) ஆயத்துக்கள் மன்சூக் (ரத்து செய்யப்பட்டவை)பற்றிய ஆழமான ஆராய்ச்சி இருக்கவேண்டும். "தஃப்ஸீர்" என்பது அல்லாஹு தஆலாவின் வார்த்தையை, அவன் அந்த வார்த்தையை கொண்டு என்ன பொருள் கொள்கின்றான் என்பதை புரிந்து கொள்ளும் திறன் ஆகும்.

ஒருவரின் விளக்கம் அவரின் சொந்த கருத்தின்படி சரியாக இருந்தாலும், சரியான முறையை பின்பற்றுவதன் மூலம் பெறப்படவில்லை ஆயின் அது தவறானது. ஒருவரின் விளக்கம் ஒருவரின் சொந்த கருத்துப்படியும் சரியானதல்ல என்றால், இந்த விஷயத்தில் அது அவநம்பிக்கையை ஏற்படுத்துகிறது. அதேபோல் ஒரு ஹதீது ஷரீபை அது ஸஹீஹ்[1] அல்லது பொய்யானது என்பதை நிச்சயமாக அறியாமல் மேற்கோள் காட்டுவது நீங்கள் தற்செயலாக சஹீஹானதை மேற்கோள் காட்டியிருந்தாலும் கூட பாவமாகும். இந்தளவு திறன் உள்ள ஒரு நபருக்கு ஹதீது சரிபை படிக்க அனுமதிக்கப்பட வில்லை. ஹதீது ஷரீபை ஹதீது கிதாபுகளிளிருந்து மேற்கோள் காட்டுபவர் ஒரு ஹதீதுக்கலை அறிஞரிடமிருந்து 'இஜாசத்' (டிப்ளோமா) பெற்றிருக்கவேண்டும்.

ஹஸரத். ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: "**ஒரு சொற்றொடரைக் கண்டுபிடித்து அது ஹதீது என்று கூறும் ஒருவர் நரகத்தில் தண்டிக்கப்படுவார்.**" தஃப்ஸீர் அறிஞர்களிடமிருந்து அவர்களின் தகுதிக்குரிய (இஜாசத்) டிப்ளோமாக்களை பெறாதவர்கள் தப்ஸீருடைய அறிஞர்கள் எழுதிய தப்ஸீரை பார்த்து குர்ஆன் ஆயத்துகளைப்பற்றி பேசவோ எழுதவோ அனுமதிக்கப்படுகிறது. குர்ஆன் அல்-கரீமை விளக்குவதற்கான தகுதிகள் கல்வி தராதரங்களை பெற்ற நபர்கள் அவ்வாறு செய்யலாம் அல்லது ஹதீது ஷரீபுகளை டிப்ளோமா இன்றி தெரிவிக்கலாம். இந்த டிப்லோமா (இஜாசத்)க்களை வழங்குவதற்கு எந்த கட்டணங்களும் பெறக்கூடாது. அதாற்கு தகுதியான ஒருவருக்கு ஒரு இஜாஸத் கொடுப்பது வாஜிப். தகுதிகளை பூர்த்தி செய்யாத ஒருவருக்கு இஜாசத் கொடுப்பது ஹராம்.

இது ஒரு ஹதீது ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **"தேவையான தகுதிகள் இல்லாதவர்கள் குர்ஆன் அல்-கரீமை விளக்குவதற்கு முயற்சித்தால் அவர்கள் நரகத்தில் வேதனைக்கு உட்படுத்தப்படுவார்கள்." "ஹதீது என்ற பெயரில் எதையாவது அறியாமல் சொல்பவர்கள் நரகத்தில் தண்டிக்க ப்படுவார்"**. மேலும் **"தங்களின் தனிப்பட்ட கருத்துக்களை குர்ஆனை விளக்குவது என்ற பெயரில் வெளிபடுத்துபவர்களாயின் அவர்கள் நரகத்தில் தண்டிக்கப்படுவார்".** உண்மையில், சில பித்'ஆ குழுக்கள் ஹதீது ஷரீப் மற்றும் குர்'ஆனின் ஆயத் கரீம் களையும் அவர்களின் மார்கத்துக்கு எதிரான கொள்கைகளுக்கு ஆதரவாக சேர்த்துக்கொள்கிறார்கள். அவர்களின் மதங்களுக்கு எதிரான கொள்கைகளை ஆதரிக்க. [ஷியாக்கள், வஹாபிகள் , தப்லீக் ஜமாஅத் மற்றும் மவ்துதியை மற்றும் சையித் குதுப் ஐ பின்பற்றும் வழி தவறியவர்களும் இந்தக்குழுக்களில் சில. யூசுப் அன்-நபஹானி ரஹ்மதுள்ளா ஹி தஆலா அவர்களின் '**ஷவாஹிதுல் ஹக்**' எனும் கிதாபில் தவறாக வழிநடத்தும் தஃப்ஸீர்களைப்பற்றி விரிவாக விளக்குகிறார்கள்; குர் ஆனின் ஆயத் கரீம்களுக்கு அதற்குரிய அர்த்தங்களை அவர்களின் விருப்பப்படி சுருக்குவதற்கு முயற்சி செய்பவர்கள் குர்'ஆன் வெளிப்படையான அர்த்தைதை போல் உள்ளகரமான அர்த்தத்தையும் கொண்டுள்ளது என்பது மிகைப்படுத் தப்பட்ட கூற்று என்று கூறுவதும் மற்றும் சமூக-பிராந்திய மற்றும் தற்காலிக காப்புரிமையின்கீழ் அவர்களின் சொற்பொருள் திறமைகளை தப்சீர் என்ற பெயரில் முதிர்ச்சியற்ற கையாடல்களை செய்பவர்கள் பற்றியும் குறிப்பிடு கிறார்கள். ஒட்டோமான் அறிஞர்களில் ஒருவரான நுஹ் பின் முஸ்தபா கொனாவி' ரஹிமாஹுள்ளாஹு தஆலா[ ஹிஜ்ரி 1070 ,1660 A.D. கெய்ரோவில்,

எகிப்த்தில் காலமானவர்கள்.] முஹம்மத் ஷிஹ்ரிஸ்தானி அவர்களின் **மிலால் வ நிஹால்** எனும் நூலின் தனது மொழிபெயர்ப்பில் இருந்து பின்வரும் கருத்துக்களைக் கூறுகிறார்கள்.

“இஸ்மாயிலியா” என்ற குழுவினர் இஸ்மாயில், ‘ரஹிமாஹுுள்ளாஹுுதஆலா’ வை பின்பற்றுபவர்கள் என்பதால் இவ்வாறு அழைக்கப்படுவதால் அவர்கள் இவ்வாறு அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் இமாம் ஜஃபார் அஸ் ஸாதிக் ‘ரஹிமாஹுுள்ளாஹுுத ஆலா’வின் மூத்தமகன். அவர்கள் பாத்தினியா குழுவினர் என்றும் அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் குர்’ஆன் அல் கரீம் வெளிரங்கமான அர்த்ததைபோல் உள்ரங்கமான(**பாத்தின்**) பொருளையும் கொண்டுள்ளது என்று கூறுபவர்கள். அவர்கள் கூறுகிறார்கள் குர்’ஆன் அல்-கரீமின் வெளிரங்கமான (நேரடியான) அர்த்தங்கள் பிக்ஹுு அறிஞர்களால் வரையறுக்கப்பட்டவை ஆனால் உள்ரங்கமான அர்த்தம் ஒரு முடிவற்ற கடல் போன்றது. அவர்கள் நேரடியான அர்த்தங்களை பின்பற்றுவதற்கு பதிலாக

---

[1] முடிவற்ற பேரின்பத்தின் ஐந்தாவது மற்றும் ஆறாவது அத்தியாயங்களைப் பார்க்கவும்

உள்ரங்கமான அர்த்தம் என்ற பெயரில் தங்கள் சொந்த புனைகதைகளை நம்பினர். உண்மையில், அல்லாஹ்வின் தூதரினால் கற்பிக்கப்பட்டது வெளிப்படையான பொருள். நேரடி அர்த்தங்களை ஒதுக்கி வைத்துவிட்டு, புனையப்பட்ட உள்அர்த்தங்களை பின்பற்றுவது அவநம்பிக்கையை ஏற்படுத்துகின்றது. அவற்றின் பொய்மை படுத்தல் இஸ்லாத்தை உள்ளிருந்து அழிக்கும் நோக்கம் கொண்டது. நெருப்பை வணங்குபவர்கள் (மஜூஸி), குறிப்பாக அவர்களின் தலைவன் ஹம்தான் குர்முத் என்பவன் இஸ்லாம் பரவுவதைத் தடுக்க இந்த தந்திரங்களை கண்டுபிடித்து கறாமுதா மாநிலத்தை நிறுவினான். அவன்

“ஹஜ்” யாத்திரை மேற்கொண்ட நபர்களைக் கொன்றான். “ஹஜர் அல்-அஸ்வத்” ஐ “கஃபா” இலிருந்து பஸ்ராவுக்கு நகர்த்தினான். அவர்கள் பின்வரும் சில கதைகளை புனைந்தார்கள். "ஜன்னத் என்றால் உலக இன்பங்களை பின்தொடர்வது என்றும் நரகம் என்பது இஸ்லாத்தின் கொள்கைகளுக்குக் கீழ்ப்படிவதாகும்.” அவர்கள் இஸ்லாத்தின் தடைகள் நுண்கலைகள் என்று பெயரிட்டார்கள். இஸ்லாம் ஒழுக்கக்கேடானது மற்றும் அநாகரிகமானது என்று அழைப்பதை, அவர்கள் தார்மீகம், பொழுதுபோக்கு, என்று தவறாக வழி நடத்தினர். இளைய தலைமுறையினரை அழிவுக்குள்ளாக்கினார்கள். அவர்களின் மாநிலத்தில் இஸ்லாத்திற்கு ஏற்பட்ட தீங்கு ஈடுசெய்ய முடியாதது. அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகினார்கள், அவர்கள் 372 ஹிஜ்ரி (983 ஏ.டி.) வில் அவர்கள் பூண்டோடு அழிக்கப்பட்டார்கள்.]

தஃப்ஸீர் பரிமாற்றம் (நக்ல்) கொள்கைகளுக்கு ஏற்ப செய்யப்பட வேண்டும். தஃப்ஸீர் செய்வதற்கு ஒருவர் பின்வரும் பதினைந்து இஸ்லாமிய அறிவியல் கலைகளை கற்றுக்கொள்ள வேண்டும்: லுகாத் (லெக்சிகலஜி); நஹ்வ் மற்றும் சர்ஃப்(இலக்கணம் மற்றும் தொடரியல்); இஷ்டிகாக் (சொற்பிறப்பியல்,P-156 நிறுவுதல் ); ம’ஆனி (பொருள், சொற்பொருள்); ப’யான் (விளக்கம்,சொற்றொடர்); பாதி ‘(பேச்சின் வடிவங்கள்); கிரா’அத் (படித்தல் அல்லது குர்ஆன் அல்-கரீம் ஓதுதல்); உசூல்அத்-தீன் (தீனின் விதி முறை); ஃபிக்ஹுு (வழிபாட்டுச் செயல்கள் தொடர்பான அறிவு மற்றும் செயல்கள்); அஸ்பாப்-அல்-நுசூல் (நிகழ்வுகள்,

ஆயத் இறங்குவதற்கான காரணங்கள்);நாசிக் மற்றும் மன்சூக் (மற்றவைகளை செல்லுபடியற்ற தாக்கிய ஆயத் கரீம் கள்; அவைகளையும் செய்தவற்றையும் செல்லாததாக்கியது); உசூல்-இ-ஃபிக்ஹ் (பிக்ஹு அறிவியலில் பயன்படுத்த ப்படும் முறை); ஹதீத்; மற்றும் 'இல்ம்-அல்-கல்ப் (ஆன்மீக இதயத்தை கையாளும் விஞ்ஞானம்). இந்த அறிவியலை கற்றுக்கொள்ளாத ஒருவருக்கு குர்ஆன் அல்கரீமின் ஒரு தஃப்ஸரை செய்வதற்கு முயற்சிப்பது அனுமதிக்க படவில்லை.

ஆன்மீக இதயத்தின் அறிவு (கல்ப்) "அல்லது "மவ்ஹிபா" என்பது அல்லாஹு த'ஆலா இஸ்லாத்தை மிகச்சிறப்பாக பின்பற்றும் பக்தியுள்ள அறிஞர்களுக்கு இடைத்தரகர் இன்றி அனுப்பும் ஒரு வகையான அறிவு. ஹஸரத் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"ஒரு நபர் தனக்குத் தெரிந்ததைக் கடைப்பிடித்தால், அல்லாஹு தஆலா அவருக்குத் தெரியாததை அவருக்கு கற்றுக் கொடுப்பான்."** மேற்கூறிய பதினைந்தையும் கற்றுக்கொள்ளாத ஒருவருக்கு தஃப்ஸீர் செய்வதற்கு அனுமதி இல்லை. இந்த அறிவுகளில் ஆரம்பகல்வி இல்லாமல் ஆயத் கரீமாவை விளக்க முயற்சிப்பது தப்சீரின் இரகசியங்களில் தனிப்பட்ட கருத்துக்களை முன்வைக்கத்தூண்டும் அது கடைசியில் நரக நெருப்பில் சேர்க்கும்.

ஹஸரத் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் அவர்கள் ஒரு ஹதீது ஷரீபில் கூறுகிறார்கள்: **"ஒரு நபர் நாற்பது நாட்கள் இக்ஹ்லாசுடன் இஸ்லாத்தின் கொள்கைகளுக்குக் கீழ்ப்படிந்த நிலையில் கழித்தால், அல்லாஹு த'ஆலா அவரது இதயத்தை ஹிக்மத் மூலம் நிரப்புவான், மேலும் அவர் ஹிக்மத்தானவற்றை பேசுவார்".** (இது மறைக்கப்பட்ட அறிவு என்று அழைக்கப்படுகிறது) ஹிக்மத். " குர் ஆனில் முத்தஷாபிகான(உருவகம்) ஆயத்துகளை விளக்குவது தப்சீரில் ஒருவரின் சொந்த கருத்துகளை முன்வைப்பதற்கு சமன். பித்'அத் வாதிகள் தாங்கள் பின்பற்றுவதாக கூறும் தப்சீர் இந்த வகையை சேர்ந்தவை.

குர்ஆன் அல்-கரீமில் மூன்று வகையான அறிவு உள்ளது. இதில் முதல் வகை அல்லாஹு தஆலா அவனுடைய எந்த அடிமைக்கும் வழங்காத அறிவு. அவனது உண்மையான சாரம் தாத் (நபர்) மற்றும் அவனது பண்புகள்,(இல்முல் ஃகைப்) பற்றிய மறைவான அறிவு இந்த வகைக்குள் அடங்கும்.

இரண்டாவது வகை அவனது ரகசிய அறிவு அவனுடைய தீர்க்கதரிசிகளுக்கு வெளிப்படுத்தப்பட்டது. நபிமார்கள் 'அலைஹிமுஸ்-சலாவத்து வதஸ்லமாத்' அவர்கள், அல்லாஹு தஆலாவால் தெரிவு செய்யப்பட்டவர்களுக்கும் இந்த அறிவை வெளிப்படுத்தலாம். அவன் தனது தீர்க்கதரிசிகளுக்கு அலைஹிமுஸ்-சலாவத்து வதஸ்லமாத்' மூன்றாவது வகை அறிவையும் கற்பித்தான். இந்த அறிவை அவர்களின் உம்மத்து அனைவருக்கும் போதிக்க அவர்களுக்கு உத்தரவிட்டான்.

மூன்றாவது வகை அறிவு இரண்டு பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளது. முதலாவது கேட்பதன் மூலம் மட்டுமே கற்றுக்கொள்ளப்படுகிறது. (கியாமத்) நாள் பற்றிய அறிவு இந்த வகையானது. இரண்டாவது வகை அறிவு அவதானிப்பது, ஆராய்வது, வாசிப்பஅதன் மூலம் அதன் பொருளை விளங்குவது மூலம்

பெறப்படுகின்றது. நம்பிக்கை மற்றும் இஸ்லாம் தொடர்பான அறிவு இந்த வகையில் உள்ளது. ஆழ்ந்த அறிவு பெற்ற இஸ்லாமிய அறிஞர்களான முஜ்தாஹித் இமாம்களால் கூட ஷரியத்தின் போதனைகளை திட்டவட்டமாக புரிந்து கொள்ள முடியவில்லை அவை 'நாஸ்' மற்றும் அவை அர்த்தங்களில் ஒருவருக்கொருவர் வேறுபடுகின்றபடியால் இது நடைமுறைகளில் பல்வேறு மதுஹபுகள் தோன்றுவதற்கு காரணமானது.

மேற்கூறிய பதினைந்து விதமான கல்விகளையும் நன்கு அறிந்தவர்களால் பெறப்பட்ட அர்த்தங்கள் தஃவில் என்று அழைக்கப்படுகின்றன, ஆனால் அவை தஃப்ஸீர் அல்ல, ஏனெனில் அந்த அர்த்தங்களில் தஃ'வில் செய்தவரின் தனிப்பட்ட தேர்வு உள்ளது; அதாவது, அவர் பெற்ற பல்வேறு அர்த்தங்களில் இருந்து ஊகித்து ஒன்றை தெரிவு செய்கிறார். அவர் தேர்ந்தெடுக்கும் பொருள் குர்ஆன் ஆயத்துகளின் மற்றும் ஹதீஸ்களின் நேரடி மற்றும் தெளிவான அர்த்தங்களுடன் அல்லது அறிஞர்களின் ஒருமித்த தன்மைக்கு (இஜ்மா)உடன் பொருந்தவில்லை என்றால் அது தவறானது (ஃபாசித்).

பரீக்கா எனும் கிதாப், நடனம் தடைசெய்யப்பட்டுள்ளது என்பதை விளக்கும் போது, குறிப்பில்;நாங்கள் எங்கள் மதத்தை தப்சீர்களின் கிதாபுகளின்படி பின்பற்றுமாறு எங்களுக்கு கட்டளையிடப்படவில்லை. நாங்கள் நம்மை பிக்ஹு கிதாபுகளுக்கு ஏற்ப நடந்து கொள்ளும்படி ஏவப்பட்டுள்ளோம் என்று குறிப்பிடுகின்றது.

## 38 - தடுக்கப்பட்ட(ஹராமான)செயல்களை செய்யும்படி வற்புறுத்துவது

வேண்டுமென்றே பாவம்செய்வது அது சிறிய அளவாக இருந்தாலும் பாவத்தை வலியுறுத்துவதாகும். வேண்டுமென்றே பாவம் செய்வது என்பதன் பொருள் தீர்மானித்து விருப்பத்துடன் செய்யப்படுவது. ஒரு நபர் ஒரு முறை பாவத்தை தீர்மானித்து செய்யும்போது, அவர் ஏற்கனவே அவ்வாறு செய்ய உறுதி படுத்தி இருந்தார். எனினும், செய்யயப்படாத ஒரு பாவம், அதை ஒருவர் தொடர்ந்து செய்ய முடிவு செய்திருந்தாலும், அது வேண்டுமென்றே செய்யும் பாவமாக வகைப்படுத்த படவில்லை. ஒரு நபர் ஒரு பாவத்தை தொடர்ந்து செய்ய முடிவு செய்து அதைச் செய்கிறார் பின்னர் பாவமன்னிப்பு கேட்டு நிறுத்துகிறார் என்றால் அது வலியுறுத்தல் ஆகாது. அவர் அதை மீண்டும் செய்கிறார், பின்னர் மீண்டும் மனந்திரும்புகிறார், என்றால் அது வலியுறுத்தப் படாதது. ஒரு பாவத்தை ஒரே நாளில் பல முறை செய்து ஒவ்வொரு முறையும் தவ்பாவும் செய்கிறார் என்றால், அதுவும் வலியுறுத்தும் பாவம் இல்லை. இருப்பினும், தவ்பாவை மிகுந்த வருத்தத்துடனும், துக்கமுள்ள இதயத்துடனும் செய்ய வேண்டும் மற்றும் பாவத்தை விட்டுவிடவும் இனிமேல் செய்யாமல் இருக்கவும் முடிவு செய்ய வேண்டும். இந்த மூன்று நிபந்தனை களையும் பூர்த்தி செய்யாமல் செய்யப்பட்ட தவ்பா ஒரு லிப்-சர்வீஸ் தவ்பா. சிறிய பாவங்களைச் செய்ய வலியுறுத்துவதும் செய்வது மிகப்பெரிய பாவம். இது ஒரு கடுமையான பாவம் அது பெரும் பாவத்தை ஒருமுறை செய்வதை விட பெரிய பாவம்.

ஒரு முறை பாவம் செய்தவர் தவ்பாவை செய்யும்போது கடுமையான பாவமும் மன்னிக்கப்படும். ஒரு சிறு பாவத்தை முக்கியமில்லாத ஒன்று என்று கருத்தில் கொள்வது பெரிய பாவம். ஒரு சிறுபாவத்தை செய்துவிட்டு அதுபற்றி

பெருமையாக நினைப்பது ஒரு கடுமையான பாவம். சிறு பாவங்களைச் செய்கிற ஒருவரை ஒரு அறிவார்ந்த (ஆலிம்) மற்றும் (ஸாலிஹ்) பக்தியுள்ள வராக பார்ப்பதும் கடும் பாவம். ஒருவர் செய்த பாவம் சிறிதாக இருந்தாலும் அவர் அல்லாஹ்வின் வேதனை தண்டனையை நினைத்து பயத்துடன் ஒருவர் நடுங்க வேண்டும். அல்லாஹு தலாவைப் பற்றி ஒருவர் வெட்கப்படாவிட்டால், அவர் தண்டிப்பான் என்று நினைக்காவிட்டால் அது மிகப் பெரிய பாவமாகும்.

## 39– புறம் பேசுவது (ஃகீபத்)

ஒரு முஸ்லிம் அல்லது ஒரு முஸ்லிம் அல்லாதவருடைய (zஜிம்மி) ஒரு குறையை அல்லது தவறுகளை பற்றி வேறு ஒருவருக்கு கூறுவதன் மூலம் அவர்களை இழிவு படுத்துவது ஃகீபத் எனப்படும். புறம் பேசுவது ஹராம். கேட்பவருக்கு இழிவு படுத்தப்பட்ட நபரை தெரியாவிட்டால் அது புறமாக இருக்காது. புறம் பேசப்பட்ட நபர் அதை கேட்டால் வருத்தப்படுவார் என்றால் அது புறம் ஆகும். ஒரு நபர் அவர் இல்லாத நேரத்தில் அவரது உடல், அவரது குடும்ப பரம்பரை, அவரது தார்மீகத்தைப் பற்றிய கருத்துக்கள் நடத்தை, அவரது வேலை, பேச்சு, நம்பிக்கை, அவரது உலக வாழ்க்கை, அவருடையது உடைகள், அல்லது அவரது விலங்குகள் பற்றி பேசுவது அவர் இருந்தால் அவரை காயப்படுத்தும் தன்மை கொண்டவை என்றால் அது கீபத் ஆகும். இரகசியமான புறம் அது அறிகுறிகள், சைகைகள் அல்லது எழுத்து மூலம் செய்யப்படுவது வெளிப்படையான வாய்மொழியான புறம் பேசுதல் போன்று பாவமானது.

மிகவும் அருவருப்பான ஃகீபத்துக்கு உதாரணம்; ஒரு முஸ்லிமின் பாவம் அல்லது தவறைப்பற்றி அவரில்லாத விடத்தில் கூறப்படும் போது(ஃகீபத்) ஒரு மார்க்க பக்தியுள்ள நபர், "அல்ஹம்து லில்லாஹ் (புகழும் நன்றியும் அல்லாஹ்வுக்கே இருக்கும்), நாங்கள் அவரைப் போன்றவர்கள் அல்ல,"என்று கூறுவது. [ஒரு ஹாஃபிஸ் முழு குர்ஆன் அல்-கரீரமையும் மனனம் செய்த ஒருவர்] மற்றொரு முற்றிலும் வெறுக்கத்தக்க வகை அவதூறு, உதாரணமாக, உரையாடலின் மத்தியில் "அல்-ஹம்து-லில்லாஹ், அல்லாஹ் எங்களை அவரைப் போல் வெட்கமடையச் செய்யவில்லை"என்று ஒரு நபரை குறிப்பிட்டு சொல்வது. தெளிவற்ற முறையில் புறம்பேசும் விஷயமும் அப்படித்தான்; உதாரணமாக, ஒரு நபரைப் பற்றிச் சொல்லும்போது, "அவர் ஒரு நல்ல மனிதர்,தவிர.... .என்று கூறுவது.

" சூரா ஹுஜுராத்தின் பன்னிரண்டாவது ஆயத் பின்வருமாறு கூறுகிறது: **"... இல்லை ஒருவருக்கொருவர் தங்கள் முதுகுக்குப் பின்னால் மோசமாகப் பேசுபவர்கள் . ...** "ஃகிபத் என்றால் முதுகுக்கு பின்னால் பேசுவது(புறம் பேசுவது) இது இறந்தவரின் மாமிசத்தை சாப்பிடுவதற்கு ஒப்பிடப்படுகிறது.

இது ஒரு ஹதீத்-ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **"தீர்ப்பு நாள் அன்று , ஒரு நபரின் வெகுமதி புத்தகம்(நன்மை தீமை பட்டோலை) திறக்கப்படும். அவர் கூறுவார்,"எனது இறைவனே! நான் உலகில் இருந்தபோது இது இது போன்ற வணக்க வழிபாட்டு செயல்களைச் செய்தேன். ஆனால் அவை பக்கத்தில் பதிவு செய்யப்படவில்லை என்று கூறுவார். அவர் பின்வருமாறு பதிலளிக்கப்படுவார்; அவை உங்கள் புத்தகத்திலிருந்து அழிக்கப்பட்டு விட்டன, நீங்கள் தவறாகப் பேசிய நபர்களின் புத்தகங்களுக்கு மாற்றப்பட்டது. "** என்று கூறப்படும்.

மற்றொரு ஹதீது ஷரீப் கூறுகின்றது: **"நியாயத்தீர்ப்பு நாளில், ஒரு நபரின் நல்ல செயல்களைக் கொண்ட புத்தகம் 'ஹசனத்' திறக்கப்படும். அங்கே அவர் ஒருபோதும் செய்யாத வணக்கங்கள் பதியப்பட்டிருப்பதை காண்பார். அவர்கள்;அவரை மோசமாகப் பேசியவர்களின் வெகுமதிகள் தான் இவை என்று அவரிடம் சொல்வார்கள்".**

அபூ ஹுரைரா 'ரலியள்ளாஹு த ஆலா அன்ஹு' 'தெரிவித்த பின்வரும் நிகழ்வு: "**நாங்கள் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹுூ' அலைஹி வசல்லம் உடன் அமர்ந்திருந்தோம். எங்களில் ஒருவர் எழுந்து கிளம்பினார். எங்களுடன் இருந்த யாரோ ஒருவர் அவர் ஏன் வெளியேறினார் என்பது குறித்து எங்களிடையே கருத்துத் தெரிவித்தார். அதன்பின் ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு த'ஆலா' அலைஹி வசல்லம்; "நீங்கள் உங்கள் நண்பரை புறம் பேசியுள்ளீர்கள். அவருடைய மாமிசத்தை நீங்கள் சாப்பிட்டீர்கள். "** என்று கூறினார்கள்.

ஆயிஷா ரலியள்ளாஹு தஆலா அன்ஹா 'பின்வரும் நிகழ்வைப் பற்றி தெரிவித்தார்கள்: ஒரு நாள், ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் முன்னிலையில்'நான் ஒரு குறிப்பிட்ட பெண்ணைப் பற்றி அவள் உயரமானவள் என்று கூறினேன். அல்லாஹ்வின் அருள் பெற்ற தூதர் இவ்வாறு கூறினார்கள்: **"உங்கள் வாயில் உள்ளதை எதையும் துப்பி விடுங்கள்!"** நான் வெளியே துப்பினேன். என் வாயிலிருந்து ஒரு துண்டு இறைச்சி வெளியே வந்தது. அல்லாஹு தஆலாவுக்கு வெளிப்படையான பண்புகளை மற்றும் விசேட குறிப்புகளை பொருள்களாக வெளிப்படுத்தும் சக்தி உள்ளது.

ஃகீபத் என்றால் ஒரு முஸ்லிம் சகோதரன் அல்லது முஸ்லிம் அல்லாத குடிமகன் (zஜிம்மி) யின் தவறுகளை பற்றி, அதை அவர் கேட்டால் துக்கப்படுவார் என்ற வகையில் அவர்கள் இல்லாத போது கூறுவது. அல்லாஹுதஆலா நபிமூஸா அலைஹிஸ்ஸலாமுக்கு பின்வரும் வெளிப்பாடு களை அனுப்பினான்:

"வதந்திகளை கூறுபவர்களில் யார் மனம் வருந்தி தவ்பாவை செய்கிறாரோ அவர் சுவர்க்கத்தில் கடைசியில் நுழைவார். அதேசமயம் வதந்திகள் பரப்புபவர்களில் மனம் திருந்தி தவ்பாவை செய்யாதவர்கள் நரகத்தின் ஆரம்பகால குடியிருப்பாளராக இருபார்கள்." அல்லாஹ்வின் நேசர் இப்ராஹிம் இப்னு அத்'ஹம் ரஹ்மாதுள்ளாஹி தஆலா அவர்கள் ஒரு விருந்துக்கு அழைக்கப்பட்டார். விருந்தின்போது வரவேற்புக்கு வருவதற்கு தாமதமான ஒருவர் பற்றி அவர் வருவதற்கு முன்னாள் அவரது தாமதம்பற்றி விமர்சிக்கப்பட்டது.அதன்போது இப்ராஹிம்இப்னுஅத்'ஹம் ரஹ்மாதுள்ளாஹி தஆலா அவர்கள் இங்கு அப்பட்டமான ஃகீபத் பேசப்பட்டுள்ளது என்று கூறி உடனடியாக வெளியேறினார்கள்.

இது ஒரு ஹதீத்ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **"ஒரு நபர் இல்லாத போது அவரின் குறைகள்பற்றி விமர்சித்தால் ஃகீபத் உறுதி செய்யப்பட்டுள்ளது. இல்லை எனில் அது புஹுதானில் (அவதூறு) நின்றும் உள்ளது".** ஒரு நபரை (அவர் இல்லாத நிலையில்) அவரது மார்க்கத்தில் அலட்சியம் (தினசரி கடமை ஐந்து நேர தொழுகை போன்ற) அவரது மார்க்க தவறுகளை, மதுப்பழக்கம், களவு, கூட விமர்சிப்பது ஃகீபத் ஆகும். மது நுகர்வு, திருட்டு, பொய் பேசுவது, அத்துட இயற்கையான குறைபாடுகள்; காது கேளாமை, பார்வை குறைபாடு, மற்றும்

மெல்லிய தன்மை போன்ற உலக குறைபாடுகளையும் விமர்சிப்பது ஃகீபத் ஆகும். மார்க்கத்தில் தவறுகளுக்கான விமர்சனம் இழிவு படுத்தலுக்கான நோக்கம் கொண்டால் அது ஃகீபத். அது சம்பந்தப்பட்ட நபரை மேம்படுத்தும் நோக்கத்திற்காக இருந்தால் அது ஃகீபத் அல்ல.

ஒரு கூற்றின் படி, விமர்சகரின் தனிப்பட்ட இரக்கம் காரணமாக அவரிடமிருந்து விமர்சனம் வெளிவந்தால் அது ஃகீபத் அல்ல. உதாரணமாக, "இந்த கிராமத்தில் ஒரு திருடன், (அல்லது தனது வணக்க வழிபாடுகளை புறக்கணிக்கும் நபர், அல்லது ஒரு கம்யூனிஸ்ட் என்று கூறுவது ஃகீபத் அல்ல . "ஏனெனில், இங்கு , குற்றச்சாட்டு ஒரு தனிப்பட்ட நபரை குறிப்பிடவில்லை.

ஒரு நபர் தனது அன்றாட வணக்கங்களையும் நோன்பிருப்பதையும் செய்கிறார் என்று வைத்துக்கொள்வோம், ஆனால் அவர் மற்றவர்களுக்கு உடல் ரீதியாக தீங்கு விளைவிப்பவர் எனின். உதாரணமாக, அவர் சூது,மிரட்டி பணம் பறித்தல் அல்லது திருட்டு; அல்லது மக்களை தூற்றுதல். புறம்பேசுதல், கதையளத்தல், தான் செய்த பாவங்களை வெளிப்படையாக பேசுவது, பாவங்கள் செய்வது, ஹராமானவற்றை பித்’ஆ செய்வது போன்றவற்றை செய்வதில் நிபுணத்துவம் பெற்றவர் எனின் அது ஃகீபத் இல்லை. அத்தகைய குற்றவாளிகளைப்பற்றி அதிகாரிகளுக்கு புகாரளிப்பது பாவமல்ல. அது அவர்களுக்கு அவற்றை தடுக்க உதவும்.

ஒரு நபர் தந்தைக்கு தெரியாமல் ரகசியமாக ஒரு தீங்கு செய்யும்போது, இந்த செயலை தடுப்பதற்கு புத்திசாலியான ஒருவர் அதைப்பற்றி அவர் தந்தைக்கு அறிவித்தால் ஏதாவது செய்வார் என்று அவருக்குத் தெரிந்தால் அதைப்பற்றி தந்தைக்கு வாய்வழியாகவோ அல்லது எழுதுவதன் மூலமோ புகாரளிக்க வேண்டும். தந்தை அதை தடுத்து நிறுத்துவார் என்று உறுதியாக தெரியாவிட்டால் தனது தந்தைக்கு தெரிவிக்க அனுமதிக்கப்படவில்லை. அப்படி தெரிவிப்பது அவர்களுக்கிடையில் இடையில் பகைமையை ஏற்படுத்தும். ஒருவர் தனது செயல்களால் மற்றவர்களுக்கு தீங்கு விளைவித்தால், அவரை பற்றி மற்றவர்களுக்கு தெரிவிப்பது ஃகீபத் ஆகாது அது மற்றவர்களை அவரிடம் இருந்து பாதுகாக்கும். ஒருவரது தீங்கை பரிதாபப்பட்டு வருந்துகிறார் அதை மற்றவர்களுக்கும் சொன்னால், அது ஃகீபத் அல்ல. அவரது தீங்கு விளைவிக்கும் நடத்தையை அம்பலப்படுத்துவது அவரை தீயவராக அடையாளப்படுத்து வதற்காக எனின் அது புறம் பேசுவதாகும்.

ஆறு நிகழ்வுகளில் ஒருவர் அவரில்லாத அவர் இல்லாத நேரத்தில் ஒரு நபரின் குறைபாடுகள் மற்றும் தவறுகளை சொல்வது ஃகீபத் அல்ல.

1. ஒருவர் அவரிடம் அவருக்காக வருந்துகிறார் மற்றும் பரிதாபப் படுவதால் ஒருவர் அதைச் சொல்கிறார்
2. ஒருவர் அவரைத் தடுக்கும்படி மற்றவர்களிடம் கூறுகிறார்.
3. சட்டப்பூர்வ முடிவைப் பெறுவதற்காகச் சொல்வது (ஃபத்வா). பொருட்டு சொல்வது
4. அவரது தீங்கிலிருந்து மற்றவர்களைப் பாதுகாப்பதற்காக.
5. ஒரு குறைபாடு ஒரு நபரின் புனைப்பெயர் ஆகி விட்டால், ஒருவர் அவரது புனைப்பெயர் மூலம் அவரை விவரிக்க அவரை அழைக்க நிர்பந்திக்கப்படுகிறார்

6. அவரது அடக்குமுறை, பாவம்,"ஃபிஸ்க்" அல்லது பித்'ஆ பொதுவாக அறியப்பட்டது.

ஒரு பழிவாங்கலுக்காக அல்லது கேவலமான நோக்கத்திற்காக மற்றவர்களிடம் சொல்வது ஃகீபத் ஆகும். ஒருவரை அவர் வாங்கத் திட்டமிட்டுள்ள ஏதாவது ஒரு பொருளின் குறைபாட்டைப் பற்றி எச்சரிக்க செய்வது விற்பனையாளரைப் பற்றி மோசமாகப் பேசுவது என்று அர்த்தமல்ல.. ஒரு தகவலைத் தெரிவிப்பது ஃகீபத் அல்ல. ஒருவர் திருமணம் செய்யத் திட்டமிடும் பெண்ணின் தவறுகள் அல்லது குறைபாடுகள் பற்றி அவருக்கு தெரிவிப்பது வஜீப் ஆகும். அது ஒரு அறிவுரை ஆகும். ஒருவருக்கு தெரியாத ஒன்றை பற்றி அவருக்குத் அறிவிப்பது வாஜிப். ஒரு நபர் பித்'அத்தான செயல்களைச் செய்தால்அல்லது கொடுமைகளை செய்தால், அவரின் மற்ற குறைகளைப்பற்றி அவை வெளிப்படையாக இல்லாவிட்டால் மற்றவர்களுக்குத் தெரிவிப்பது ஃகீபத் ஆகும்.

இது ஒரு ஹதீத்- ஷரீபில் கூறப்பட்டுள்ளது: "**வெட்கத்தின் ஜில்பாபை தொட்ட நபரை பற்றி அறிவிப்பது ஃகீபத் அல்ல."** அதன் விளக்கம் பின்வருமாறு, "வெட்கம் கெட்ட செயல்களை வெளிப்படையாக செய்யும் நபரை பற்றி"(பிறருக்கு) (அக்கிரமங்கள்) பற்றி அறிவிப்பது ஃகீபத் அல்ல." 'ஜில்பாப்' என்பது ஒரு பரந்த பெண்கள் தலையை மறைக்க அணியும் தலைக்கவசம். இந்த சூழலில்,'அவமானத்தின் ஜில்பாப்' என்பதன் பொருள் பாவங்களைச் செய்வது. 'வெட்கத்தின் ஜில்பாப்' என்பதன் பொருள் வெளிப்படையாக பாவங்களைச் செய்வது.' அத்தகைய நபர்கள் அவமான உணர்வை வைத்திருக்கவில்லை என்ற உண்மையை ஹதீத் ஷரீப் சுட்டிக்காட்டுகின்றது.

இமாம் கஸ்ஸாலி மற்றும் வேறு சில இஸ்லாமிய அறிஞர்களின் கூற்றுப்படி 'ரஹிமஹுமுள்ளாஹு தஆலா', ஃகீபத் என்பது வெளிப்படையான பாவம் செய்பவரின் அல்லது வேறு ஒருவரின் தவறை அம்பலப்படுத்துவதன் நோக்கம் இழிவானதாக இருக்க வேண்டும் என்ற நிபந்தனை அவசியம் இல்லை எனவே, ஃகீபத் என்பது ஒரு வெளிப்படையான கொடுமை அது நிச்சயமாக தடைசெய்யப்படவேண்டும்.

ஒரு நபரை புறம் பேச (ஃகீபத்) வைப்பதற்கு பல காரணங்கள் உள்ளன. அவற்றில் பதினொன்றை இந்த இடத்தில் நாங்கள் விளக்குவோம்:

1. சம்பந்தப்பட்ட நபரை நோக்கிய பகைமை;
2. ஒரு பொதுவான உணர்வு ,கருத்தில் சேர்ந்து கொள்வது;
3. விரும்பாதவர்களைக் குற்றம் சாட்டுவதன் கவர்ச்சியான தன்மை;
4. ஒரு குறிப்பிட்ட பாவத்திலிருந்து தன்னை விலக்கிக் கொள்ளும் நபர்
5. மேன்மையை காட்டுவதற்கு ஒரு நிகழ்ச்சி தயாரிப்பு
6. பொறாமை;
7. நகைச்சுவையின் உணர்வுகள்
8. புத்திசாலித்தனம்;
9. மற்றும் கேலி;
10. தனிப்பட்ட ஆச்சரியம், வருத்தம், துக்கம் அல்லது வெளிப்படுத்த
11. அவ்வாறு எதிர்பார்க்காத ஒரு நபரின் பாவத்தை வெறுப்பது.

ஃகீபத் பேசுபவரின் வெகுமதிகளில் (தாவாப்கள்) குறைந்து விடுகின்றன. பிறரின் பாவங்களை இவரின் பாவங்களுடன் சேர்க்க வைக்கிறது. இவற்றைப் பற்றி எல்லா நேரமும் சிந்திப்பது ஒருவரை ஃகீபத் பேசுவதிலிருந்து பாதுகாக்கின்றது.

ஃகீபத் மூன்று வகையாகும்: முதல் சந்தர்ப்பத்தில் புறம் பேசுபவர் ஃகீபத் செய்ததை மறுத்து, அவர் வெறுமனே அவரைப்பற்றி உண்மையை சொல்லியதாக கூறுவார். இந்த மறுப்பு குஃப்ருக்கு காரணமாகிறது. ஏனெனில் ஏனென்றால் இஸ்லாத்தில் தடுக்கப்பட்ட ஒன்றைப் பற்றி 'ஹலால்' என்று சொல்வது குஃப்ரை ஏற்படுத்தும். இரண்டாவது வகையின் நோக்கம் ஒருவர் விமர்சிக்கப்பட்டு அவர் விமர்சிக்கப்படுவதை கேட்க வைப்பது. இது ஹறாம் மற்றும் கடுமையான பாவம். இந்த வகையான ஃகீபத் தவ்பா செய்வதன் மூலம் மட்டும் மன்னிக்கப்படமாட்டது. அந்த பாவம் மன்னிக்கப்படுவதற்கு விமர்சனத்துக்குள்ளான நபர் அதை மன்னிக்க வேண்டும். மூன்றாவது வகையில் ஃகீபத் விமர்சனத்துக்குள்ளான நபர் அதை அறிந்திருக்க மாட்டார். இந்த வகையான புறம் மன்னிக்கப்படுவதற்கு தவ்பா செய்வதுடன் விமர்சனத்திற்குள்ளான நபருக்காக பிரார்த்தனையும் செய்யவேண்டும்.

ஒருவர் தான் இருக்கும்போது தன்னைப்பற்றி விமர்கிக்கப்படுவதாக உணர்ந்த ஒருவர் அதை உடனடியாக அதை தடை செய்ய வேண்டும். இது ஒரு ஹதீத்-ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **"ஒருவர் தனது முஸ்லீம் சகோதரருக்கு அவர் இல்லாத நிலையில் உதவி செய்தால் அல்லாஹு தஆலா அவருக்கு இந்த உலகத்திலும் அடுத்த உலகம் 'ஆகிரத்திலும் உதவுவான்."**

மற்றும் **" ஒரு நபரின் முஸ்லீம் சகோதரரை பற்றி அவர் முன்னிலையில் விமர்சிக்கும்போது, அந்த முஸ்லிம் சகோதரனுக்கு அவர் விரும்பினால் ஆதரவு அளிக்க முடியுமானபோது தன் சகோதரனை ஆதரிக்கவில்லை என்றால் அவருடைய இந்த பாவம் இவ்வுலகிலும் மறு உலகிலும் அவருக்கு போதுமானதாக இருக்கும்."**

மற்றும் **"ஒரு நபர் தனது முஸ்லிம் சகோதரனின் மரியாதையை இவ்வுலகில் பாதுகாத்தால் அல்லாஹு தஆலா அவருக்கு மறுமையில் ஒரு மலக்கை அனுப்பி நரகின் தண்டனையில் இருந்து பாதுகாப்பு கொடுப்பான்."** மேலும், **"தனது முஸ்லிம் சகோதரனின் மரியாதையை பாதுகாப்பவருக்கு அல்லாஹு தஆலா அவரை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றுவான்."**

ஒருவர் முன்னிலையில் புறம்பேசுதல் நடைபெறும்பொழுது, புறம்பேசுபவருக்கு பயப்படவில்லை என்றால் அதை வார்த்தைகளால் நிறுத்த வேண்டும். அவர் அவருக்கு பயப்படுகிறார் என்றால் அவர் உள்ளத்தினால் நிராகரிக்க வேண்டும். இல்லையெனில் அவர் அந்த பாவத்தை பகிர்ந்து கொள்வார். அவரை நிறுத்தவோ அல்லது வெளியேறவோ முடிந்தால், அவர் ஒன்று நிறுத்த வேண்டும் அல்லது மற்றதை செய்ய வேண்டும். சைகை மொழியைப் பயன்படுத்துதல், எடுத்து காட்டாக; அவரது தலை அல்லது கை அல்லது கண்களின் சைகை மூலமாக தடுக்க முடியாது போனால் அவர் விமர்சிப்பவரிடம் அதை நிறுத்த வேண்டும் என்று சொல்வது அவசியம்.

புறம் பேசுவதற்கான பரிகாரம் (கஃப்பாரத்) என்பது உணர்வு, சோகம், தவ்பா செய்தல் மற்றும் பாதிக்கப்பட்ட நபரிடம் மன்னிப்பு கேட்பது. வருத்தப்படாமல் மன்னிப்பு கேட்பது ஒன்றும் முனாபிக் தனத்தை விட வேறில்லை. கபடத்தனம், இது மற்றொரு பாவம். [இது இப்னு-ஆபிதீன் இன் ரத்து முஹ்தார் 5 வது பாகம் பக்கம் 263இல் கூறப்பட்டுள்ளது; இல் எழுதப்பட்டுள்ளது. இதில் ஒரு இறந்த நபர் மற்றும் ஒரு முஸ்லிம் அல்லாத குடிமகனை கீபத் பேசுவதும் தடை செய்யப்பட்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளது.

## 40– தவ்பா செய்யாமல் இருப்பது

தவ்பா செய்வது என்பது ஒரு தடைசெய்யப்பட்ட செயலை செய்த பிறகு வருந்துகின்ற உணர்வு பின்னர் அல்லாஹு தலாவிடம் பயம் ஏற்பட்டு மீண்டும் அந்த செயலை செய்யக்கூடாது என்ற வலுவான தீர்மானம் எடுக்க வேண்டும். உங்களுக்கு உலக இழப்புகள் ஏற்படலாம் என்ற பயத்தினால் மனந்திருந்துவது தவ்பா அல்ல. ஒருவர் பல்வேறுபட்ட பாவங்களை செய்வதனால் சில பாவங்களுக்கான ஒருவரின் தவ்பா செல்லுபடியாகும் (சஹீஹ்) அவர் மற்ற பாவங்களை செய்து கொண்டிருப்பார். தவ்பாவுக்குப் பிறகு, ஒருவர் அதே பாவத்தை மீண்டும் செய்து மீண்டும் மனந்திருந்துதல் செல்லுபடியாகும். இந்த சங்கிலியை மீண்டும் மீண்டும் மனம்வருந்தி திரும்புதல், மீண்டும் பாவம் செய்தல், மீண்டும் மனந்திரும்புதல் என்பன செல்லுபடியாகும். ஒரு கடுமையான பாவத்தின் மன்னிப்புக்கு நிச்சயமாக தவ்பா தேவை. ஐந்து தினசரி தொழுகைகள், வெள்ளிக்கிழமை தொழுகை(ஜூம்'ஆ) ,ரமலான் மாதத்தின் நோன்பு, ஹஜ், தவ்பா செய்வது, பெரும் பாவங்களை தவிர்ப்பது போன்ற அமல்கள் சிறிய பாவங்கள் மன்னிக்கப்படுவதற்கு காரணமாகின்றன. நிராகரிப்புக்கு, போன்றவைகளுக்கு அதன் நிபந்தனைகளை கடைப்பிடித்து செய்யப்படும் தவ்பா நிச்சயமாக ஏற்றுக்கொள்ளப்படும்.

நேர்மையுடனும், அதன் அனைத்து நிலைகளையும் கவனிப்பதன் மூலம் செய்யப்படும் ஹஜ், ஹஜ் அல் மப்ரூர்" என்று அழைக்கப்படுகிறது. "ஹஜ் அல்-மப்ரூர்" அனைத்து வகையான பாவங்களும் மன்னிக்கப்படுவதற்கு காரணமாகிறது பர்லான வணக்கங்களை விடுவதையும் மற்றவர்களின் உரிமைகளை மீறும் பாவத்தையும் தவிர. இந்த இரண்டு வகையான பாவங்களும் மன்னிக்கப்பட வேண்டுமென்றால், ஒருவர் விடுபட்ட கட்டாயக் கடமைகளைச் செய்யது முடிக்க வேண்டும். அத்துடன் மற்றவர்களின் உரிமை களை மீறியதற்காக சரியான நஷ்ட ஈடும் கொடுக்க வேண்டும்.

"ஹஜ் அல்மப்ரூர்" கட்டாய (ஃபர்ளு) கடமைகளை விட்டதற்கான பாவத்துக்கு மன்னிப்பை ஏற்படுத்தாது. ஆனால் விடுபட்ட பர்லான கடைமைகளை அதற்குரிய நேரங்களில் செய்யாததற்கு மன்னிப்பை ஏற்படுத்துகிறது. ஹஜ் யாத்திரைக்குப் பிறகு, தவிர்க்கப்பட்ட கட்டாய கடமைகளை உடனடியாக செய்யத் தொடங்க வேண்டும். இல்லையென்றால் கட்டாய கடமைகளை ஒத்திவைக்கும் பாவம் மீண்டும் தொடங்கும். காலம் கடந்து செல்ல அது பல மடங்குகளாக அதிகரிக்கும். கடமைகளை ஒத்திவைப்பது ஒரு பெரிய பாவம். இதை அனைவரும் தெளிவாக புரிந்து கொள்ள வேண்டும்.

ஹதீத்-ஷரீப்:, **"ஒரு நபரின் பாவங்கள் "ஹஜ் அல்-மப்ரூர்"இனால் மன்னிக்கப்படும். அவர் ஒரு புதிய பிறந்த பாலகனைபோல இருப்பார்**." என்பது பர்லான வணக்கங்களை தவிர்ப்பதன் மூலம் ஏற்படும் பாவத்தையும்

பிறரின் உரிமைகளை மீறுவதன் மூலம் ஏற்படும் பாவங்களை தவிர. ரசூலுள்ளாஹ் 'சல்லள்ளாஹு' அலைஹி வசல்லம் புனித இடம் முஸ்தலிஃபா வில் அரேஃபா இரவில் (குர்பானின் ஈதுக்கு முந்தைய நாள்) ஹாஜிகளுக்கு மன்னிப்புக்காக செய்த பிரார்த்தனை இந்த திறன் கொண்டது.

கட்டாய கடமைகளையும் பாவங்களையும் செய்யாமல் சம்பாதித்த பாவங்கள் மற்றவர்களின் உரிமைகளை மீறுவதன் மூலம் சம்பாதிக்கப்பட்டவை ஆகிய வற்றுக்கான மன்னிப்பும் இதில் அடங்கியுள்ளதாக கூறிய அறிஞர்களும் உள்ளனர். அவர்களின் கூற்று தவ்பாவை செய்பவர்களின் நிலை பற்றியது. அவர்களில் பர்ளுகளை செய்ய உடல் ரீதியாக இயலாதவர்கள், மற்றும் மீறப்பட்ட உரிமைகளை மற்றவர்களுக்கு ஈடுசெய்ய முடியாதவர்களின் பாவங்களின் மன்னிப்பு பற்றியது.

மற்றும் குர்ஆன் அல்கரீமின் சூரா ஹூத்'இன் நூற்றி பதினான்காவது ஆயத்தில் கூறப்படுகின்றது: **"... நல்ல விஷயங்களுக்காக** (ஹசனாத்) **தீயவற்றை நீக்குங்கள்: ... "**(11-114) அறிஞர்கள் இந்த ஆயத் கரீமாவை பின்வருமாறு விளக்குகிறார்கள்: "செயல்படுத்தாத கடமைகள் இருக்கும்போது அவற்றை செய்தால் பாவம் மன்னிக்கப்படும். " யாராவது ஒருவரை பற்றி புறம் பேசி அதை அந்த நபர் கேட்கும்போது அவர் சோகமாகிவிட்டால், அது புறம் பேசியவருக்கு மேலதிக கடுமையான பாவமாகும். நல்ல செயல் (**ஹசனாத்**) அந்த கடுமையான பாவத்தை மன்னிப்பதற்கு வழிவகுப்பதற்கு பாதிக்கப் பட்டவரின் மன்னிப்பையும் பெறவேண்டும். ஒரு பாவம் செய்த உடனேயே தவ்பா செய்வது ஃபர்ளு. தவ்பாவை ஒத்திவைப்பது மற்றொரு பெரிய பாவமாக இருக்கும், இந்நிலையில் மேலதிக தவ்பா செய்வது அவசியமாகும். கட்டாய கடமைகளைச் செய்யாமல் சம்பாதித்த பாவம் சம்பந்தப்பட்ட கடமையை நிறைவேற்றும்போது மட்டுமே மன்னிக்கப்படும்.

எந்த பாவத்திற்கும் மன்னிப்பு கேட்பதற்கு வருத்தமுள்ள இதயத்துடன் தவ்பா செய்யப்பட வேண்டும். ஒரு குறிப்பிட்ட இஸ்திஃபார்[1] வாய்மொழியாக உச்சரிக்கப்படவேண்டும., மற்றும் தேவைப்படும்போது உடல் ரீதியாக. **"சுபஹானள்ளாஹில் அளீம் வபி ஹம்திஹி**"என்று நூறு முறை கூறுவது, தர்மம் (சதகா) கொடுப்பதும், ஒரு நாள் நோன்பு இருப்பதும் மிகவும் நன்மை பயக்கும்.

குர்ஆன்-அல்கரீமில் சூரா நூர்'இன் முப்பத்திஒராவது ஆயத் கட்டளை இடுகின் றது: **"... விசுவாசிகளே! நீங்கள் அனைவரையும் அல்லாஹு த'லாவை நோக்கி திரும்பவும்** (தவ்பாவை செய்யுங்கள்)**. ... "(14-31).** மற்றும் எட்டாவது ஆயத் சூரா தஹ்ரீம் கட்டளை இடுகின்றது**: நேர்மையான மனம் திருந்து வதுடன் "அல்லாஹுத'ஆலாவை நோக்கி திரும்பவும்."** (தவ்பா அல் நாசூக்)..."(66-8). இந்த ஆயத்தில் உள்ள "நாசூக்" எனும் வார்த்தை இருபத்தி மூன்று வெவ்வேறு வழிகளில் விளக்கப்பட்டது. அதி மிகவும் பிரபலமானது; உணர்வு பூர்வமாக வருந்துவது, நாவினால் பாவ மன்னிப்பு கேட்பது. , மீண்டும் செய்யமாட்டேன் என்று கடுமையான முடிவை எடுப்பது. சூரா பகராவின் இரு நூற்றி இருபத்தி இரண்டாவது ஆயத் கரீம் கூறுகின்றது: **"... அல்லாஹுதஆலா விடம் தொடர்ந்து திரும்புவோரை அல்லாஹு தஆலா நேசிக்கின்றான். ...** "(2-222). ஒரு ஹதீத் ஷரீப் இவ்வாறு கூறுகிறது: **"உங்களில் மிகச் சிறந்தவர் ஒரு பாவம் செய்த உடனேயே மனந்திருந்தி 'தவ்பா' செய்பவர்."** மிகப்பெரிய

பாவங்கள் அவநம்பிக்கை(நிராகரிப்பு), நயவஞ்சகம்(நிபாக்) மற்றும் ஒருவர் நம்பிக்கையை(இஸ்லாத்தை) விட்டு வெளியேறுதல் அல்லது முர்த்தத் ஆவது.
[ஒரு முஸ்லீமாக மாறாத ஒருவர், அல்லது முஸ்லிமாக மறுக்கும் நபர் காபிர் என்று அழைக்கப்படுவார்.] காஃபிராக இருக்கும் ஒருவர் முஸ்லிம்களை ஏமற்றுவதற்க்காக முஸ்லீம் என்று பாசாங்கு செய்பவர் நயவஞ்சகர் (முனாஃபிக்) மற்றும் (ஜிண்டிக்) என்று அழைக்கப்படுவார். ஒரு முஸ்லிமான நபர் ஒரு தனது ஈமானை துறந்தால் அல்லது ஈமானுக்கு துரோகம் செய்தால் அவர் முர்த்தத் (விசுவாச துரோகி) என்று அழைக்கப்படுகிறார். இந்த மூன்று வகையான நபர்களும் மீண்டும் உண்மையாகவும் நேர்மையுடனும் இதயத் தால் விசுவாசித்தால் (நம்பினால்) அவர்கள் நிச்சயமாக முஸ்லிம்களாக மாறுவார்கள்.

பரீக்கா மற்றும் ஹதீகா, என்ற நூலில் பேச்சுவழியாக ஏற்படும் பேரழிவுகளைக் கையாளும் அத்தியாயத்திலும், மஜ்மாஉல்-அன்ஹூர் என்ற நூலிலும் புத்தகத்திலும் பின்வரும் அவதானிப்புகள் செய்யப்படுகின்றன;

"இஸ்லாமிய அறிஞர்களால் ஏகமனதாக குபிரை உண்டாக்குபவை என்று வரையறுக்கப்பட்ட செயலை, ஒரு முஸ்லீமான ஆண் அல்லது பெண், [சுய உணர்வுடன், வற்புறுத்தலுக்கு உட்படுத்தப்படாமல்] அறிக்கை வெளியிட்டால் அல்லது செயலைச் செய்தால் அவர் ஒரு காபிர் ஆக மாறிவிடுவார். அவர்கள் தங்கள் ஈமனை இழந்து ஒரு (முர்த்தத்) மதம் மாறியவராக ஆகின்றார். அது, ஒரு நகைச்சுவையான நோக்கத்திற்காக அல்லது உண்மையில் அதன் பொருளை சிந்திக்காமல் செய்யப்பட்டிருந்தாலும்கூட அவர் மதம் மாறியவராக ஆகிறார். இந்த வகையான அவநம்பிக்கை குஃப்ர்-அல்-இனாதி என்று அழைக்கப் படுகிறது. ஒருவர் மார்க்கத்தை துறந்தவராக வேண்டுமென்றே மாறுவதற்கும், அல்லது அந்த வார்த்தை அல்லது செயல் நம்பிக்கையின்மையை ஏற்படுத்தும் என்று ஒருவர் தெரியாத நிலையில் அதை செய்தாலும் அது அவர் காபிர் ஆகுவதற்கு காரணமாகின்றது. இந்த வகையான அவநம்பிக்கை **குஃப்ர்-அல் -ஜஹ்லீ** என்று அழைக்கப்படுகிறது. ஏனெனில், ஒவ்வொரு முஸ்லிமுக்கும் இஸ்லாமிய அறிவை தேடி கற்றுக்கொள்ளுமாறு ஏவப்பட்டு உள்ளார்கள். அதை கற்றுக்கொள்வது ஃபார்ளு ஆகும். கற்றுக்கொள்ளாமல் இருப்பது மன்னிப்பது என்பதற்கு பதிலாக பெரும் பாவமாகும். குஃப்ர்-அல்-இனாதி மற்றும் **குஃப்ர்-அல் -ஜஹ்லீ** இனால் ஈமானை இழப்பவர்கள் தங்களின் நிகாஹ்வையும் இழக்க நேரிடும். இந்த வழியில் தனது நிகாவை இழந்த முஸ்லீம் ஆண் செய்ய வேண்டியது, முதலில் அவரது மனைவியிடமிருந்து ஒரு வாய்மொழி பதிலாள்(ப்ரோக்சி) ஒன்றை பெற்று அவரது நிகாவை '**தஜ்தீத்-இல்-நிகாஹ்'** செயல்முறை மூலம் புதுப்பிக்கப்பட வேண்டும். இது இரு ஆண் சாட்சிகள் அல்லது ஜமாஅத்தார் முன்னிலையில் மஸ்ஜிதில் செய்யப்பட வேண்டும். தஜ்தீது(நிகாஹ்வை புதுப்பித்தல்)க்கு **ஹுல்லா** [1] அவசியமில்லை; இதற்கு ஒரு முஸ்லிம் இரண்டு முறைக்கு மேல் செய்ய வேண்டி இருந்தது.

ஒரு முஸ்லீம் தவறாக ஒரு அறிக்கையை வெளியிட்டு நம்பிக்கையற்ற நிலையை ஏற்படுத்துகிறார் என்றால் அல்லது புரிந்துகொள்ள கூடிய வகையில் அல்லது வற்புறுத்தலினால் அவ்வாறு செய்தால், அவர் மதம் மாறியவராகவோ அல்லது நிகாஹ்வை இழந்தவராகவோ ஆக மாட்டார். ஒரு நபர் அறிந்த நிலையிலேயே ஒரு அறிக்கையை வெளியிட்டு அது இஸ்லாமிய

அறிஞர்களுக்கிடையே மதம் மாறுவதற்கான செயல்களில் உள்ளதா என்பதில் கருத்து வேறுபாடு உண்டாகுமானால் அவர் மதத்தை துறந்தவராக மாட்டார். ஆனால் அவர் தவ்பா செய்யவேண்டும். அவர் இஸ்திஃபார் செய்வதுடன் தனது பாதுகாப்பிற்காக தனது நிகாஹை தஜ்தீது செய்யவேண்டும். ஒரு மஸ்ஜிதுக்கு செல்லும் முஸ்லிம் ஒருவர் குஃப்ர்-அல்-இனாதி அல்லது குஃப்ர்-அல்-ஜஹ்லீ என்பவற்றுக்குள் விழுவார் என்று எதிர்பார்க்க முடியாது. இருப்பினும், இறுதியாக மேற்கோள் காட்டப்பட்ட சாத்தியக்கூறு மனிதர் மட்டுமே என்பதால், மற்றும் ஒரு முஸ்லீம் எந்த நேரத்திலும் நபிக்கை சார்ந்த சச்சரவுகளை சந்திக்கலாம்.

மஸ்ஜிதுகளில் தொழுகைக்கு இமாமத் செய்யும் இமாம்கள் ஜமா'அத் தொழுகைகளில் ஒரு குறிப்பிட்ட பிரார்த்தனையை ஓதுவார்கள்

________________________________

[1] பரிந்துரைக்கப்பட்ட பிரார்த்தனை: "**அஸ்தஃபிருல்லாஹ் அல் அளீம் அல்லதீ லா இலாஹ இல்லா அந்த ஹுவல் ஹய்யுல் கய்யூம் வ அதூபு இலைஹி**"

பின்னுள்ளவர்கள் மீண்டும் ஓதுவது, இதன் மூலம் ஹதீதில் கூறப்பட்ட கட்டளைகளை நிறைவேற்றப்படுகிறது . **"லா இலாஹ இல்லள்ளாஹ்" என்று கூறுவதன் மூலம் தாஜ்தீதை நிறைவேற்றுங்கள்"**. அந்த பிரார்த்தனை பின்வருமாறு: "**அல்லாஹும்ம இன்னீ உரீது அன் உஜத்தித்-அல் ஈமான வன்நிகாஹு தஜ்தீதன் பி(b) கவ்லி லா இலாஹ இல்லள்ளாஹ முஹம்மதுன் ரசூலுள்ளாஹ் என்று கூறுவதன் மூலம் தஜ்தீதுல் ஈமானை நிறைவேற்றுங்கள்**"

"அஹ்லுஸ்-சுன்னத் அறிஞர்கள் கற்பித்த நம்பிக்கையுடன் ஒத்துப்போகாத எந்த நம்பிக்கையும் சரியான வழியில் இருந்து வழி தவறல் (**பித்'ஆ**) அல்லது **ளலாலத்**). பித்'ஆ வை கொண்டிருப்பது நிராகரிப்புக்கு அடுத்த தாகவுள்ள பெரும்பாவமாகும். பித்'ஆவை முஸ்லிம்களுக்கிடையே பரப்புவதும் ஊக்கு விப்பதும் இந்த பாவத்தை பலமடங்காக பெருக்கும்.

அத்தகைய மோசமான அக்கிரமச் செயல்களை புரியும் வழி தவறிய குற்றவாளிகளுக்கு கடுமையான தண்டனைகளை வழங்குவதுடன் கல்வி அறிவு படைத்தவர்களுக்கு அதற்கு எதிரான அறிவுரைகளும், பொது மக்களுக்கு அவர்களின் வழிதவறிய நூல்களை படிப்பதிலிருந்து தவிர்ந்து கொள்ளுமாறும் ஆலோசனை வழங்குவதும் ஒரு அரசாங்கத்தின் பொறுப்பாகும். ஒருவர் அவர்களின் பொய்கள், அவதூறுகள், மற்றும் ஆத்திரமூட்டும் உரைகளினால் ஏமாற்றப்படாமல் இருக்க மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தற்போது, "லா-மதுஹபிய்யாக்கள்", மவ்தூதி, செய்யித் குத்ப், மற்றும் அறிவு குறைந்த வழிகேடர்கள் தப்லீக் ஜமாத்தினர், போன்ற வழி தவறியவர்களை பின் பற்றுபவர்கள், மற்றும் கடைசியாக போலி வழிகாட்டிகளான பொய்யான ஷெய்குமாரை பின்பற்றுபவர்கள். பல்வேறு போர்வையில் தோன்றும் அவர்கள் அவர்களின் ஊழல் மற்றும் வழி தவறிய நம்பிக்கைகளை பரப்புவதற்காக எல்லா வகையான வழிகளையும் பயன்படுத்துகிறார்கள்.

அவர்கள் முஸ்லிம்களை ஏமாற்றுவதற்காகவும், கற்பனை செய்யமுடியாத மற்றும் சிந்திக்க முடியாத அனைத்து வகையான தந்திரங்களையும் தயாரித்து தங்கள் சொந்த நஃப்ஸினதும் ஷைத்தானின் உதவியுடன் "அஹ்லுஸ் -சுன்னத்" தை அழிக்க மிகவும் முயற்சி செய்கிறார்கள். அவர்கள் "அஹ்லுஸ்

சுன்னத்துக்கு”எதிரான பனிப்போரை அவர்களின் தனிப்பட்ட செல்வங்களை யும் மில்லியன் கணக்கான டாலர்களையும் செலவிடுவதன் மூலம் நடத்தி வருகின்றனர். முஸ்லிம் இளைஞர்கள் இஸ்லாத்தையும் சரியான(ஹக்) பாதையையும் அஹ்லுஸ் -சுன்னத் அறிஞர்களிடமும் அவர்களின் புத்தகங்கள் மூலமும் கற்றுக் கொள்ள வேண்டும். அப்படி கற்காதவர்கள், பித்'அத் (மதவெறி) மற்றும் ளலாலத்(வழிகேடு) என்னும் வெள்ளத்தில் மூழ்கி இவ்வுலகிலும் மறு உலகிலும் ஏற்படும் பேரழிவுகளையும் முடிவுறாத துன்பத்தையும் அனுபவிக்க நேரும். பித்'அத்தை உடையவர்களின் தலைவர்கள் குர்'ஆன் ஹதீது அடிப்படையில் உண்மையை வெளிப்படுத்துவது என்ற போர்வையில் அதற்கு சான்றாக அவர்களால் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்ட மற்றும் வேண்டு மென்றே சேர்ப்பதனால் திரிவு படுத்தப்பட்ட குர்னின் மற்றும் ஹதீதின் விளக்கங்களை அவர்களின் வழிதவறிய கொள்கைக்கு ஆதாரமாக முன்வைக் கின்றார்கள். குர்ஆனுக்கு இவ்வாறு அநியாயமாக கொடுக்கப்பட்ட அர்த்தங்களைப் பயன்படுத்தி அவர்களின்( வழி தவறிய) கருத்துக்களை குர்'ஆன் ஆயத்துகள் மற்றும் ஹதீதுகள் மூலம் உறுதியாக நிரூபிப்பதாக அவர்கள் கூறுகிறார்கள். உண்மையை(ஹக்) அறிந்தவர்கள் மட்டுமே இவர்களிடமிருந்து தங்களை பாதுகாத்துக் கொள்ள முடியும். உண்மையை அறியாதவர்களுக்கு அவர்களின் வழி தவறிய பொறிகளிலும் சுழல்களிலும் விழக்கூடாது என்பது இது கிட்டத்தட்ட சாத்தியமற்றது என்பதே உண்மை. வழிதவறிய மக்கள் அவர்களது நம்பிக்கை இஸ்லாமிய அறிஞர்களான முஜ்தஹிதுகள் இமாம்களினால் ஏகமனதாக அறிவிக்கப்பட்ட குர்ஆன் அல்-கரீம் மற்றும் ஹதீத் ஷரீபின் நம்பிக்கை சம்பந்தமான போதனைகளுக்கு எதிராக இருக்குமானால் இந்த மக்கள் காஃபிர்கள் ஆகிவிடுவார்கள். இந்த வகையான அவநம்பிக்கை (நிரகரிப்பு) "இல்ஹாத்" என்றும் அந்த நிலைக்கு வீழ்ச்சி அடைபவர்கள் "முல்ஹித்" என்றும் அழைக்கப்படுகின்றது. ஈமானைப் கற்பிக்கும் கிதாபுகள் "முல்ஹித்களை" இறைவனால் அனுப்பப்பட்ட மதங்கள் இல்லாத காபிர்களாக (முஷ்ரிக்) கருதப்படுவதாக கூறுகின்றன.

பித்'அத் உடையவர்கள் செய்யும் தவ்பாவையும் அல்லாஹு தஆலா ஏற்றுக் கொள்வான். அத்தகையவர்கள் தவ்பா செய்வதற்கு அஹ்ல்-சுன்னத் போதனை களை சுருக்கமாக கற்று அவர்களின் நம்பிக்கையை அதன் கோட்பாடுகளுக்கு ஏற்ற மாதிரி சரி செய்து கொள்ளவேண்டும். (இஸ்லாத்தின் உண்மையான நம்பகமான போதனைகள் அஹ்ல்-சுன்னத் என அழைக்கப் படுகின்றது, அவர்களின் முந்தைய மார்க்கத்துக்கு எதிரான கொள்கைகளை கைவிட்டு உண்மையான மனந்திரும்புதலுடன் தவ்பா செய்ய வேண்டும்.

கட்டாய கடமைகளின் முக்கியத்துவத்தை நம்பும் ஒருநபர் கடமைகள், முன்னர் உரையில் விளக்கியது போல அவை பர்ளு, பராயில் என்று அழைக்கப்படு கின்றன. ஆனால் சோம்பல் காரணமாக அவற்றைச் செய்யாது விடுபவர் மதத்தை துறந்தவராக மாட்டார். அவருடைய நம்பிக்கையை இழக்க மாட்டார். எனினும், அந்த கடமைகளை செய்யாத முஸ்லீம் ஒருவர் அந்த அலட்சியம் காரணமாக இரண்டு கடுமையான பாவங்களை செய்கின்றார். முதலாவது பாவம் அந்த கட்டாய கடமைக்கு ஒதுக்கப்பட்ட நேரத்தை வழிபாடு இல்லாமல் செலவிடுவது,அதாவது, ஒரு கட்டாய வணக்கத்தை ஒத்திவைத்தல். இந்த பாவம் மன்னிக்கப்படுவதற்கு, அவர் தவ்பாவை செய்வது அவசியம், அதாவது மனம் வருந்துவது, மீண்டும் தாமதிக்க வேண்டாம் என்று முடிவு செய்வது.

இரண்டாவது  கடமைப்பட்ட கடமையைச் செய்யாத பாவம்.  இந்த பாவம் மன்னிக்கப்படுவதற்கு அவர்  விடுபட்ட கட்டாய வணக்கங்களை  சீக்கிரம் ‘களா’ செய்யவேண்டும்.  இல்லையெனில், எந்தவொரு (மன்னிக்க முடியாத) தாமதமும் மற்றொரு கடுமையான பாவத்தை சேர்க்கும்.

[சையித் அப்துல்ஹகீம் எஃபெண்டி ‘ரஹிமஹுல்லாஹு தஆலா ஒரு சிறந்த இஸ்லாமிய அறிஞர்; முஜத்தித் (இஸ்லாத்தின்  தூய்மையான அசலை மீட்பவர்) இஸ்லாமிய பதினான்காம் நூற்றாண்டில்; ஒரு நிபுணர் இஸ்லாத்தின் பாத்தினி (ஆன்மீக)அறிவியல் மற்றும் ளாஹிரீ (வெளிரங்கமான) அறிவியல்; மதரசத்துல் -முத்தகாசிசீன் இஸ்லாமிய கல்வி நிலையத்தின் தசவ்வுஃப் துறை தலைவர் பேராசிரியர். அவர்கள் அவரது சொற்பொழிவுகளிலும், பிரசங்கங்களிலும், இஸ்தன்புளில் மஸ்ஜிதில் மார்க்க ஸொஹ்பத்களிலும்

---

[1] தயவுசெய்து முடிவற்ற பேரின்பத்தின் ஐந்தாவது பாசிக்கலின் பன்னிரண்டாவது அத்தியாயத்தைப் பார்க்கவும்

பின்வரும் அறிக்கையை மீண்டும் மீண்டும் வலியுறுத்தினார்கள்.: “கட்டாய கடமையை அதன் குறிப்பிட்ட நேரத்திற்குள் எந்தவிதமான காரணமும் இல்லாமல் செய்யாமல் விடுவது ஒரு பெரிய பாவமாகும். அது இஸ்லாமிய கிதாபுகளில் ஒரு தவிர்க்கப்பட்ட தொழுகையை விரைவில்  ‘களா’ செய்யாமல் இருப்பது  மிகப்பெரிய பாவம் என்று எழுதப்பட்டுள்ளது.”

முந்தைய பந்தியில் இந்த உண்மையும் எழுதப்பட்டுள்ளது.  இஸ்லாம்  ஒரு குறிப்பிட்ட கடமைக்கு நேரம் ஒதுக்கியுள்ளது. அந்த நேரம் முடிவடைந்து அந்த கடமை செய்வதற்கு போதிய நேரம் ஒரு அலகு எனவும் அந்த கடைமையை செய்யாமல் தவிர்க்கும் ஒவ்வொரு அலகு நேரமும் பாவங்கள் பல மடங்குகளால் பெருகும் என்று கூறப்பட்டுள்ளது. இவ்வாறு  நேரம் செல்ல செல்ல அலட்சியத் தில், பாவம் இரட்டிப்பாகும், அளவிடப்படாத நிலையை அடைகிறது மற்றும் நினைத்துப்பார்க்க முடியாத தொகை. இவ்வாறு, செய்யாத பாவம் கட்டாய கடமையின் “களா” பல மடங்குகளாக  அதிகரிக்கிறது.

அவ்வாறு செய்யாத ஒரு நபரின் நிலைமையை உணர வேண்டும். அவரது ஐந்து தினசரி கட்டாய "தொழுகை " மாதங்களுக்கு அல்லது ஆண்டுகளுக்கு செய்யாதவர் நிலையை எண்ணிப்பார்க்க வேண்டும். தொழுகைகளை களா செய்யாமலும் தவ்பா செய்யாமலும் இதற்குரிய பாவம் மன்னிக்கப்பட மாட்டாது என்பதை ஒருவர் உணர வேண்டும். ஒருவர் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள எல்லா வகையான வழிகளையும் தேட வேண்டும்.

உண்மையான நம்பிக்கை கொண்ட எவரும் மற்றும் பொது அறிவுஉள்ள எவரும் அவரது தவிர்க்கப்பட்ட தொழுகைகளை  களா செய்ய முயற்சிக்க வேண்டும். நரகின் கொடூரமான தண்டனையிலிருந்து தன்னைக் காப்பாற்று வதற்காக இரவும் பகலும் விடுபட்ட பர்ளான "தொழுகைகளை களா செய்து முடிக்க வேண்டும்.  ஒருவர் ஒரு நேர தொழுகையை சோம்பல் மற்றும் எந்த காரணமும் இல்லாமல் செய்யாமல் விட்டதற்காக  நரகத்தில் எழுபதாயிரம் ஆண்டுகள் தண்டனை அனுபவிக்க நேரிடும் என்று அறிவிக்கப்படுகிறது. ஒரு முஸ்லிம் தொழுகையை விட்டதற்காக அவர் நரகில் அனுபவிக்கும் தண்டனையின் அளவை சிந்திக்கும்போது அவர் தூக்கத்தை இழப்பார், சாப்பிடுவதையும் குடிப்பதையும் நிறுத்துவார், பெரும் துன்பத்தை உணருவார்.

ஆம், கட்டாயமான (பர்லான) தொழுகையை அங்கீகரிக்காத எவரும் ஒரு காஃபிர் மற்றும் ஈமானை துறந்தவர் ஆகிவிடுவார். ஒரு ஈமானை விட்டவர் நரகத்தில் என்றும் முடிவில்லாது தண்டிக்கப்படுவார். அத்தகைய நபர் நரகத்தை அல்லது தண்டனை நம்பவில்லை அல்லது அல்லது கட்டாய தொழுகையின் முக்கியத்துவதையும் நம்பவில்லை. அவர் இந்த உலகில் ஒரு மிருகத்தனமான வாழ்க்கையை நடத்துகிறார். உலக இன்பங்களை பெற்றுக்கொள்வதற்காக பணத்தை சேகரிப்பது தவிர அவர் எதையும் யோசிப்பதில்லை. மற்றவர்கள் எவ்வாறு பாதிக்கப்படுவார்கள் அல்லது துன்பப்படுவரார்கள் என்பதைவிட பணத்தைப் பெறுவதே வாழ்க்கையில் அவரது கொள்கை. அவருடையது இன்பங்கள் முழு மனிதகுலத்தின் தியாகத்தில் தான் பெறக்கூடிய என்றாலும் அவர் கவலைப்படுவது இல்லை. அவருக்கு நம்பிக்கையோ ஞானமோ இல்லை. இந்த வகைநபருக்கு எந்த கருணையும் இல்லை. அவர் மிருகங்கள் மற்றும் விலங்குகளின் விட கடுமையான ஆபத்தானவர். அவர் மனிதநேயம் பற்றி பேசுகிறார், கருணை, மற்றும் நன்மை என்பது காற்றில் எழுதுவது போன்றது. அவை தனது பசியையும் உலகத்தையும் பூர்த்தி செய்வதற்காக அவர் மற்றவர்களுக்கு ஏற்படுத்தும் பொறிகளாகும்.

வருடக்கணக்காக செய்யாத தொழுகைகளை களா செய்வது கிட்டத்தட்ட சாத்தியமற்றது. மனிதகுலம் ஷரியத்திலிருந்து விலகிவிட்டது என்றால் உலகில் எந்த பரக்கத்தும் இல்லை. ஏனென்றால் அவர்கள் அல்லாஹ்வின் கட்டளை களுக்குக் கீழ்ப்படிவதை நிறுத்திவிட்டு தீங்கு விளைவிக்கும் ஹராமன செயல்களில் மூழ்கியுள்ளார்கள். இஸ்லாம் கற்பிக்கின்ற அழகுக்கும் அமைதிக்கும் வழிவகுக்கின்ற பாதை யிலிருந்து அவர்கள் புறப்பட்டார்கள். வாழ்வாதாரம் (ரிஸ்க்) பற்றாக்குறையாகி விட்டது. சூரா தாஹா வின் நூற்று இருபத்தி நான்காவது ஆயத் கரீமா தெரிவிக்கின்றது: "**ஆனால் எவர் என்னைவிட்டு (என் செய்தி) இலிருந்து விலகிச் செல்கிறாரோ அவருக்கு நிச்சயமாக வாழ்க்கை குறுகியது**"(20-124) உண்மையில், ஈமான், உணவு, ஆரோக்கியம், உயிர்வாழ்வு, உணவின் வாழ்வாதாரம், மனிதகுலத்தின் வாழ்வாதாரம் மற்றும் கருணை போன்ற பல வகைகளில் குறைவு ஏற்பட்டுள்ளது. ஒரு பழமொழி :"ஹுதா (அல்லாஹு தஆலா அவனுடைய அடிமையை ஒருபோதும் துன்புறுத்துவதில்லை. எல்லோரும் அவதிப்படுவது அவருடைய சொந்த வினைக்குரிய பதில்." இது சூரா நஹ்லின்[1] முப்பத்தி மூன்றாவது ஆயாத் கரீமா விலிருந்து பெறப்பட்டது. அல்லாஹு தலா, மற்றும் அவனுடைய தூதர் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம், மற்றும் இஸ்லாம் மார்க்கத்தை பற்றிய பொதுவான உணர்வு இல்லாமையின் விளைவாக தற்போதைய பரந்துபட்ட நம்பிக்கையின்மை எனும் இருளின் மத்தியில் வாழும் ஒரு குடும்பத்தில் ஆண்களும் பெண்களும் சமமாக எல்லோரும் நாள் முழுக்க உழைத்தாலும் வாழ்வாதாரத்தில் பற்றாக்குறை அதனால் ஏற்படும் துன்பங்களையும் காணக்கூடிதாக இருக்கின்றது.

மக்கள் அல்லாஹு தஆலாவில் நம்பிக்கை(ஈமான்) கொண்டு இஸ்லாத்தை நடைமுறையில் பின்பற்றி அவன் இட்ட கட்டளைகளை மதித்து மனிதநேயம், மற்றும் அவனுடைய தூதரின் அழகிய தார்மீக பண்புகளினால் தங்களை அலங்கரிக்க இல்லையென்றால் வழி தவறுவதையும் அதனால் ஏற்படும் பேரளிவுகளையும் தடுப்பது மிகவும் கஷ்டமானது. மேற்கூறிய கடினமான

நிலைமைகளின் கீழ் கடந்த காலத்தின் செய்யப்படாத தொழுகைகளை 'களா' தொழுகைகளை திருப்பிச் செலுத்துவதற்காக தினமும் சுபகு நேர தொழுகை தவிர்ந்த ஐந்துஅல்லது நான்கு வேளைகளில் சுன்னத் தான தொழுகைகளுக்கு பதிலாக "களாத் தொழுகைகளை செய்யுங்கள். அதை செய்வதற்கு ஒருவர் அதன் குறிப்பிட்ட நேரத்திற்குள் செய்யாத ஆரம்பகால தொழுகைகளை முதலில் செய்வதற்கு ஒருவரின் நிய்யத்தை உருவாக்க வேண்டும். இந்த முறையை பின்பற்றுவதன் மூலம் ஒவ்வொரு நாளும், ஒரு நாள் தொழுகையை களா செய்யமுடியும். மற்றும் அவர் "சுன்னத்தான தொழுகைகளையும் செய்வார். இந்த விடயம் பின்னர் விரிவாகக் கையாளப்படுகிறது. மேலும், முடிவில்லாத பேரின்பத்தின் (Endless Bliss) நான்காவது பகுதியைப் பார்க்கவும்.

___________________________________

[1] ஆயத் கரீமாவின் இறுதி பகுதி பின்வருமாறு கூறுகிறது: **"... ஆனால் அல்லாஹு தஆலாஅவர்களுக்கு தீங்கு செய்யவில்லை, அவர்களே தங்கள் சொந்த நஃப்ஸுக்கு அநீதி இழைத்தார்கள். "** (16-33)

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு "ஃபிக்ஹு" நூல்கள் எழுதப்பட்டபோது, முஸ்லிம்கள் வலுவான நம்பிக்கை(ஈமான்) உடனும் அல்லாஹ்மீது பெரும் பயத்துடனும் இருந்தனர். அவர்களின் உள்ளத்தில் நரகத்தின் பயம் இருந்தது. யாரும் தொழுகைகளை அதற்குரிய நேரத்தில் செய்யாமல் இருக்க கற்பனை செய்து கூட பார்க்க முடியாது. ஒரு நபர் வேண்டுமென்றே தொழுகைகளை நிறைவேற்றாமல் இருக்ககூடும் என்று நினைத்துப் பார்க்க முடியாது. அந்த காலங்களில், ஒருசில தொழுகைகள் மட்டுமே தவிர்க்கமுடியாத காரணங்களு க்காக தவறவிடகூடியதாக இருந்தது. இது ஒரு தொழுகையை விட்டவருக்கு அது மிகவும் துன்பமாகவும் கவலையாகவும் இருந்தது.

தொழுகையை தவற விடுவதற்கான காரணங்கள் பின்வருமாறு: தூக்கத்திலிருந்து எழுந்திருக்க முடியாமல்; மறதி; யுத்தம் அல்லது பிரயாணத்தில் இருந்து தொழுவதற்கு கூட வாய்ப்பு இல்லாமை என்பன. இந்த காரணங்களில் ஒன்றுக்காக தொழுகை தவறி விடுவது பாவம் இல்லை. இருப்பினும், ('உத்ர்) காரணம் விரைவில் இல்லாமல் போய்விடும். அதனால், தவறிய தொழுகையை விரைவாக செய்து முடிக்க வேண்டும். அதை செய்வது கடமையாகும். ஒருவர் தனது குடும்பத்தை பராமரிக்க போதுமான பணம் சம்பாதிப்பதற்காக தவறவிட்ட களா தொழுகையை தாமதப்படுத்த அனுமதிக் கப்படுகிறது. ஒருவர் ஏற்றுக்கொள்ளக்கூடிய காரணத்திற்காக தவறவிட்ட களா தொழுகையை '**சுன்னத் முஆக்கதா**' வுக்கு பதிலாக தொழவேண்டியது அவசியமில்லை.விரிவாக கூறப்போனால், சுன்னத் முஆக்கதா[1] வுக்கு பதிலாக களா'வான பர்ளு தொழுகையை நிறைவேற்ற வேண்டிய அவசியம் இல்லை.

பிக்ஹு நூலில் (உத்ர்) என்பதன் பொருள் இஸ்லாம் ஏற்றுக்கொள்ளக்கூடிய காரணங்களுக்காக பர்ளு தொழுகை தவிர்க்கப்பட்டது. (உத்ர்) இல்லாமல் பர்லான தொழுகை தவறி விடப்பட்டால் அதை உடனடியாக நிறைவேற்ற வேண்டும். எனவே இந்த வகையான தொழுகைகள் சுன்னத்தான தொழுகை க்கு பதிலாக செய்யப்பட வேண்டும்.இமாம் ரப்பானி கததசல்லாஹு சிர்ரஹு அவர்களின் நூற்றி இருபத்தி மூன்றாம் கடிதத்தில் கூறுகிறார்கள், மேலதிக நபிலான வணக்கம் பர்லான வணக்கத்தை தடுக்குமானால் அது தொழுகையே இல்லை.அது தீங்குவிளைவிப்பதில் நேரத்தை செலவிடுவதாகும் (மாலாயானி)".

[சிறந்த மார்க்க அறிஞர் இப்னு ஆபிதீன் 'ரஹ்மத்துல்லாஹி' அலைஹி' கூறுகிறார்கள்; நீங்கள் மஸ்ஜிதுக்குள் நுழையும்போது இரண்டு ரக்க'ஆத்துகள் தொழுவது சுன்னத்தாகும். அது தஹியத்துல்-மஸ்ஜித்' என்று அழைக்கப்படும். மஸ்ஜிதுக்குள் நுழையும்போது, பர்ளு ,சுன்னத்து, களா வான தொழுகைகளை எந்த வகையானாலும் தொழுவது தஹியத்துல்-மஸ்ஜித்' ஆக இருக்கும். நீங்கள் அவ்வாறு செய்யும்போது தஹிய்யத்துல் மஸ்ஜிது தொழுகைக்கு நிய்யத்து வைக்க வேண்டிதில்லை. பரிந்துரைக்கப்பட்ட குறித்த நேரத்தில் இரட்டை நிய்யத்துடன், அதாவது ஃபார்ளு, மற்றும் சுன்னத் என இரண்டுக்கும் நிய்யத் செய்து தொழுகையை நிறைவேற்றுவது அவ்வாறல்ல. இந்த விஷயத்தில் இது பர்ளான தொழுகை மட்டுமே சஹீஹாக இருக்கும்.

___________________________________

[1] ரசூலுள்ளாஹ் 'ஸல்லள்ளாஹு' அலைஹி வஸல்லம்'அவர்கள் தினசரி ஐந்து நேர பர்ளான தொழுகைக்கு மேலதிகமாக நிறைவேற்றிய தொழுகைகள் 'சுன்னத்' என்று அழைக்கப்படுகின்றன. இஸ்லாமிய அறிஞர்கள் சுன்னத்களை இரண்டு வகைப்படுத்துகின்றனர். சுன்னத் முஅக்கதா அதாவது உறுதியான 'சுன்னத் இது பர்ளுக்கு நெருக்கமானது. மற்றது சுன்னத் கைர்முஅக்கத இது அதிகமாக அறிவுறுத்தப்படாதவை.

ஏனெனில், ஃபார்ளு (கடமையானது) மற்றும் நஃபிலான (மேலதிகமான) இரண்டும் வேறுபட்டவை. ஒரு மஸ்ஜிதுக்குள் நுழைந்ததும் நிறைவேற்றப்படும் தொழுகை 'தஹியத்-உல்-மஸ்ஜித்' என்பதையும் குறிக்கிறது என்றாலும் அது அந்த நேரத்தில் செய்யப்படும் தொழுகையின் தன்மையை பொறுத்தது. அந்த நேரம் மேலதிக நிய்யத் இல்லாமல் நிகழ்த்தப்படும் எந்தவொரு தொழுகையும் அதே வகையை குறிக்கும். இருப்பினும், தவாபை(மறுமையில் வெகுமதி) பெறவேண்டுமானால் நிய்யத் செய்வது அவசியமாகின்றது. ஒரு நிய்யத் இல்லாமல் நிகழ்த்தப்படும் எந்தவொரு வணக்கத்திற்கும் தவாப் வழங்கப் படமாட்டாது. 'சுன்னத்தான தொழுகை என்பது பர்ளான தொழுகைக்கு மேலதிகமாக செய்யப்படுவது'. ஒரு பர்ளான தொழுகைக்கு முன் அல்லது பின்னர் செய்யப்படும் களா தொழுகை, சுன்னத்தான தொழுகையின் வரையறைக்கு பொருந்துவதால், களாவாக நிறைவேற்றப்பட்ட தொளுகையும் சுன்னத்தாண தொழுகையும் ஒரே வகைக்குள் அமைகின்றன. அறிஞர் இப்னு ஆபிதீன் 'ரஹ்மத்துல்லாஹி' அலைஹி' அவர்களின் படி, களாவான தொளுகையை சுன்னத் தொழுகையின் நேரத்தில் நிறைவேற்றுவதனால் சுன்னத் தொழுகையும் நிறைவேறும். ஆகையால், சுன்னத் தொழுகைக்குரிய நேரத்தில் களாவை தொழுவது சுன்னத்தை விடுவது அர்த்தமல்ல. களாவுக்கும், சுன்னத்துக்கும் சேர்த்து நிய்யத் செய்யும்போது இரண்டுக்குமான தவாப் கிடைக்கும். விடுபட்ட தொழுகைகளை களா செய்ய விரும்பும் ஒருவர் மேலே விபரிக்கப்பட்டவாறு செய்யத் தொடங்கி பின்னர் கடுமையான நோயினால் பாதிக்கப்பட்டால், அவர் இறந்த பிறகு அவருக்காக[1] ஒரு "சலாத்-கஃப்பாரத்" செய்யமாறு இறுதி உடன்படிக்கை வசிய்யத் ஒன்றை செய்ய வேண்டும். அவரது உடன்படிக்கை நிறைவேற்றுபவர் **வலி** அல்லது அவரது வாரிசுகளில் ஒருவர் அவரது **வசிய்யத்தை** கட்டாயம் நிறைவேற்ற வேண்டும். அந்த தொளுகை யின் வாஜிபுகளில் ஒன்று விடுபட்டால் அல்லது மக்ரூஹான செயல் ஒன்றை செய்தால் அந்த தொழுகையை குறிப்பிட்ட கால எல்லைக்குள் திரும்ப தொழுவது வாஜிப்(கடமை) ஆகும். சலாத்துல் கஃப்பாறா தொழுகையில் ஏதாவது செயல் அதை செல்லுபடியாகாமல் ஆக்குமாயின் அதையும் குறிப்பிட்ட நேரத்திற்குள் நபிலான தொழுகையையும் திருப்பி தொழுவது வாஜிப். செலுத்தப்படாத கட்டாயதர்மம் (ஜகாத்), "சதாக்கத்துள் பித்'ர், மற்றும்

நிறை வேற்றாத “நஸ்ர்” மற்றும் “குர்பான்” (விலங்கு தியாகம்) என்பவற்றை ஈடு செய்வதற்கு களா செய்வது அவசியம். பிற்காலத்தில் ஏழையாக மாறுகின்ற ஒரு மனிதன் அவற்றை **ஹீலா-அல் ஷரிய்யா** முறையை பின்பற்றி களா செய்ய வேண்டும். அவர் ஏழையாக மாறாவிட்டால் அவர் ஹீலா-அல் ஷரிய்யா முறையை[2] பாவிப்பது மக்றூஹ் ஆனது. அல்லாஹு஁ தலாவுக்கும் அடிமைக்கும் இடையிலான மற்றவர்களின் உரிமைகளை மீறுவது சம்பந்தப்படாத பாவங்கள் வெறுமனே இரகசியமாக ஒரு தவ்பா செய்வது தேவைப்படுகிறது.

---

[1] விரிவான தகவலுக்கு; முடிவில்லாத பேரின்பத்தின் ஐந்தாவது பாகம் இருபத்தியோராம் அத்தியாயத்தைப் பார்க்கவும், மற்றும் தவிர்க்கப்பட்ட தொழுகைகள் களா செய்வது எப்படி என்று நான்காவது பாகம் இருபத்தி மூன்றாம் அத்தியாயத்தில் நீளமாக விளக்கப்பட்டுள்ளது

[2] ஹீலா-இ-ஷரிய்யா என்பது இஸ்லாமிய அறிஞர்களால் கற்பிக்கப்படும் ஒரு முறையாகும், இது ஒரு ஒரு குழப்பமான நிலை ஏற்பட்டால் முஸ்லிம் பயன்படுத்தலாம், எ.கா. ஒரு கடினமான சூழ்நிலை இருந்து தன்னை காப்பாற்ற அவருக்கு ஒரு மதக் கடமை செய்ய இயலாது அல்லது மதத் தடையைத் தவிர்ப்பது. இது ஸ’ஆதத் அல் அபெதிய்யா என்ற துருக்கிய நூலின் 301,844,859 பக்கங்களை விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

மூன்றாவது நபருக்குத் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை, எ.கா. பிராந்தியத்துக்குரிய இமாம். கிறிஸ்தவர்களிடையே பாவமீட்சி, அதாவது போதகரிடம் இருந்து பாவ மன்னிப்பு பெறுதல் சுதந்திரத்தை வாங்குதல் போன்றவை நடைமுறையில் உள்ளன. இஸ்லாம் அந்த வகையான எதற்கும் இடமளிக்கவில்லை. மற்றவர்களின் உரிமைகளை மீறாத பாவங்களுக்கு உதாரணம் ஜுனுபாக (இதற்கு குளித்தல் அவசியமாகிறது) இருப்பவர் குர்’ஆனை ஓதுவது;, மஸ்ஜிதில் உலக விவகாரங்களை பேசுவது, உண்ணுவது,குடிப்பது, தூங்குவது; வுளூ இல்லாமல் குர்’ஆணை தொடுவது; இசைக்கருவி களை இசைத்தல்; மதுபானம் பாவித்தல்; விபசாரத்தில் ஈடுபடுவது; பெண்கள் அவர்களின் அவ்ரத்தை மறைக்காமல் வெளியில் செல்வது (இஸ்லாம் அவர்களின் உடலின் பாகங்கள் மற்றும் அவர்களின் தலை, கைகள், கால்கள் மற்றும் முடி போன்றவற்றை மறைக்க கட்டளையிடுகிறது); விலங்குகளின் உரிமைகளை மீறுவது சம்பந்த ப்பட்ட பாவங்கள் இருந்து விடுபடுவது மிகவும் கடினம். ஒரு விலங்கை அநியாயமாக கொல்வது பாவம், அடிப்பது, அதன் முகத்தில் அறைவது ,அதன் ஆற்றலைவிட மேலாக நடக்க விடுவது; அதை அதிக சுமையை சுமக்க வைப்பது; மற்றும் அல்லது அதற்கு தேவைப்படும் போது அதற்கு உணவளிக்க அல்லது தண்ணீரைக் கொடுக்காமல் இருப்பது; தேவைகள். இத்தகைய பாவங்கள் தவ்பா மற்றும் வருந்துவது இஸ்திஃபார், செய்வது மற்றும் பிரார்த்தனைகள் செய்வது.
மற்றவர்களின் உரிமைகளை மீறுவதில் ஐந்து வகைகள் உள்ளன:

1. மாலீ(சொத்து, நிதி தொடர்பானது); 2. நப்சீ (நப்ஸ் தொடர்பானது); 3. இர்சீ(மரியாதை தொடர்பானது); 4. மஹ்ரமீ (மஹ்ரம்கள் தொடர்பானது); 5. தீனீ(மார்க்கம் தொடர்பானது).

சொத்துக்கள் தொடர்பான மனித உரிமை மீறல்களுக்கு எடுத்துக்காட்டுகள்: திருட்டு, மிரட்டி பணம் பறித்தல்; மோசடி மூலம் அல்லது பொய் ஏதாவது விற்பனை செய்வது; கள்ளப் பணம் செலுத்துதல்; ஒருவரின் சொத்துக்கு சேதத்தை ஏற்படுத்துவது; தவறான சாட்சியம்; துரோகம்; லஞ்சம் என்பன.

இந்த வகை உரிமை மீறல்களுக்கு தவ்பா செய்வதுடன் பாதிக்கப்பட்ட நபரின் மன்னிப்பை பெறுவதும் அவசியம். மீறல் என்பது ஒரு சதவிகிதம் அல்லது ஒரு தானிய விதை என்றாலும் கூட. சொத்து தொடர்பான மீறல்கள் (அவை மீறல் செய்தவரால் ஈடு செய்யப்படாதிருந்தால்) தவறு செய்தவரின் சொத்தின் வாரிசுகள் அல்லது குழந்தைகளால் ஈடுசெய்யப்பட வேண்டும்.

உலக வாழ்க்கை இழப்பீட்டுக்கு முன் முடியுமென்றால் (அல்லது எப்படியாவது பாதிக்கப்பட்டவரிடமிருந்து மன்னிப்பு பெற இயலாமல் இருந்தால்) மறு உலகில் (ஆகிரத்தில்) தவறு செய்பவரின் தவாபை பாதிக்கப்பட்டவருக்கு மாற்றுவதன் மூலம் சரிசெய்யப்படும். (அதாவது; அவர் செய்த புனிதமான செயல்களுக்கான வெகுமதிகள் மறுமையில் பாதிக்கப்பட்டவருக்கு வழங்கப் படும்) கொடுக்கப்பட்ட தீங்குக்காக (உலகில்). தவறு செய்யப்பட்ட நபர் இறந்துவிட்டால் பணம் அல்லது நட்டஈடு அவரது வாரிசுகளுக்கு செய்யப்பட வேண்டும். வாரிசுகளும் இல்லை அல்லது தவறு செய்யப்பட்ட நபர் அறியப்பட வில்லை என்றால் நஷ்ட ஈட்டுத் தொகை ஏழை மக்களுக்கு பரிசாக (தர்மமாக) வழங்கப்பட்டு அதன் தவாபை பாதிக்கப்பட்ட நபரின் ஆத்மா அளவில் சேர்க்க வேண்டும். ஏழைகளும் இல்லை பக்தியுடைய முஸ்லிம்களும் இல்லையெனின் அந்த பணம் பொது சேவை செய்யும் முஸ்லிம் அல்லது புனிதமான (வக்ஃப்) தொண்டு நிறுவனங்களுக்கு செலுத்தப்பட வேண்டும். ஒருவரின் சொந்தமான பக்தியுள்ள உறவினர்களுக்கு(பெற்றோர் அல்லது ஏழை குழந்தைகள்) பரிசாக வழங்குவதும் அனுமதிக்கப்படுகிறது. அதாவது; ஏதோ ஏழைக்கு பரிசளித்து தர்மம் (சதகா) வகைக்குள் வந்து தவாபை பெற்றுக்கொள்கிறார். மேற்கூறிய மாற்று வழிகள் எதுவும் இல்லை என்றால், குற்றமிழைத்தவர் பாதிக்கப் பட்டவரின் பிழைகள் பொறுக்கப்படவும் தனது மன்னிப்புக்காகவும் பிரார்த்த னையில் ஈடுபடவேண்டும். அநீதி இழைக்கப்பட்டவர் ஒரு நிராகரிப்பவர் எனினும் நீங்கள் மன்னிக்கப்படவேண்டும் என்பதற்காக எப்படியாவது அவரை பிரியப்படுத்த அவருக்கு நஷ்ட ஈடு செய்வது அவசியம். இல்லை யெனில், வரவிருக்கும் மறு உலகில் உங்களுக்காக காத்திருக்கும் பெரும் தொல்லை.

இரண்டாவது வகை மீறல், நஃப்ஸீ, அல்லது ஒரு கொலை அல்லது காயப் படுத்துதல் ஆகியவை அடங்கும் வாழ்க்கை தொடர்பானது. இந்த பாவத்தி லிருந்து விடுபடுவதற்கு தவ்பா செய்வதுடன் குற்றவாளி தன்னை கொலை செய்யப்பட்ட அல்லது காயப்பட்ட நபரின் (வலி) நிறைவேற்றுபவரிடம் ஒப்படைப்பது. வலியிற்கு சொத்துக்கு அல்லது பணத்துக்கு பதிலாக அவரை மன்னிக்கவோ சமாதானம் செய்யவோ தெரிவு உள்ளது அல்லது அவருக்கு எதிராக ஒரு சட்ட வழக்குத் தொடர்ந்து தண்டனை கொடுப்பதற்கும் முடியும். இருப்பினும், அவருக்கு தனது விருப்பபடி பதிலடி கொடுப்பதற்கு அனுமதிக்கப் படபடவில்லை. [இஸ்லாத்தில் எந்த விதமான வெறுப்பு முயற்சிகளுக்கும் இடமில்லை.]

ஒருவரின் உரிமையை மீறுவது (இர்ஸீ), (அதாவது மரியாதை மீறல்) புறம் பேசுதல், அவதூறு, கேலி, துஷ்பிரயோகம் போன்ற செயல்கள் இதில் அடங்கும். இந்த பாவத்தின் மன்னிப்புக்கு தவ்பா செய்வதுடன் பாதிக்கப்பட்டவர்களுடன் நல்லிணக்கமும் தேவை. (இழப்பீடு கொடுப்பது அல்லது மன்னிப்பை பெறுவது அல்லது அவரை மகிழ்விப்பதன் மூலம், ஒரு வழியில் அல்லது வேறு.) இந்த வகை

மீறல்அநீதி இழைக்கப்பட்டவரின் வாரிசுகளுடன் எந்தவிதமான நல்லிணக் கத்தினாலும் சரிசெய்யப்பட மாட்டாது.

ஒரு மஹ்ரமியின் உரிமையை மீறுவது; ஒரு நபருக்கு எதிராக அவரது மனைவி அல்லது குழந்தைகள் வழியாகசெய்யும் ஒரு துல்லியமான ஏமாற்று செயலை உள்ளடக்கியது. குற்றவாளி தவ்பாவும் இஸ்திஃபாரும் செய்யவேண்டும். ஃபித்னாவின் சாத்தியம் இல்லை என்றால், அவர் கட்டாயம் அநீதி இழைக்கப்பட்ட நபரின் மன்னிப்பை பெற வேண்டும். ஃபித்னாவின் வாய்ப்பு ஏதேனும் இருந்தால், நேரடியாக முயற்சிப்பதற்கு பதிலாக, அவர் பாதிக்கப் பட்டவர் இல்லாத நேரத்தில் அவருக்காக தவறு செய்தவர் பிரார்த்தனை செய்வது மற்றும் அவருக்காக தர்மம் வழங்குவது போன்றவற்றை செய்யலாம்.,

மார்க்க சம்பந்தப்பட்ட ஒரு மீறல்; உதாரணமாக, உறவினர் அல்லது வீட்டுக் காரர்கள் ஒருவருக்கு தங்கள் மார்க்க கடமைகளை, பொறுப்புகளை கற்பிப்பதில் கவனயீனமாக இருப்பது, அல்லது அவர்களை தடை செய்வது அல்லது பிற மக்கள் மார்க்க விளக்கங்கள் பெறுவதை தடை செய்வது அல்லது வணக்கம் செய்வதை தடுப்பது,அல்லது மற்றவர்களை பாவிகள் அல்லது காபிர் என்று அழைப்பது. அவர்களின் மன்னிப்பைப் பெறுவதற்கு அவர் செய்த மீறலைக் குறிப்பிடுவதற்குப் பதிலாக வெறும் மன்னிப்பு மட்டும் கேட்பது போதுமானது. ஒரு ஏழைநபரின் கடனை மன்னித்துவிடுவது மிகவும் சிறப்பான செயல் (இது ஏராளமான தவாபை உருவாக்குகிறது). இது ஒரு ஹதீத்-ஷரீபில் கூறப்பட்டுள்ளது: "**தவ்பா செய்யும் ஒருவர் ஒருபோதும் பாவம் செய்யாத நபர் போன்று (சுத்தமாக) மாறுகிறார்.**" மற்றொன்றில்: **"தனது பேச்சினால் இஸ்திஃபார் செய்யும் நபர் அவர் செய்த பாவத்திற்காக ஒருபோதும் வருந்துவதில்லை எனின் அவர் தொடர்ந்து பாவம் செய்பவர் ஆகிறார். அவன் அல்லாஹு தஆலாவை கிண்டல் செய்பவன்."** இஸ்திஃபார் செய்வது என்பது **"அஸ்தஃபிருல்லாஹ்"** எனும் வார்த்தையைச் சொல்வது.

முஹம்மது 'உத்மான் ஹிந்தீ' குத்திச சிர்ரஹு[1] ஃபார்ஸி மொழியில் அவரது நூலான **'ஃபவாயித்-அல் -உத்மனியா'** இல் பின்வருமாறு கூறுகிறார்கள்: நான் ஆரோக்கியத்திற்காக குறிப்பிட்ட பிரார்த்தனைகளை எழுத வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். உங்கள் ஆரோக்கியத்திற்காக, (எல்லா நேரத்திலும் தவ்பாவை செய்யுங்கள்) மேலும் எல்லா நேரங்களிலும் இஸ்திஃபார் பிரார்த்தனை சொல்லுங்கள்[அதாவது; **அஸ்தஃபிருள்ளாஹல் அளீம் வஅத் தூபு இலைஹி** என்று!]. இது கவலைகளுக்கும் துன்பங்களுக்கும் எதிராக மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

சூரா 'ஹூத்' இன் ஐம்பத்தி இரண்டாவது ஆயத் கூறுகின்றது: "(**இஸ்திஃபார் செய்யுங்கள்!** (நீங்கள் அவ்வாறு செய்தால்) **நான் உங்களின் மீட்புக்கு வருவேன்."** இஸ்திஃபார் செய்பவர் எல்லா வகையான விருப்பங்களையும் நல்ல தேக ஆரோக்கியத்தையும் அடையவார். இது ஒரு ஹதீத்-ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **"ஒரு அடிமை ஒரு பாவத்தைச் செய்த பின்னர் மனந்திருந்தினால், அவர் இஸ்திஃபார்** பிரார்த்தனையை **சொல்வதற்கு முன்பே அல்லாஹுத'ஆலா அவரை மன்னிப்பான்."**

மற்றொரு ஹதீத்-ஷரீபில்: **"தவ்பா செய்யுங்கள், உங்கள் பாவங்கள்** (மலை போன்ற குவியல்களை) **வானத்தை அடைந்தாலும். அல்லாஹு த'ஆலா**

**உங்கள் தவ்பாவை ஏற்றுக்கொள்வான்"** இந்த ஹதீத்-ஷரீப் இந்த ஹதீதுகள் மற்றவர்களின் உரிமைகளை மீறுவது சம்பந்தப்படாத பாவங்களை பற்றியது. ஒரு ஹதீது ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **"மூன்று வகையான பாவங்கள் உள்ளன: "மூன்று வகையான பாவங்கள் : (1) கடைசி நியாயத்தீர்ப்பு நாளில் (கியாமத்த்தில்) மன்னிக்கப்படாத பாவம்; (2) நிறுத்தப்படாத பாவம்; மற்றும் (3) அல்லாஹுதஆலா விரும்பினால் மன்னிக்கும் பாவம்."**கடைசி தீர்ப்பு நாளில் முற்றிலும் மன்னிக்கப்படாத பாவம்"ஷிர்க்". "ஷிர்க்" இதில் அனைத்து வகையான நிராகரிப்பையும் உள்ளடக்கியது. நிறுத்தப்படாத பாவங்கள் மற்றவர்களின் உரிமைகளை மீறுவது சம்பந்தப்பட்ட பாவங்கள். எந்த பாவங்களும் மற்றவர்களின் உரிமைகளை மீறுவது இல்லையானால் அல்லாஹு தஆலா விரும்பினால் மன்னிக்கப்படும்.

---

[1] முஹம்மது உத்மான் 1314 ஹிஜ்ராவில் காலமானார் [1896 ஏ.டி.]

# பாகம் இரண்டு

## முதல் அத்தியாயம்

இஸ்லாத்தின் நெறிமுறை அறிவியல் மூன்று பிரிவுகளில் ஆய்வு செய்யப் படுகிறது, அவை பூர்வாங்க துணை அறிவியலைக் கற்றுக்கொண்ட பின்னரே புரிந்து கொள்ள முடியும். இதில் நம்முடைய நூல் மொத்தத்தின் மூன்று பிரிவுகளையும் தொடுகின்றது ஆனால் முதல் பிரிவை மட்டுமே விரிவாக விளக்குகின்றது.

## முன்னுரை

நெறிமுறை அறிவியலைக் கற்றுக்கொள்வது ஒருவரின் விருப்பத்தைப் பொறுத்தது. வலியுறுத்துவது பயனற்றது. ஒவ்வொரு விருப்பமான செயலும் (இஹ்தியாரீ) பூர்வாங்க ஆரம்ப அறிவு இரண்டு நிலைகளில் பெற்றுக் கொள்ளப்படுகிறது. முதலில் விஷயத்தின் சாரம்சத்தை புரிந்து கொள்ள வேண்டும். இரண்டாவது, நேரடியாக அறிவைப் பெறவேண்டும். பெறுவது என்னவாக இருக்கும் என்று அறிவதர்க்கு அதை செய்து பார்க்க வேண்டும். இன்னும் அதில் மூன்றாவது பங்கு உள்ளது, அதில் சில ஆரம்ப தகவல்களைப் பெறுவதற்கான பிரபலமான முறையாக மாறிவிட்டது அது ஒரு குறிப்பிட்ட அறிவியலைக் கற்றுக்கொள்ள உதவும். இந்த முறையை நாங்கள் பின்பற்றுவோம். இரண்டு கூடுதல் பிரிவுகளை இணைப்பதன் மூலம் முன்னுரையில் பொருளின் மூன்று கிளைகளயும் விளக்குவோம்.

**முதல் நிலை:** இஸ்லாத்தின் நெறிமுறைகள் மூன்று பிரிவுகளாக பிரிக்கப்பட்டுள்ளன.,

1– நெறிமுறைகளின் அறிவு, (இல்முல் அஹ்லாக்), இது மனிதனின் மாற்ற முடியாத தனிப்பட்ட நடத்தை பற்றியது; ஒரு நபர் தனியாக இருக்கிறாரா அல்லது மற்றவர்களுடன் இருக்கிறாரா என்பதை பொறுத்து அல்லாமல் இது நல்ல அல்லது கெட்ட தன்மை பற்றியது. உதாரணமாக, ஒருவருடைய இயல்பு மென்மை, தாராள மனப்பாங்கு, கூச்சம், வெட்கம் என்பன அவர் தனியாக இருக்கும்போதும் மற்றும் மற்றவர்களுடன் இருக்கும் போதும் மாறாது. நெறிமுறைகளின் அறிவு ஒருபோதும் மாறாத இந்த தனிப்பட்ட பண்புகள் பற்றி நமக்கு கற்பிக்கிறது..

2– நெறிமுறைகளின் இரண்டாவது வகை; ஒரு நபர் அவரது வீட்டில் அவருடைய குடும்ப உறுப்பினர்களிடம் நடந்துகொள்ளும் முறை பற்றியது. இது குடும்ப நிர்வாகத்தின் நடத்தை (**தத்பீர் அல்-மன்ஸில்**) என்று அழைக்கப்படுகிறது.

3– நெறிமுறைகளின் மூன்றாவது வகை அறிவு ஒரு நபரின் சமூக பொறுப்புகள், நடத்தை கொள்கைகளை குறியீடாக்குகிறது, மற்றும் அவை மற்றவர்களுக்கு எவ்வாறு பயனுள்ளதாக இருக்க வேண்டும் என்பதை அறிவுறுத்துகிறது. இது **சியாசத்-இல்-மதீனா**, அல்லது **சமூக நடத்தை** என்று அழைக்கப்படுகிறது.

நசீருத்தீன் முஹம்மது தூசி எழுதிய அஹ்லாக்-இ-நாசிரீ எனும் நூலில் கூறப்பட்டுள்ளபடி, ஒருநபர் ஏதாவது செய்யும்போது, அது நல்லதாக இருந்தாலும் அல்லது தீயதாக இருந்தாலும் அது ஒரு காரணத்திற்காக இருக்கும். இந்த காரணம் ஒன்று இயல்பானது, அல்லது ஒரு கட்டளை அல்லது சட்டமாக இருக்கும். அவர் கணக்கில் என்ன செய்கிறார் என்பது அவரது இயல்பு அவரது மனம், சிந்தனை மற்றும் அனுபவத்தின் விளைவாகும். அவரது இந்த வகையான செயல்கள் காலத்துடன் மாறாது, அவை அவரது சமூக சூழலில் தங்கியது அல்ல.

இரண்டாவது வகை காரணம், ஒரு சட்டம் அல்லது ஒரு கட்டளை, பொதுவான ஒரு சமூகத்தின் அல்லது ஒரு முழு தேசத்தால் பகிரப்பட்ட சிந்தனையிலிருந்து வரும் சிக்கல்கள், இந்த விஷயத்தில் அது ஒரு **ருசும்** அல்லது ஒரு '**ஆதத்** (மரபு,வழக்கம்); அல்லது ஒரு அறிவார்ந்தது , அதிகாரப்பூர்வமானது அல்லது அனுபவம் வாய்ந்த தீர்க்கதரிசியால் அல்லது ஒரு வலியினால் அல்லது ஒரு மன்னர் அல்லது ஒரு சர்வாதிகாரியினால் முன்வைக்கப்பட்டது. அவை தீர்க்கதரிசிகள் 'அலைஹிமுஸ் ஸலவாத்து வதஸ்லிமாத்' களுக்கு அல்லாஹ் வினால் அறிவிக்கப்பட்டு, அவர்களாலும் பின்னர் வலிமார்களாலும், அல்லது இஸ்லாமிய அறிஞர்களால் விளக்கப்பட்ட அல்லாஹ்வின் கட்டளைகள் என்றால் அவை பின்வரும் மூன்று பிரிவுக்குள் அடங்கும்.

முதல் பிரிவு ஒவ்வொரு தனிப்பட்ட நபர்களாலும் கடைபிடிக்க வேண்டிய கட்டளைகளைக் கொண்டுள்ளது. அவை அஹ்காம் (விதிகள்) அல்லது 'இபாதத்' (வழிபாடுகள்) என்று அழைக்கப்படுகின்றன.

இரண்டாவது பிரிவு சமூக மற்றும் வணிக பரிவர்த்தனைகளை **முனாகஹாத்** போன்றவைகளும். திருமண விஷயங்கள் மற்றும் **மு'ஆமலாத்**, அதாவது விற்பனை மற்றும் வாங்குவது போன்ற விஷயங்கள் பற்றியவை.

மூன்றாவது பிரிவு என்பது நாடுகளையும் சமூகங்களையும் உள்ளடக்கிய கட்டளைகள் மற்றும் சட்ட மற்றும் அரசியல் விஷயங்கள் தொடர்பானவை (ஹுதூத்).

இந்த மூன்று பிரிவுகளின் கட்டளைகளையும் விதிகளையும் கையாளும் அறிவு பிக்ஹு என அழைக்கப்படுகிறது. பிக்ஹு விஷயங்களுடன் தொடர்புடைய கற்றல், அத்துடன் அவற்றை ஒழுங்குபடுத்தும் கொள்கைகள், மற்றும் அவற்றை செயல்படுத்துவது, அது காலத்துடன் மற்றும் அவர்கள் நாடு மற்றும் நாடு சார்ந்த விஷயங்களின் மாற்றம் எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்பதை கையாள்வது. அல்லாஹு த்ஆலா மட்டுமே ஒரு மாற்றத்தை ஆணையிடும் ஒரே அதிகாரம் பெற்றவன். அல்லாஹு தஆலாவின் ரத்து மற்றும் மாற்றங்கள் வரலாறு முழுவதும் கடந்த காலங்களில் செய்யப்பட்டவை என்பன இந்த கட்டளைகளின் பிரிவில் இருந்தன. உதாரணமாக, ஆதம் 'அலைஹிஸ்-ஸலாம்' வாழ்ந்த காலத்தில் மனிதகுலத்தின் பெருக்கம் தேவைப்பட்டது. ஆகையால், ஒரு மனிதன் தன் சகோதரியை திருமணம் செய்து கொள்ளவது சட்டபூர்வ மானது மற்றும் அனுமதிக்கப்பட்டது. பின்னர் கால ஓட்டத்தில் மக்கள் தொகை அதிகரிப்பதன் மூலம் அதன் தேவை நீக்கப்பட்டது. அதேபோல் அதை அனுமதிக்கின்ற நியமன சட்டம் ரத்து செய்யப்பட்டது.

**இரண்டாவது நிலை:** இந்த பிரிவில் நெறிமுறைகளின் அறிவின் உபயோகம் மற்றும் பயன்பாடுகள் பற்றி நாம் விளக்குவோம். தனது சுற்றுச் சூழலைப் படிக்கும் ஒரு நபர், பூமி மற்றும் வானம், அல்லது பிரபஞ்சத்தில் சமநிலை மற்றும் ஒழுங்கைப் பற்றி சிந்திக்கின்றபோது, விண்வெளியில் உள்ள பில்லியன் கணக்கான நட்சத்திரங்கள் பல நூற்றாண்டுகளாக ஒன்றுடன் ஒன்று மோதாமல், எப்படி அவற்றில் தொடர்ந்து நகர்கின்றன; வளிமண்ட லத்தின் அமைப்பு, இயக்கம் மற்றும் அதன் அழுத்தத்தின் அளவு, வெப்பநிலை, காற்று மற்றும் நீர் ஆகியவை பூமியில் உயிரினம் வாழ்வதற்கு ஏற்றாப்போல் நேர்த்தியாக சமப்படுத்தப்படுகின்றன. அவர் இன்னும் நுட்பமாக கவனிக்கும் போது பள்ளிகளில் மற்றும் பல்கலைக்கழகங்களில் உயர்வாக கற்பிக்கப்படும் விஞ்ஞான அறிவியல் படிப்புகளில் படிக்கும் மனிதர்கள், விலங்குகள், தாவரங்கள், உயிரற்ற பொருள்கள், அணுக்கள், செல்கள் அல்லது சுருக்கமாக, ஏராளமானபடைப்புகள் அவற்றின் ஒழுங்கான நேர்த்தியான அமைப்புகள் பற்றி சிந்திக்கும்போது அனைத்து சக்திவாய்ந்த மற்றும் அனைத்து அறிவுள்ள ஒரு படைப்பாளரின் இருப்பை அவர் நம்ப வேண்டிய கட்டாயத்தில் இருப்பார்.

சிறந்த புத்தியுள்ள ஒருநபர் நுட்பமானதைப் புரிந்துகொள்பவர் இப்பிரபஞ்ச த்தின் சமநிலை மற்றும் ஒழுங்கு பற்றி பாராட்டும் அதே நேரம் அல்லாஹு தஆலா'வின் இருப்பை உடனடியாக நம்புவதுடன் ஒரு முஸ்லீமாக மாறுவார். இஸ்லாத்திற்கு மாறிய சுவிட்சர்லாந்தைச் சேர்ந்த தத்துவ பேராசிரியரிடம் 1966 ஆம் ஆண்டு ஒரு செய்தியாளரால் அவரது மாற்றம் குறித்து கேட்கப்பட்டது, அவர் "இஸ்லாமிய புத்தகங்களைப் படிப்பதன் மூலம் நான்(ஹக்) உண்மை யான வழி மற்றும் இஸ்லாமிய அறிஞர்களின் மகத்துவத்தையும் புரிந்து கொண்டேன். இஸ்லாமிய மார்க்கம் சரியான முறையில் அறிமுகப் படுத்தப்படும் என்றால் புத்திசாலித்தனம் கொண்ட எல்லோரும் முழு உலகமும் அதை அன்பாக விருப்பத்துடன் ஏற்றுக்கொள்வார்கள்" என்று பதிலளித்தார்.

இயற்கையைப் படிப்பதன் மூலம் ஒருவர் முஸ்லிமாக மாற விரும்புபவர் இஸ்லாமிய அறிஞர்களால் எழுதப்பட்ட புத்தகங்களைப் படிக்கிறார்கள் மற்றும் முஹம்மது 'சள்ளல்லாஹுஅலைஹி வசல்லம்' அவர்களின் வாழ்க்கை

சரிதை மற்றும் அவர்களின் அழகிய தார்மீக நடத்தை கற்றுக்கொள்கிறார்கள். இதனால் , அவர்களின் நம்பிக்கை மேலும் உறுதியாகிவிடும்.

மேலும், அவர் அழகிய நெறிமுறைகளின் அறிவைப் படிப்பதன் மூலம் நல்ல மற்றும் மோசமான மனோபாவங்களை, பயனுள்ள மற்றும் தீங்கு விளைவிக்கும் விஷயங்கள் பற்றி அறிந்து கொள்வார். நல்ல செயல்களைச் செய்வதன் மூலம், அவர் ஒரு முதிர்ச்சியுள்ள உலகில் மதிப்புமிக்க மனிதராக மாறுவார். அவரது உலக விவகாரங்கள் ஒழுங்கானதும் அவை எளிதில் செயல்படக்கூடியதாகவும் இருக்கும். அவர் ஆறுதலுடனும் மற்றும் அமைதியுடனும் வாழ்வார். அவரை எல்லோரும் நேசிப்பார்கள். அல்லாஹு தஆலா அவரை பொருந்திக் கொண்டு மறுமையில்அவரை இரக்கத்துடன் நடத்துவான் வெகுமதிகளும் கொடுப்பான்.

நாங்கள் மீண்டும் ஒரு முறை வலியுறுத்த விரும்புகிறோம் ஒரு நபருக்கு மகிழ்ச்சியை அடைய இரண்டு விஷயங்கள் தேவை. இந்த இரண்டில் முதலாவது, விஞ்ஞான அறிவை கற்றுக்கொள்வதன் மூலமும் முஹம்மது 'அலைஹிஸ்-ஸலாம்'அவர்களின் வாழ்க்கை கதை மற்றும் தார்மீக நடத்தை வாசித்தல் மூலமும் பெறக்கூடிய சரியான அறிவு மற்றும் நம்பிக்கையை அவர் பெற்றுக்கொள்ள வேண்டும். இரண்டாவது அவர் நல்ல நடத்தை கொண்ட ஒரு மென்மையான இயல்புடைய மனிதராக இருக்க வேண்டும். இவைகள் "ஃபிக்ஹு " மற்றும் "நெறிமுறைகள்" கற்பதன் மூலமும் அவற்றைப் நடைமுறை படுத்துவதன் மூலமும் இந்த இரண்டு விஷயங்களை எவர் பெற்றாலும் அல்லாஹுத ஆலாவின் பொருத்தத்தையும் அன்பையும் அடைவார்கள். ஏனெனில் அல்லாஹுத ஆலா தனது எல்லையற்ற அறிவால் அனைத்தையும் அறிவான். அவன் மலக்குகளுக்கும் தீர்க்கதரிசிகளுக்கும் அதிகளவு அறிவைக் கொடுத்தான். மலக்குகளும் மற்றும் தீர்க்கதரிசிகளும் வெட்கக்கேடான, தவறான அல்லது அசிங்கமான எதையும் கொண்டிருக்கவில்லை. மாறாக, மற்ற மனிதர்கள், மிகக் குறைந்த அறிவும் அவர்களின் நம்பிக்கையும் பிழையான பழக்கங்கள் அல்லது தவறான நடத்தையால் கறை படிந்தவை. இந்த காரணத்தினால், மனிதன் அல்லாஹு தஆலாவிடமிருந்து மலக்குகளிடமிருந்து, மற்றும் தீர்க்கதரிசிகளிடமிருந்து மனிதர்கள் மிகவும் தொலைவில் உள்ளனர். அவர்களுடன் முழுமையுடன் இணைவதற்கான மரியாதையை அவர்கள் இழந்து இருக்கிறார்கள்.

ஒரு நபர் விஞ்ஞான அறிவைப் படிப்பதிலும் இயற்கையை அவதானிப்பதன் மூலமாகவும் உண்மையான நம்பிக்கையை அடைய தவறிவிடுகிறார் என்றால் அவர் அறியாமை நிலைக்குச் செல்வதைக் குறிக்கிறது; அவர் முஹம்மது 'அலைஹிஸ்-ஸலாம்' பற்றி உண்மையான அறிவைப் பெறுவதன் மூலம் அவரது நம்பிக்கையைத் மேம்படுத்தவில்லை என்றால் அவர் நித்திய அழிவு மற்றும் துன்பத்தில் நிலைத்திருக்கும் அவர் விரும்புவோருடன் சேருவார்.

மாறாக, அவர் உண்மையான நம்பிக்கையை அடைய முயற்சிப்பவர், அவரது நஃப்சை பின்பற்ற மறுப்பதும், அல்லாஹு தஆலாவின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிவதுடன் மேலும் அவனால் தடைசெய்யப்பட்டவைகளை தவிர்க்கிறார் என்றால் அல்லாஹுதாலாவின் கருணை மற்றும் மன்னிப்பை அவர் இழக்கமாட்டார். அவரிடமிருந்து மகிழ்ச்சி பின்னர் பறிக்கப்பட மாட்டாது. எவ்வாறாயினும், அவர் செய்த அக்கிரமங்கள், பாவங்கள் அவர் அல்லாஹ்வின் கருணையை அடைவதற்கு சிறிது காலம் தாமதப்படுத்தலாம், அது அவரை

சிறிது காலம் நரகத்தில் தங்கியிருக்கும்படி கட்டாயப்படுத்தி அதன் நெருப்பில் சுட்டெரிக்கப்படும். இறுதியில், அவர் நம்பிக்கை கொண்டதன் காரணமாக அவர் அல்லாஹ்வின் அருளைப் பெறுவார். நரக நெருப்பு அவரது தீய செயல்களின் அழுக்கை சுத்தப்படுத்தி அவரை தூய்மைப்படுத்தும், இதனால் அவர் சொர்க்கத்தில் நுழைய வைக்கப்படுவார்.

எல்லா நற்பேறுகளிலும், வசதிகளிலும் மிக முக்கியமானது சரியான உறுதியான நம்பிக்கையை வைத்திருப்பது என்பது வெளிப்படை. எல்லோரும் தனது உள்ளத்தை பிழையான நம்பிக்கை மற்றும் சந்தேகங்களிலிருந்து தூய்மைப்படுத்துவதற்கு முயற்சி செய்ய வேண்டும்.

ஒரு நபர் சரியான நம்பிக்கையைப் பெற்று, நல்ல குண நலன்களையும் கொண்டு நல்ல செயல்களையே செய்கிறார் என்றால் அவர் தீர்க்கதரிசிகள், அவ்லியாக்கள், மலக்குகளை போன்ற உயர்ந்த ஆன்மாக்களுடன் அவர்களுக்கு நெருக்கமாக இருப்பார். அவர்கள் அவரைப் உயர் பதவிகளுக்கு கவருவார்கள். அவர்கள் அவரை மேல் நோக்கி ஈர்ப்பார்கள். ஒரு பெரிய மின்காந்தத்தால் உருவாக்கப்பட்ட மின்காந்த மழை போன்ற காந்த சக்தி சிறிய முள் போன்ற ஊசிகளை உயரத்தில் ஈர்ப்பதுபோல். பின்னர், அவர் "சிராத் என்னும் பாலத்தை மின்னல் வேகத்தில் கடந்து செல்வார். சுவர்க்கத்தின் தோட்டங்களில் பயணிக்கும் அதிர்ஷ்டசாலி மக்களுடன் சேர்ந்து கொள்வார். அவருக்காக, முன்பே அவரது ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மாவுக்காக உருவாக்கப்பட்ட நற்பேறுகள் இன்பங்களை அனுபவிப்பார்.

கவிதை :

> **தங்களுக்குத் தெரிந்ததைக் கடைப்பிடிக்கும் அறிஞர்கள்,**
> **கடுமையான தண்டனையை அனுபவிக்க மாட்டார்கள்,**
> **ஜன்னத்தின் ஆசீர்வாதங்களைப் பெறுவார்கள்,**
> **அதுவே மிகப்பெரிய வெற்றி!**

நெறிமுறைகளின் அறிவு என்பது ஆன்மீக இதயம் (கல்ப்) மற்றும் ஆன்மா (ரூஹ்) வற்றின் தூய்மையைக் கற்பிக்கும் அறிவின் கிளை இது உடலுக்கான சுகாதார விஞ்ஞானமான மருத்துவ அறிவுக்கு ஒத்ததாகும். தீமைகள் ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மாவின் நோய்களாகும். தீய செயல்கள் இந்த நோய்களின் அறிகுறிகளாகும். நெறிமுறைகளின் அறிவு அதிகம் மரியாதைக்குரியது, மதிப்புமிக்கது, மற்றும் அவசியமானது. ஆன்மீக இருதயத்துக்கும் ஆன்மாவுக் கும் தீங்கு விளைவிக்கும் தீயவைகளை இந்த அறிவு மூலம் மட்டுமே களைய முடியும். இந்த ஒரே அறிவுதான் ஆன்மீக இருதயத்தையும் ஆன்மாவையும் தார்மீக குணங்களின் கட்டுப்பாட்டோடு நன்மை செய்ய ஊக்குவிப்பதுடன் அதன் மூலம் இதயங்களையும் ஆன்மாக்களையும் அழகு படுத்துகின்றன. இன்னும் மேலதிகமான அழகான தார்மீக குணங்களுக்கு உற்சாகம் கொடுத்து இதயத்தில் தூய்மையின் நிரந்தர நிலையை நிறுவுதல் மற்றும் ஆத்மாக்கள் எப்போதும் உயரிய நிலையை பெறுகின்றன.

[ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மா இரண்டும் ஒரே மாதிரியாக இருந்தாலும் அவை தனித்துவமான நிறுவனங்கள். இந்த நூலில், ஆன்மாவை மட்டும்

தனியாக குறிப்பிடப்பட்டால் நாம் இரண்டையும் குறிக்கிறோம் என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.]

ஒருவரின் தன்மை மாறுமா? இது ஒரு மனிதனுக்கு தனது பாத்திரத்தை விட்டுவிட்டு இன்னொன்றைப் பெற சாத்தியமா? இதற்கு பல மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன ஆனால் அவை முக்கியமாக மூன்று பிரிவுகளாக வகைப்படுத்தப்படலாம்.

1– தன்மை ஒருபோதும் மாறாது, ஏனெனில் அது ஒரு மனிதரால் மாற்றும் திறன் கொண்டதல்ல.

2– தன்மைகள் இரண்டு வகையானது: முதலாவது பிறக்கும்போதே உருவாக்கப்படுகிறது அது மாற்ற முடியாது. இரண்டாவது வகை பழக்க வழக்கங்களைக் கொண்டுள்ளது அது பின்னரும் பெறப்படுகின்றன. இந்த வாங்கிய தன்மையை மாற்றலாம் அல்லது மாற்றப்படும்..

3– தன்மைகள் முழுவதுமாக பிறந்த பிறகு பெறப்படுகிறது மற்றும் வெளிப்புற தாக்கங்களால் மாற்ற முடியும்.

பெரும்பான்மையான இஸ்லாமிய அறிஞர்கள் மூன்றாவது கோட்பாட்டை ஏக மனதாக ஆதரிக்கின்றனர். தீர்க்கதரிசிகள் கொண்டு வந்த தெய்வீக சட்டங்கள் (ஷரீஅத்) இந்த மூன்றாவது கோட்பாடு சரியானது என நிரூபிக்கின்றது. தசவ்வுஃப் நடைமுறையின் மாணவர் பயிற்சி முறைகள் மூன்றாவது கருத்தை அடிப்படையாக வைத்தே மார்க்க அறிஞர்கள் மற்றும் தசவ்வுஃப் நடைமுறையின் அறிஞர்களால் ஏற்படுத்தப்பட்டது.

எந்த காரணத்திற்காக மனித இனம் இந்த உலகில் படைக்கப்பட்டது? இது இதுவரை தீர்க்கப்படாத மற்றொரு கேள்வி. பெரும்பான்மையான அறிஞர் களின் கருத்துப்படி மனிதன் நன்மையானவற்றை செய்வதற்கும் உலக முன்னேற்றத்திற்காகவும் பொருத்தமானவர்களாக பிறக்கின்றார்கள். பின்னர், நஃப்ஸின் ஆசைகளை திருப்திப்படுத்த முனைவதின் விளைவாகவும், நல்ல ஒழுக்கங்களைக் கற்றுக்கொள்வதில் உள்ள தயக்கத்தினாலும், மற்றும் தீய நண்பர்களின் தொடர்பு காரணமாக தீய பழக்கங்களை பின்பற்றுகிராார்கள்.

இது ஒரு ஹதீது ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **“ஒவ்வொரு தனிமனிதனும் இஸ்லாத்துக்கு பொருத்தமான நிலையிலேயே படைக்கப்படுகின்றான். இருப்பினும், பின்னர் அவர்கள் அவர்களின் பெற்றோரால் கிறிஸ்தவர் கள், யூதர்கள் அல்லது நாத்திகர்கள் ஆக்கப்படுகின்றனர்.”**

கவிதை:

**உங்களை நீங்களே சிதைத்துக் கொள்கிறீர்கள், உங்கள் கையால்**
**படைப்பாளன் உங்களை அழகாக உருவாக்கியிருந்த போதும்**

சில அறிஞர்களின் கூற்றுப்படி, மனிதஆன்மா இந்த உலகிற்கு தூய்மையற்ற ஒரு அமைப்பிலேயே வந்தது. ஆத்மாவானது தானே சுத்தமாக இருந்தது, ஆனால் அது உடலுடன் ஒன்றிணைந்த போது உடலின் தேவைகள் அதை சிதைத்து விட்டது. இருப்பினும், அல்லாஹு தலா யாரை காப்பாற்றத் தெரிவு செய்கிறானோ, அவர்கள் பிறந்ததைப்போல் தூய்மையற்றதாக இருக்காது; அவர்கள் நன்மைக்குத் திரும்புவார்கள்.

வேறு சில அறிஞர்கள் ஆன்மா பிறப்பிலிருந்து நல்லதுமல்ல தீயதுமல்ல என்று கூறியுள்ளார்கள். அது நடுநிலை நிலையில் உள்ளது. அது இரு வழிகளிலும் திரும்ப முடியும். நன்மையானவைகளை கற்றுக்கொள்ளும் ஒரு மனிதன மகிழ்ச்சியையும் முதிர்ச்சியையும் அடைவார். தீயவர்களுடன் சேர்ந்து தீமைகளையும் அசிங்கமான விஷயங்களையும் கற்றுக் கொள்ளும் ஒரு நபர் ஒரு மோசமான மற்றும் தீய நபராக ஆகுவார் என்று கூறினார்கள்.

கேலன்[1] ஆன்மீக ரீதியில், மனிதகுலத்தின் மூன்று குழுக்கள் உள்ளன. முதல் குழு நல்ல மனிதர்கள், இரண்டாவது குழு தீயவர்கள். மூன்றாவது குழுவில் படைப்பால் நல்லவர்களோ தீயவர்களோ இல்லாதவர்கள் உள்ளனர் என்று கூறியுள்ளார், இந்த நபர்கள் பின்னர் எதிர்மாறான குழுக்களுடன் சேரலாம். நல்ல படைப்பில் சிலரே இருக்கின்றனர். பெரும்பான்மையான மக்கள்படைப்பால் தீயவர்கள், எப்போதும் தீய செயல்களை செய்ய முனைகிறார்கள். நல்ல அல்லது தீய நபர்களின் எண்ணிக்கையை பொறுத்து அவர்கள் மற்றவர்களுக்கு மத்தியில் வாழ்கிறார்கள், அவர்கள் மேற்கூறப்பட்ட இரண்டு வகையினருக்கும் இடையில் மனிதர்களை பொறுத்து அவர்களுக்கு இடையில் ஒரு இடைநிலையை வகிக்கிறார்கள்." இந்த கோட்பாட்டின் படி, சிலரால் அவர்களின் பழக்கத்தை மாற்றவும் முடியும்.

---

[1] கிளாடியஸ் கேலன் [130-200 ஏ.டி.], கிரேக்க மருத்துவர் மற்றும் உடலியல் நிபுணர்.

[இதயத்தைப் பற்றி அதிகம் தெரியாததால், கிரேக்க தத்துவவாதிகள் ஆத்மாவுடன் மட்டுமே கையாண்டனர், மற்றும் சில முஸ்லீம் எழுத்தாளர்களும் நெறிமுறைகள் பற்றிய இலக்கியங்களில் அவர்களின் முன்மாதிரியைப் பின்பற்றினர்.]

பெரும்பான்மையான அறிஞர்களின் கூற்றுப்படி, அனைவரின் பழக்கத்தையும் மாற்ற முடியும். யாருடைய இயல்பும் அது உருவாக்கிய வழியில் இருக்காது. இயல்புகள் மாறாது என்றால், தீர்க்கதரிசிகளால் வழிகாட்டப்பட்ட மதங்கள் பயனற்றவைகளாகவும் தேவையற்றவைகளாகவும் இருக்கும். அறிஞர்களால் ஒருமனதாக நிறுவப்பட்ட பயிற்சி மற்றும் தண்டனை முறைகள் அபத்தமாக இருக்கும்.அனைத்து அறிஞர்களும் அவர்களின் குழந்தைகளுக்கு அறிவையும் பழக்க வழக்கங்களையும் கற்பித்தனர். அவர்களின் கல்வி மற்றும் பயிற்சிகள் பயனுள்ள முடிவுகளை வழங்கியது. இந்த காரணங்களுக்காக, மனித இயல்பு மாறக்கூடியது என்பது பிரகாசிக்கும் சூரியனைப் போல வெளிப்படையானது. இருப்பினும், மிகவும் ஆழமாகப் பதிந்திருக்கும் சில பழக்கவழக்கங்கள், உண்மையில், அவை சில ஆன்மாவின் இன்றியமையாத மூலப்பொருளாக மாறிவிட்டன. அவற்றை மாற்றுவது அல்லது அகற்றுவது மிகவும் கடினமான பணியாகும். அந்த பழக்கங்கள் பெரும்பாலும் அறியாமை மற்றும் பொல்லாத மக்கள் மீது காணப்படுகின்றன. அவற்றை மாற்றுவதற்கு ரியாசத் மற்றும் மிகவும் பிடிவாதமான முஜாஹதா தேவை.

ரியாசத் என்பது தீங்கு விளைவிக்கும், அக்கிரமத்திதை தூண்டும் நஃப்சின் ஆசைகளுக்கு எதிரான பலமான முயற்சி. மற்றும் முஜாஹதா என்பது நஃப்ஸுக்கு விரும்பத்தகாத பயனுள்ள அழகான நடத்தை மற்றும் உறுதியான

தன்மை என்று பொருள். அறியாத முட்டாள்தனமான மக்கள் நஃப்ஸுக்கு எதிராக ரியாசாத் மற்றும் முஜாஹதாவை தொடர்வதற்கு அவர்களின் விருப்பமின்மையின் காரணமாக உள்ளார்ந்த பண்புகளின் நிலையான உறுதி தன்மை என்று கூறுகிறார்கள். இதனால் தங்களை தீமைகளிலிருந்து விடுவிப்பதில் அவர்கள் காட்டும் தயக்கத்தை பகுத்தறிவு கொண்டு விளக்க முயற்சிக்கிறார்கள். அவர்களின் வாதத்தை நாங்கள் ஏற்றுக் கொண்டு எல்லோரும் தங்கள் நஃப்சின் ஆசைகளை (ஹவா)வை பின்பற்றுவதற்கு அனுமதித்தால், குற்றவாளிகளை தண்டிக்காது விட்டால், மனிதநேயம் அக்கிரமங்களை நோக்கி தள்ளப்படும்.

உண்மையில், அல்லாஹுதஅலா மனிதபடைப்பு மீதுள்ள தனது இரக்கத்தின் காரணமாக அவர்களுக்கு பயிற்சி அளிப்பதற்கும் அவர்களுக்கு நல்ல, மற்றும் தீய இயல்புகளைபற்றி கற்பிப்பதற்கும் தீர்க்கதரிசிகளை அனுப்பினான். அவன் தனது அன்புக்குரிய தூதர் முஹம்மது 'அலைஹிஸ்ஸலாம் அவர்களை எல்லா ஆசிரியர்களிலும் மிகப் பெரியவராக தேர்ந்தெடுத்தான். முந்தைய தெய்வீக சட்டங்கள் அனைத்தையும் அவனது தெய்வீக சட்டத்தை கொண்டு (ஷரீ'அத், மதம்) மாற்றியமைத்தான். அதாவது, **"ஷரி'அத் அல் முஹம்மது"** அவரது மதம் இறுதி மதம் ஆனது. இவ்வாறு, அவரது பிரகாசிக்கும் மதம் அனைத்து நன்மைகளையும் மற்றும் பயிற்சி முறைகளையும் உள்ளடக்கியது. ஞானமும், திறமையும் உள்ளவர்கள் தீமையிலிருந்து நன்மையை வேறுபடுத் தும் நெறிமுறைகளின் நூல்களைப் படிக்க வேண்டும். அவை இந்த மதத்தில் இருந்து பெறப்பட்டவை மற்றும் அதைக் கற்றுக்கொள்ளுங்கள். அவர்களது நடைமுறைகளை அதற்கேற்ப திட்டமிடுவதன் மூலம் மூலம் அவர்கள் இவ்வுலகில் மகிழ்ச்சியையும் ஆறுதலையும், அமைதியையும் அடைவதற்கும், மறு உலகின் இரட்சிப்புக்கும் மேலும் குடும்பம் மற்றும் சமூக வாழ்க்கையின் வரிசையில் பங்களிப்பையும் செய்ய வேண்டும். இது ஒவ்வொரு மனிதனின் மிகவும் முக்கியமான கடமை. **இஸ்லாமிய வாழ்க்கை நெறி** என்ற தலைப்பில் இந்த புத்தகத்தை எல்லோரும் கவனத்துடன் படித்து கற்றுக்கொள்ளவும் வேண்டும். ஏனெனில், அல்லாஹு த'ஆலாவின் உதவியுடன், இந்த இறுதி இலக்கை எல்லோரும் அடைவதற்காக எங்களிடம் இருந்த பயனுள்ளதாக இருக்கும் தகவல்களை சேகரித்து இதை ஆக்கியுள்ளோம்.

**மூன்றாம் நிலை:** நாங்கள் இஸ்லாமிய வாழ்க்கை நெறி"யை மூன்று பாகங்களாக பிரித்தோம். அவற்றை தெளிவாக புரிந்து கொள்வதற்காக மேலதிக தகவல்களை நாங்கள் வழங்குவோம். அறிவின் ஒவ்வொரு கிளைகளிலும் பல துணைக் கிளைகள் உள்ளன. சில நேரங்களில் அனைத்து கிளைகளும் சிலவிடயங்களில் ஒத்துப்போகின்றன. இந்த விடயத்தில் அறிவின் அனைத்துக்கிளைகளும் ஒன்றாகுவது விஞ்ஞானம் ஒன்றிலாகும். இந்த விடயத்தில் அதன் தலைப்பு விஞ்ஞானம். உதாரணமாக, மருத்துவ அறிவியலில் பல கிளைகள் உள்ளன. ஆனால் ஒவ்வொரு கிளையும் நோய்கள் மற்றும் உடல் ஆரோக்கியத்தின் ஆய்வில் ஒன்றுபடுகின்றன மற்றும் இதன் தலைப்பு மருத்துவம்.

ஒரு அறிவியலை எளிதாக கற்க வேண்டும் எனில் முதலில் அதன் தலைப்பை நாம் புரிந்து கொள்ள வேண்டும். நெறிமுறை பற்றிய அறிவின் தலைப்பு மனித ஆன்மா. இது எவ்வாறு ஆன்மாவின் தீய குணங்களை சுத்தப்படுத்துவது

மற்றும் அதை நல்லொழுக்கங்களால் எவ்வாறு நிரப்புவது என்பதைக் கற்பிக்கிறது. நாம் முதலில் ஆன்மாவைப் பற்றி கற்றுக் கொள்ள வேண்டும், பின்னர் தீமைகள் மற்றும் நல்லொழுக்கங்கள் பற்றி அறிய வேண்டும். இமாம் அஷ்-ஷாபிஈ ரஹ்மத்துள்ளாஹி அலைஹி பின்வரும் ஈரடி கவிதையை கூறினார்கள்:

**நான் தீமைகளைக் கற்றேன், ஒருதீயவனாக மாறக்கூடாது என்பதற்காக**
**தீமை என்று அறியாதவர் அதில் விழுவார், நிச்சயமாகத் தெரிந்து கொள்!**

இதயம் மற்றும் ஆன்மா என்ற தலைப்பை முடிந்தவரை மூன்று படிகளில் விளக்குவோம் மற்றும் அதன் வெளிப்படையான மற்றும் மறைக்கப்பட்ட சக்திகளை விளக்குவதுடன் அதன் மகிழ்ச்சி மற்றும் அழிவுக்கு வழிவகுக்கும் காரணங்களை பற்றியும் விளக்குவோம்.

**முதல் படி**: ஆன்மீக இதயம் (**கல்பு**) மற்றும் ஆன்மா(**ரூஹ்**) என்றால் என்ன? கிரேக்க தத்துவஞானிகள் மற்றும் அவர்களைப் பின்பற்றுபவர்கள் இந்த இரண்டு அமைப்புகளையும் **நப்சி இன் நாத்திக்கா**, அல்லது, சுருக்கமாக, **நப்ஸ்** என்று அழைக்கிறார்கள். [இருப்பினும், சிறந்த அறிஞர் மற்றும் "தசவ்வுஃப்" மற்றும் நெறிமுறைகள் அறிவியலில் நிபுணர்; இமாம் அர்-ரப்பானி 'ரஹிமாஹஹுள்ளாஹுதஆலா, நஃப்ஸ், ஆன்மா, மற்றும் ஆன்மீக இதயம் வேறுவேறானவை என்று கூறினார்கள்.]

குர்ஆனின் சூரா இஸ்றாவின் எண்பத்தி ஐந்தாவது ஆயத் கரீமா கூறுகிறது: "**அவர்கள் ரூஹ் ஆன்மாவைப் பற்றி உங்களிடம் கேட்கிறார்கள்'. "அவர்களுக்கு(பதில்) கூறுங்கள் ஆன்மா ஒரு அல்லாஹுதஆலா'வினால் படைக்கப்பட்டவைகளில் ஒன்று என்று கூறுங்கள்."** இந்த ஆயத் கரீம் ஆன்மாவை வரையறுக்கும் எந்தவொரு முயற்சியையும் தடைசெய்கிறது.

உண்மையில், பெரும்பாலான (பிரசித்தி பெற்ற தசவ்வுஃப் பாதை என்று அழைக்கப்படும்) துருக்-இ-ஆலியா ஷெய்குமார்கள் மற்றும் இஸ்லாமிய அறிஞர்கள் ஆன்மாவைப் பற்றி பேசுவதைத் தவிர்த்தனர். 'குர்ஆன் அல்-கரீம்' இல் இருந்து புரிந்து கொள்ளப்பட்டது போல் ஆன்மாவின் அத்தியாவசிய இயல்பை பற்றி பேசுவதற்கு தடைசெய்யப்பட்டது, அதன் பண்புகள் அல்லது குணங்களை அல்ல. உண்மையில், பெரும்பாலான அறிஞர்கள் தங்கள் சீடர்களுக்கும் இந்த விஷயத்தை விசாரிக்கும் மற்றவர்களுக்கும் இதயமும் ஆத்மாவும் சடப்பொருள்கள் இல்லை என்று விளக்கினர். மற்றும் அவை (சடம் இல்லாதவை), அவற்றை அவர்கள் ஜவாகார் அல் பாசித் என்று அழைத்தனர். இந்த இரண்டு மையங்கள்தான் மனித இயல்புக்கு புரிந்துகொள்ளக்கூடிய தகவல்களை புரிந்துகொள்கின்றன. மற்றும் உடலில் உள்ள அனைத்து சக்திகளையும் செயல்பாடுகளையும் கட்டுப்படுத்தவும் கையாளவும் செய்கின்றன. இது தசஃவ்வுபின் சிறந்த வழிகாட்டிகளாலும் கலாமின் அறிஞர்களாலும் செய்யப்பட்ட வரையறை.

ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மா பற்றிய விரிவான தகவல்களை பெற விரும்புவோர் ஷெய்க் ஷிஹாபுதீன் உமர் சுஹ்ரவர்தீ (539 [1145 ஏ.டி.] - 632 [1234], பாக்தாத்), எழுதிய **அவாரிஃப்-உல்-ம'ஆரிஃப்** என்ற நூலை படிக்க வேண்டும். இவர் ஷாபி மதுஹபில் ஒரு அறிஞர், மற்றும் ஷெய்க் அப்துல்காதர்-ஜெய்லானியிடமிருந்து ஃபாய்ஸைப் பெற்ற அதிர்ஷ்டசாலிகளில் ஒருவர்.

மற்றது **மக்தூபாத்**, இமாம் ரப்பானி அஹ்மத் ஃபாரூக் செர்ஹிந்தீ (971[1563.AD.], இந்தியா -1034 [1624], செர்ஹெண்ட்) ’ரஹிமாஹுமுள்ளாஹுத ஆலா.

ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மா பற்றிய தகவல்களை ஆறு பந்திகளில் வழங்குவோம்.

**1– ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மாவின் இருப்பு:** ஆன்மா இருப்பது வெளிப்படையானது. தனது இருப்பு மிகவும் வெளிப்படையான ஒன்றுக்கு அதன் இருப்பை நிரூபிக்க மேலதிக ஆதாரம் தேவையில்லை. ஒரு மனிதனின் மிகவும் வெளிப்படையான விஷயம் அவனுடைய இருப்பு. ஒரு மனிதன் தான் இருப்பதை ஒரு நொடிக்கு கூட அவனால் மறக்க முடியாது. ஆத்மா தூங்கும் போது அல்லது குடிபோதையில் கூட தன்னைப் பற்றி ஒருபோதும் மறக்காது. ஒரு மனிதன் தான் இருப்பதை நிரூபிக்க வேண்டிய எந்த காரணமும் இல்லை. ஆயினும்கூட ஆன்மா என்பது பொருளா அல்லது இல்லையா என்பதையும், அது தானாகவே இருக்கின்றதா அல்லது வேறு எதுவுடனாவது சேர்ந்திருக்கின்றதா, அது கொண்டிருக்கும் வேறு ஒத்த பண்புக்கூறுகள் எவை என்பதை விவாதிக்கவும் நிரூபிக்கவும் அனுமதிக்கப்படுகின்றது. அவைகளில் பெரும் பாலானவை வெளிப்படையானவை, அவைகள் பின்வரும் ஐந்து பகுதிகளில் மதிப்பாய்வு செய்யப்பட வேண்டும்:

**2– ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மா**

அதாவது அவை உள்ளன. ரூஹ் பாரசீக மொழியில் **“ஜான்”** என்று அழைக்கப் படுகிறது. ஒரு விலங்கு இறந்துவிடுகின்ற போது, அதன் "ஜான்" அதிலிருந்து விலகிவிட்டது என்று நாங்கள் கூறுகிறோம். அதன் ஆத்மா என்ற அம்சம் அதன் உடலை விட்டு நீங்கிவிட்டது. படைக்கப்பட்ட ஒவ்வொரு உயிரினமும் ஒரு பொருள் (**ஜவ்ஹர்**) அல்லது ஒரு பண்புக்கூறு (’**அராஸ்**). ஏதாவது ஒன்று பொருள் என்றால், அதன் இருப்பிற்கு அடித்தளமாக வேறு எதுவும் தேவை இல்லை. அது தானாகவே உள்ளது. ஏதாவது பண்புக்கூறு (சிஃபத், ’அராஸ்), இருந்தால்,அது தானாகவே இருக்க முடியாது. அதை வைத்திருப்பதற்கு வேறு ஏதாவது தேவை. பொருள் மற்றும் வஸ்து என்பன பொருட்கள். அவற்றின் நிறங்கள், வாசனை மற்றும் வடிவங்கள் என்பன அவற்றின் பண்புக்கூறுகள். ஒரு பொருளில் நிறம் உள்ளது. பெற்றுக்கொள்ள ஒரு பொருள் இல்லாமல் வர்ணம் இருக்க முடியாது.

பொருட்களில் இரண்டு வகைகள் உள்ளன. முதலாவதாக ஒன்று முஜர்ரத் , அதாவது சடம் இல்லாதது , அதற்கு எடை, வடிவம் அல்லது நிறம் இல்லை. , இது உணர்வு உறுப்புகளை பாதிக்காது. சடம் இல்லாததை உணர்வு உறுப்புகள் மூலம் உணர முடியாது மற்றும் பிரிக்க முடியாது. ஞானம் (’அக்ல்) மற்றும் ஆன்மா இந்த வகைக்கு எடுத்துக்காட்டுகள். மாறாக, வஸ்து இருக்க முடியும் இரண்டாவது ஒரு பொருள். இது உணர்வு உறுப்புகள் மூலம் உணரப்படுகிறது மற்றும் பிரிக்கலாம். ஒரு குறிப்பிட்ட வடிவத்தை எடுக்கும், அது ஒரு பொருள் (**ஜிஸ்ம்**) என்று அழைக்கப்படுகிறது.

ஆன்மா என்பது பொருள்(அம்சம்) என்ற உண்மை பல்வேறு நிகழ்வுகளின் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளது. அதை நிரூபிக்கும் எளிய நிகழ்வு இதுதான்: பண்புக் கூறுகள் பொருட்களில் உள்ளன. வேறு வார்த்தைகளில் கூறுவதானால்,

பொருட்கள் பண்புகளைத் தாங்குகின்றன. ஆத்மா புரிந்துகொள்ளக்கூடிய மற்றும் சிந்திக்கக்கூடிய அனைத்தையும் பெறுகிறது மற்றும் தாங்குகிறது. எனவே, இதயமும் ஆன்மாவும் பொருட்கள், பண்புக்கூறுகள் அல்ல. இந்த வாதம் அப்படி இருப்பினும், சில ஒழுங்கற்ற நிகழ்வுகள் அடிப்படையில் வாதம் மறுக்கப்பட்டுள்ளது; பண்புகள் வேறு பண்புகளில் தங்கி இருத்தல் போன்றவை எடுத்துக்காட்டாக; வேகம், இயக்கத்தின் ஒரு பண்பு, இது ஒரு பொருள் அல்ல.

**3– ஆன்மீக இதயம் மற்றும் ரூஹ் என்பன ஆரம்பமானவை**

பகுதிகளாகப் பிரிக்க முடியாத ஒன்று அடிப்படை(elementary) என அழைக்கப் படுகிறது. ஆரம்பத்திற்கு நேர்மாறானது கலப்பு அல்லது கலவை. இந்த வரையறையின்படி, தொடக்கமாகக் கருதப்படுகின்ற இரசாயன கூறுகள், அவை, உண்மையில் அவை சேர்மங்கள் ஏனெனில் அவை அணுக்களாக அல்லது வாயுவாக மூலக்கூறுகளாக பிரிக்கப்படலாம். ஆன்மா அடிப்படை யானது என்பதை தன்னை தானே நிரூபிக்கின்றது. அது அடிப்படை என்று அறியப்பட்ட ஒன்றை புரிந்துகொள்கிறது. ஆன்மீக இதயமும் ஆத்மாவும் சேர்மங்களாக இருந்தால் அவை ஒவ்வொன்றையும் பகுதிகளாக அடிப்படை யான ஒன்றாக பிரிக்க முடியும். அதாவது அவை பிரிக்க முடியாதது. ஏனெனில், உதாரணமாக, ஆன்மா பகுதிகளாகப் பிரிக்கப்பட்டால், அது அடிப்படையாக எதைக் கொண்டிருந்தாலும் அதுவும் அதனுடன் பிரியவேண்டும். அது, கேள்விக்கு புறம்பானது. அடிப்படை ஒன்றை பிரிக்க முடியாது என்பதால் .

**4– ஆன்மீக இதயமும் ஆத்மாவும் பொருட்கள் அல்ல**:

உயரம், ஆழம் மற்றும் நீளம் போன்ற பரிமாணங்களைக் கொண்ட ஒரு வஸ்து ஒரு பொருள் ஆகும். இது வடிவம் கொண்ட பொருள் என்று வரையறுக்கப் படுகிறது. பொருள்களில் (ஜிஸ்ம்களில்) இருக்கும் வஸ்துக்களை ஜிஸ்மானி (material) என்று அழைக்கிறார்கள். பண்புகள் பொருட்களில் இருப்பதால், அவை பொருள் கூறப்படுகின்றன.

**5– ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மா தெரிந்து கொள்கின்றன, மற்றும் கையாளுகின்றன**

அவை தங்களை அறிகின்றன. அவைகளுக்கு தங்களை தெரியும் என்பதை அவை அறிகின்றன. அவை பார்வை மூலம் வண்ணங்களை உணர்கின்றன மற்றும் கேள்வி மூலம் கேட்கின்றன. அவை நரம்பு மண்டலத்தை கையாளுகின்றன, தசைகளை நகர்த்துகின்றன, இதனால் உடல் சில செயல்களைச் செய்கிறது. இந்த செயல்கள் தன்னார்வ நடவடிக்கைகள்.

**6– ஆன்மாவை உணர்வு உறுப்புகள் மூலம் தெரிந்து கொள்ள முடியாது**

வஸ்துக்களை உணர முடியும். ஆன்மா ஒரு பொருள் இல்லை என்பதால் அதை உணர முடியாது.

**இரண்டாவது படி**: ஒரு நபர் இறந்தால் அவரது ஆன்மாவுக்கு என்ன நடக்கும்?

ஒரு நபர் மரணித்தால் அவரது உடல் அழுகி விடும். அவரது ஆன்மீக இதயமும் ஆன்மாவும் அழிக்கப்படாது. மரணம் அவற்றை உடலில் இருந்து பிரிக்கிறது. அவை உடலை விட்டு வெளியேறி , அவை மீண்டும் முஜர்ரதுக்கு செல்கின்றன , அதாவது; (immaterial world) சடமில்லாத உலகுக்கு செல்கின்றன.அவை கியாமத்

நாள் வரைக்கும் அழிக்கப்படாது. மத அறிஞர்கள், தத்துவவாதிகள் மற்றும் பக்கச்சார்பற்ற விஞ்ஞானிகள் இந்த நம்பிக்கையை பகிர்ந்து கொள்கிறார்கள். ஒரு சில இயற்கை ஆர்வலர்கள் மட்டுமே இந்த ஒருமித்த கருத்துடன் வேறுபடுகிறார்கள். சரியான பாதையிலிருந்து விலகிவிட்டார்கள். அவர்கள் மனிதர்களை பாலைவனத்தில் வளரும் புல்லுடன் ஒப்பிட்டார். அவர்கள் கூறினார்கள் மனிதர்கள் புல் போன்று இருப்பார்கள் , வளர்கிறார்கள் பின்னர் மறைந்துவிடுவார்கள். அவரது ஆத்மா என்றென்றும் இருக்காது. அந்த காரணத்திற்காக, இந்த இயற்கை ஆர்வலர்களின் குழு “ஹஷாஷீஸ்” அல்லது “புல்வெளி வியாபாரிகள்” என்று அழைக்கப்படுகிறார்கள். தத்துவஞானிகளும் மத அறிஞர்களும் அவர்களின் தவறான தத்துவத்தை பல்வேறு ஆதாரங்க ளுடன் மறுத்தனர்.

[அல்லாஹு த’ஆலா பல மூலகங்களை படைத்தான், அவற்றில் இதுவரை நூற்றி ஐந்து மூலகங்கள் அவை ஒவ்வொன்றும் வெவ்வேறு சிறப்பு பண்புகள் உடைய மூலகங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு மூலகமும் அணுக்களால் ஆனது. அவன் ஒவ்வொரு அணுவையும் பேராற்றல் உள்ள மைக்ரோ ஜெனரேட்டர் போல உருவாக்கியுள்ளான். அணுக்களை ஒன்றாக சேர்ப்பதன் மூலமும் அயன் கட்டமைப்புகளை கொண்டும் அவன் மூலக்கூறுகள் உருவாக்கினான். பின்னர் அவர் சேதன மற்றும் அசேதன கனிமம், கலவைகள், செல்கள், பல்வேறு திசுக்கள் மற்றும் அமைப்புகளை உருவாக்கினான்.அவை ஒவ்வொன்றும் அத்தகைய நுணுக்கங்கள், இயற்கை சட்டங்கள், மற்றும் அவற்றுக்கிடையே நல்லிணக்கம் உள்ளன. அவற்றின் உருவாக்கத்தில் உள்ள அதிசயம் மனதை ஆச்சரியத்தில் விழுத்துகிறது.,

உதாரணமாக, ஒரு செல், ஒரு நுண்ணோக்கின் கீழ் மட்டுமே கவனிக்க முடியும் இது ஒரு பெரிய தொழிற்சாலை போன்றது. இதில் பல துறைகள் உள்ளன. மனித மனம் இதுவரை இந்த பிரம்மாண்டமான தொழிற்சாலை இருக்கும் இயந்திரங்களின் ஒரு சிறிய பகுதியைக் மட்டுமே கண்டு உள்ளது’. மனித உடலில் இருக்கும் மில்லியன் கணக்கான கலங்களின் செயல்பாட்டுக்கு உடலுக்கு உள்ளேயும் வெளியேயும் ஆயிரக்கணக்கான சரியான உள்ளமைப்புகள் தேவைப்படுகிறது. இந்த ஆயிரம் உள்ளமைப்புகளில் ஒன்று அதன் இணக்கமான அமைப்பு நின்றுவிட்டால், முழு உடலும் கூட நிறுத்தப்படும். எல்லாம் வல்லவன், எல்லாம் அறிந்தவன் அல்லாஹு தஆலா எல்லையற்ற அமைப்புகள் ஒழுங்கு மற்றும் நல்லிணக்கத்தை உருவாக்குவதன் மூலம் இந்த உடல் இயந்திரத்தை தானாகவே இயங்கவைக்கிறான். ஆன்மீக இருதயமும் ஆத்மாவும் தொடர்பு கொள்வதற்கு இந்த இயந்திரத்தின் மின்சக்தியும் அவ்வாறே.

ஒரு ஜெனரேட்டரில் சில பிழைகள் ஏற்படும்போது மின்சாரம் நின்றுபோகும்.. அதேபோல், உடலுக்கு உள்ளே வெளியே இருக்கும் ஒழுங்கு மற்றும் நல்லிணக் கத்தில் பிழைகள் ஏற்பட்டால் ஆன்மா உடலிலிருந்து புறப்படுகிறது. இதனால் மனிதன் இறக்கிறான். உலகில் எந்த மோட்டார் அல்லது இயந்திரமும் காலவரையின்றி செயல்படுவதற்கு முடியாது. அவை சரியான நேரத்தில் தேய்மானம் ஏற்பட்டு நிராகரிக்கப்பட்டு களைந்து போகின்றன. இது இயற்கையின் பொதுவான விதி. காலம் வரும்போது உடலிலும் தேய்மானம் ஏற்படுகின்றது மற்றும் சிதைவுகள் ஏற்படுகின்றன. ஒரு மனிதனின் உடல்

கல்லறையில் சிதைவடையும் போது செல்கள் அல்லது கூறுகள் எதுவும் இல்லாமல் போவது இல்லை.

உடலின் சிதைவு என்பது சேதன மூலக்கூறுகளை உருவாக்குகிறது. உடல், பூமி மற்றும் காற்றில்லா நுண்ணுயிரிகள் ஆகியவற்றின் உதவியுடன் கார்பன்டை ஓக்சைடு, அமோனியா, நீர் மற்றும் நைட்ரஜன் போன்ற சிறிய மூலக்கூறுகளாக சிதைக்கப்படுகிறது. இந்த சிதைவு ஒரு இயற்பியல்-இரசாயன நிகழ்வு. இன்று அது உறுதியாக அறியப்படுகிறது. இரசாயன மற்றும் இயற்பியலின் போது மூலப்பொருட்கள் அழியாது. பிரெஞ்சு வேதியியலாளர் (மற்றும் மருத்துவர்) லாவோசியர், 16 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார், அதை பரிசோதனை மூலம் இரசாயன தாக்கங்களின்போது மூலப்பொருள் அழியவில்லை மற்றும் புதிதா உண்டாகவும் இல்லை என்பதை நிரூபித்தார்.

இரசாயன தாக்கங்கள் இரசாயனவியல் விதிகளின் படி மட்டுமே எல்லா வற்றையும் செய்ய முடியும் என்று அவர் கருதினார். “இயற்கையில், எதுவும் உருவாக்கப்படவில்லை, அழிக்கப்பட்டது எதுவும் இருக்க முடியாது என்று கூறினார். இன்று, புதிதாக கண்டுபிடிக்கப்பட்ட தகவல்கள் அணு மற்றும் அணுசக்தி தாக்கங்கள் பொருள் சத்தியாக மாற்றமடைவதை காட்டுகின்றன. பொருள் பின்னர் மறைந்துவிடும், இதனால் லாவோசியர் தவறு என்று நிரூபிக்கிறது.

இன்று, விஞ்ஞானிகள் விஞ்ஞானத்தின் மேலும் முன்னேற்றத்தை தெளிவாகக் காண்கிறார்கள், புதிய ஆய்வுகள் மற்றும் கண்டுபிடிப்புகள் இஸ்லாமிய மார்க்கத்துக்கு புதிய பலத்தை சேர்க்கின்றன. இஸ்லாத்தின் எதிரிகளின் அவதூறுகளுக்கு மறுத்து பதில் அழிக்கின்றது, பொருட்களை வணங்கும் நாத்திகர்களை இழிவுபடுத்துகின்றது. எதிர்பாராத விதமாக, இருப்பினும், மார்க்கத்தை அறியாத சில பல்கலைக்கழக பட்டதாரிகள் தங்கள் ஆபத்தான விஞ்ஞான அறிவை ஒரு கருவியாகவும், சமீபத்தில் முஸ்லீம் உலகில் ஏற்பட்டுள்ள அறிவியல் பின்னடைவை, அவர்கள் நடத்தும் இஸ்லாத்திற்கு எதிரான விரோத பிரச்சாரத்திற்கான ஒரு களமாகவும் ஆக்கிக்கொண்டு இருக்கிறார்கள். டிப்ளோமாக்களை கொண்ட இந்த காஃபிர்கள் இளைய தலைமுறையினரை “இஸ்லாம் பின்தங்கியது, முன்னேற்றத்தைத் தடுக்கிறது”. கிறிஸ்தவர்கள் முன்னேற்றம் அடைகிறார்கள் என்று பொய்களைக் கூறி முஸ்லிம் இளைஞர்களை தவறாக வழிநடத்த முயற்சிக்கின்றனர்.

அவர்கள் அனைத்து வகையான விஞ்ஞான, தொழில்நுட்ப வாகனங்களையும் கண்டுபிடித்து வருகின்றனர். அவர்களின் மருத்துவம், பாதுகாப்பு, மற்றும் தகவல் தொடர்பு ஆகியவைகளில் புதிய கண்டுபிடிப்புகள் நம் கண்களை திகைக்க வைக்கின்றன. முஸ்லிம்களுக்கு அறிவியலில் இந்த முன்னேற்றங்கள் மற்றும் தொழில்நுட்பம் எதுவும் தெரியாது. நாம் கிறிஸ்தவர்களைப் பின்பற்ற வேண்டும்.”என்று கூறுகிறார்கள்.

இளைஞர்களை அவர்கள் தங்கள் அழகிய இஸ்லாமிய ஒழுக்கங்களையும் இஸ்லாமிய சகோதரத்துவத்தையும் கைவிட வேண்டும் என்றும் மற்றும் ஐரோப்பியர்களை ,அமெரிக்கர்களைப் பின்பற்றுமாறும் ஊக்குவிக்கிறார்கள். அவர்கள் அவற்றைப் பின்தொடர்வது முன்னேற்றம் என்று கூறுகிறார்கள். அவர்கள் முஸ்லிம் இளைஞர்களை தங்களைப் போன்று மார்க்கம்

அற்றவர்களாகவும் இஸ்லாத்திற்கு விரோதமானவர்களாகவும் ஆக்குவதற்கும் இதனால் இளைஞர்களை அவர்களின் பேரழிவுகளுக்கு இட்டுச் செல்லவும் முயற்சி செய்கிறார்கள்.

உண்மையில், இஸ்லாம் நமக்கு அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தில் முன்னேற்றம் காண கட்டளையிடுகிறது. கிறிஸ்தவர்கள் மற்றும் மற்ற காஃபிர்கள் அனைவரும் அவர்களின் முன்னோர்கள் மற்றும் எஜமானர்களி டமிருந்து கற்றுக்கொண்டதைச் செய்கிறார்கள். அவர்கள் முன்னோர்களிடம் கற்றுக்கொண்ட விஷயங்களில் சிறிய மாற்றங்களைச் சேர்க்கின்றனர். முன்னோர்கள் இவற்றில் எதையும் செய்யவில்லை எனின் அவர்களின் இன்றைய தலைமுறை எதுவும் செய்ய முடியாது. "தக்மில் அல்-சனாஅத் என்பது தலாஹுக் இல் அக்ஃபார் மூலம்" என்ற ஒரு பேச்சு வழக்கு உண்டு. பல நூற்றாண்டுகளுக்கு முன்பே இது கூறப்பட்டது. இந்த சொற்றொடர் சிந்தனை களை சேர்ப்பதும் இனைப்பதன் மூலம் தொழில்நுட்பத்தின் முழுமை அடையப்படுகிறது என்று கூறுகிறது.

அனைத்து வகையான அறிவியல் மற்றும் தொழில்நுட்பவியல் சாதனைகளின் ஒரே சாம்பியன்களாக முஸ்லிம்கள் இருந்ததாக வரலாறு காட்டுகிறது. அவர்கள்தான் விஞ்ஞான புலமைகளை வளர்த்து கடந்த நூற்றாண்டில் விஞ்ஞான தன்னியக்கவாக்கத்தை அதன் நிலைக்கு மேம்படுத்தினார்கள். மற்றும் இஸ்லாமிய மதத்தின் கட்டளைகள் செயல்படுத்திய அரசாங்கங்கள் மற்றும் மாநிலங்கள் மூலம் இவை அனைத்தும் இஸ்லாமிய மார்க்கத்தின் மூலமும் நடைமுறைப்படுத்தப்பட்டன.

கிறிஸ்தவர்கள் இஸ்லாமிய நாடுகளை தாக்குதல் மூலம் அழிக்க முடியவில்லை என்பதைக் கண்டார்கள். அவர்கள் உள்நாட்டு அரசியலில் சூழ்ச்சிகள், பொய்கள் மற்றும் மோசடிகள் செய்வதன் மூலம் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றினர். அவர்கள் தங்கள் நிலங்களில் மதச்சார்பற்ற மற்றும் மேசோனிக் (பொருத்தமற்ற) மக்களின் கீழ் அரசாங்கங்களை நிறுவினர். ஆனால் அவர்களால் இஸ்லாத்தை அழிக்க முடியாது. இந்த மதச்சார்பற்ற மற்றும் மேசோனிக் மக்கள் முஸ்லிம்கள் விட்டுச்சென்ற விஞ்ஞான கண்டுபிடிப்புகள் சிலவற்றை வைத்து இணைத்தல் மற்றும் மாற்றங்கள்(modification) மூலம் கண்டுபிடிப்புகளின் தற்போதைய மேம்பட்ட நிலைக்கு பெயர் பெற முயற்சிக்கின்றனர்.

அவர்களின் கொடூர நோக்கத்தை அம்பலப்படுத்துவதிலிருந்து இஸ்லாத்தைத் தடுப்பதற்காக சொந்த ஆசைகள், இன்பங்கள் மற்றும் நலன்களை மட்டுமே கவலைப்படும் மக்கள் இஸ்லாத்தை பிற்போக்கு முறை என்று அழைப்பதன் மூலம் இஸ்லாம் அறிவியல் மற்றும் கலைகளுக்கு கட்டளையிடுகிறது என்ற உண்மையை மக்களின் மனதிலிருந்து மழுங்கடிக்க முயற்சிக்கின்றன.

அனைத்து யூதர்களும், கிறிஸ்தவர்கள், மற்றும் விக்கிரகாராதனை செய்பவர்கள்கூட சொர்க்கம் நரகம் என்பவற்றை நம்புகின்றனர் தேவாலய ங்களும் ஜெபஆலயங்களும் ஆர்த்திகர்களால் நிரம்பியுள்ளனர். இந்த புத்திமான்கள், இந்த நம்பிக்கை கொண்டவர்களை பின்னடைவைக் கொண்டு களங்கப்படுத்துவதில்லை. அவர்களின் பார்வையில் நவீனத்துவம் என்பது விஞ்ஞானத்தை விட துரோகமும் ஒழுக்கக்கேடும் தான். இஸ்லாம் மீதான

தகுதியற்ற அவதூறான தாக்குதல்களுக்கு பின்னால் இருப்பவர்கள் ஆங்கிலேயர்கள்தான். தயவுசெய்து எங்கள் வெளியீடுகளில் ஒன்றான 'பிரிட்டிஷ் ஸ்பையின் ஒப்புதல் வாக்குமூலங்களைக்' (**Confessions of a British Spy**) பார்க்கவும்.

இன்றைய முஸ்லிம்கள் ஒன்றுபடுவதும், இஸ்லாம் கட்டளையிடும் இஸ்லாமிய மார்க்க கல்வி மற்றும் அறிவியல்(scientific education) மீதான தங்கள் உறுதியான பிடியை மீண்டும் தொடங்குவதும், பிரம்மாண்டமான தொழில்சாலைகள் மற்றும் அதிநவீன அமைப்புகளை சாதனங்களையும் எல்லா பகுதிகளிலும் கிறிஸ்தவர்களை விஞ்சி அவற்றை மீண்டும் நிறுவுவதும் காலத்தின் தேவை ஆகும். அதன் மூலம் முழு மனித சமுதாயத்தின் நலனுக்காக வழிகாட்ட வேண்டும்.

மனித உடலை உருவாக்கும் பொருள் பூமி, நீர் மற்றும் காற்று இலிருந்து வருகிறது. உயிருள்ள மனிதர்களுக்கு இந்த மூன்று ஆதாரங்கள் தேவைப் படுகிறது. இறந்த பிறகு உடல் சிதையும்போது அவை மீண்டும் அந்த மூன்று ஆதாரங்கலுடன் சேர்கின்றன. மரணத்திற்குப் பின் இந்த மூன்று குழுக்களின் பொருள் அல்லது இந்த மூன்று குழுக்களுக்கு ஒத்த சில பொருட்கள் கலவை மூலம் வாழ்க்கை சாத்தியமாகும்.

ஆன்மீக இதயமும் ஆத்மாவும் மற்றும் மலக்குகளும் உயர் தரங்களை அடைவதோ அல்லது முன்னேறவோ முடியாது. அவர்கள் முன்பிருந்த படைக்கப் பட்ட அதே நிலையிலேயே இருப்பார்கள். ஆன்மீக இதயமும் ஆத்மாவும் உடலுடன் ஒன்று சேரும்போது அவை பண்புகளை பெறுகின்றன. அவை முன்னேற்றம் அடைய அல்லது சம்பந்தப்பட்ட நபர் குறைந்த தரங்களுக்கு தரமிறக்கப் பட்டால் அவர் ஒரு பாவியாக அல்லது காஃபிர் ஆக மாற சாத்தியம் உண்டாகின்றது. அதில் அவர் அழிவை நோக்கி பயணமாவார்.

பொருட்களின் களத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் அதன் பண்புக்கூறுகள் குணத்தால் அறியப்படுகின்றன. ஒவ்வொரு பொருளும் தனிமங்கள்(கலன்கள்) மூலக்கூறுகளின் கலவையாகும். கலன்கள் ஒரு மூலக்கூறிலிருந்து மற்றொன்று க்கு மாறுகின்றன, இதன்மூலம் பொருள்கள் அவற்றின் ஒரேவிதமான கலவையை இழக்கின்றன. அவை மோசமடைந்து வெவ்வேறு பண்புக்கூறுகள் குணங்களுடன் வேறு பொருட்களாக மாறுகின்றன. இவற்றில் பொருள் இருப்பதை நிறுத்தவில்லை என்றாலும் பொருள்களில் மாற்றங்களும் வகைகளும், காலப்போக்கில் மாறுகின்றன. அவற்றின் இருப்பு இல்லாமல் ஆகி பிற வகையான பொருள்கள் அவற்றின் இருப்பை மாற்றுகின்றது. ஆரம்பகால (matter) வஸ்து "ஹயூலா" என்று அழைக்கப்பட்டது. ஒரு பொருளின் வடிவம் உருவம் (சூறத்) என்று அழைக்கப்பட்டது.

ஆன்மீக இருதயத்தையும் ஆன்மாவையும் சிறிய துணிக்கைகளாக கரைக்க முடியாது என்பதால் அவை ஒருபோதும் மாற்றமடைந்து சிதைவடைந்து அழியாதவையல்ல, மோசமடைகிறது அல்லது இருப்பிலிருந்து மறைந்து விடும். பௌதீக நிகழ்வுகளில் பொருள்கள் அவற்றின் வடிவங்கள் அல்லது வடிவங் களை மாற்றுகின்றன. உதாரணமாக, நீர் கூடுதல் வெப்பத்தைப் பெறும்போது நீராவியாக மாறுகிறது. இது திரவத்திலிருந்து வாயு நிலைக்கு மாறுகிறது. நீரின் திரவ வடிவம் மறைந்து வாயு வடிவத்தில் நீர் இருப்புக்கு வருகிறது.

இரசாயன தாக்கங்களில், ஒரு பொருளின் கலவை அல்லது கட்டமைப்பு மாற்றங்கள் நிகழ்கின்றன. இங்கு ஒரு பொருளை உருவாக்கும் கலவை இல்லாமல் ஆகும்போது வேறுபட்ட கலவையுடன் வேறொரு பொருள் தோன்றுகின்றது. பௌதீக நிகழ்வுகளில், பொருள்கள் அவற்றின் வடிவங்களை மாற்றுகின்றன ஆனால் அந்த கலவையை மற்றும் கட்டமைப்பை உருவாக்கும் அடிப்படை பொருள் மாறாது. இரசாயனவியல் தாக்கம் ஒன்றில் ஒரு பொருள் அதன் தன்மை இல்லாமல் ஆகி அதன் கட்டமைப்பும் மாறுகின்றது. எனவே, பொருள் மாறுகிறது, ஆனால் அது ஒருபோதும் அதன் இருப்பை இழக்காது. இருப்பினும், அணுசக்தி தாக்கங்களில் பொருளும் இல்லாதவையாகி சத்தியாக மாறும்.

**மூன்றாவது படி**: ஆன்மீக இருதயத்திற்கும் ஆத்மாவுக்கும் சக்திகள் உள்ளன. இந்த சக்திகள் தாவரங்கள் அல்லது விலங்குகளின் சக்திகளைப் போன்றவையல்ல. செடிகள் மற்றும் விலங்குகளுக்கும் அவற்றுக்கு பொருத்தமான ஆத்மாக்கள் உள்ளன. ஆயினும் ஆன்மீக இதயம் மனிதர்களில் மட்டுமே உள்ளது. ஒவ்வொரு உயிரினத்திற்கும் ஒரு தாவர ஆன்மா உள்ளது, இது பிறப்பு, வளர்ச்சி, உணவு, கழிவுப்பொருட்களை வெளியேற்றுதல், இனப் பெருக்கம் மற்றும் இறப்பு செயல்பாடுகளை செய்கிறது. இந்த செயல்பாடுகள் மனிதர்கள், விலங்குகள் மற்றும் தாவரங்களில் இல் மேற்கொள்ளப்படுகின்றன. இவற்றின் செயல்பாடுகளின் விவரங்கள் மற்றும் அவை எவ்வாறு செய்யப் படுகின்றன என்பது உயிரியலில் வகுப்புகளில் கற்பிக்கப்படுகிறது.

இந்த உயிரினங்களில் வளர்ச்சி அவர்களின் வாழ்நாள் முழுவதும் தொடர்ச்சி யாக இல்லை. இது முன்னரே தீர்மானிக்கப்பட்ட நிலையை அடைந்த பிறகு நிறுத்தப்படும். மனிதர்களில் இந்த நிலை சராசரியாக இருபத்தி நான்கு ஆண்டுகள் ஆகும். உடல் பருமனாக மாறுவது வளர்ச்சி அல்ல. உணவளிப்பது ஆயுட்காலம் முழுவதும் தொடர்ச்சியானது. ஏனெனில் வாழ்க்கைக்கு தேவையான ஊட்டச்சத்து பெறாமல் நீடிக்க முடியாது என்பதால். ஒரு தாவர ஆன்மாவைத் தவிர, மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் ஒரு விலங்கு ஆன்மா உள்ளது. அதன் இடம் மார்பு. இந்த விலங்கு ஆன்மா தான் தன்னார்வ இயக்கங்களுக்கு( voluntary movements) ஆதாரம். மனிதர்களில், இது ஆன்மீக இதயத்தின் கட்டுப்பாட்டின் கீழ் வேலை செய்கிறது

மனிதர்களுக்கு இன்னொரு ஆன்மா இருக்கிறது. நாம் மனிதர்களுக்கு ஆன்மாவை குறிப்பிடும்போது, நாம் தானாகவே ஆன்மீக இதயத்தையும் ஆன்மாவையும் குறிக்கிறோம். இந்த ஆன்மா பகுத்தறிவு, சிந்தனை, சிரித்தல் போன்றவற்றைச் செய்கிறது. விலங்கு ஆன்மாவுக்கு இரண்டு வகையான சக்தி உள்ளது. புரிந்துகொள்ளும் சக்தி மற்றும் இயக்கத்தின் சக்தி. புரிந்துகொள்ளும் சக்தி ஒரு முனைப்பு அது விஷயங்களைப் புரிந்துகொள்கிறது.

இந்த புரிதல் தன்னை இரண்டு வழிகளில் வெளிப்படுத்துகிறது. முதலாவது உடல் உறுப்புகளின் உணர்வு மூலம் புரிந்துகொள்ளுதல். இரண்டாவது காணப்படாத உறுப்புகள் மூலம்(அல்லது உள் பீடங்கள்) புரிந்துகொள்ளுதல். உடல் உணர்வு உறுப்புகள் ஐந்து உள்ளன. முதலாவதாக உடல் உணர்வு உறுப்பு தோல். தோல் மூலம் அரவணைப்பு, குளிர், ஈரப்பதம், வறட்சி, மென்மை மற்றும் கடினத்தன்மை ஆகியவை உணரப்படுகின்றன. ஒரு பொருள் தோலைத் தொடுகின்றபோது, விலங்கு ஆன்மா இந்த பொருளை சூடாக இருக்கிறதா

என்பதை உணர்கிறது. இந்த தொட்டுணரக்கூடிய உணர்வு கையின் உட்புறத்தில் வலுவாக உள்ளது. இரண்டாவது உணர்வு வாசனை, மூக்கு வழியாக செய்யப்படுகிறது. மூன்றாவது சுவை, இது நாக்கின் நரம்பு மண்டலத்தின் மூலம் நிறைவேற்றப்படுகிறது. நான்காவது கேட்பது, இது காதுகளின் நரம்புகள் வழியாக செய்யப்படுகிறது. கடைசியாக, ஐந்தாவது பார்வை, மற்றும் அது கண்களில் நரம்புகள் மூலம் செய்யப்படுகிறது.

காணமுடியாத ஐந்து உள்ளுணர்வு (உள் பீடங்கள்) உறுப்புகளும் உள்ளன:

1– பொது அறிவு (**ஹிஸ் அல்-முஷ்தரக்**): இது மூளையின் முன் பகுதியில் அமைந்துள்ளது. வெளிப்புற உணர்வுகள், (உணரும் உள் பீடங்கள்)உறுப்புகளில் இருந்து மூளையின் அந்தந்த பகுதிகளுக்கு வந்து அந்த பகுதிகளில் சேகரிக்கப்படும்.

2– கற்பனை (**ஹயால்**): அதன் இருப்பிடம் மூளையின் முன் பகுதி உணரப்பட்ட உணர்வுகள் மற்றும் புரிந்துகொள்ளப்பட்டவை வடிவமாக (உருவமாக) சேமிக்கப்படுகின்றன. ஒருவர் பொருளை பார்க்கும்போது, அந்த பொருள் மூளையின் பொதுஅறிவு பகுதியில் உணர்வை ஏற்படுத்துகிறது. அந்த பொருள் கண் பார்வையில் இருந்து அகற்றப்படும்போது, உணர்வும் பொது அறிவை விட்டு அகன்று விடுகிறது, ஆனால் அதன் உருவம் கற்பனை பகுதிக்கு கொண்டு செல்லப்படுகிறது, அங்கு அதன் தோற்றத்தை நீண்ட காலம் பராமரிக்கின்றது. கற்பனை இல்லை என்றால், மக்கள் ஒன்றை மறந்து விடுவார்கள் மேலும், யாரையும் யாரும் அடையாளம் காண மாட்டார்கள்.

3– உள்ளுணர்வு கருத்து (**வாஹிமா**): இது உணர்வு உறுப்புகளால் உணர முடியாது அர்த்தங்களை அனுபவித்த உண்மைகளிலிருந்து கருத்து மூலம் ஊகித்து உணர்கிறது. உதாரணத்திற்கு: பகை மற்றும் ஒருமைப்பாடு போன்ற கருத்துக்கள் எந்த உணர்வு உறுப்பின் உணர்வுக்கும் அப்பாற்பட்டவை. ஆயினும் ஒரு நபரின் நட்பு அல்லது பகைமையை நீங்கள் உணர்கிறீர்கள். இந்த நட்பை அல்லது பகைமை உணர உதவும் உள்சக்தி வஹிமா என்று அழைக்கப்படுகிறது. இந்த உள்ளுணர்வு சக்தி இல்லாவிட்டால், செம்மறி ஆடுகள் ஓநாயை தவிர்க்காது, ஏனெனில் அது அதன் பயத்தை உணராது. அதன் குட்டிகளைப் பாதுகாக்க அது முயற்சிக்காது.

4–(**ஹஃபிஸா**) நினைவகம்: இது புரிந்துகொள்ளப்பட்ட கருத்தை சேமிக்கிறது

5–(**முத்தசர்ரிஃபா**): இது மனதின் ஒரு பீடமாகும் (faculty) இது பெறப்பட்ட உணர்வுகள் மற்றும் கிளர்ச்சிகளை கொண்டு புதிய சேர்வைகளை உருவாக்குகிறது. உதாரணமாக, இது ஒரு மரகத மலையை கருத்தரிக்க முடியும். கவிஞர்கள் ரசிக்கிறார்கள் இதிலிருந்து ஏராளமானவர்கள் பங்கு கொள்கிறார்கள்.

இந்த இயக்க சக்தி இரண்டு வகைகள் உள்ளன; அதாவது விலங்கு ஆன்மாவின் இரண்டாவது சக்தி: முதலாவது பசி அல்லது சரீர சக்தி (**ஷஹாவீ**). இந்த சரீர சக்தியுடன் மனிதர்கள் மற்றும் மிருகங்கள் அவற்றின் இயற்கையான தேவைகளுக்காக மற்றும் ஏதாவது அவர்களின் இயல்புக்கு விருப்பமானதை பெறுகின்றன. இந்த சக்தி **பெஹிமீ** (மிருகத்தனமான) சக்தி என்றும் அழைக்கப்படுகிறது. இரண்டாவது வகை **கதபீ** (கோபத்தின், கோபத்துடன்

தொடர்புடையது) என்று அழைக்கப்படுகிறது. இந்த சக்தியின் மூலம், அவர்கள் அபாயங்களுக்கு எதிராக தங்களைத் தற்காத்துக் கொள்கின்றன. இந்த இரண்டு வகை சக்தியும் "மிருக சக்திகள்" என்று அழைக்கப்படுகிறது.

இயக்கங்களை செயல்படுத்தும் சக்திகளுக்கு புரியும் சக்திகள் தேவை. விஷயங்களை முதலில் உணர்வு உறுப்புகள் மூலம் உணர வேண்டும். அதன் மூலம் அவை நல்லவையா அல்லது தீயவையா என்று தீர்மானிக்கப்படலாம். தீர்மானத்தை பொறுத்து ஏற்றுக்கொள்ளப்பட்டது அல்லது நிராகரிக்கப்பட்டது. இந்த செயல்முறை அனைத்தும் உணர்தல் மற்றும் அதன்படி செயல்படுவது நரம்பு மண்டல மையத்தால் செய்யப்படுகிறது. மனித இதயமும் ஆத்மாவும் மனிதனில் மட்டுமே உள்ளன. இந்த மனித ஆத்மாவுக்கும் இரண்டு சக்திகள் உள்ளன. இந்த இரண்டு சக்திகள் மூலம் தான் மனிதன் மிருகங்களிலிருந்து வேறுபடுகிறான்.

முதலாவது சக்திகள் அறிந்து கொள்ளும் மற்றும் உணரும் சக்தி (**குவ்வா-அல் ஆலிமா)**அல்லது (**குவ்வா-அல் முத்ரிகா**) மற்றது

இரண்டாவது சக்தி ஒரு காரணியானதும் மற்றும் பயனுள்ளதுமான சக்தி (**குவ்வில் ஆமிலா**). அறிவதற்கான மற்றும் உணர்ந்து கொள்வதற்கான சத்தி **நுத்க்** அல்லது **'அக்ல்** (ஞானம், காரணம்) என்றும் அழைக்கப்படுகிறது. இந்த சக்தி முக்கிய இரண்டு கிளைகளைக் கொண்டுள்ளது: **ஹிக்மத்-இ-நசாரீ** (தத்துவார்த்த ஞானம்) இது அறிவியல் அறிவை பெறவதற்கு சாட்டப்பட்டுள்ளது. இரண்டாவது, **ஹிக்மத்-இ-அமலீ** (நடைமுறை ஞானம்), **நெறிமுறைகள்** பற்றிய அறிவுக்கு பொறுப்பாகும்.

தத்துவார்த்த ஞானம், பொருள் உலகின் உண்மை அல்லது சாரத்தை புரிந்து கொள்வதற்காக விஞ்ஞான அறிவைப் பெறுவதற்கு பயனுள்ளதாக இருக்கும். மறுபுறம், நடைமுறை ஞானம், நல்லொழுக்கங்களையும் நல்ல செயல்களையும், தீமைகள் மற்றும் தீய செயல்களையும் பாகுபடுத்துகின்ற நெறிமுறைகளைப் பற்றிய அறிவை இது பெறுகிறது. ஆன்மாவின் காரண சக்தி பயனுள்ள மற்றும் வெற்றிகரமான செயல்களை செய்து முடிப்பதற்கு காரணமாகின்றது. இது தெரிந்துகொள்ளும் சக்தி மூலம் பெறப்பட்ட தகவலின் அடிப்படையில் செயல்படுகிறது.

அதேசமயம் விலங்குகளின் ஆன்மாவிலுள்ள இயக்க சக்திகள் உள்ளுணர்வு சக்தி கண்டுபிடிக்கும் நல்லதைக் ஏற்றுக்கொள்கிறது. அது வெறுப்பதை நிராகரிக்கின்றது. மனித ஆன்மாவின் காரண சக்தி அதன் செயல்திறனை ஞானத்தின் தீர்ப்பை அடிப்படையாகக் கொண்டது. ஞானம் அதை நல்லதாகவும் பயனுள்ளதாகவும் தீர்மானித்துவிட்டால் அதை செய்கிறது. (ஞானத்தின் மூலம்) ஆரோக்கியமற்ற அல்லது ஆபத்தான தீங்கு விளைவிக்கும் என உணரும் செயல் எதையும் செய்ய நிராகரிக்கின்றது. அத்துடன் இது ஆன்மீக இதயம், ஷஹாவீ மற்றும் விலங்குகளின் ஆத்மாவின் கதபி சக்திகள் மூலமாகவும் மேற்பார்வை செய்கிறது.

ஏராளமான மக்கள் பெரும்பாலும் அவர்களின் நஃப்சின் அல்லது மிருக ஆத்மாவின் ஆணைகளின் கீழ் நடந்துகொள்கிறார்கள். வேறு வார்த்தைகளில் கூறுவதானால், அவை பெரும்பாலும் அவர்களின் “வஹ்ம்” மற்றும் “ஹயால்” ஆகியவற்றின் விருப்பத்திற்கு உட்பட்டது.

இமாம் முஹம்மது அல்-கஸ்ஸாலி 'ரஹ்மத்துள்ளாஹி' அலைஹி 'மற்றும் சில தசவ்வுஃபின் பெரிய மேதைகள் கூறியுள்ளார்கள். "ஆன்மாவின் இந்த சக்திகள் உண்மையில், மலக்குமார்கள். மகத்தான மற்றும் இரக்கமுள்ள அல்லாஹு தலா அவனுடைய மனித அடிமைகளுக்கு இரக்கம்கொண்டு , ஆன்மாவின் கட்டளையின் கீழ் மலாயிக்கத்துமார்களை நியமித்துள்ளான். அவை சிறிய இறுதி நாள் வரை, அதாவது ஆன்மா உடலில் இருந்து புறப்படும் வரை ஆன்மாவின் கீழ் இருக்கும். இந்த உண்மை ஹதீத்-ஷரீபில் குறிப்பிட ப்பட்டுள்ளது. அது சில நிகழ்வுகளில் நம்பகத்தன்மையையும் காணலாம், எ.கா. சில நேரங்களில் அனுபவம் வாய்ந்த மக்கள் ஆச்சரியப்படும் அளவுக்கு சாதாரணமான மக்கள் அவர்களின் திறன்களுக்கு அப்பாற்பட்ட எதிர்பாராத பழக்கவழக்கங்களை வெளிப்படுத்துகிறார்கள். ஆன்மாவின் இரண்டு சக்திகள் மூலம் தான் மனிதகுலம் முழுமை அடைகிறது.

**குர்ஆனின் பல இடங்களில், ஹக் தஆலா அறிவையும் ஞானத்தையும் பாராட்டுகிறான்;**
**கற்றலை ஊக்குவிக்கும், மிகவும் பிரியமான தூதரின் அறிவுறுத்தல் ஏராளமனவை.**

**அறிந்து கொள்ளுங்கள்: அறியாமை இஸ்லாத்தின் எதிரி, மேலும் மிகவும் வலிமையானது,**
**நோய்க்கு அதன் வைரஸ் பரவுவது பேரழிவு மிகவும் வருந்தத்தக்கது!**

**"அறியாமை வந்தால் இஸ்லாம் அவ்விடத்திலிருந்து விலகுகிறது" என்று தூதர் கூறினார்.**
**இஸ்லாத்தை நேசிப்பவர் அறிவை நேசிப்பவரகவும்அறிவிவை கற்றவராகவும் இருங்கள்!**

**"சொர்க்கம் வாள்களின் நிழலில் உள்ளது." அவ்வாறு கூறுவது ஹதீத் இல்லையா?**
**அணுகுண்டுகள், விமானங்கள் முன்னறிவித்தல்கள், மேலும் ஒரு சுருக்கமான கட்டளை!**

**இஸ்லாம் அவமானத்தை அனுபவிக்கும் ஒரே நோய் அறியாமையே!**
**ஓ, விஞ்ஞானத்தின் நிலை, என்ன ஒரு அவமானம், இந்த தேசம் இருளில் விழுந்துவிட்டது!**

**எங்களை வழிநடத்திய நிலை மோசமானது, நம்பிக்கையோ கற்போ பிழைக்கவில்லை!**
**ஓ, மோசமான இருள், முஸ்லிம்களின் வாழ்க்கையில் அடக்குமுறை மிகவும் மோசமானது!**

**ஓ, பரம எதிரி, உன்னைக் கொல்ல, எல்லாவற்றிற்கும் மேலாக, முன்னுரிமை பெறுகிறாய்;**
**அவிசுவாசிகளே, இந்த மேன்மையை நீங்கள் மட்டும் கொடுத்திருக்கிறீர்கள்!**

**தேசத்தார்களே எழுந்திருங்கள், இல்லையென்றால் உங்கள் மறதிக்கு பலியாகுங்கள்!**
**தீங்கு தவிர, நீங்கள் பேரம் பேசுவதில் 'மறைவாக' களங்கப்படுகிறீர்கள்!**

**அல்லாஹ்வுக்கு முன் அவமானப்படுங்கள், இஸ்லாத்தை விடுங்கள், தொட்டியில் நாய்!**
**மாகோட்டி சடலம்போல, மண்ணில் மூழ்கி, அது ஏன் உங்களுடன் ஆபத்தில் சேர வேண்டும்!**

**என்னுடைய இந்த காரண கருத்தை, கற்றுக் கொள்ளாதவர்கள் காது கேளாதவர்களாக மாறட்டும்;**
**ஏனெனில்,"அல்லாஹ்வுக்குமுன்பாக வெட்கப்படுது" என்பது கேட்டுக் கற்றுக்கொள்ள வேண்டியது மிக அதிகம் .**

## முகவுரைக்கு முதல் இணைப்பு

இந்த பிரிவில், மற்ற உயிரினங்களை விட மனிதர்களின் மேன்மையை விளக்கு வோம்: எல்லா பொருட்களும் அவற்றின் கட்டமைப்புகளை பொறுத்தவரை ஒத்தவை, அதாவது, அவை அனைத்தும் பொருளால் ஆனவை மற்றும் எடையையும் கனவளவையும் கொண்டுள்ளன. மனிதர்களும் விலங்குகளும் இந்த விஷயத்தில் உயிரற்ற பொருட்களுக்கு சமனானவை. ஆனால்

பொருள்கள் அவற்றின் குறிப்பிட்ட பண்புகளினால் ஒன்றுடன் ஓன்று வேறுபடு கின்றன.

[ஒவ்வொரு பொருளும் அணுக்களால் ஆனது. தூசியாலான ஒரு புள்ளி மில்லியன் கணக்கான அணுக்களின் தொகுப்பு. சில மூலக்கூறுகளை உருவாக்க ஒன்றாக சிறிய எண்ணிக்கையிலான அணுக்கள் இணைகின்றன. . இரண்டு வகையான பொருட்கள் உள்ளன: தூய பொருட்கள் மற்றும் கலவைகள். குறிப்பிட்ட குணங்கள்அல்லது பண்புகளை கொண்டிருக்கும் பொருட்கள் தூய பொருட்கள் என்று அழைக்கப்படுகின்றன. உதாரணமாக, செப்பு கம்பி,மழை நீர் ஆகியன தூய்மையான பொருட்கள், ஏனெனில் அவை அவை பூமியில் எங்கிருந்தாலும் சரி , எல்லா நேரத்திலும் ஒரே மாதிரியானவை. அவற்றின் கொதிக்கும் மற்றும் உருகும் வெப்பநிலை அறியப்படுகிறது, மற்றும் ஒருபோதும் மாறாது. நிலையான குணங்கள் இல்லாத பொருள்களை கலவைகள் என்று அழைக்கிறார்கள். பால், மரம், பெட்ரோல், கடல் நீர் ஆகியவை கலவையாகும். அவை இருக்கும் நிலையைப் பொறுத்து வெவ்வேறு குணங்களை கொண்டிருக்கலாம். அவை நிலையான கொதிநிலை மற்றும் உருகும் வெப்பநிலையைக் கொண்டிருப்பதில்லை. உதாரணத்திற்கு, பசுவின் பால் ஆடுகளின் பாலிலிருந்து வேறுபட்டது, அதே நேரத்தில் கறுப்பு கடல் நீர் மத்தியதரைக் கடலின் நீரிலிருந்து வேறுபட்டது. கருங்கடலின் நீர் மத்திய தரைக்கடல் நீரை விட உப்பு குறைவாக உள்ளது.

தூய பொருட்கள் இரண்டு குழுக்களாக வகைப்படுத்தப்படுகின்றன. அவை பகுதிகளாக பிரிக்க முடியாவிட்டால் அவை மூலகம் (element) என அழைக்கப் படுகின்றன. அவை வெவ்வேறு குணாதிசயங்களைக் கொண்டுள்ளன. தங்கம், கந்தகம், அயோடின் மற்றும் ஆக்ஸிஜன் கூறுகள். நூற்று ஐந்து மூலகங்கள் (கூறுகளை) நாம் அறிவோம். தூய்மையான பொருட்கள் தொகுதி பகுதிகளாக பிரிக்கப்படுகின்றன.

வெவ்வேறு குணாதிசயங்களுடன் சேர்வைப் பொருட்கள் என்று அழைக்கப் படுகின்றன. உதாரணத்திற்கு, சர்க்கரை, மழை நீர் மற்றும் ஆல்கஹோல் ஆகியவை சேர்வைப் பொருட்கள். சர்க்கரையை சூடாக்கினால் அது கார்பன், நீர் மற்றும் வேறு சில கூறுகளாக சிதைந்துவிடும்.. அதேபோல், நீரை அறியப்பட்ட முறையில் மின் ஆற்றலுக்கு உட்படுத்தும்போது ஹைட்ரஜன் மற்றும் ஆக்ஸிஜன் வாயுக்கள் ஆக பிரிக்கலாம். இன்று நாம் மில்லியன் கணக்கான சேர்வைப் பொருள்களை அறிவோம். சேர்வைப்பொருள்கள் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மூலகங்களின் அணுக்களின் சேர்க்கைகள்.

பொருட்கள் ஒவ்வொன்றும் பின்வரும் மூன்று வடிவங்களில் ஒன்றாகும். திண்மம், திரவம் மற்றும் வாயுக்கள். உதாரணமாக, நீர் அது உறைந்திருக்கும் போது திண்ம வடிவம்; அது தண்ணீராக இருக்கும்போது திரவ வடிவம்; மற்றும்அது ஆவியாகும் போது வாயு வடிவம். வாயு வடிவம் என்றால் அது காற்று போன்றது மற்றும் ஒரு குறிப்பிட்ட அளவு அல்லது வடிவம் இல்லை. எளிய பொருட்கள் அல்லது கூறுகள் மூன்று குழுக்களாக பிரிக்கப் படுகின்றன:

1– உண்மையான தாதுக்கள் (உலோகங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன).

2– தாதுக்கள் அல்லாதவை (அலோகம் என்று அழைக்கப்படுகின்றன).

3– அரை தாதுக்கள் (அரை உலோகங்கள்).

எழுபத்தெட்டு உண்மையான தாதுக்கள் உள்ளன. அவற்றில் எழுபத்தேழுஅறை வெப்பநிலையில் திண்ம வடிவத்தில் உள்ளன, தவிர பாதரசம், இது அறை வெப்பநிலையில் திரவ வடிவத்தில் உள்ளது. அதன் கொதிநிலை 357.3 டிகிரி செல்சியஸ் மற்றும் அது -39.4 டிகிரி செல்சியஸ் இல் திண்மமாகிறது. திண்ம உலோகங்கள் சுத்தியாலால் அடிக்கப்படும் போது அவை தட்டை வடிவத்தை எடுக்கின்றன. அவை தூள் ஆகுவதில்லை. உலோகங்களின் அணுக்கள் மற்ற உலோகங்களின் அணுக்களுடன் இணைந்தால், அவை நேர்மின் ஏற்றத்தை பெறுகின்றன. அவை மறை மின்ஏற்றத்தை கொண்டு செல்ல முடியாது. எனவே, இரண்டு உலோகங்களை ஒன்றோடொன்று இணைக்க முடியாது. ஏனெனில் நேர் ஏற்றங்களைக் கொண்ட இரண்டு உலோகங்கள் ஒன்றை ஒன்று ஈர்க்காது. மாறாக, அவை ஒன்றை ஒன்று தள்ளும்.

பதினேழு அலோகங்கள் உள்ளன. அவற்றில் ஒன்று திரவ வடிவில் உள்ளது; அவற்றில் ஐந்து திண்மவடிவத்திலும், பதினொன்று வாயு வடிவத்திலும் உள்ளன. திண்மமான அலோகங்கள் ஒரு சுத்தியலால் அடிக்கப்படும் போது, அது ஒரு தட்டை வடிவத்தை எடுப்பதற்கு பதிலாக அவை தூள் ஆகிவிடும் தூயகரி ஒரு அலோகம் மற்றும் இரசாயனவியலில் கார்பன் என்று அழைக்கப்படுகிறது. அலோக அணுக்கள் மற்ற அலோக அணுக்களுடன் இணைப்பதன் மூலம் கூட்டு வடிவத்தை எடுக்கின்றன, அவை நேர் மற்றும் மறை மின்சாரத்தை கொண்டு செல்ல முடியும். எனவே, சில அலோக அணுக்கள் ஒன்றிணைந்து ஒரு மூலக்கூறு உருவாகின்றன.

சேர்வை பொருட்கள் இரண்டு குழுக்களாக பிரிக்கப்பட்டுள்ளன. அவை கார்பன் மற்றும் ஹைட்ரஜன் அணுக்களை ஒரே நேரத்தில் கொண்டிருக்க கூடிய கட்டமைப்பு உள்ளவை சேதனபொருட்கள் என்று அழைக்கப்படுகிறது. அவை எரியக் கூடியவை மற்றும் உயிரினங்களில் இருப்பவை. சமீபத்தில், இவற்றில் சில பொருட்கள் ஆய்வகங்களில் செயற்கை முறையிலும் மற்றும் தாவரங்களில் தொகுக்கப்பட்டுள்ளன. கொழுப்பு, சர்க்கரை, அசட்டோன், குயினின் ஆகியவை சேதன பொருட்களுக்கான சில எடுத்துக்காட்டுகள்.

ஒரே நேரத்தில் (ஹைட்ரோகார்பன்கள்) அவற்றின் கட்டமைப்பில் இல்லாத பொருட்கள் அசேதன பொருட்கள் என்று அழைக்கப்படுகின்றன. அவை பூமியின் ஓட்டிலும் கடலின் நீரில் கரைந்த நிலையிலும் காணப்படுகின்றன. சமையல் உப்பு , நீர்,சுண்ணாம்பு, சிலிக்கா மற்றும் மணல் இந்த வகை.

உயிருள்ள உயிரணுக்களின் அடிப்படை கட்டுமானத் தொகுதியை உருவாக்கு வதற்கான குறிப்பிட்ட முறையில் இந்த உயிரற்ற பொருள்கள் அனைத்தும் கலக்கப்பட்டு ஒன்றிணைக்கப்படுகின்றன. செல்கள்(கலங்கள்) உயிரினங்கள். விலங்குகளின் செல்கள் தாவர உயிரணுக்களிலிருந்து வேறுபடுகின்றன, மற்றும் மனித செல்கள் (கலங்கள்) விலங்கு செல்களை ஒத்தவை. வாழும் செல்கள் இணைகின்றன, திசுக்களை உருவாக்குகிறது, அதே நேரத்தில் பல்வேறு வகையான திசுக்களும் ஒன்றிணைகின்றன உறுப்புகள் உருவாகின்றன. பல்வேறு உறுப்புகள் ஒன்றிணைந்து அமைப்புகளை உருவாக்குகின்றன. செல்கள்-திசுக்கள்-உறுப்புகள்-அமைப்புகளின் சங்கிலி

ஒட்டுமொத்தமாக ஒன்றிணைகின்றன தாவரங்கள், விலங்குகள் மற்றும் மனித உடல்களை உருவாக்க.]

பொருட்களின் களத்தில்(domain) இல் இருக்கும் எல்லா பொருட்களும் மூன்று குழுக்களாக வகைப்படுத்தப் பட்டுள்ளன: உயிரற்ற பொருட்கள், தாவரங்கள் மற்றும் விலங்குகள். விலங்குகள் மத்தியில் மனித இனம் அனைத்திலும் மிகவும் விலைமதிப்பற்றது மற்றும் கௌரவமானது. ஒவ்வொரு இனங்களிலும் வெவ்வேறு வகுப்புகளும் மேன்மை தரவரிசைகளும் உள்ளது. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், ஒரு இனம் மற்றவைகளை விட உயர்ந்தது.

ஒரு வகுப்பின் மிக உயர்ந்த இனங்கள் உயர் வகுப்பை சேர்ந்த மிகக் குறைந்த இனங்களுக்கு அருகாமையில் உள்ளன. உண்மையில், அவற்றின் பெரும்பாலான பண்புக்கூறுகள் ஒரே மாதிரியானவை. உதாரணமாக, பவளம் ஒரு கல் போல் தெரிகின்ற ஒரு உயிரற்ற பொருள். ஆனால் உயிரினங்கள்போல் அது பெருகி வளர்கிறது.

ஈச்சை மரம் மற்றும் அதன் ஈ-பிடிப்பவை (dionaea muscicapa) ஒரு விலங்கின் உணர்வு போன்ற செயல். சில ஈச்சை மரம் ஆண் மற்றும் சில பெண். ஆண் மரங்கள் பெண்மரங்களை நோக்கி வளைகின்றன. சில விஷயங்கள் ஆண் மரத்திலிருந்து பெண் மரத்திற்கு போகாவிட்டால் பெண் மரம் பழங்களை உற்பத்தி செய்ய முடியாது. எல்லா தாவரங்கலிலும் இனப்பெருக்க உறுப்புகள் மற்றும் மகரந்த சேர்க்கை நடைபெறுகிறது இருந்தாலும், அது ஈச்சை மரத்தில் அதிகம் பிரயோகிக்கப் படுவதுடன் அது விலங்கினத்தை ஒத்திருக்கிறது.

உண்மையில், ஈச்சை மரத்தின் மேலே ஒரு வெள்ளை பிரிவு உள்ளது, அது ஒரு மிருகத்தின் இதயம் போல செயல்படுகின்றது. இந்த வெள்ளை பிரிவு காயமடைந்து இருந்தால் அல்லது சிறிது நேரம் தண்ணீரில் மூழ்கி இருந்தால் ஈச்சை மரம் வாடிவிடும். இது ஒரு ஹதீத்-ஷரீபில் கூறப்பட்டுள்ளது: **"உங்கள் தந்தைவழி அத்தை, ஈச்சை மரத்துக்கு மரியாதை காட்டுங்கள்! முதல் ஈச்சை மரம் தந்தை ஆதம் அலைஹிஸ் சலாம் அவர்கள் படைப்பதற்கு பாவித்த மண்ணின் மீதியிலிருந்து படைக்கப்பட்டது".** இந்த ஹதீத்-ஷரீப் நல்லருள் செய்யப்பட்ட மரம் அனைத்து தாவரங்களிலும் மிக உயர்ந்தது என்ற உண்மையை குறிக்கும் நோக்கம் கொண்டது.

விலங்கு இனத்தின் மிகக் குறைந்த இனம் கடற்பாசி. இது வெள்ளை நிறம் மற்றும் கடலில் வாழ்கிறது. இது உணர்வுபூர்வமாக விருப்பப்படி நகரக் கூடியது .ஆயிரக்கணக்கான பழமையான விலங்குகள் தண்ணீரில் வாழ்கின்றன. ஒவ்வொரு இனத்திலிருந்தும் சிறந்த மற்றும் வளர்ந்த இனங்கள் உருவாக்கப் பட்டது. அவற்றின் மத்தியில் மேன்மையான வரிசை உயிரியல் புத்தகங்களில் விளக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு இனத்திற்கும் வெவ்வேறு உணவு மற்றும் தற்காப்பு உறுப்புகள் உண்டு. உதாரணமாக, அவற்றில் சில தங்களைத் தற்காத்துக் கொள்ள அம்புகளைக் கொண்டுள்ளன, மற்றவர்களுக்கு பற்கள், நகங்கள், கொம்புகள் அல்லது இறக்கைகள் உள்ளன. அவைகளில் சில அவற்றின் வேகத்திலும் மற்றும் சில அவைகளின் தந்திரங்களில் சார்ந்து இருக்கின்றன. , எ.கா. நரி.

ஒவ்வொரு இனமும் தனித்தனியாக மற்றும் ஒரு இனமாக பாதுகாக்கப்படு கின்றன. மனித மனதைக் கவரும் பல விஷயங்கள் அவை உயிர் வாழ்வதற்

கான திறன்களாக அவைகளுக்கு வழங்கப்படுகிறது. உதாரணமாக, தேனீக்கள் நிபுணர் பொறியாளர்கள் போன்று எண்கோண தேன்கூடுகளை உருவாக்கு கின்றன. அவர்கள் அவற்றின் தேன்கூடுகளை உருளை வடிவத்தில் உருவாக்கி இருந்தால் ஒவ்வொரு தேன்கூடுக்கும் இடையில் கூடுதல் இடம் இருக்கும். இது ஒரு விரையமானதாக இருக்கும். எண்கோண வடிவத்தில் இடத்தை வீணடிப் பதில்லை. இது ஒரு செவ்வகத்தின் வடிவத்தில் இருந்தால், அவற்றின் அளவு மற்றும் இடம் சிறியதாக இருக்கும். இந்த உண்மைகளை மக்கள் படிப்பதன் கற்றல் மூலம் அறிவார்கள். கற்காமல் அவற்றை அறிய முடியாது. யார் அவற்றை தேனீக்கு கற்பிக்கிறார்கள்? அல்லாஹு த'அலா, **இல்ஹாம்** (உத்வேகம்)மூலம், இது இன்று உள்ளுணர்வு (**instinct**) என்று அழைக்கப்படுகிறது.

விலங்குகளிடையே மேன்மையின் அடிப்படையில் நாம் அவற்றைப் படித்தால், நாம் விலங்குகளின் மிக உயர்ந்த வகுப்புகள் என்ற முடிவுக்கு வருவோம். எனவே மனிதகுலத்திற்கு மிக நெருக்கமானவர்கள் குதிரை, குரங்கு, யானை, மற்றும், பறவைகளின் கிளி. அங்கு குரங்கின் அல்லது யானையின் புத்திக்கு சமனானதை கொண்ட பல மனிதர்கள் உள்ளனர். யானை போட்டியிடத் தவறாது. டார்வின், ஒரு மரபியலாளர் அவர் விலங்குகளின் பல்வேறு குடும்பங்களை அவற்றின் ஒன்றுக்கு ஒன்று மேலாதிக்க அடிப்படையில் வகைப்படுத்தி குரங்குகள்தான் எல்லா குடும்பங்களிலும் மிக உயர்ந்தது என்று குறிப்பிட்டார்.

இந்த தத்துவார்த்த வகைப்படுத்தலைக் கேள்விப்பட்ட நோய் பிடித்த இஸ்லாத்தின் எதிரிகள் "ஆரம்பகால மனித இனம் குரங்கிலிருந்து உருவானது" என்று டார்வின் அந்த விலங்குகளை பற்றி எழுதிய நூலை அவர்கள் சுழற்றத் தொடங்கினர். " சில பன்றித் தலை, அரை நவீன போலி விஞ்ஞானிகள் இந்த சுதந்திரமான போக்கைப் பயன்படுத்த நேரத்தை இழக்க விரும்பவில்லை. முஸ்லிம்களின் குழந்தைகளை தவறாக வழிநடத்துவதற்கான அவர்களின் நீண்டகால திட்டத்தை செயல்படுத்துவதற்காக ஆதம் 'அலைஹிஸ்-சலாம்,' (முதலாவது மனிதர், தீர்க்கதரிசிகளில் முதலானவர்) களிமண்ணிலிருந்து படைக்கப்பட்டவர் என்பதை மறுத்தனர்.

இது நமக்கு ஒரு கேள்வியை உருவாக்குகின்றது. டார்வின் தனது புத்தகத்தில் எப்போதாவது அவரின் தத்துவ கோட்பாடு விலங்குகள் படிப்படியாகக் உயர் வகுப்புகளை அடைந்தது என்று கருதக்கூடிய கோட்பாடை முன்வைத்தாரா.

அவர் கூறியுள்ளார்: "விலங்குகளின் வகுப்புகளிடையே படிப்படியான மேன்மையின் வரிசை இருக்கிறது." படைப்பின் கீழ் மட்டத்தில் உள்ளவைகள் மேல் மட்டத்தில் உள்ளவைகளுக்கு ஒரு உணவுப் பங்காக மாறினர் என்று அவர் எழுதினார். இந்த உண்மை இஸ்லாமிய அறிஞர்களால் கவனிக்கப்பட்டு புரிந்து கொள்ளப்பட்டது. எடுத்துக்காட்டாக, ஆலிபின் அம்ருல்லா 'ரஹிமஹுள்ளாஹ் தஆலா' விலங்குகளிடையே மேன்மையின் வரிசையைபற்றி அவரது புத்தகத்தில் எழுதியுள்ளார். அவர் டார்வினுக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் ஹிஜ்ரி 916 ஏ.எச். இல் பிறந்தார், ஹிஜ்ரி 979.[1570 A.D.]. இல் மறைந்தார். இதன்படி டார்வின் (1224[1809A.D] - 1299[1882A.D]) தன்னிடம் இருந்த இஸ்லாமிய புத்தகங்களிலிருந்து அவரது கருத்துக்களைத் தேர்ந்தெடுத்தார் என்பது வெளிப்படை.

மனிதர்களில் மிகக் குறைந்த தரத்தில் உள்ளவர்கள் விலங்குகளுக்கு மேலே உள்ளனர். இந்த வகையானவர்கள் பாலைவனங்கள், காடுகளில் வசிக்கின்றனர். மிக உயர்ந்த தரத்தில் உள்ள மனிதர்கள் அட்சரேகை 23-66 க்கு இடையில் அமைந்துள்ள நகரங்களில் வாழ்கின்றனர்.

மேலும், மனிதர்களிடையே பொருள் மற்றும் தார்மீக தரங்களுக்குள்ள மரியாதை பொறுத்து வேறுபாடுகளை உள்ளன. அதற்குமேல் படைப்பில் மேன்மையின் வரிசை. சிலர் தங்கள் முயற்சிகள் மற்றும் தொழில்நுட்பத்தின் முன்னேற்றத்தில் தங்கள் புத்தி சாதுரியத்தை பயன்படுத்தி அதன் மூலம் புதிய கருவிகள் மற்றும் இயந்திரங்களைக் கண்டுபிடித்தனர் . மற்றவர்கள், கூடுதலாக தொழில்நுட்ப ஆராய்ச்சி மற்றும் தர்க்க அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் பற்றிய அறிவில் முன்னேற்றம் கண்டார்கள். மிக உயர்ந்த மக்கள் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்துடன் ஒழுக்கநெறிகள் மற்றும் நெறிமுறைகளில் முன்னேற்றம் அடைந்தனர். அவர்கள் மனிதர்களால் அடையக்கூடிய மிக உயர்ந்த தரத்தை அடைந்தனர். இது "அல்லாஹு தஆலாவுடன் நெருக்கமான தரம்" என்று அழைக்கப்படுகிறது. மிக உயர்ந்த தரத்தை எட்டியவர்கள் கீழ் நிலைகள் உள்ளவர்களுக்கு அவர்களை உயர் மட்டங்களுக்கு உயர்த்துவதற்காக அறிவூட்ட முயற்சி செய்கின்றார்கள். தீர்க்கதரிசிகள் 'அலைஹி முஸ்சலவாத்து வதஸ்லிமாத்' இந்த மக்கள் அனைவரையும்விட மிக உயர்ந்தவர்கள். அல்லாஹு தாலா விடமிருந்து செய்திகளையும் கட்டளைகளையும் பெற்று அல்லாஹ்வினால் அவர்கள் கௌரவிக்கப்பட்டனர். அல்லாஹுத் தஆலாவிடமிருந்து ஜிப்ரீல் 'அலைஹி சலாம்' என்ற தூதர் வழியாக வந்த செய்திகளும் கட்டளைகளும் **வஹி** (வெளிப்பாடு) என்று அழைக்கப்படுகிறது. தீர்க்கதரிசிகள் பெற்றுக்கொண்ட கட்டளைகள் வெளிப்பாடுகளை மனிதர்களுக்கு அறிவித்து அதன் மூலம் மனிதர்களை முன்னேற்றத்தின் வழியில் வழிநடாத்தி அவர்களின் மனித நேயத்தின் நிலையை உயர்த்தினார்கள். அவர்களுக்கு. தீர்க்கதரிசிகள் காட்டிய இந்த முன்னேற்றப் பாதை **தீன்**(மதம்,நம்பிக்கை )என்று அழைக்கப் படுகிறது. மனிதனால் மதத்தின் மூலம் அடையக்கூடிய உயர் தரங்கள் மலக்குகளுக்கு வழங்கப்பட்ட தரங்களை விட உயர்ந்தவை.

தீர்க்கதரிசனத்தின் நான்கு தரங்கள் உள்ளன. முதல் வகுப்பு அது ஒரு நபியின் தரம்; இரண்டாவது தரம் தீர்க்கதரிசிகளுக்கு கொடுக்கப்பட்டது ரசூல் என்பது; மூன்றாவது; தீர்க்கதரிசிகளின் குழுவுக்கு வழங்கப்பட்டுள்ளது உலுல்அஸ்ம் என்று அழைக்கப்படுகிறது. ஆதம், நூஹ், இப்ராஹிம், மூஸா, ஈசா, அலைஹி முஸ்ஸலாம் மற்றும் முஹம்மது அலைஹிஸ்-சலாம்.' நான்காவது; முஹம்மது அலைஹிஸ்-சலாம்' அவர்களுக்கு மட்டுமே சொந்தமானது. இந்த வகுப்பு, மிகவும் உயர்ந்தது. தீர்க்கதரிசனத்தின் இறுதிநிலை (காத்தமுல் -அன்பியா), இது அவர்களை மகிமைப் படுத்துவதற்காக. அல்லாஹ் கூறுகின்றான் **"இது உங்களுக்காக இல்லையா,** (ஆம்), **இது உங்களுக்காக இல்லையென்றால், நான் எதையும் படைத்திருக்க மாட்டேன்! "** அல்லாஹு த'ஆலா அவர்களை மலக்குகளை விட மனித மேன்மைக்கு ஒரு வாழும் சான்றாக ஆக்கியுள்ளான்.

மனிதகுலம் ஒட்டுமொத்த படைப்புகளில் ஒரு துல்லியமான இடைநிலை நிலையில் வாழ்கிறது. இஸ்லாத்துடன் தங்களை இணைத்துக்கொள்ளும் மக்கள் பாக்கியவான்கள். அவர்கள் மலக்குகளைக் காட்டிலும் உயர்ந்த

தரங்களைப் பெறுவார்கள், மாறாக, அவர்களின் நஃப்சின் ஆசைகளுக்கு கட்டுப்பட்டு அல்லது தீய தோழர்களின் சகவாசம் மற்றும் தூண்டுதல்கள் காரணமாக தவறான வழியில் இணைந்து இஸ்லாத்திலிருந்து விலகிச் செல்பவர்கள், அவர்களின் இயல்பான நிலைகளை விட குறைவான நிலை களுக்குத் தள்ளப்படுகிறார்கள்.

ஏனெனில், நாங்கள் முன்னர் விளக்கியுள்ளவாறு ஆன்மா சரீரமற்றது, அதே சமயம் உடல் என்பது பொருட்களின்(matter) குவியலாகும், அதன் பண்புகள் ஒருவருக்கொருவர் வேறுபடுகின்றன. மனிதன் ஆன்மீக ரீதியில் சராசரியாக மலக்குகளையும் மற்றும் உடல் ரீதியாக விலங்கையும் ஒத்திருக்கிறான். தனது ஆன்மீகத்தை வலுப்படுத்தும் ஒருவர் உயர்ந்த அம்சங்களில் மலக்குகளை விட உயர்வார். ஏனெனில், அவர் அவரது உடலின் விருப்புகளை எதிர்த்து அவரது சொந்த இயல்பின் தாழ்ந்த பாதியை வெற்றிகொண்டார். இதுகயிறு இழுக்கும் போட்டியை, தன்னிடமுள்ள அனைத்து முரண்பாடுகளுக்கும் எதிராக தனிமையான போட்டியாளராக நின்று அணியை வெற்றி பெற நிர்வகித்தல் போன்றது. இதற்கு மாறாக, மலக்குகளுக்கு சரீர உடலின் தாழ்ந்த நிலை களுக்கு கட்டாயப்படுத்தும் எந்தவிதமான அம்சங்களும் இல்லை. இயற்கை யில் நன்மைகள் அவர்களின் உள்ளார்ந்த பகுதியாக உருவாக்க பட்டுள்ளது. ஒரு நபர் தனது விருப்பத்தை உடலுக்கு ஆதரவாகவும் அவரது நஃப்சை வளப்படுத்துவதிலும் வீணடித்தால், அவர் விலங்குகளுக்கு கீழ் உள்ள நிலைகளுக்கு தரமிறக்கப்படுவார்.

அல்லாஹுு த'ஆலா கஊர்'ஆனில், சூரா அ'ராஃப் நூற்று எழுபத்து ஒன்பதாவது ஆயத்தில் பின்வருமாறு அறிவிக்கிறான்: **“.....அவர்கள் கால்நடைகளைப் போன்றவர்கள்-இல்லை** (அவர்கள்) **அதிகம் தவறாக வழிநடத்தப்பட்டவர் கள் ...**”. உண்மையில், விலங்குகளுக்கு ஞானம் இல்லை. அவை மலக்குகளின் ஆன்மாக்களை கொண்டிருக்கவில்லை. ஆகவே, அவர்களின் விருப்பங்களைத் தொடருவது அவர்களுக்கு பாவமாக இருக்காது. மனிதர்களுக்கு ஞானம் என்னும் ஒரு ஒளி கொடுக்கப்பட்டுள்ளது என்பதால், அவர்கள் தங்கள் நஃப்சைப் பின்பற்றுவதும் சரியான பாதையிலிருந்து விலகுவதும் மிகவும் வெறுக்கத் தக்கது..

**கலவைகள் ஆதமின் மகன்கள்,**
**மலக்கு மற்றும் விலங்கு இயல்பிலிருந்து படைக்க பட்டவர்கள்.**

**தன் மலக்கைப் பின்பற்றுபவர்,**
**அவரது மலக்கை விட உயர்ந்தவர்.**

**விலங்கு இயல்பை பின்பற்றுபவர்,**
**எல்லா உயிரினங்களையும் விட தாழ்ந்தவர்!**

காற்று, உணவு, நீர், ஆடை, தங்குமிடம் மற்றும் தோழர்கள், விலங்குகள் உயிர்வாழ தேவையானவை, அவை அனைத்தும் தயாராக உருவாக்கப் படுகின்றன. [இந்த தேவைகளில், மிக உடனடித்தேவை ஒன்று காற்று. இது இல்லாமல் சில நிமிடங்களுக்கு மேல் அவை வாழ முடியாது. அவை உடனே இறந்து விடும். காற்று தேடுவதன் மூலம் அதைக் கண்டுபிடிக்க முடியுமாக இருந்தால், அதைக் கண்டுபிடிக்க நீண்ட காலம் வாழ மாட்டார்கள். இது மிகவும் அவசரமாக தேவைப்படும் என்பதால் அல்லாஹுு தஆலா அதை மிக ஏராளமாக உருவாக்கியுள்ளான். இயற்கையாகவே எல்லா இடங்களிலும் அவர்கள்

நுரையீரலை நிரப்ப முடியும் உள்ளுணர்வாக. நீர் அவர்களுக்கு காற்று போன்ற பிழைப்பதற்கு உடனடி தேவை இல்லை. மனிதர்களும் விலங்குகளும் அது இல்லாமல் நீண்டகாலம் வாழ முடியும் அதைத் தேடுவதற்கு. அதைக் கண்டுபிடிக்க அவர்கள் பாடுபடுவது அவசியமாகின்றது. விலங்கு களுக்கு ஞானம் இல்லை, ஒன்றுக்கு ஒன்று ஒத்துழைப்பது இல்லை, அவை உணவைத் தயாரிப்பதில்லை, தங்களுக்கு ஆடை தேவையில்லை, அவை உணவை சமைப்பதில்லை. இதன் விளைவாக, அவை புல் அல்லது பிணத்தை சாப்பிடு கின்றன. அவற்றின் இறகுகள் மற்றும் கீழ் முடி மூலம் அவற்றை சூடாக வைத்திருக்கும். அவை உயிர் வாழ்வதற்கான வழி முறைகளாக அவற்றின் உடலின் பாகங்கள் உருவாக்கப்பட்ட்டுள்ளது.. எனவே, அவை ஒன்றுக்கு ஒன்று தேவைப்படமாட்டது.

மனிதர்கள் அவ்வாறு அல்ல, எல்லாவற்றையும் சிந்தித்து அவர்களுக்கு தேவையானதை அவர்கள் தயார் செய்ய வேண்டும். அவர்கள் விதைத்து அறுவடை செய்து ரொட்டி தயாரிக்காவிட்டால், அவர்களால் அவர்களின் பசியைப் பூர்த்தி செய்ய முடியாது. அவர்கள் நூல்நூற்று, நெசவு மற்றும் தையல்செய்யாவிட்டால் அவர்கள் உடைகளை அணிய முடியாது. அதேபோல், அவர்களின் நுண்ணறிவு வளர வேண்டும், அறிவியல் அறிவைக் கற்றுக் கொள்ள வேண்டும். தொழிற்சாலைகளை நிறுவவேண்டும், தங்களைப் பாதுகாத்துக் கொள்ள தொழில்நுட்பத்தைப் பயன்படுத்துதல் வேண்டும்.

மனிதன் என்பது வெவ்வேறு வகையான விலங்குகள் கொண்டிருக்கும் உயர்ந்த பண்புகளின் பொக்கிஷம். இந்த செயலற்றிருக்கும் மேன்மையான தன்மைகளையடைய பொக்கிசத்தை திறப்பதற்கு ஒருவரது மனத்தையும் ஞானத்தையும் பயன்படுத்தி கடினமாக உழைக்க வேண்டும். மகிழ்ச்சி மற்றும் அழிவை திறப்பதற்குரிய திறக்கும் சாவியும் அவர் கையில் ஒப்படைக்கப் பட்டுள்ளது. அவர் தனது மனதையும் ஞானத்தையும் பயன்படுத்தி மகிழ்ச்சிக்கு வழிநடத்தும் பாதையைக் கண்டுபிடித்தால் அதில் அவர் ஊடுருவி அவரது இயல்பில் உன்னதமான உயர்ந்த மதிப்புகள் ஒரு வானத்தில் இருந்து மற்றதற்கு உயரும், அது அவரை மலக்குகளின் உலகில் சேர்க்கும், இறுதியில் அவரது இலக்கை அடைவார். , அதாவது அல்லாஹு த்ஆலா வின் நேசத்தை பெறுவார். இல்லையெனில், அவர் அவரது நஃப்சின் ஆசைகள் பின்பற்றினால் அவர் படைக்கப்பட்ட நிலையிலேயே கீழான விலங்குகளின் நிலையில் தங்கி விடுவார். அது மாறி வேறு வழியில் ஒரு இலக்கை நோக்கி செல்கிறது. அவர் ஒரு கீழ்நோக்கிய போக்கில் இறங்குவார், இது படிப்படியாக சென்று அவரை ஒரு பேரழிவிலிருந்து இன்னொரு இடத்திற்கு அழைத்துச் சென்று, இறுதியில் தன்னைக் நரகத்தின் ஆழமான குழியில் கண்டுகொள்வார்.

மனிதன் இருபக்க படைப்பு உள்ளவன். அவனுக்கு அவனது உள்ளார்ந்த திறனை எவ்வாறு அடையாளம் கண்டுகொள்வது மற்றும் உயர்ந்து முன்னேறுவதற்கு அதை எவ்வாறு பலப்படுத்துவது என்று கற்பிப்பதற்கு ஒரு வழிகாட்டி தேவை.

சில குழந்தைகள் அறிவுரை, மென்மையான பேச்சு மற்றும் பரிசுகளால் எளிதில் கற்பிக்கப்படும், இன்னும் சில கடுமையான சிகிச்சை மற்றும் தண்டனை மூலம். குழந்தையின் தன்மையைப் புரிந்துகொண்டு அதன்படி, அவரகளை வளர்த்து எடுப்பதற்காக மென்மையான அல்லது கடுமையான பேச்சால் அவர்களுக்கு ஒழுங்கான சிகிச்சையளிக்க வழிகாட்டி நன்றாக

இருக்க வேண்டும். . ஒரு திறமையான வழிகாட்டி இல்லையென்றால், குழந்தை அறிவு மற்றும் ஒழுக்கம் முன்னேற்றம் பெற முடியாது. அறிவும் ஒழுக்கமும் வழங்கும் வழிகாட்டி குழந்தையை பேரழிவுகளிலிருந்து காப்பாற்றி அவரகளை மகிழ்ச்சியான நபர்களாக ஆக்குவார்கள்.

**இதைக் கேளுங்கள், ஆழ்ந்த முட்டாள்தனம்;**
**காதல் பிரகாசமாகவும், வெளிச்சமாகவும் இருக்கிறது;**
**அன்பு இல்லாத இதயம்**
**பாறை மற்றும் கல் போன்ற கடினமானது.**

**நஃப்ஸின் ஆசைகளில் எதுவும் இல்லை**
**இதய அன்புடன் பொதுவானது;**
**உப்பு இல்லாத உணவைப் போன்றது ,**
**சுவையற்ற, விரும்பத்தகாதது .**

**அது காதல் என்றால், இதயம் எரியும்;**
**ஆயினும் இந்த கவலையில் நஃப்ஸ்:**
**குளிர்ந்த புயல்களுக்கு மத்தியில்,**
**ஒரு அழுக்கு, மசகு எண்ணெய்.**
**ஒரு இதயம் இந்த அன்பை ருசித்தவுடன்,**
**அதன் இறைவன் காதலிக்கிறான்,**
**உடல் ஒரு கூண்டு, மற்றும் அதில் ஒரு பறவை,**
**அன்போடு படபடப்பு.**

**காதல் என்பது மிகவும் புனிதமான ஒன்று;**
**காமத்தை அழைப்பது உண்மையில்,**
**முடி இல்லாத மற்றும் குருடான தலையில்,**
**தங்கத்தின் கிரீடம் போல, பளபளப்பானது.**

## முகவுரையின் இரண்டாவது இணைப்பு

இந்த பகுதியில், ஆத்மா மேல் உயரங்களை நோக்கி முன்னேறுவதும் அல்லது குறைந்த ஆழத்தில் மூழ்குவதும் என்ன அர்த்தம் என்பதை விளக்குவோம். ஆன்மாவின் உயரசிக்கும் மற்றும் வீழ்ச்சிக்கான காரணங்களை முன்னர் உரையில் விளக்கினோம். இந்த பிரிவில் அந்த விஷயங்களை விரிவாகக் கூறுவோம். ஒவ்வொரு பொருளுக்கும் மற்ற பொருட்களுக்கும் பொதுவான சில பண்புகள் உள்ளன. எடை மற்றும் அளவு இதில் அடங்கும். இந்த பொதுவான குணாதிசயங்களுக்கு மேலதிகமாக ஒவ்வொரு பொருளுக்கும் குறிப்பிட்ட பண்புகள் உள்ளன, அதன் மூலம் அது மற்றவைகளிடமிருந்து வேறுபடுகின்றது. உதாரணமாக, ஒவ்வொரு பொருளுக்கும் ஒருஅடர்த்தி உள்ளது. மற்றும் சில திரவங்கள் ஒன்றுக்கொன்று அவற்றின் கொதிநிலை மற்றும் உறை வெப்பநிலையில் வேறுபடுகின்றன, வெவ்வேறு தின்மப் பொருள்கள் உருகும் வெப்பநிலைகள் மற்றும் கதிர்கள் அவற்றின் அலை நீளத்தில் மாறுபடும்.

அதே போன்று, உயிரினங்கள் ஒவ்வொன்றிலும் அவற்றில் உள்ள குறிப்பிட்ட பண்புகள், குணங்கள் மற்றும் பண்புக்கூறுகளில் வேறுபடுகின்றன. உதாரணமாக, பொக்ஸ் க்ளோவ், டிஜிட்டலி ஸ்பர்பூரியா என்ற தாவரவியல் சொற்கள் இதயத்தின் மீதான தாக்கம் அவற்றின் பெயரால் அறியப்படுகிறது.

குதிரை அதன்மீது சவாரி செய்பவருடன்  அதன் இணக்கப்பாடு மற்றும் ஓடுவதற்கான  அதன் இணக்க உணர்வு என்பவற்றில் வேறுபடுகின்றது. இது ஒரு குறிப்பாக ஒரு கழுதை போல் பொதி சுமக்கும் விலங்குபோன்று பயன்படுத்தப்படுவதை தடுக்கும் ஒரு பண்பு.

மனிதர்கள் பல விஷயங்களில் விலங்குகளைப் போலவும்,  சிலவற்றில் தாவரங்களை போலும் மற்றும் பிற விஷயங்களில் உயிரற்ற பொருட்களைப் போன்றும்  இருக்கிறார்கள். மேலும், நம்மை அவைகளிடம் இருந்து வேறுபடுத்துகின்ற பல மனித பண்புகளும் உள்ளன. ஒரு மனிதனுக்குரிய மரியாதை இந்த பண்புகளிலிருந்து வருகிறது.  இந்த பண்புகளில் மிக முக்கியமான ஒன்று புரியும் சத்தி, விளங்குவது  அல்லது சிந்தனை (**நுத்க்**'). "நுத்க்" என்பது பேச்சின் சக்தி என்று பொருள், ஆனால் நாம் இந்த விடயத்தில் அந்த அர்த்தத்தை கொள்ளமாட்டோம். நாக்கு இல்லாத ஒருவர் பேச முடியாது, ஆனால் அவர் இன்னும் மனிதனாக இருக்கிறார் ஏனெனில் அவருக்கு புரிதலும் விளங்கும் தன்மையும் உண்டு, மற்றும் சிந்திக்க முடியும். கிளிகள் பேசலாம் ஆனால் அவை மனிதர்கள் அல்ல அவைகளுக்கு புரிதல், புரிதல், சிந்தனை திறன் அல்லது ஞானம் இல்லை.

நுத்க் இன் சக்தி, தனியாக, இது பயனளிக்கிறது நல்ல பழக்கவழக்கங்களையும் செயல்களையும் அவற்றின் தீமையிலிருந்து வேறுபடுத்துவதற்கான தனித்துவமான பரிசு. அல்லாஹுதஆலா இந்த பீடத்தை மனிதர்களுக்கு வழங்கினான்  அவர்கள் தங்கள் படைப்பாளரை அறிய  முடியும் என்பதற்காக.

ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மா, இந்த சக்தியைப் பயன்படுத்துவதன் மூலம் பிரபஞ்சம், பூமி, வானம், [அத்துடன், இயற்பியல், வேதியியல் மற்றும் பிற செயல்பாடுகளின் சட்டங்களாக மனித வாழ்க்கை],  படித்து உணர்கின்றது இதனால் அல்லாஹு த'ஆலாவின் இருப்பையும் அவனது உயர்ந்த பண்புக் கூறுகளையும் அங்கீகரிக்கிறது. இவ்வாறு,அவனுடைய எவல்களை பின்பற்று வதன் மூலம் மற்றும் இஸ்லாம் தடைசெய்யும் செயல்களைத் தவிர்ப்பதன மூலம் ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மாவின் உரிமையாளர் இதில் மகிழ்ச்சியை அடைவதுடன் இவ்வுலக மறு உலக பேரழிவுகளிலிருந்து தன்னை பாதுகாத்துக் கொள்கிறார்.

சூரா ஸாரியாத்தின் 56 ஆவது ஆயத் தெரிவிக்கின்றது: **"நான் ஜின்களையும் மனிதர்களையும் மட்டும் படைத்தேன் என்னை  அவர்கள் வணங்குவதற்கு**" இந்த ஆயத்தில் வந்துள்ள 'வணங்குவது' என்ற சொல் 'அறிவதற்காக'  என்று கருத வேண்டும். உண்மையில், நாங்கள் எங்கள் படைப்பாளரான அல்லாஹுத ஆலாவை அறிந்துகொள்வதற்கும் நம்புவதற்கும் நாங்கள் படைக்கப் பட்டுள்ளோம்.

மனிதர்களில் உள்ள  விலங்கு பண்புக்கூறுகள், எ.கா., பசி மற்றும் ஆத்திரம், கோபம் ஆகியவற்றிற்கு  விலங்கு ஆன்மா காரணமாகும் என்பதால்  அவை விலங்குகளை ஒத்திருக்கின்றன. இந்த விலங்கு பண்புக்கூறுகளால்  மனித ஆன்மாவுக்கு எந்த மதிப்பும் இல்லை. விலங்குகளும் இந்த அதிகாரங்களைக் கொண்டுள்ளன; உண்மையில், அவை மனிதர்களை விட விலங்குகளில் வலுவானவை.  உதாரணமாக, பசுக்கள் மற்றும் கழுதைகள் சாப்பிடுகின்றன மனிதர்களை விட அதிகமாக குடிக்கின்றன. பன்றிகள் மற்றும் பறவைகள்

அதிக பாலியல் வீரியம் கொண்டவை. சிங்கங்கள், நீர் எருமைகள் மற்றும் யானைகள் அதிக சக்தி வாய்ந்தவை. ஓநாய்கள் மற்றும் புலிகள் சிறந்த கடுமையான போராளிகள். எலிகள், நாய்கள் மற்றும் பூனைகள் இருட்டில் பார்வை திறன் கூடியவை மற்றும் தூரத்திலிருந்து வாசனைகளை அறியும் தன்மை கொண்டவை. இவை அனைத்தும் பண்புகள் மனிதர்களுக்கு ஒரு கௌரவமாக இருக்க முடியாது. இந்த பண்புகள் மரியாதைக்குரிய காரணங்கள் என்றால் , மேற்கூறிய விலங்குகளுக்கு மனிதனை விட கௌரவம் அதிகமாக இருக்கும்.

மனிதர்களுக்கு கௌரவம் இருப்பதற்கு காரணம் அவர்களின் ஆன்மாக்களில் உள்ள இரண்டு சக்திகள், அதாவது, ஆன்மீக இதயம் மற்றும் ஆன்மா. ஆன்மீக இதயமும் மற்றும் ஆன்மாவும் "நுத்க்" எனப்படும் சக்தியைப் பயன்படுத்து வதன் மூலம், நல்லொழுக்கங்களையும் விழுமியங்களையும் அங்கீகரித்து நடைமுறைசக்தியைப் பயன்படுத்தி அவற்றைப் பிடித்துக் கொள்ளும், அதற்காக அநீதிகளைத் தவிர்க்கும்.

அல்லாஹு த'ஆலா மீதான நம்பிக்கை மற்றும் அவனை பற்றிய மரிஃபத் (நெருக்கமான அறிவு) செய்வதை விட சொல்வது இலகுவானது. அதை நம்பிக்கையின் ஈமானின் ஆறு அடிப்படைக் கொள்கைகளின்(ஆமன்து) பொருளை அறிவதன் மூலம் நிறைவேற்ற முடியும். அதன் ஐந்தாவது நம்பிக்கை கொள்கை இறுதி நாளையும் திருப்பி எழுப்பப்படுவதையும் நம்புவது.

அறிவு கொடுக்கப்படாதவர்கள் " சுவர்க்கத்தின் அருட்கொடைகள் என்பது பறவைகளின் இறைச்சி, பழங்கள், பால், தூய தேன், மாளிகைகள், சொர்க்கத்தின் கன்னிப்பெண்கள் மற்றும் இந்த உடலுக்கு மகிழ்ச்சியைத் தரும் ஒத்த விஷயங்கள் என தெரிவிக்கப்பட்டுள்ளதாக கூறுகிறார்கள். இந்த விஷயங்கள் பசியையும் விலங்கின் ஆசைகளையும் பூர்த்தி செய்கின்றன. ஆன்மாவின் மகிழ்ச்சி அல்லாஹு த'ஆலாவின் அறிவைப் பொறுத்தது மற்றும் ஞானத்தால் அங்கீகரிக்கப்பட்ட விடயங்கள் என்பதால், ஆன்மாவின் இன்பங்கள் விலங்குகளின் இன்பங்களுடன் மங்கி முடிந்து விடும். எனவே, இந்த அச்சு வடிவ கோசம் ஆனது, "மிகவும் மதிப்பிற்குரிய தீர்க்கதரிசிகளைப் அலைஹிமுஸ் ஸலவாத்து வதஸ்லிமத்' மற்றும் அவ்லியாக்கள், அறிஞர்கள் 'ரஹிமாஹுமுள்ளாஹு தஆலா போன்றவர்கள் இனிமேல், தாழ்ந்த மக்களுக்கு தகுதியான அவர்களுக்கு மிகவும் புண்படுத்தும் சொல்லான சொர்க்கத்தின் உடல் (விலங்கு) இன்பத்தை அனுபவிக்க? அவர்கள் வாழ்க்கையை நடத்துவார்கள்." எனும் முடிவுக்கு வருவது தவிர்க்க முடியாமல் போகும். இது மிகவும் அவதூறானது.

மேலும், சொர்க்கத்தின் சரீர உடல் இன்பத்தை அனுபவிக்க' அது முதலில் துன்பத்தை அனுபவித்திருக்க வேண்டும். இயற்பியல் உடலுக்கு கடினமான தேவை ஏற்படாவிட்டால் அதற்கு எதுவும் தேவையில்லை. உதாரணமாக, பசியை உணராவிட்டால், சாப்பிடுவதையும் குடிப்பதையும் பாராட்ட முடியாது. சோர்வடையாமல்,அல்லது தூக்கத்தில் இருக்கும் ஒருவர் ஒருவரின் ஆறுதலை யும் மகிழ்ச்சியையும் அனுபவிக்க முடியாது. சொர்க்கத்தில் அசௌகரியம் இல்லை என்பதால், உடல் அந்த இன்பங்களை அனுபவிக்க முடியாது."

அவிசென்னா, பிரபலமானவர் முஸ்லீம் கலாச்சாரத்தில் வளர்க்கப்பட்ட தத்துவஞானி, அவரது புத்தகங்களில் **ஷிஃபா** மற்றும் **நஜாத்**, நியாயத்தீர்ப்பு நாளில் தனது நம்பிக்கையை வெளிப்படுத்தினார், ஆனால் அவர் **மு'ஆத்** என்ற தலைப்பில் எழுதிய அவரின் மற்றொரு நூலில் அவர் அதை (வாபஸ்) திரும்பப் பெற்றார். மற்றொரு அறிஞர்,நஸீருத்தீன் அல்-தூஸி, தனது **தஜ்ரீத்** என்ற நூலில் சில பகுதிகளில் மரணத்திற்குப் பின் எழுப்பப்படுதல் பற்றி எழுதினார். ஆனால் எழுதிய மற்ற பகுதிகளில் முன்னர் எழுதியதுக்கு முரண்பட்டார்.

அனைத்து விசுவாசிகளும் ஒருமனதாக நியாயத்தீர்ப்பு நாளில் சரீர உடல் பிரசன்னமாகி இருக்கும் என்று கூறுகிறார்கள். எவ்வாறாயினும், தவறு என்னவென்றால் சொர்க்கத்தின் நற்பேறு உடலுக்கு மட்டுமே என்று கருதுவது தான். உலகில் முன்னேறத் தொடங்கும் ஒரு ஆன்மா, அது உடலை விட்டு வெளியேறிய பிறகும் அது தொடரும் அது தீர்ப்பு நாள் வரை முன்னேறும். சொர்க்கத்தில், முடிவற்ற வாழ்வை நடத்துவதற்காக உடல் புனரமைக்கப்படும் அது பூமியிலிருந்ததை விட வேறுபட்டதாக இருக்கும்.

மரணத்திற்குப்பின் வாழ்க்கை ஆன்மாவை மீண்டும் உடலுடன் இணைப்பதில் தொடங்கும். உடல் நித்தியத்திற்காக மாற்றியமைக்கப்பட்டதாக இருக்கும். மறுமையில் ஆன்மாவை மகிழ்விக்கும் இன்பங்களும் மற்றும் சுகபோக ங்களும் மறுமையில் உடலுக்கு வழங்கப்படும் இன்பம் சுகபோகங்களிலிருந்து வேறுபட்டாதாக இருக்கும். உயர்ந்த ஆன்மீக புத்திசாலித்தனம் உள்ளவர்கள் ஆன்மாவின் இன்பங்களுக்கு முன்னுரிமை கொடுப்பார்கள். ஆன்மாவின் இன்பங்கள் உடலின் இன்பங்களை விட ஒப்பிடமுடியாத அளவு உயர்ந்ததாக இருக்கும்..

சொர்க்கத்தின் பேரின்பங்களுக்கு மத்தியில்அல்லாஹு த'ஆலாவை பார்ப்பது ஆன்மாவுக்கு மிகவும் உயர்ந்த நற்பேறாகவும் ஒப்பபிடவே முடியாத இறுதி(ultimate) மகிழ்ச்சியாகவும் இருக்கும். சில இஸ்லாமிய அறிஞர்களின் படி, தேர்ந்தெடுக்கப் பட்ட சிலருக்கே இது சாத்தியமாகும், எ.கா. (ஆன்மீக தரத்தை அடைந்தவர்கள் அல்லாஹு த'ஆலாவை அவர்கள் மனிதனுக்கு முடிந்தளவு சிறந்த முறையில் அறிந்து கொள்பவர்கள்)ஆரிஃப் அவர்கள் இங்கே பூமியில் உயிருடன் இருக்கும் போது ஆன்மாவின் சொர்க்கத்திற்குள் நுழையவும் மற்றும் சொர்க்கத்தின் சில இன்பங்களை ருசிக்கவும் முடியுமானவர்கள். நாம் இந்த உலகில் வாழும் வரை உடலுக்கு எந்த சுவர்க்கலோக இன்பமும் இருக்க முடியாது. சொர்க்கத்தின் இன்பங்கள் பூமியின் இன்பங்களிலிருந்து வேறுபட்டது. அவை உலக இன்பங்கள் போலல்லாதது. அல்லாஹுத'ஆலா பூமியில் சுவர்க்கத்தின் இன்பங்களை ஒத்த இன்பங்கள் சிலவற்றை உருவாக்கியுள்ளான் அவை நமக்கு சுவர்க்கத்தின் இன்பங்களின் சுவையின் சாயல் அல்லது அது போன்ற ஒரு ஒப்புவமை அல்லது ஒரு அனுபவத்தை பெறுவதற்காக. ஆகவே, அந்த இன்பத்தை பெறுவதற்கு நம்மை கடும் முயற்சி செய்யும்படி கட்டளையிட்டுள்ளான். சொர்க்கத்தில் உள்ள இன்பங்களை அடைவதற்கு முன்பு துன்பங்களை அனுபவித்திருக்க வேண்டியது அவசியம் இல்லை. சொர்க்கத்தில் உள்ள உடலின் அமைப்பு பூமியில் இருக்ககூடிய உடலின் அமைப்பை போல இருக்காது.

பூமிக்குரிய உடல் ஒரு கட்டுமானம் ஒரு தற்காலிக வாழ்க்கைக்கு ஏற்றதாக உருவாக்கப்படுகிறது. இது ஏறக்குறைய நூறு ஆண்டுகள் நீடிக்கலாம்.

